# பேசும் தெய்வம்

## (பக்தர்கள் அனுபவ தொகுப்பு)

தொகுப்பாளர்
பகவத் சேவா ரத்னா
**ஜே.கே. சிவன்**

**SREE KRISHNARPANAM SEVA SOCIETY**
#15, Kannika Colony II Street, Nanganallur, Chennai - 600061.
Website: www.youiandkrishna.org, E-mail: sreekrishnarpanamsevasociety@gmail.com
Tel: (91) 044-2224 1855, 98402 79080

First Edition: June 2016

**Not for Sale**

Published by:
SREE KRISHNARPANAM SEVA SOCIETY
#15, Kannika Colony II Street,
Nanganallur, Chennai - 600061.
Website: www.youiandkrishna.org
E-mail: sreekrishnarpanamsevasociety@gmail.com
(91) 044-2224 1855, 98402 79080

Designed by:
G Publishing Service
Royapettah, Chennai - 600 014.
E-mail: gpublishingservice@gmail.com

Printed at:
Sakthi Scanners Pvt. Ltd
8/18, 3rd Street, Gopalapuram, Chennai - 86.
Tel: (044) 2811 5151, 2345 0920

For copies of this book, please contact:
Sri Krishnarpanam Seva Society
Website: www.youiandkrishna.org
E-mail: sreekrishnarpanamsevasociety@gmail.com
(or) jksivan@gmail.com, jksivan@vsnl.com
(91) 044-2224 1855, 98402 79080

## சமர்ப்பணம்

இந்த பிறவி எடுத்த பலன் நாம் செய்யும் நல்ல காரியங்களில் தான் தெரிகிறது. எனக்கு இம்மாதிரி ஒரு முயற்சியில் ஈடுபட சக்தி மனம் இரண்டுமே தந்த ஸ்ரீ மகா மகா பெரியவாளின் பாதார விந்தங்களில் இந்த புத்தகத்தை சமர்பித்து "கலியுகத்தின் கண் கண்ட தெய்வமே உன் காலத்தில் வாழ்ந்தேன் என்ற பெரும் பாக்யத்தை தந்த தெய்வமே, நீ பேசிய அந்த விலைமதிப்பற்ற மாணிக்க, வைர, வைடூர்ய நவ நிதிகளை நேரில் கேட்டோர்க்கும், அவற்றை கேட்டவர்கள் சொன்னதை செவியுற்றோருக்கும், அதை பல ரூபங்களில் வெளிப்படுத்தியவர்களுக்கும், அந்த அனுபவங்களை படிப்போருக்கும் பகவானே உங்கள் பூரண ஆசி கிடைக்க பல கோடி நமஸ்காரங்களுடன் வேண்டி இதை அர்பணிக்கிறோம்.

**ஜே.கே. சிவன்**



**N.V. KALYANARAMAN**
Chartered Accountant
Flat 5, Anand Flats, 9th Street,
Dr. Radhakrishnan Salai, Mylapore, Chennai 600004
Tel: 91 (44) 2847 5020, Mob: (91) 99401 52945

# FORE WORD

At the outset, I profusely thank Shri.J.K Sivan fondly called Sivan Sir, for providing me this opportunity, to write the introductory foreword, to this glorious book 'PESUM DEIVAM" , which is an effort to capture, compile and present the personal experiences of various devotees with the great spiritual giant of the 20th Century His Holiness Sri Chandrasekhara Saraswathi Swamigal (Kanchi Pramacharyal, 68th Pontiff of the Kanchi Kamakoti Peetam).

In the fitness of things, I genuinely consider myself to be the least competent to write this foreword involving the subject matter of one of the spiritual icons of Sanatana Dharma - considered by millions as living, walking and talking embodiment of the Supreme Lord Himself.

Kanchi Pramacharyal was a spiritual genius and giant who actually lived, fortunately for us, during our times, interacted, touched, and transformed the lives of millions of spiritual aspirants. His self realization, knowledge, memory, and application of length and breadth of vedas and its branches, combined with His matchless quality of "karuna" or mercy towards the ignorant and meek, made Him the celebrated Jagadguru.

Paramacharyal was truly a Jagadguru wherein, people from all parts of this world - cutting across geographical, political, religious, color, ethnic, economic and caste barriers - came, had His darshan and benefitted immensely and went back fully satisfied with the fresh lease of life provided to them by His ever merciful eyes, hands and holy feet.

Paramacharyal was considered by many as a "Trikaalagna Gnaani" the perfect knower of past, present and future. As such He had the rare potency to perceive and spiritually scan an aspirants past karmic account, his stage of spiritual evolution, current state of his mind etc, and prescribe shastric injunctions most appropriate to the aspirant in question. Paramacharyals assessment of individual spiritual aspirants included a knowledge of the aspirants family tree, specific traditions of that particular leaniage etc, which went a long way in addressing the root problems of all devotees and binding them with a unbreakable spiritual love.

This book has successfully captured the spiritual essence of Paramacharyal's interaction with devotees, through the wonderful narratives of the author.

The author has the knack of keeping the interest of the reader with his narratives laced with a masterful touch and mix of reality, awe and surprise, without compromising on the truth of the specific encounters.

The author has so far written18 spiritual books touching a wide range of spiritual topics, under the aegis of SREE KRISHNARPANAM SEVA SOCIETY, of which he is the founder member.

The overriding objective of his writings is not commercial but purely spiritual - to broadcast the gems from our Sanatana Dharma to the current and future generations, lest we lose track of these, in our otherwise materially absorbed life.

We live in a world, where there is an increasing necessity for a living jeeva to have knowledge and experience of a person who could be considered as a living embodiment of the import of the Vedas and Shastras. Paramacharyal was just that, who demonstrated to us that such an elevated self realized mahaan is possible to exist in the generally depraved age of Kaliyuga. With his life, conduct, teachings and love, Paramacharyal reestablished the greatness of the vedic way of life and inspired millions to live the vedic way of life.

For those who are not fortunate enough to have a personal association and interaction with such a self realized mahaan, it is extremely important that they are provided the benefit atleast of "vani" or words or instructions of the guru as they did not have the benefit of associating with the"vapu" or physical form of the guru.

This is what is sought to be achieved in writing such spiritual books - carrying the message of great mahaans like Paramacharyal through narration of true life episodes in a simple and interesting manner - capable of being appreciated by future generations (by all sections of society) who might not have had the fortune of personal association of His Holiness.

I am honoured indeed to be a minute part of this great endeavor and pay my humble obeisances to the author Shri J.K.Sivan for completing this task, inspite of so many challenges.

Hare Krsna.

**N.V. Kalyanaraman**
Port Moresby, Papua New Guinea



**M. RAMASWAMY**
(Retd . Managing Director, State Bank of Travancore)
32/1 Anugraha Apartments, Unnamalai Ammal Street
T. Nagar, Chennai 600017
Tel: (044) 2814 3250, Mob: (91) 9600049099

# FOREWORD

Everything in life happens as per the Divine plan.

Shri J.K. Sivan, the author of this book "PESUM DEIVAM" scripted this volume as per the sankalpa (Divine will) of HH Shri Kanchi Maha Periyavaa.

I am writing this Foreword again as per His Divine will. I am one of those blessed by HH Maha Periyavaa during my younger days and my whole family is blessed by Him.

Of late innumerable books and articles are getting published about the devotees'experiences with HH Maha Periyavaa. TV channels are also frequently telecasting the stories on HH Maha Periyavaa. Various lectures and discourses also are organised by various Sabhas.

In this context, what is the contribution of Sri J.K. Sivan?

Sri Sivan has targeted school children for this wonderful presentation. As the book is invaluable he has not put a price tag. He would like to distribute as gift this and the other publications released so far through SREE KRISHNARPANAM SEVA SOCIETY, Nanganallur.

Sri Sivan remains frocussed. His style is lucid. His presentation is simple. Sometimes it assumes as a conversation between elders and youngsters. The book touches the heart and lights the spiritual lamp.

A few chapters are devoted to clarification and elucidation of various concepts like Love, Surrender etc.. In the modern world, we are confronted with various epidodes which gives us insights to face various issues posed by present day problems and we find a solution through HH Maha Periyavaa. See the chapter on Akanda Kavery and Mazhanadu, On simplicity, HH Maha Periyavaa expounding the greatness of Mahamahopadyaya Mannargudi Periyavaa. This Chapter explains the concept of HH Maha Periyavaa.

All of us know that HH Maha Periyavaa is the incarnation of Lord Siva. This has come out through various episodes. Curing the illness of devotees where the doctors have given up hope, bringing solace to the poor. And even in respect of a cow where six doctors already pronounced the calf dead, HH Maha Periyavaa bringing life to the calf etc etc. Fools who came to scoff remained to pray -- an indifferent professor from USA, surrendering to HH Maha Periyavaa -- I have touched a few samples from this book. If you start reading, you will never be able to fold till you finish from beginning to end.

I appreciate the great service done by Sri Sivan and I am sure every reader will have the blessings of HH Maha Periyava.

'Hara Hara Sankara, Jaya Jaya Sankara'

**M. RAMASWAMY**
May 1, 2016

# தொகுப்பாளன் பேசுகிறேன்......

ஒவ்வொருவருக்கும் ஒரு ஆசை தீராத தாகமாக மனதில் இருக்கும். எனக்கு அப்படி ஒன்று. மகா பெரியவா படங்கள் ஒரு காலத்தில் நிறைய சேர்த்தேன். அதை அடிக்கடி எடுத்து வைத்துக் கொண்டு ரசிப்பது ஒரு பொழுது போக்கு. அந்த காலத்தில் அவை சிறிதும் பெரிதும், ஒரு பக்கம், பலபக்கம் காலண்டர்களாகத் தான் கண்ணில் பட்டது. அதை சேகரிக்க நிறைய நடந்திருக்கிறேன்.

பிறகு அவர் பற்றிய கட்டுரைகளை வாசிப்பது. இந்த நேரத்தில் தான் ஸ்ரீ ரா. கணபதியின் தெய்வத்தின் குரல் நிறைய பாகங்கள் புத்தகமாக வந்தது. அவற்றை பேராவலுடன் வாங்கி படித்தேன். பிறகு பத்திரிகைகளில் அங்கங்கு வரும் துணுக்கு செய்திகள், கல்கியில் அருள் வாக்கு வருமே அது போல. அதுவும் போதவில்லை.

நிறைய ஆன்மீக புத்தகங்களில் பலர் எழுதிய பெரியவா அனுபவங்கள் வர ஆரம்பித்தது. இதையும் மீறி முகநூல், வாட்சப் என்று நவீன வசதிகளிலும் பெரியவா படமாகவும் செய்தியாகவும் வந்தார். டிவியில் கதை கதையாக சொல்கிறார்கள். ப்ரவச்சனங்கள் தொடர்கிறது.

க்ரூப் க்ரூப்பாக நிறைய பேர் பெரியவா பற்றி ஒட்டு மொத்த செய்திகள் மின்னஞ்சலிலும் முகநூலிலும் தந்தார்கள்.

ஆஹா பெரியவ ஸ்தூல சரீரத்தில் இல்லையென்றாலும் சூக்ஷ்மமாக எல்லோரிடமும் எங்குமே நிறைந்திருக்கிறாரே.

இவ்வளவு இருந்தும் எங்கோ ஒரு குறை எனக்கு இடித்துக் கொண்டே இருந்தது.

நான் மேலே சொன்ன எல்லா வசதிகளும் எல்லாருக்கும் கிடைக்கிறதா? அனுபவிக்க நேரம் இருக்கிறதா? நிச்சயம் இல்லை என்பது சத்யமான வார்த்தை.

வயதானவர்கள், சிறு பள்ளிக்கூட பிள்ளைகள் இவர்களுக்கு மேலே சொன்னதெல்லாம் எளிதல்ல. காரணம் முதல் சாராருக்கு அவற்றை உபயோகிக்கத் தெரியாது. இரெண்டாம் சாராருக்கு உபயோகிக்க அனுமதியில்லை. "படி, படி, படி, படித்துக் கொண்டே இரு" என்று பெற்றோரும் பள்ளியிலும் பாடத்தையே தலையில் கட்டினால் இதெல்லாம் தெரிந்து கொள்ள எங்கே சந்தர்ப்பம்? தெரியாததை படிக்க விருப்பமில்லாமல் போய் விடுகிறது என்பது நமக்கு தான் பெரிய நஷ்டம்.

மேலும் நான் சொன்ன வசதிகளுக்கு பணம் செலவு செய்யவேண்டும். யாரிடம் பணம் இருக்கிறது என்று கேட்காதீர்கள். எல்லோரிடமும் நிறைய பணம் இருந்தாலும் இந்த புத்தகங்கள் வாங்கி படிக்கவோ, குழந்தைகளுக்கு அளிக்கவோ மனம் வருவதில்லை. விலையும் கூடவே தானே இருக்கிறது.

ஒருவேளை விலை ஒன்றுதான் குறுக்கே நிற்கும் தடைக் கல் என்ற பட்சத்தில் அதை நீக்கி விட்டால்? பெரியவாளை குழந்தைகளுக்கும் மற்றவர்களுக்கும் கையில் தாங்கி படிக்க வசதி கிடைக்குமே. அந்த முயற்சி தான் என்னை ஊக்குவித்தது.

படித்தவையில், பிறருடைய மகத்தான அனுபவங்களை பல மகான்கள், உதாரணமாக, ஸ்ரீ ரமணி அண்ணா, ஸ்ரீ ரா. கணபதி, ஸ்ரீ பரணிதரன், ஸ்ரீ மணியன் மற்றும் எத்தனையோ அன்பர்கள் எங்கெங்கோ தேடி அளித்த அற்புதங்கள் அதிசயங்களில் சிலவற்றை ஒரு புத்தகமாக்கி, எளிய நடையில் அவற்றின் மூல விஷயமும், உண்மையும், சுவாரசியமும் குறையாமல் தொகுத்து இதோ 'பேசும் தெய்வம்' தயாராகி விட்டது. இலவசமாகத்தான்.

இந்த காரியமும் காரணமும் இல்லாமல் இல்லை. இந்த புத்தகத்தை இலவசமாக்க சிலர் காரணம்மாக இருக்கவேண்டாமா? இருந்தார்கள், வழக்கம் போலவே ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் சேவை சொசைட்டி முகநூல் குழு செய்தி வாசகர்கள், SKSS வாட்சாப் நண்பர்கள். தாராள மனம் கொண்ட பெரியவா பக்தர்கள். தங்களால் இயன்ற நிதி உதவி அளித்து இந்த புத்தகத்தை அச்சிட முடிந்தது.

இதெல்லாம் மின்னஞ்சலிலும் முகநூலிலும் அன்றாடம் பரவச் செய்தேன். நிறைய வாசகர்கள் ஆர்வமோடு படித்து "இன்னும் இன்னும் எங்கே?" என்று என்னை தூண்டினார்கள். அவர்கள் அளித்த ஊக்கமும் ஒரு முக்ய காரணம்.

எல்லாவற்றிற்கும் மேலாக ஸ்ரீ பரமாச்சார்ய சுவாமிகளின் அனுக்ரஹம் என்று ஒன்று இருக்கிறதே. அது என்னை எழுத வைத்தது, உங்களை படிக்கவைக்கிறது. லோக சமஸ்தமும் க்ஷேமமாக இருக்கவேண்டாமா. ஜகத் குருவின் கடமை அல்லவா அது?

இதற்கு இரண்டு புண்ய புருஷர்கள் அணிந்துரை எழுதி என்னை ஆதரித்தார்கள். அவர்கள் ஸ்ரீ எம். ராமஸ்வாமியும் ஸ்ரீ V. கல்யாணராமனும்

அவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் சேவை சொசைட்டி சார்பாக நன்றி தெரிவிக்கிறேன்.

என்னுடன் ஒத்துழைத்து உதவும் SKSS நண்பர்கள், பிரசுரத்தில் பெரும்பங்கு கொண்ட திருமதி கனிமொழி (M/s G Publishing Service, Royapettah) அழகாக வழக்கம்போல் எங்களுக்கு புத்தகங்களை அச்சிட்டு தரும் திருமதி பானுமதி ஏழுமலை அவர்களுக்கும் மிக்க நன்றி.

இதன் தொடர்ச்சி அடுத்து "தெய்வ தரிசனமாக" வெளிவருகிறது. நிச்சயமாக அதுவும் இலவச புத்தகம் என்பதில் சந்தேகமே இல்லை.

நமஸ்காரம்.

**ஜே.கே. சிவன்**
நங்கநல்லூர்
*15.5.2016*



# நன்றி

இந்த அரிய பொக்கிஷம் “பேசும் தெய்வம்” மஹா பெரியவாளின் நேரடி அனுபவம் பெற்ற பக்தர்களின் வாயிலாக எல்லோரையும் அடைய, குறிப்பாக பள்ளிச் சிறுவர் சிறுமியர், முதியோர் பலர் ஆகியோருக்கு இலவசமாக அடைய உதவிய தியாக மனம் பொருந்திய திருமதி சந்திரிகா தேசிகன், திருமதி தேவி அர்ஜுன் மற்றும் எண்ணற்ற நல்லுள்ளங்களுக்கு எங்கள் ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் சேவா சொசைட்டி மனங்கனிந்த நமஸ்காரங்களை தெரிவித்துக் கொள்கிறது. அவர்கள் தொடர்ந்து எங்கள் நிறுவனத்தின் “இலவச புத்தக” பணியில் கலந்து கொண்டு பேராதரவு தர எல்லாம் வல்ல மாயாவி அந்த ஸ்ரீ கிருஷ்ணனின் அருளையும், மஹா பெரியவா அனுக்ரஹத்தையும் கோரி, அவர்கள் நிரம்ப வளம் பெற்று நீடூழி நோய் நொடியின்றி வாழ பிரார்த்திக்கிறோம்.

ஜே.கே. சிவன், மற்றும், ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் சேவை சொசைட்டி அன்பர்கள்.

# உள்ளே

# 1. காஞ்சியில் மூளை ஆபரேஷன்

இது நடந்தது ஒரு சாதுர்மாஸ்யம் சமயத்திலே. பெரியவா காஞ்சியில் இருந்தார். யாரோ ஒரு அம்மா தன்னுடைய இரண்டு பெண்களில் இளையவளோடு பெரியவாளை தர்சனம் பண்ண வந்தாள். மூத்தவளுக்கு கல்யாணமாகி நல்லபடி செட்டில் ஆகிவிட்டாள். சின்னப்பெண் M.A. படித்துவிட்டு வேலை பார்த்து வந்தாள். அவளுக்கு வரன் பார்த்துக் கொண்டிருந்தாள் அந்த அம்மா. ஆனால், திடீரென்று ஒருநாள் அந்தப்பெண் ஒருமாதிரி பேசவும், சிரிக்கவும் ஆரம்பித்தாள்.

வயசுக்கேத்த பேச்சோ, பழக்கமோ எதுவுமே இல்லாமல், சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் பேச ஆரம்பித்தாள். அக்கம் பக்கம் இருப்பவர்கள், எதையோ பார்த்து பயந்து விட்டாள், காத்து கருப்பு வேலை, மூளைக் கோளாறு என்று சொல்லி, தங்களுக்கு தெரிந்த உபாயங்களை எல்லாம் திணித்தனர். டாக்டர்கள் விடுவார்களா? நல்ல சமயமடா. நழுவ விடுவாயோ. உடனே அந்த ஸ்கேன் இந்த ஸ்கேன், டெஸ்ட், லேப் டெஸ்ட், எக்கச் சக்க சோதனைகளுக்குப் பிறகு

"வேலூருக்கு கூட்டிக் கிட்டு போயி மூளையில ஒரு ஆபரேஷன் பண்ணினா எல்லாம் சரியாயிடும்".

பெண்ணின் அம்மாவுக்கோ வயிற்றில் நெருப்பு. ஏகக் கவலை! கல்யாணம் பண்ணப்போற சமயத்தில் இப்படி ஒரு கஷ்டமா? அவளுக்கு தெரிந்த பெரிய டாக்டர் காஞ்சியில் இருக்கும்போது வேலூர்லே என்ன வேலை?

பெண்ணைக் கூட்டிக் கொண்டு காஞ்சிக்கு வந்தாள். ஆனால், வந்த அன்று சாயங்காலம் பெரியவாளை தர்சிக்க முடியவில்லை. இரவு முழுவதும் அந்தப் பெண்ணை வைத்துக் கொண்டு "ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர" என்று ஜபித்த வண்ணம் இருந்தாள். அந்தப் பெண்ணோ, கத்திக் கத்தி மயக்கம் அடைந்து விட்டாள்.

மறுநாள் காலையில் மடத்துக்கு சென்று பெரியவாளிடம் கதறி விட்டாள் அந்த அம்மா.

"பெரியவாதான் காப்பாத்தணும்! திடீர்னு புத்தி பேதலிச்ச மாதிரி ஆயிட்டா. நல்ல குழந்தை, கல்யாணத்துக்கு பாத்துண்டு இருக்கறச்சே, இப்படி ஆயிடுத்து. காப்பாத்துங்கோ!"

பெரியவா முன் பெட்டிப் பாம்பாக அடங்கி ஒடுங்கி நின்று கொண்டிருந்தாள் அந்தப் பெண். பெரியவாளுடைய அருட் கடாக்ஷம் அவள் மேல் விழுந்தது. தொடர்ந்து மூன்று நாட்கள் மடத்துக்கு வந்து பெரியவாளை தர்சனம் பண்ணினார்கள்.



மூன்றாவது நாள், பெரியவா அந்தப் பெண்ணை உற்றுப் பார்த்துக் கொண்டே.

"உனக்கு அபிராமி அந்தாதி தெரியுமா?" "ஆணா தெரியும் பெரியவா"

"அபிராமி அந்தாதி சொல்ல ஆரம்பி!" என்று உத்தரவிட்டார்.

பெரியவாளுடைய கமலத் திருவடிகளை பார்த்துக் கொண்டே அந்த பெண்ணும்,

"தாரமர்க் கொன்றையும் ஷண்பக மாலையும் சாற்றும், தில்லை ஊரர்தம் பாகத்து உமை மைந்தனே!" என்று கணீரென்று சொல்ல ஆரம்பித்தாள்! அப்போதுதான் அந்த அதிசயம் நடந்தது!

வரிசையாக பாடிக் கொண்டிருக்கும்போதே நடுவில் மயக்கமடைந்தாள். அவளை அப்படியே இருக்கட்டும் என்று சொல்லிவிட்டார் பெரியவா. கொஞ்ச நேரத்தில் மயக்கம் தெளிந்து எழுந்தவள், முற்றிலும் பூரணமாக குணமடைந்திருந்தாள்! அம்மாவும், பெண்ணும் பெரியவாளின் திருவடிகளில் கண்ணீரைக் காணிக்கையாக் கினார்கள்.

மஹான்களின் கருணாகடாக்ஷம் ஒரு முறை நம் மேல் விழுந்தாலே போதும்! கோடி கோடி ஜன்ம வினைகளைப் பொசுக்கிவிடும்! அது நமக்கு ப்ரத்யக்ஷத்தில் தெரியக்கூட தெரியாது. நல்லதோ, கெட்டதோ எது நடந்தாலும் "அவர் இஷ்டம்" என்று இருந்து விட்டால், தாயின் கர்ப்பத்தில் இருக்கும் சிஸுவைப் போல், நாம் நிஸ்சிந்தையாக இருக்க, அவர் தாயுமான ஸ்வாமியாக இருந்து நம்மை ரக்ஷிப்பார்! இது சத்யம்!



# 2. அம்பாள் பற்றி தெரியுமா?

தெய்வம் தான் நம்மை கண் இமைக்காமல் பார்த்து காத்து வருகிறதே தவிர நாம் எங்கே எப்போது தெய்வத்தை பார்க்க முடியும். எனவே நாம் யாருமே அம்பாளை பார்த்ததில்லை. அம்பாளின் படங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொருமாதிரி இருக்கிறதே? எல்லாமே அழகாகத்தான் இருக்கிறது. வைரத்தை எந்த பக்கம் பார்த்தாலும் "டால்" அடிக்கிறமாதிரி.

மஹா பெரியவா சில அற்புதமான சேதிகளை சொல்லியிருக்கிறதிலே கொஞ்சம் சுருக்கி, சுலபமா விண்டு தருகிறேன்.

"அம்பாளுடைய ரூபம் எப்படி இருக்கும்னு உருவகப்படுத்த ஒரு ஐடியா. ஒரு நூறு பேருக்கு அன்னதானம் செய்கிற ஒரு நல்ல ஜீவனின் முகத்தைப் பார்த்தால், அதில் எத்தனை அன்பு சொட்டுகிறது? அன்னதானம் செய்து, பலர் வயிறாரச் சாப்பிட்டு சந்தோஷப்படுகிறபோது, அந்த அன்னதாதாவின் சந்தோஷத்தைப் பார்க்காதவா யோசனை பண்ணிப்பாருங்கோ.

அந்த சந்தோஷத்தில் அவன் முகத்தில் எவ்வளவு அன்பு சொட்டுகிறது. சாப்பிடுகிறவனைவிட சாப்பாடு போட்டவனுக்குத்தான் ஆனந்தம் அதிகம்.

நூறு பேர் வேண்டாம். முடியாது நம்மால். ஒரு பத்து பேருக்காவது, இல்லை ஒரு ரெண்டு மூணு பேருக்காவது போடறமா?

ஒரே ஒரு வேளை சோறு போடுகிறவன் கிட்டேயே இத்தனை அன்பும் ஆனந்தமும் இருக்கிறதே. மகா பாபங்களைச் செய்து கொண்டு, அப்படி காரியத்தில் செய்யாவிட்டாலும் மனஸினால் மகா பாபங்களை விடாமல் நினைத்து கொண்டிருப்பது ஜாஸ்தி,

ஒரு வேளை சோறு கிடைக்கக்கூட யோக்கியதை இல்லாத நம் இத்தனை பேருக்கும் கோடாநு கோடி ஜீவன்களுக்கும், கல்ப கோடி காலமாக சோறு போட்டுக் கொண்டிருக்கிற ஒருத்தி அன்ன பூரணேசுவரியான அம்பாள்தான். அவள் முகம் எப்படி ஜீவ களையோடு சந்தோஷத்தில் கொப்புளிக்கும்?



அவளுடைய அன்பையும், அதில் உருவாகும் ஆனந்த ஸ்வரூபத்தையும் நம்மால் கற்பனை பண்ணக்கூட முடியாது. இதை எப்படி எங்கே நான் எழுதுவது? அம்பாள் ஸௌந்தரிய ஸ்வரூபம் ஆச்சே. அதால் தானே ஸௌந்தரிய லஹரி என்றே ஆச்சாரியாள் ஸ்தோத்திரம் பாடியிருக்கிறார். இத்தனை ஸௌந்தரியம், லாவண்யம் அவளுக்கு எப்படி வந்தது? அன்புதான் அழகாகிறது. காருண்யம்தான் லாவண்யம். பாக்கி சரீர அழகு ஓர் அழகல்ல. கொஞ்சம் கோபம் வந்தால், துளி ஜுரம் வந்தால், சரீர அழகு தங்குமா?, தாங்குமா?

அம்பாளோ நிரந்தரமான கருணாமூர்த்தியாக எப்போதும் லாவண்யமாக இருக்கிறாள். எந்த பக்தருக்கு எந்த ரூபத்தில் மனசு ஈடுபடுமோ, அந்த ரூபத்தில் வந்து அருள் புரிய பல ரூபங்கள் எடுத்துக்கொண்டிருக்கிறாள். ராஜராஜேசுவரி, புவனேசுவரி, துர்க்கை, காளி என்று இப்படி ஸௌம்யமாகவும் உக்ரமாகவும் பல தினுசு. வேறு வேறு ரூபம். ஒவ்வொரு ரூபத்தையும் பிரத்யக்ஷமாகத் தரிசனம் செய்ய ஒவ்வொரு மந்திரம் இருக்கிறது.

மந்திரம் என்பது ஒரு சப்தக் கோவை. அக்ஷரங்களின் கூட்டம். பல வடிவங்களில் இருக்கிற அம்பாளே பல சப்தங்களாகவும், அக்ஷரங்களாகவும் இருக்கிறாள். காளிதாஸர் அவளை" ஸர்வ வர்ணாத்மிகே, ஸர்வ மந்த்ராத்மிகே'' என்று 'சியாமளா தண்டகத்தில்' ஸ்துதி செய்கிறார். வர்ணம் = நிறம் மட்டும் அல்ல. ''அக்ஷரம்'' என்றும் அர்த்தம். ஒலி வடிவான அக்ஷரங்களும், ஒளி வடிவமான ரூபங்களும்

ஒரே மூலத்திலிருந்து வந்தவைதான். அவை ஒன்றுக்கொன்று நிரம்ப நெருக்கமான சம்பந்தம் உடையவை. ஸயன்ஸ் நிபுணர்கள்கூட இந்த ஒற்றுமையைச் சொல்கிறார்கள். ஜலக்கரையில் பலவிதமான சப்தங்களை எழுப்பிப் பார்த்தார்கள். அப்போது அவற்றின் அதிர்வுகளைப் (vibration) பொறுத்து ஜலத்தின் மேலே மிதக்கிற லேசான துகள்கள் வெவ்வேறு உருவங்களாக அமைந்தன. நாதத்துக்கே ரூபம் கொடுக்கற சக்தி இருக்கிறது என்று இதனால் தெரிகிறது.

ஒரு பெரிய அலை மடிந்து மடிந்து சிறு சிறு அலைகளாகி அடங்குகிற மாதிரிச் சில சப்தங்கள் இருக்கின்றன. இதை வீசிதரங்கம் என்பார்கள். ஒரே கொப்புளிப்பில் பலவாகத் தெறிப்பதுபோல் விழுகிற சப்தங்களை முகுளம் என்பார்கள். இப்படிப் பலவகைப்பட்ட சப்தங்களையெல்லாம் ஐம்பத்தொரு அக்ஷரங்களாகப் பிரித்திருக்கிறார்கள். இவற்றுக்குப் பெயர் மாத்ருகா என்பது. மாத்ரு என்றால் தாயார் என்பது தெரியுமே. சப்தமாகவும், எழுத்தாகவும் அம்பாள் இருக்கிறாள். இவற்றில் சில சப்தக் கோவைகளை விடாமல் ஜபிக்கும்போது, அவற்றுக்குரிய ரூபங்களும் பிரத்யக்ஷமாகின்றன. இப்படிப்பட்ட சப்தக் கோவைகளைத்தான் மந்திரம் என்கிறோம்.

மந்த்ரம் என்பது ஏதோ சும்மா இல்லை.

மந்திரமே அம்பாளின் ஸ்வரூபம்தான். கை கால் முதலான அவயங்களோடு ஆயுதங்களைத் தரித்த வடிவங்களைப் போலவே எல்லா மந்திரங்களும் அவள் வடிவம்தான். அதோடுகூட, இந்த மந்திரங்களை ஒருமுகப்பட்ட சித்தத்தோடு தீவிரமாக ஜபம் செய்தால், அவளே அந்தந்த மந்திரத்துக்குரிய ரூபத்தில், சரணாகதி அவயவங்களுடனும் ஆயுதங்களுடனும் முத்திரைகள் முதலியவற்றுடனும் தரிசனம் தருவாள்.

இந்த மந்திரங்கள் எல்லாவற்றுக்கும் மூலம் பிரணவம். ("ஓம்") அதிலிருந்து தான் இந்த நாம, ரூபப் பிரபஞ்ஜம் முழுக்க வந்தது. நாத ஸ்வரூபிணியான அம்பாளே ஒங்காரமாகிய அந்தப் பிரணவமும் ஆவாள். அ, உ, ம மூன்றும் சேர்ந்து ஓம் என்று ஆகிறது. (ஓம் = அ-சிருஷ்டி; உ- பரிபாலனம்; ம - சம்ஹாரம்)

முத்தொழிலும் செய்யும் மூல சக்தியே பிரணவம். இதையே அம்பாளின் தொழில்களில் விசேஷமான கருணையைக்காட்டும் பரிபாலனத்தில் தொடங்கினால், உமா ( உ - ம - அ) என்பது. உபநிஷதமும் அவளை உமாஹைமவதி என்றே சொல்கிறது.

இல்லையா?



# 3. ஒரு ஆஹா விளக்கம்

தாத்தா சார், உலகத்திலேயே புரிந்து கொள்ள முடியாதது எது?

கமலா டீச்சர் கூட இப்போதெல்லாம் தாத்தாவை இப்படித்தான் அழைக்கிறாள்.

பிளாஸ்கை திறந்து ஒரு மடக்கு வெந்நீரை குடித்துவிட்டு தாத்தா பேசுகிறார்:

“இதோ பாரம்மா. மனிதமனம் விசித்ரமானது. எப்போது எப்படி மாறும் என்று எவராலுமே சொல்லமுடியாதது.” அதை அனுபவித்தோ, சரியாக புரிந்துகொண்டோ யாரோ ஒருவர் முதல் முதலில் மனம் ஸ்ரீமான் குரங்கு என்றார். குரங்கு ஒரு நிலையில் நில்லாமல் கிளைக்கு கிளை தாவுகிறதைப்போல் எதிலும் ஒரு கண நேர விருப்பம், ஈடுபாடு, உடனே அதில் அலுப்பு, சலிப்பு இப்படி மாறி மாறி செயல்படும் மனது உண்மையிலேயே குரங்கைக் காட்டிலும் மோசம். டார்வின் பாவம் எங்கெல்லாமோ தேடி அலைந்து குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன் என்று சொல்லி வைத்து நாம் பெருமைப்படுகிறோம்! கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தாலே நமக்கே தெரிவதை எங்கெங்கோ காட்டிலும் மேட்டிலும் கடலிலும் தீவிலும் தேடி தாடிக்கார டார்வின் ஏனோ சங்கடப் பட்டு கண்டு பிடித்தார்.

இதை அனுபவித்து இதில் இருந்து மீள ஒரு உன்னத ஏற்பாடு, சலிப்பு தட்டாத வகையில் எதிலும் மாறுதல், மாறுபாடு எல்லாம் உண்டாக்கி இந்து மதத்தில் பெரியோர்கள் சிலர் வழி காட்டியிருக்கிறார்கள். நமது மகா பெரியவா போல ஒரு ஞானி, சர்வஞர், உண்டா. எதையும் அவர் சொல்கிற போது தனி அழகோடு புரி படும்.

மாறுபாட்டில் ருசியே மனித இயற்கை - சலிப்பையே விருப்பாக மாற்ற உதவும் வழி தான் பகவானை பல ரூபங்களில் பல முறைகளில், பல பண்டிகைகள், பட்சணங்களோடு வழிபடுவது என்பதை தெளிவாக மஹா பெரியவா சொன்னதை கொஞ்சூண்டு சுருக்கி சொல்கிறேன்.

சாதாரண மநுஷயர்கள் மட்டுமல்ல பக்குவ ஸ்திதியில் ரொம்ப தூரம் முன்னேறியவர்களாக இருந்தால்கூட, மநுஷ ஸ்வபாவம் எப்படியிருக்கிறதென்றால் ஒன்றிலேயே எக்காலமும் முழு மனஸையும் கொடுப்பதென்றால் முடிவதில்லை.

எத்தனை நன்றாயிருந்தாலும் அது ஒன்றிடமே முழு ஈடுபாட்டை ஸதா காலமும் வைக்க முடிவதில்லை.

இன்றைக்குச் சமையல் - ஸாம்பார், ரஸம், கறி - நன்றாகத்தானிருக்கிறது. அத்ருப்திக்குக் கொஞ்சங்கூட இடமில்லை. ஆனால், நித்யம் (தினந்தோறும்) இதே இதே கத்திரிக்காய் சாம்பார் வெண்டைக்காய் கறி என்றால் பிடிக்குமா? கறி காய்களை, குழம்புத் தானை மாற்றத் தோன்றுகிறது! அப்புறம், 'இது எதுவுமே வேண்டாம். ஒரு நாள் சித்ரான்னங்களாகச் சாப்பிடலாம்' என்று தோன்றுகிறது.

வித்வான் எத்தனை நன்றாகப் பாடினாலும், அதே பாட்டு, அதே ராகத்தை ஒவ்வொரு கச்சேரியிலும் பாடினால் அலுத்துப் போகிறது.

எதில் (எந்தத் துறையில்) போனாலும் இப்படித்தான் பல தினுஸாக,மாறுபாடாக வேண்டியிருக்கிறது.

அவ்வப்போது ஒவ்வொன்றிடமும் முழு ஈடுபாடு இருந்தாலும்- இன்றைக்குத் தயிர்வடை என்றால் சப்பு கொட்டிக்கொண்டு ஐந்து ஆறு என்று உள்ளே தள்ளினாலும், நாளைக்கு, நாளன்றைக்கு, நாலாம் நாள், அஞ்சாம் நாளும் அதுவேதான் என்றால், இன்றைக்குச் சப்புக் கொட்டினவர்களே அன்றைக்கு முகத்தைச் சுளிக்கிற மாதிரி - திரும்பத் திரும்ப அது ஒன்றேதான் என்று வரும்போது அதிலே ருசி, ஈடுபாடு குறைந்து விடுகிறது.

இது தெரிந்துதான் நம்முடைய மதத்தில் இத்தனை ஸ்வாமி, விதவிதமான ரூபம், விதவிதமான அலங்காரம், விதவிதமான வாஹனம், அதற்கும் விதவிதமான பூஜா பத்ததி வெவ்வேறு உற்சவ காலங்கள் என்று வைத்திருக்கிறது.

கோயிலுக்குப் போகிறோம். பிள்ளையார் ஸந்நிதியில் நிற்கிறோம். அப்போதைக்கு ஒரு க்ஷணம்,இரண்டு க்ஷணம் மனஸு குவிந்த மாதிரிதான் இருக்கிறது. அப்புறம் கையை, காலை சொறிந்து கொள்கிறோம். மனஸு பிய்த்துக்கொண்டு கிளம்பி விடுகிறது!

மனஸை அப்படியே எந்தக் குப்பைத் தொட்டிக்கு வேண்டுமானாலும் ஓடட்டும் என்று விட்டு விடுவதா? அப்படி விட்டு விடாமல், நல்லதிலேயே, தெய்வ ஸம்பந்தமாகவே அந்த மனஸை இழுத்தால்தானே தேவலை?

எப்படி இழுப்பது?

பாழும் மனஸுக்கு இந்த விக்னேஸ்வரமூர்த்தி, தொப்பையும் தொந்தியுமாக இத்தனை அழகாக உட்கார்ந்திருந்துங்கூட, அவரிடமே தொடர்ச்சியாக ஒட்டிக் கொண்டிருக்க முடியவில்லையே!'

பரவாயில்லையப்பா! என்று இங்கேதான் நம் ஸமயாசார புருஷர்கள் ஆறுதல் தர வருகிறார்கள்.

'மனஸின் நேச்சர் அப்படித்தான் அப்பா! அதைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் திருத்தி நிலையாக ஒருமுகப் படுத்த முடியுமப்பா!'

அதற்கு எதிலும் 'சேஞ்ச்' வேண்டும். தெய்வ ஸம்பந்தமாகவுங்கூட அப்படி வேண்டும். அதையும்தான் நம்முடைய மதம் தருகிறதே!

விக்நேச்வரரிடம் ஈடுபாடு குறைகிறதா, அழாதே! இதே 'சேஞ்சா'க ஸுப்ரஹ்மண்யர் ஸந்நிதி, அப்புறம் இன்னும் பல 'சேஞ்ச்'கள் -அம்மன், ஸ்வாமி, தக்ஷிணாமூர்த்தி, துர்க்கை, நடராஜா, மநுஷ்ய ரூபத்தில் வந்த அறுபத்து மூவர் என்று எல்லாம் ஒன்று சேர்த்துத்தானே கோவில் என்று வைத்திருக்கிறோம்.

ஒவ்வொன்றிடமும் ஒரு க்ஷணம், இரண்டு க்ஷணம் மனஸ் ஈடுபட்டுக் கும்பிட்டு விட்டுப் போயேன். மொத்தத்தில் ஒரு கணிசமான நாழி உன் மனசு தெய்வ ஸம்பந்தமாகவே ஈடுபட்டிருக்கும்' என்கிறார்கள்.

நம்முடைய மதத்தின் சிறப்புக்களிலெல்லாம் பெரிய சிறப்பு ஒன்று எது தெரியுமா? ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றேதான் என்று காட்டுகிற ஒரே மதம் ஹிந்து மதம்தான் என்று பலபேர், அறிவாளிகள், அந்நிய தேசத்தவர்கள்கூட, ரொம்பவும் சிறப்பித்துச் சொல்கிறார்கள்.

'எந்த மதத்திலும் இல்லாத அத்வைத ரத்னம் இருக்கிற இந்த மதத்தில், இந்து மதத்தில், எந்த மதத்திலும் இல்லாத அளவுக்கு இத்தனை த்வைதமான ஆசார அநுஷ்டானங்களும், சாமிப்பட்டாளமும் இருக்கிறதே! இவை ஒன்றுக்கொன்று ஒரே முரண்பாடாக இருக்கிறதே' என்று அவர்களில் ரொம்பப் பேர் வருத்தப்படுகிறார்கள்.

எனக்கோ (நானல்ல, மஹா பெரியவா) என்ன தோன்றுகிறதென்றால், அத்வைதம் நம்முடைய பெரிய சிறப்புத்தான் என்றாலும் , அதைவிடவும் சிறப்பாக எது தோன்றுகிறது? இப்படி ஒன்றேயான அத்வைதத்தைச் சொன்ன மதத்திலேயே வித்யாஸம் வித்யாஸமாக இத்தனை வர்ணாச்ரம வ்யவஸ்தைகளும், இத்தனை பட்டாளமாக தெய்வங்களும் வைத்திருப்பதுதான்!

"அத்வைதம், ஏக பரமாத்மா' என்பது ஐடியல். இத்தனை ஸ்வாமி பட்டாளம், இத்தனை விதமான ஆசார வ்யவஸ்தைகள், என்பது ப்ராக்டிகல். ப்ராக்டிகலில் ஆரம்பித்து க்ரமேண (படிப்படியாக) முன்னேறினால்தான் ஐடியலுக்குப் போய்ச் சேர முடியும். இப்போதே ஐடியல் என்று யத்தனம் பண்ணினால் ஒன்று தோல்வியாக



ஆகும், அல்லது, அதைவிடத் தப்பாக, ஹிபாக்ரிஸியாக, போலி வேஷமாகத்தான் ஆகும்.

அத்வைதத்தைச் சொன்ன மதத்தில் இத்தனை த்வைதத்துக்கு இடம் கொடுப்பதா என்று கொஞ்சங்கூடத் தயங்காமல், ஜனங்களின் மனப்பான்மையை நன்றாகப் புரிந்துகொண்டு, அநுதாபத்துடன், பரம கருணையுடன் இத்தனை தர்மாசாரப் பிரிவினைகளையும், சாமிப் பட்டாளத்தையும் இடம் கொடுத்து வைத்துக் கொண்டிருப்பதுதான் சிறப்புக் களில் பெரிய சிறப்பு. அதனால் தான் அத்வைத ஆசார்யாளான நம்முடைய பகவத் பாதாளே வர்ணாச்ரம வ்யவஸ்தைகளையெல்லாம் மறுபடி நன்றாக ஒழுங்கு படுத்தி நிலை நாட்டினார்.

பஞ்சாயதனம் என்று ஐந்து தெய்வங்களை வைத்துப் பூஜை பண்ணும்படியாக ஏற்பாடு செய்தார். அதோடு, 'ஸுப்ரஹ்மண்யரையும் பூஜை பண்ணு' என்கிற மாதிரி (ஸுப்ரஹ்மண்ய) புஜங்கம் பாடி வைத்திருக்கிறார். ஷண்மத ஸ்தாபனம் என்று பண்ணும்போது அதில் (ஸுப்ரஹ்மண்ய உபாஸனையான) கௌமாரம் என்பதையும் சேர்த்துக்கொண்டார். இன்னும், ராமன், க்ருஷ்ணன், நரஸிம்மமூர்த்தி, அம்பாள் என்று எடுத்துக்கொண்டால் அதிலேயே த்ரிபுரஸுந்தரி, பவானி, ப்ரமராம்பா, சாரதாம்பா என்று பல ரூபபேதங்கள், கங்காதி புண்ய நதிகள்–என்று ஒன்று பாக்கியில்லாமல் அத்தனை சாமிப்பட்டாளத்தின் மேலேயும் தோத்ரங்களைப் பாடி வைத்திருக்கிறார்.



# 4. கீதையின் நாயகனே

ஆன்மீக வாழ்க்கையே உண்மையான வாழ்க்கை. கடவுளோடு நெருங்கிய வாழ்க்கை தான் சுதந்திர வாழ்க்கை. எந்த நல்ல எண்ணமும், செயலும், வார்த்தையும் நன்மையைத்தான் பயக்கும். வாழ்வில் அமைதி இருந்தால், அது நம்மோடுமட்டுமின்றி சுற்றிலும் மற்றோருக்கும் பரவும். எனக்கு அப்படி ஒரு அருமையான நட்பு ஒருவரிடம். ஆணோ பெண்ணோ யாரா இருந்தால் என்ன?

ஒரு பொற்காலம் நமக்கு வேண்டுமானால் நாம் செய்யவேண்டியது ஒருவரிடத்தில் உள்ள நல்ல குணம், நல்ல செய்கை, நல்ல வார்த்தையை மட்டுமே மதிக்கவேண்டும். மற்றதை அறவே புறக்கணிக்க வேண்டும், மறக்கவேண்டும். இதால் எல்லோரிடமும் அன்பு மட்டுமே வளரும். அன்பு நிறைந்த இடத்தில் அணு சக்தி அழிவு எதற்கு தேவை? அவசியமே காணாமல் போய்விடும். பகவான் மீது அன்பை செலுத்து. சக மனிதரை நேசி."அவன் குழந்தை மனசுகொண்டவனடா" என்ற பேர் எடு. இது தான் அன்பு வழி."

உடல் வளர்ச்சி போல் மன வளர்ச்சி, உள்ள வளர்ச்சியும் தேவை. ஒன்றாம் வகுப்பிலிருந்து நேரே அடுத்த ஜூன் மாதம் காலேஜ் போக முடியுமா? அதே போல் உள்ள அமைதி கொஞ்சம் கொஞ்சமாக தான் விருத்தி அடையும். விடாது முயற்சி செய்ய வேண்டும். முக்யமாக பொறுமை வேண்டும். ஒரே நாள் ராத்திரியில் அடையும் சமாசாரம் அல்ல இது.

ஒரு மந்திரம் தெரிந்து கொள்வோம். நம்மை அது தக்க சமயத்தில் காக்கும். "யாரையும் தூக்கி எறிந்து நிந்தித்து பேசவேண்டாம். அப்போது தான் நம்மை யாரும் நிந்திக்க மாட்டார்கள்."

வாழ்க்கையில் "அடிபடாததால்" (அனுபவ முதிர்ச்சி இல்லாததால்) கஷ்டங்களை அநேகர் எதிர்கொள்ள வேண்டி யிருக்கிறது. குழந்தைகள் எப்படி பெரியவர்கள் ஆகிறார்களோ அப்படித்தான் வாழ்வில் அனுபவமும் (maturity) வளரும். நாம் நம்மை ஆள எவ்வளவு தலைவர்களை நம்பி பதவியில் அமர்த்துகிறோம். அப்பறம் தானே "அனுபவித்து" உணர்கிறோம். இதையே வாழ்க்கையில் "பாடம்" என்று கற்றுக் கொள்கிறோம்.

நம்மை விட ஏதோ ஒரு மேலான சக்தி நிச்சயம் உள்ளது. சந்தேகமே வேண்டாம். அது நம்முள் குடிகொண்டு நம்மை ஆட்டுவிக்கிறது மட்டும் அல்ல, பரவி அங்கிங்கெனாதபடி எங்கும் எதிலும் நிறைந்திருக்கிரது என்கிற எண்ணம் விடாமல் இருக்கவேண்டும். கடவுள் என்று அதை எந்த பிடித்த பெயராலும் அழைப்போம். நாமத்தை போடுவோம். விபூதியை பூசுவோம். அன்பை எல்லோரிடத்திலும் செலுத்தி

முழுமையாக இதை உணரமுடியும். உள்ளத்தின் அமைதியில் அவனைக் காணலாம். அப்போது ஒரு தனி ஆனந்தம் உள்ளே உருவாவதை அனுபவிக்க முடியும்.

நன்றியை எதிர்பாராமல் கொடுப்பவன், அமோகமாக பிரதிபலன் பெறுவான்.

தனக்கு நல்லது என்று தெரிந்ததை, அறிந்ததை, செயல்படுத்தி மற்றோருக்கும் உதவுபவன் ச்ரேஷ்டன்.

பகவானே உன் செயல் என்று எதையும் தன்னாலியன்றவரை சிறப்பாக செய்பவன் நல்ல பலனையே பெறுவான். எனது மனதில் நிறைந்த நண்பர் எதற்கெடுத்தாலும் "பகவானே" என்று தானாக வார்த்தை வரும். எனக்கு பிடிக்கும்.

எல்லோரும் நல்லவரே, எல்லோரும் என்னவரே என்று எவன் அன்போடு பழகுகிறானோ அவன் பலமடங்கு அன்பை பெறுபவன்.

நமக்கு வரும் கஷ்டங்கள், துன்பங்கள் எல்லாமுமே நாம் நம்மை செலுத்தும் அந்த பரம சக்தி காட்டும் வழியை புறக்கணிப்பதால் தான்.

மனதில் எப்போது அமைதி தோன்றுகிறதோ, ஆண்மீக வளர்ச்சியில் தொடர்கிறோம் என அறியலாம். காரணம், நம்முள் நம்மை செலுத்தும் அந்த அதீத சக்தியை உணர ஆரம்பித்து விட்டதால் தான்.

பிறரிடம் மாற்றத்தை எதற்கு எதிர் பார்க்க வேண்டும்? முதலில் நாம் மாறினாலே அவர்களிடம் மாற்றம் தானாக தெரியும்.

கடவுள் மீது நம்பிக்கையும், பக்தியும் உள்ளவனுக்கு எதிலும் பயம் தோன்றாது. அவன் தான் எதையும் எவரையும் அன்பினால் சொந்தம் கொள்கிறானே. பயம் எங்கிருந்து வரும்?

நமக்கு கஷ்டங்களும் துன்பங்களும் வருவது கூட ஒரு விதத்தில் அந்த நேரங்களில் நம்மை அவனை நினைக்கச்செய்வதால் நன்மையே என்று கூட தோன்றுகிறது. குந்தி அதைத் தானே உன்னிடம் கேட்டாள் கிருஷ்ணா?

உடல் உபாதைகள் அது அழிவுள்ளது என்று நினைவூட்டவே தான். பழைய சட்டையை தூக்கிப் போட நேரம் நெருங்கி வருகிறது. புதியது நமக்கு எங்கோ தயாராகிவருகிறது என்று உணர்த்தவே.

மற்றவரின் செய்கைகள் தவறு, சரி என்று சொல்ல நமக்கேது உரிமை. அவரவர் தாமாகவே தம்மை ஆராய்ந்து கொள்ள உதவினால் இறைவன் நமக்கிட்ட பணியை கொஞ்சமாவது செய்து வருகிறோம் என அர்த்தம்.

ஒரு விஷயம் முக்கியம். மனம் எப்போது இறைவனின் தொடர்பில் ஈடுபட்டுவிட்டதோ, அந்தக் கணம் முதல் நாம் தனியாக இல்லை. அவனது அழகிய "நெட் வொர்க்" திட்டங்கள், நேர்த்தியான செயல்கள் நமக்கு பலனளிக்க

தொடங்கிவிட்டது புரியும். எப்போது மனதில் அமைதி குடி புகுந்ததோ, அப்போதே வெளியே இருந்து ஒரு புத்துணர்ச்சி வந்து சேரும். களைப்பு அலுப்பு என்பதே காணாமல் போகும். **20-21** மணி நேரம் தினமும் கூட உட்கார முடியுமே. **12** மணி நேரம் நிற்க முடிந்ததே.

எப்போது அவனை நினைக்க ஆரம்பித்துவிட்டோமோ வெளிச்சம் தேடி வேறு விளக்கொளி நாட தேவையே இல்லை. சூரியனையே நோக்கி நடக்க ஆரம்பித்து விட்ட பிறகு விளக்கொளி வெளிச்சம் அவசியமா?

உண்ணும் உணவு, இந்த உடலை நன்றாக செயல் பட தேவையானதாக மட்டும் இருக்கட்டுமே. அது தான் ஆரோக்கியம். வாழ்வதற்கு தான் உணவே தவிர உண்பது தான் வாழ்க்கை அல்ல. இன்னும் வேண்டும் என்ற எண்ணம் வரும்போது உண்பதை நிறுத்திக்கொள்ள பழகினால் டாக்டர் பெயர், வீடு, அட்ரஸ் மறந்து போகும். வாழ்க்கை இதால் முழுமை பெரும்.

நமது நல்ல எண்ணங்களும் நற்செய்கைகளும் நமக்கு மட்டுமல்ல பிறர்க்கும் உதவுகிறது என்பதை விட உள்ளும் புறமும் தூய்மையடைய உதவுகிறது. இது இருந்தால் கிரிதாரி தானே நம்முள் வந்து அமர்வானே. குப்பையிலா ஒருவன் வசிப்பான்? ஒரு இனிய சங்கீதம் மனதை வருடவில்லையா? அது போல் இதயம் இதால் குளிரும்.

உள்ளே நின்று கீதை நாயகன் வழி காட்டினால், தப்பான பாதையில் எப்படி போகமுடியும்? நல்ல நட்பு தானே கிடைக்கும். கல் முள் எதுவும் இல்லாத சீரான பாதை அல்லவா அது? பயணம் -ஒரு சுற்றுப் பயணம் ஆகிறது - சுற்றி சுற்றி அவனையே வலம் வந்தால் சுற்றுப் பயணம் தானே!

கடவுள் ஏதோ ரொம்ப படித்த, யாகம் செய்த, தானம் செய்த, தனவந்தனுக்கு, ஆயிரம் கோவில் குளங்கள் சென்றவனுக்கு மட்டும் என்பது ராங் நோஷன். தவறு. ஒரு கணம் மட்டுமே போதும். சுத்தமாக கலப்படமில்லாத மனத்தால் அவனை நினைத்தால் அவனை உடனேயே உணரமுடியும். அவனை அடைந்து விட்டோம் என்று எப்படி தெரியும்? அன்பு உன்னிடமிருந்து எதனிடமும் எவரிடமும் பெருகிவிட்டதல்லவா? அதே. கடவுள் நமக்காக காத்திருக்கிறான். நாம் தான் எதிர் திசையில் போய்கொண்டிருக்கிறோம். அவன் உள்ளே இருக்கும் போது, நம் இதயத்தை பூரணமாக ஆக்ரமித்தபோது, "நான், எனது" எப்படி ஞாயம்? வீட்டை ஒருவருக்கு வாடகைக்கு விட்டு விட்டு "வீடு எனது என்று சொல்லலாமா," "நான்" அங்கு வசிக்கமுடியுமா?

ஒரு காற்றின் சுகத்தில், நீரின் தெளிவில், பூவின் மணத்தில், ஒன்றிய மனதுடைய நட்பின் தூய உறவில், பறவையின் குரலில், நிலவின் ஒளியில், உலகத்தின் இயக்கத்தில், விடியல் அமைதியில், நிசப்தத்தில், எதில் வேணுமானாலும் அவனை உணர முடியுமே. கும்பலாக சப்தம் இட்டுக்கொண்டு, ஸ்பெஷல் டிக்கெட் தேவையில்லை. கண்ணை மூடி உள்ளே நோக்கினால்"நான் இங்கே தானே இருக்கிறேன். ஏன் கத்துகிறாய்? " என்று குரல் கொடுக்கிறானே. ஆரவாரத்தில் அமைதியை தேடலாமா?

# 5. அர்த்தம் புரிந்ததா?

பகவான் கிருபையில் எதோ ஒரு காரணம் அர்த்தம் எல்லாமே இருக்கிறது. இவ்வளவு வேண்டுகிறேன் பகவான் கண் திறக்கவில்லையே என்று ஏங்குகிறோமே அதற்கும் காரணம் உண்டு.



“இது வேண்டும். இதால் நமக்கு நன்மை, பயன் எல்லாம் கிடைக்கும் என்று நாம் கேட்கிறோமே அதால் பயன் உண்டா, நன்மை கிடைக்குமா என்று தெரியாமலே கேட்போம். அவனுக்குத் தான் தெரியும் அது பற்றி. ஒரு குழந்தை கூரான பளபள கத்தி வேண்டும் என்று அழும். அம்மாவுக்கு தெரியும் அதைக் குழந்தைக்கு தரவேண்டுமா இல்லையா என்று. அதனால் தான் கீதையில் கூட” நீ பேசாமல் உன் கடமையை செய்யேன். என்னிடம் விட்டுவிடு அதன் பலன், பயன் பற்றி என்று. கிருஷ்ணன் சொல்கிறான்.

பெரியவா ஒரு குக்கிராமத்தில் முகாம். தரிசிக்க ஒரு மிராசுதாரும் அவரது உதவியாளரும் வந்திருந்தனர். பக்தர்கள் அனைவரிடமும் அன்பொழுக பேசிய கருணைத் தெய்வம் ஏனோ மிராசுதாரை கண்டு கொள்ளாமல் கூட வந்த

உதவியாளரிடம் மட்டுமே கொள்ளைப் பேச்சு பேசினார். மிராசுதாருக்கு ஏமாற்றம் வருத்தம்.

என்ன காரணம் புரியவில்லையே? ஏன் என்னிடம் பேசவில்லை, அந்த அளவுக்கு நான் ஏதாவது தவறு செய்ததாகவும் தெரியவில்லையே? யாரிடம் காரணம் கேட்பது? வருத்தத்தோடு விடைபெற்றுச் சென்றார்.

அந்த ஊரில் பெரியவா தங்கி இருந்த இடத்திலிருந்து ரயில் நிலையம் கொஞ்சம் தூரம் என்பதால் மடத்து வண்டியில் அவர்களை கொண்டு விடும்படி பெரியவா உடனிருந்த தொண்டருக்கு உத்தரவிட்டார்

தொண்டர் ரயில் நிலையம் சென்று வழியனுப்பிவிட்டு வந்தபோது

“வண்டியில் போகும்போது மிராசுதார் என்ன பேசினார்? என்னைப் பற்றி என்ன சொன்னார்?” -- பெரியவா

“ரொம்ப குறைப்பட்டுக் கொண்டார். பெரியவா அவரிடம் பேசாதது ரொம்ப வருத்தமாய் இருந்ததாம்.வழியெல்லாம் பெரியவாளை பற்றியே பேசிக்கொண்டிருந்தார். எப்பொழுதும் தன்னிடம் அன்பாய் பேசும் பெரியவா இன்று பேசாத காரணம் புரியவில்லை என்று அதே சிந்தனையில் இருந்தார்.” என்றார் தொண்டர்.

எல்லாம் தான் முடிஞ்சு போச்சே. அப்பறம் பேச என்ன இருக்கு?” சொல்லிவிட்டு நகர்ந்தார் மஹா பெரியவர்.

மறுநாள் மாலை தந்தி வந்தது. அதில் மிராசுதார் இறைவனடி சேர்ந்துவிட்டதாக தெரிவிக்கப்பட்டிருந்தது.

அதிர்ச்சி அடைந்த மடத்து சிப்பந்திகள் மேலும் பிரமிக்கும்படி பெரியவா சொன்னார்: “நான் அவனோட நேத்திக்கு பேசாததன் காரணம் கடைசியா அவனுக்கு என் நினைவாகவே” இருக்கட்டும்னு தான். நான் பேசாததாலேயே அவன் என் நினைவாகவே இருந்தான். “என்று கூறிய பிறகு தான்” “எல்லாம் தான் முடிஞ்சு போச்சே. அப்பறம் பேச என்ன இருக்கு?” என்று பெரியவா கூறியதன் அர்த்தம், புரிந்தது.

பகவான் கீதையில் கண்ணன் சொன்னது நினைவுக்கு வருகிறதா? “கடைசி நேரத்தில் என் நினைவாகவே இருந்து உயிர் பிரிபவன் என்னையே வந்து அடைகிறான்”

தன் பக்தன் கடைசியில் தன் நினைவாகவே இருந்து தன்னையே அடைந்து பிறவிப் பெருங்கடலைத் தாண்டட்டும் என்பதற்காகவே பெரியவா அருள் செய்திருக்கிறார்.

# 6. நிம்மதி வேண்டுமா?

மார்ச் முடிந்தால் பெருமூச்சு விடுகிறார்கள் குழந்தைகள். பரிக்ஷை. வாழ்க்கையில் படிப்பு விஷயங்களை கற்றுக்கொள்வதற்கு ஞானம் பெற என்று இருந்தது அந்தக் காலம். இப்போது அது மார்க் தரும் பசு. நிறைய மார்க் வாங்கினால் அமெரிக்கா போகலாம். கை நிறைய சம்பாதிக்கலாம் என்பதற்காகவே. படித்தது ஒன்று வேலை செய்வது ஒன்று. அதைப் பற்றி சிறிதும் கவலை இல்லை. பணம் எவ்வளவு வரும்?

எங்கள் காலத்தில் (எனக்கு 78) படிப்பு பிடித்திருந்தது. இன்னும் நினைவில் இருக்கிறது. வேலைக்கு பஞ்சமில்லை. நூற்றில் தொண்ணூறு பேர் SSLC படித்தவுடனே, குறுக்கெழுத்து தட்டச்சு கற்றுக்கொன்று ஓரிரு வருடங்களில் higher என்கிற மேல் நிலை தகுதி பெற்றவுடன் வேலை அவர்களுக்கு தானாகவே கிடைத்தது. அரசாங்க உத்தியோகங்களை விட தனியார் துறையில் வேலை கிடைப்பது நம்பிக்கை யூட்டியது. வேலை கடினமாகத்தான் இருந்தது. நேரம் அதிகம் செலவழிக்க வேண்டியிருந்தது. பிழிந்தெடுப்பது என்றால் என்ன என்று புரிந்தது. ஆனால் செய்த வேலைக்கு திருப்தியாக அந்த கால வரை முறைக்குத் தக்க ஊதியம் கிடைத்தது. கிளைக்கு கிளை குரங்கு தாவுவது போல் அடிக்கடி அதிக சம்பளத்துக்கு வேலையும் தனியார் துறையில் தாவ முடிந்தது. எனக்கு இந்த அனுபவம் இருந்தது. எங்கோ படித்ததில் சில விஷயம் இப்போது சேர்த்துக்கொள்கிறேன்.

ஒருவர் தனியார் ஆபீஸில் தன்னுடைய பதினெட்டாவது வயஸில், shorthand, typewriting, SSLC certificates உடன் வேலைக்கு சேர்ந்தவர், ஐம்பத்தெட்டாவது வயஸில் retire ஆகி வீட்டில் உட்கார்ந்தார் ஒரு பக்தர். அவர் வகித்த பதவி, அவருக்கு ஏகப்பட்ட பணம், செல்வாக்கு எல்லாவற்றையும் குடுத்திருந்தாலும், அவருடைய உள் மனஸில் வெறும் சூன்யமாகவே இருந்தது. வேலை, வேலை என்று உயிரைக் குடுத்து உத்யோகம் பார்த்ததில், "நான் யார்?" என்று அரை நிமிஷம் கூட சிந்திக்காமல் விட்டுவிட்டோமே? அதன் பலன்? retire ஆனதும், அத்தனை நாள் மாங்கு மாங்கென்று எந்தக் கம்பெனிக்காக உழைத்தாரோ, அந்த routine, நண்பர்கள் பரிச்சயங்கள் எல்லாமே ஒரு நொடியில், ஒரு பிரிவுபசார பார்ட்டியோடு அவரை விட்டுத் தூரத் தள்ளிப் போய்விட்டது!

பெற்ற பிள்ளையும் மறு மகளும் வடக்கே எங்கேயோ. அங்கேயெல்லாம் போனால், போய் இறங்கின அன்று இருக்கும் மரியாதையும் உபசரிப்பும், நாலு



நாளைக்கு மேல் நீடித்தால், அது அவர் செய்த பாக்யம்! மருந்தும் விருந்தும் மூன்று நாள் என்று அனுபவித்துத் தானே பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

பிள்ளைக்கு நல்ல உத்தியோகம்; ரொம்ப நல்லவன்; ஆனால், என்ன ப்ரயோஜனம்? மருமகளும் நல்லவள்தான். யாருக்கு? பிள்ளைக்கு மட்டுமே! நீர் கலந்த பாலில் பாலை மட்டும் தனித்து குடிக்கும் அன்னம். பெற்றவர்களை ஒதுக்கி விட்டு, பிள்ளையை மட்டும் குடும்பமாக நினைப்பவள்; பிறந்த வீட்டார் மேல் அபரிமிதமான கரிசனம்; இப்படி இருக்கும் வீட்டில் தான் போய் அதிக நாட்கள் நாம் போய் தங்கினால், இப்போதிருக்கும் பேச்சு வார்த்தை கூட அறுந்து போய்விடும் என்று தயங்கினார். யார் வழி காட்டுவார்கள்? எங்கே போய் இருப்பது, எங்கே நிம்மதியாக வாழ்வது?

"நீனே அநாத பந்து" என்று பெரியவாளுடைய திருவடியில் வந்து விழுந்தார். மனசுக்குள், எங்கே போவது? யாருடன் தங்குவது? ஜன்மாவை கடைத்தேற்றிக் கொள்ளாமல் ஐம்பத்தெட்டு வர்ஷம் கோட்டை விட்டாச்சு! என்று ஒரே குழப்பம். எதுவுமே பேசாமல் காஞ்சி மடத்தில் பெரியவாளுக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டு ஒரு ஓரமாக நின்றார்.

மஹா பெரியவா கடாக்ஷம் அவர் மீது விழுந்தது. தலை ஆடியது. "கிட்ட வா என்ன விஷயம் சொல்லு" என்று அர்த்தம். முதியவர் உடனே பெரியவா அருகில் வந்து மிகவும் பவ்யமாக,

"பெரியவா அநுக்ரஹத்தல அனேகமா எல்லா க்ஷேத்ரங்களும் தர்சனம் பண்ணிட்டோம். போனவாரம் தலைக்காவேரி போயிட்டு, அப்டியே காவேரிப்பூம்பட்ணம் போய்ட்டு வந்தோம்."

"காவேரி உற்பத்தி ஸ்தானத்லயும், சங்கமத்துலேயும் ரொம்ப குறுகலாத்தானே இருக்கு?"

"ஆமா."

"காவேரி, ரொம்ம்ம்ப அகலமா இருக்கற மத்ய ஸ்தானத்துக்கு என்ன பேரு?"

"அகண்ட காவேரி"

"அது எங்க இருக்கு?"

"திருச்சி பக்கத்ல."

"அந்த ப்ரதேசத்துக்கு என்ன பேரு?"

பக்தர் முழித்தார்!

"மழநாடுன்னு கேள்விப்பட்டிருக்கியோ?"

"எங்க தாத்தா சொல்லுவார்"

"காவேரி தீரம்தான் மழநாடு; ரொம்ப ஆசாரக்காரா இருந்த நாடு; ஒன்னோட தாத்தா இருந்த எடம்"

பக்தருக்கு இதெல்லாம் எதுவுமே தெரியவில்லை. நெளிந்தார். ஆஹா! அடுத்து பெரியவா, இவர் எதுவும் சொல்லாமலேயே, இவருடைய குழப்பத்தை தீர்த்து வைத்தார்!

"திருச்சில ஜாகை வெச்சுக்கோ! தெனோமும் ஒரு கோவிலுக்கு போ! உச்சிப் பிள்ளையார், மாத்ருபூதேஸ்வரர், அகிலாண்டேஸ்வரி, ஜம்புலிங்கம்,ஸ்ரீரங்கம் ரங்கநாதர், வயலூர் முருகன், குணசீலம் ஸ்ரீநிவாஸ பெருமாள்.இப்டியா தர்சனம் பண்ணிண்டு இரு!"

"தெய்வம் பேசுமா?". என்று சந்தேஹம் வருபவர்களுக்கு, இதோ! தெய்வம் பேசுகிறது! என்று உண்மையான மஹான்கள் முன்னால் கொண்டு போய் நிறுத்தி விடலாம். கண்களில் நன்றிக் கண்ணீரோடு நமஸ்காரம் பண்ணிவிட்டு, பெரியவா சொன்னபடி திருச்சியில் ஜாகை பார்க்கச் சென்றார். மலைக்கோட்டை தெருவில் அம்சமான வீடும் கிடைத்தது! பெரியவா சொன்னபடி தன் வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டபடியால் கட்டாயம் "வீடு பேறும்" கிடைக்கும்



# 7. தங்க ரேக்கு

ஒரு விஷயம் ஒருத்தர் சொல்லும்போது, ஒ அது எனக்கு ஏற்கனவே தெரியுமே என்று சொல்பவர்கள் ''நீ நிறுத்திக் கொள் ' என்று பதவிசாக சொல்கிறார்கள் என்றும் எடுத்துக் கொள்ளலாம். அல்லது அந்த விஷயம் மறுபடியும் கேட்பதற்கு அருகதை அற்றது என்றும் அர்த்தம் படும்.

மகா பெரியவா விஷயம் அப்படிப்பட்டது அல்ல. ஏற்கனவே படித்திருக்கலாம், கேட்டிருக்கலாம். மீண்டும் ஒரு முறை யார் மூலமாவது கேட்டாலும் அலுக்காதது. புதிதாக இதற்கு முன் தோன்றாத ஒரு பக்தியும், பரவசமும், தோற்றுவிக்கக் கூடியது.

எனக்கு கிடைத்த ஒரு விஷயத்தை எப்போதும் நான் உங்களுக்கு சுருக்கி, எளிதில் மனத்திற்குள் பதியும்படியாக சொல்ல விழைபவன். இதிலும் என் முயற்சி வெற்றி பெற்றால், பரமாச்சார்யாள் மேல் உங்களுக்கு இருக்கும் பக்தியோ அல்லது அவர் எனக்கு விஷயத்தை சுவாரஸ்யமாக அளிக்க கொடுத்த அனுக்ரஹமோ என்று தான் இரு கரம் கூப்பி அவரை வணங்குகிறேன்.-- சிவன்.

+ + +

காஞ்சிபுரம் செல்பவர்கள் காமாட்சி அம்மன் கோவிலை கொஞ்சம் தூரத்தில் நின்று ஒரு நிமிஷமாவது அதன் கம்பீரத்தை, காந்தம் போல் கவரும் கோபுர அழகை, அதன் பின்னே இருக்கும் கோடானு கோடி திவ்ய அனுபவங்களை ஒரு கணமேனும் நினைக்க நேரமில்லை என்பவர்கள் பேசாமல் வீட்டில் டிவியில் 'மானாட மயிலாட' பார்த்து மகிழலாம்.

காமாட்சி அம்மனுக்கு மேலே உள்ள அழகிய விமானம் ஒரு காலத்தில் தக தக வென்று கண்ணைப் பறிக்கும் பொன் மயமாக இருந்தது. காலம் செல்ல செல்ல விமானத்தின் மீது இருந்த தங்க் ரேக் கெல்லாம் அழிந்து உதிர்ந்து வெறும் செம்பாக காட்சி அளித்தது. வருத்தமான ஒரு விஷயம்.

அப்போதெல்லாம் மடத்துக்கு பண வசதி போதாது. அன்பர்களும், பக்தர்களும் கொடுப்பதை வைத்து தான் மடம் காலச்சேபம் நடந்து கொண்டிருந்தது. பல

நாட்கள் பிட்சா வந்தனத்துக்கு யார் வரப் போகிறார்கள் என்று எதிர்பார்த்துக் காத்திருப்பது கூட உண்டு. சந்நியாச தர்மப்படி அந்த பிட்சா வந்தனத்தை வைத்துத் தான்பெரியவாளுக்கு பிட்சையே நடக்கும்.

என்ன தோன்றியதோ ஒரு நாள் மஹா பெரியவா, கோவில் மானேஜர் அவரிடம் வந்தபோது

"விமானத்துக்கு தங்க ரேக்கைப் பயன்படுத்தாமல் ஏன் வெறும் செம்பாக வைத்திருக்கிறீர்கள்?"

"என்ன பண்றது பெரியவா பண வசதி போறவில்லையே" - மானேஜர்

பெரியவா யோசனை பண்ணினா. பிறகு ஒரு ஆசாரியை வரவழைத்து விமானத்துக்கு தங்க ரேக்கு பதிக்க எவ்வளவு பவுன் ஆகுமென்று கேட்டார்.



விமானமெல்லாம் கழற்றிக் கீழே வைக்கப்பட்டது.

பார்த்துவிட்டு, ஆசாரி எவ்வளவு பவுன்கள் உத்தேசமாக வேண்டும் என்று தெரிவித்தார். பெரியவா தலையை ஆட்டினார்.

"இவ்வளவு பவுனுக்கு எங்கே போவது?" என்ற கேள்விக் குறி பெரியவா முகத்தில்.

அடிக்கடி காமாட்சியோட விமானத்துக்கு தங்க ரேக்கு பண்ணணும் னு ஆசை வரது. எப்படி நிறைவேத்தறது என்பது தான் தெரியலை?" என்று பெரியவா சொல்லிக் கொண்டே இருந்தார்.

அந்த சமயம் பார்த்து மகாராஜபுரம் விஸ்வநாதய்யர், (அந்தகாலத்தில் பிரபல கர்நாடக சங்கீத வித்வான்) பெரியவாளை

தரிசனம் பண்ண உள்ளே வந்தார். பெரியவா கட்டளைப்படி தேவகானம் பொழிந்தார். பெரியவா அவரிடம்,

"எனக்கு காமாட்சி அம்மனின் விமானத்தை தங்க ரேக்கால் ஒளி வீசச் செய்யணும்னு மிகவும் ஆசையாக இருக்கு. ஆனா, இவர்களெல்லாம் அது முடியாத காரியம். அவ்வளவு பவுனுக்கு எங்கே போவது? என்கிறார்கள். பெரிய குறையாக இருக்கிறது. ஆனால், உன் பாட்டைக் கேட்டதும் அந்தக் குறை தணிந்துவிட்டது. உனக்குக் கனகதாரா ஸ்தோத்திரம் தெரியுமோ?"

"சுமாராகத் தெரியும்" என்றார் விஸ்வநாதய்யர். அங்கே வந்திருந்த பெண்மணிகளில் சிலர், "எனக்குத்தெரியும்" என்று முன் வந்தனர். ஸ்லோகம் தெரிந்த பெண்கள் எல்லோரும் சேர்ந்து கனகதாரா ஸ்தோத்திரத்தை முழக்கினார்கள். அதைச் சொல்லி முடித்தார்களோ இல்லையோ ஒரு அதிசயம் நடந்தது.

பெரியவா முன்னால் அங்கேயிருந்த ஒரு தட்டில் அத்தனை பெண்களும் தங்கள் நகை நட்டுகளைக் கழட்டிப் போட்டனர்.

"என்ன ஆச்சர்யம் பார்த்தேளா. ஆதி சங்கர ஆசார்யாள் ஸ்லோகத்தை இன்றைக்குச் சொன்னாலும் பொன்மாரி பொழிகிறதே" என்று பெரியவர் புளகாங்கிதம் அடைந்தார். அந்த நகைகளை அப்படியே ஆசாரியிடம் அள்ளிக் கொடுத்து

"ஐந்து நாட்களுக்குள் தங்க ரேக்கு பதித்த விமானம் பண்ணி எடுத்து வா" என்றார்.

அந்த பவுனை எடை போட்டுப் பார்த்தபோது ஆசாரி தான் கேட்ட பவுனுக்கு ஒரு குந்துமணி கூடவுமில்லை,குறையவுமில்லை என்று அதிசயப்பட்டார்.

சர்வ வல்லமை படைத்த தெய்வமான பெரியவா ஒன்று நினைத்தால் அது நடக்காமல் போய்விடுமா?

ஆறே நாளில் தங்க விமானம் வந்து, கும்பாபிஷேகமும் அமோகமாக நடந்தேறியது.

ஆதி சங்கரர் முழங்கிய 'கனக தாரா ஸ்தோத்ரத்தை'க் கேட்டு ஒரு ஏழைப் பெண்ணுக்காக அம்பாள், அன்று பொன்மழை பொழிந்தாள்.

இன்று பல ஏழைப் பெண்மணிகள் அம்பாளாகவே உருவெடுத்து மனதால் ஒன்றுபட்டு, நாம் ஏதாவதுசெய்ய வேண்டும் என்று தாராளமாக விரும்பி அளித்த கனகம் காமாட்சி அம்மன் விமானத்துக்கு ஒளி மயம் தந்தது. அந்த ஒளி மஹா பெரியவா முகத்திலும் வீசியது என்று சொல்லி இதை முடிக்கலாமா?



# 8. காஞ்சி காமாக்ஷி



பெரியோர் என்று சொல்லும்போது அந்த மனிதர் ஒரு கிழவராகவோ, நிறைய படித்திருக்க வேண்டும் என்கிற அவசியமோ இல்லை. அல்லது பணத்தில் புரள வேண்டிய நிர்பந்தமும் இல்லை. நாலு பேர் மெச்சும்படியாக பேசுவது, பாடுவது, எழுதுவது, மற்ற எதுவோ செய்வது ஒன்றுமே தேவையில்லை. ஒரு சிலர் யாருக்குமே தோணாத, யாருமே செய்யாத சேவை ஏதாவது ஒன்றை மக்களுக்குச் செய்து அந்த பெயரைத் தட்டிக்கொண்டு போய் விடுகிறார்கள் அல்லவா? ஒரு சாதாரண பூக்காரிக்கு அடிச்சுது அந்த லக்கி ப்ரைஸ். எங்கே? காஞ்சி மடத்து வாசலிலே. அப்படி என்ன செய்தாள் அவள்?

நீங்களும் நானும் சொல்லாத, சொல்ல தைர்யமில்லாத ஒரு சொல். நாம் அன்னியப்படுத்திக் கொள்கிறோம் அதனால் நம்மால் முடியவில்லை. அவளோ சர்வ சுதந்திரமாக மஹா பெரியவாளை "அப்பா" என்றுதான் அழைப்பாள். தினமும் ஒரு கூடை பூவினால் பெரியவாளை அர்ச்சிப்பாள். ஏகவசனத்தில் தான் பெரியவாளிடம் பேசுபவள்.

"ஏன் இப்படி பூவை வீணாக்கறே? இதை வித்தா உனக்கு காசு கிடைக்குமே!" -- மஹா பெரியவா.

"போ நயினா, காசு என்ன அம்புட்டு பெரிசா? உன் தலையில் நான் இந்த பூவை ஆசையா போட்டு பூசை செஞ்சா, காசு இன்னா, அதுக்கு மேலேயே எல்லாம் கிடைக்கும்" -- பூக்காரி காமாக்ஷி.

"அடடா, பெயரே எப்படி திவ்யமா அமைஞ்சிருக்கு அவளுக்கு!" --- மஹா பெரியவா -- காஞ்சி காமாக்ஷி.

மடத்தில் ஒரு சிஸ்டம் என்ன வென்றால் பெரியவா படுத்துக்கப் போய்விட்டால் யாரும் எழுப்பக் கூடாது.ஆனால், இந்தக் காமாட்சி மட்டும் அதுக்கு விதி விலக்கு. எத்தனை நேரமானாலும் வரலாம். எதனால் என்றால் பெரியவாளே அவள் கிட்டே போட்ட கண்டிஷன் :

"காமாட்சி, நீ உன் வியாபாரத்தை எல்லாம் முடித்துக் கொண்ட பிறகுதான் என்னிடம் வரணும். வேலையை விட்டுட்டு பாதியில் வரக்கூடாது!" அவளது பிழைப்பை தனக்காக விடுவதற்கு அந்தக் கருணாமூர்த்தி சம்மதிப்பாரா?

ஒரு நாள் பெரியவா, நாகராஜன் என்பவரை 9 மணி நியூஸ் என்ன என்று கேட்டு அதை அவர் சொல்லும் போது கேட்டுக்கொண்டிருந்தார். வேதாந்த தத்துவங்கள் ஒரு புறம் இருந்தாலும், உலக நடப்பையும் தெரிந்து கொள்ளாமல் விடமாட்டார். அந்தச் செய்திகளை அலசி ஆராய்ந்த பிறகு படுக்கப் போக நாழிஆகிவிடும்.

அன்று, புதுக்கோட்டையிலிருந்து "ஜானா" என்ற ஒரு பெண் பெரியவாளுக்கு வெல்வெட்டில் பாதுகை செய்து கொண்டு வந்திருந்தாள். அதைக் காலை விட்டு, நாள் முழுதும் பெரியவா கழற்றவேயில்லை. படுக்கைக்குப் போகு முன் கொட்டகை சென்று, தேக சுத்தி பண்ணிக் கொண்டு வரச் சென்றார். அப்போது நியூஸ் படிக்கும் நாகராஜன்,

"இன்று பெரியவா பாதுகையைக் கழட்டினதும் நான் தான் பூஜைக்கு எடுத்துக் கொள்வேன், என்னிடம் பெரியவா பாதுகையே இல்லை!" என்று கழட்டுவதற்குக் காத்திருந்தார். பெரியவா பாதுகையைக் கழட்டாமலேயே உட்கார்ந்திருந்தார்.

பூக்காரி காமாட்சியும் அப்போது வழக்கம்போல அங்கு வந்து நமஸ்காரம் பண்ணினாள். மஹா பெரியவா பாதுகையைக் கழற்றி பூக்காரியிடம், "இது உனக்குத் தான், எடுத்துக்கோ!" என்றார்.

"நாமொன்று நினைத்தால் தெய்வமொன்று நினைக்கிறது!" என்று நாகராஜன் குறையோடு திரும்பினார்.அப்படிப்பட்ட அன்புக்கு அந்த ஏழைப் பூக்காரி பாத்திரமாயிருந்தாள். எத்தனையோ பேர் அவளிடம் லட்ச ரூபாய் தரோம், இந்தப் பாதுகையைக் கொடு என்றனர்.அவள் அசையவேயில்லை. பெரியவா அவளுக்கு இந்த உலக வாழ்க்கைக்கு வேண்டிய வசதிக ளெல்லாம் கிடைக்கச் செய்தார்.அவள் வீட்டுத் திருமணங்களுக்கு வண்டி, வண்டியாக கல்யாண சாமான்கள் அனுப்பினார்.

பெரியவா ஸித்தியான பிறகும், சமாதிக்கு இரவில் பூக்களால் அர்ச்சிப்பதை காமாட்சி விடவில்லை.ஆனால், பெரியவா இருக்கும்போது பூக்கூடையை வெறுமனே திருப்பாமல் ஏதாவது பழம் முதலியன போட்டுத்தான் அனுப்புவார்.அவர் மறைவுக்குப் பின் வெறுங்கூடையைப் பார்க்கவே வருத்தமாக இருந்தது.

ஒருநாள் "அப்பா, நீ இருந்தா இப்படி என்னை வெறுங் கூடையுடன் அனுப்புவியா!" என்று புலம்பினாள். கூடையை வைத்துக் கொண்டு உட்கார்ந்தவளுக்கு, தூக்கி வாரிப் போடும்படி அதிஷ்டானத்திலிருந்து ஒரு செம்பருத்திப் பூ யாரோ வீசி எறிந்தது போல் காற்றில் வந்து வந்து அவள் கூடையில் விழுந்தது.

சமாதிக்கு நேரே முறையிட்டால் கூட பதில் சொல்லக்கூடிய சாமியை, "போயிடுத்து, போயிடுத்து"னு யாரும் சொல்லக்கூடாது என்று அவள் எல்லோரிடமும் சொல்லுவாள்.

வேண்டிக் கொண்டவர்களுக்கு அருள் புரிய மஹா பெரியவா தான் எப்போவுமே இருக்காளே. அவர் எங்கே போனார்?



# 9. லக்ஷ்மீகரம் வேண்டுமா?

நமது முன்னோர்கள், பகவானை ஆராதிப்பதை, ஒரு இன்றியமையாத கடமையாக கொண்டவர்கள். அது சாஸ்திரம் சொல்வது போல நடக்கும் விஷயம். இறைவனை வழிபடாத நாளெல்லாம், வணங்கா நாள் எல்லாம் வீணான நாள் என்று அவர்கள் நம்பினார்கள். அதனால், காலையிலோ மாலையிலோ இதற்கென்று, சிறிது நேரம் ஒதுக்கி, இறைவனை வழிபட்டால், சகல ஐஸ்வர்யங்களும் உண்டாகும் என்ற பரிபூர்ண நம்பிக்கை. ஆனால், பூஜை செய்வதற்கென்று, சில விதிமுறைகள் உண்டு.

பூஜையின் போது சந்தனம், குங்குமம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் மற்றும் வெற்றிலை பாக்கும் வைக்க வேண்டும். கடைசியில், கற்பூர ஆரத்தி காட்ட வேண்டும். இதில், உங்களுக்கு சவுகரிய குறை ஏற்பட்டு, சிலவற்றை பூஜையில் வைக்க முடியா விட்டால், “அட்சதாம் சமர்ப்பயாமி” என்று சொல்லி விட்டால் போதும். எனவே அட்சதை சமர்பிப்பார்கள்.

ஒரு சாஸ்த்ரிகள், அப்படி பூஜை செய்த போது, இல்லாத பொருளுக்கெல்லாம், அதன் பெயரைச்சொல்லி, அட்சதாம் சமர்ப்பயாமி என்று சொல்லிக் கொண்டே பூஜையை முடித்து கொடுத்தார்.

சாஸ்த்ரி. சாஸ்திரம் தெரிந்து அதன் படி சம்பிரதாயமாக பூஜை எல்லாம் நடத்திக் கொடுப்பவர். சாஸ்திரிகளுக்கு தட்சிணை கொடுக்க வேண்டும்.

க்ரஹஸ்தர் பணம் கொஞ்சம் கணக்கு பார்ப்பவர். இழுத்துப் பிடிப்பவர். சாஸ்த்ரிகள் தான் எதாவது இல்லை என்றால் கொஞ்சம் அக்ஷதையை எடுத்து அதற்கு பதிலாக அக்ஷதாம் சமர்ப்பயாமி என்று சொல்லலாமே என்று கற்றுக்கொடுத்ததால் கடைசியில் ஸாஸ்த்ரிகளுக்கு தக்ஷிணை கொடுக்கும் சமயத்தில் பூஜை முடிந்ததும், தட்சணார்த்தாம் அட்சதாம் சமர்ப்பயாமி,

என்றுசொல்லி, தட்சணைக்கு பதிலாக, அட்சதையை நீட்டினாராம். பூஜை செய்த சாஸ்த்ரிகள் கதி கலங்கிப் போய் “என்ன இது? தட்சணை எங்கே?”. என்றார்

“அதுதான் எல்லாவற்றுக்கும் பதிலாக, அட்சதையே போதும் என்றீர்களே. பிடியுங்கள் தட்சிணைக்குப் பதிலாக அட்சதையை”. என்றார் க்ரஹஸ்தர். குதிரைக்கு குர்ரம் என்றால் யானைக்கு யர்ரம் என்று சொல்கிற விஷயம்.

பூஜையின் போது, தூபம், தீபம், விபூதி, கண்ணாடி, குடை, சாமரம், விசிறி இவைகளை சமர்ப்பணம்செய்வது வழக்கம்.

தூபத்தில் அக்னி தேவன்,



தீபத்தில் சிவன்,

விபூதியில் மகேஸ்வரன்,

கண்ணாடியில் சூரியன்,

குடையில் சந்திரன்,

சாமரத்தில் மகாலட்சுமி,

விசிறியில் வாயு தேவன் உள்ளனர்.

அதனால், இந்த உபசாரங்களோடு பூஜை செய்ய வேண்டும். நைவேத்யத்தின் போது முத்திரைகாட்டுவது, துர்தேவதைகளை விரட்டி விடும். எல்லாருமே, மகாலட்சுமி நம் வீட்டுக்கு வர வேண்டும்,என்று தான் விரும்புவர். சிலர், மகாலட்சுமி படம் பேட்ட காலண்டரை வாங்கி வந்து, பூஜை அறை அல்லது ஹாலில் மாட்டி திருப்திப் படுவர். விடியற் காலையில் எழுந்ததும் மகாலட்சுமியை தரிசனம் செய்தால் நல்லது என்பதற்காக, சிலர், படுக்கை அறையிலும் மாட்டி வைப்பர்.

இல்லத்தரசியானவள், காலையில் எழுந்து பல் விளக்கி, குளித்து, நெற்றிக்கிட்டு, தலையை கோதி, வாசல் பெருக்கி, கோலமிட்டு, வீட்டுக்குள் வந்து சுவாமி படத்துக்கு முன் விளக்கேற்றி, நமஸ்காரம்செய்து, முடிந்தால் இரண்டு பூவை போட்டு, அதற்கு பின் தான், காபி விஷயத்தை கவனிக்க வேண்டும். (இது ஆறுமணிக்கு முன் எழுபவர்களுக்கு. நாரிமணிகள் 9 மணிக்கு எழுபவர்கள் அலாரம் வைத்துக் கொள்ளலாம். அதை மண்டையில் தட்டிவிட்டு இழுத்து போர்த்திக் கொண்டு மேலும் தூங்குபவர்கள் இந்த பாராவை படிக்க வேண்டாம்)

அத்துடன், வீட்டில், வேத கோஷம், துதிப் பாடல்கள் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். வீட்டில் மூலைக்கு மூலை குப்பையை சேர்த்து வைக்கக் கூடாது. அரிசி, பருப்பு போன்ற தானியங்கள் சிதறக்கூடாது. காலையில், முடிந்தால், பசுவுக்கு ஒரு பிடி புல் கொடுப்பது புண்ணியம். வெள்ளிக் கிழமைகளில் பசுவுக்கும், கன்றுக்கும் மஞ்சள் பூசி, குங்குமமிட்டு வலம் வருவது பெரிய புண்ணியம். வீட்டில் ஆச்சார அனுஷ்டானங்கள் இருந்தாலே, மகாலட்சுமி வாசம் செய்வாள். மனசு வைத்தால், இதையெல்லாம் செய்யலாம்.

மகா பெரியவா சொல்லும் இந்த சிஸ்டம்.கைடன்ஸ் (வழிகாட்டி)யை பின் பற்றி அனைவரும் சுபிக்ஷமாக, லக்ஷிமிகரமாக வாழ விழைகிறேன். அது மகா பெரியவா வார்த்தைக்கு நாம் கொடுக்கும் மரியாதை. நமது நலனுக்காக. நம் சந்ததி நலனுக்காக.



# 10. இவரே எங்கள் தெய்வம்

அந்த மனிதர் ஒரு பிரபல எழுத்தாளர். என் மாதிரியான ஆள் இல்லை. பிரசித்தி பெற்ற வாரப் பத்திரிகை ஆசிரியராக இருந்து, பிறகு தானே ஒரு பிரசித்தி பெற்ற மற்றொரு பத்திரிகை, அதற்கு அப்புறம் மற்றொன்று என்றெல்லாம் புதிதாக தொடங்கிய அனைத்து பத்திரிகைகளும் விரும்பிப் படிக்கப்பட்ட காலம். டிவி ரொம்ப பெண்களை ஈர்க்காத காலம். மொபைல் என்ன வென்றே தெரியாதே.

வெளிநாட்டு பயண கட்டுரைகள் எழுதி பெயர் பெற்றவர். அவர் இப்படி பல நாடுகளுக்கு பறந்து ஆங்காங்கு பார்த்தவர்கள், பார்த்தவைகள், பார்க்க வேண்டியவைகள் பற்றியெல்லாம் ரசிகர்கள் மகிழ ருசிகரமாக எழுதுபவர். ஒரு விஷயம் குறிப்பாக சொல்ல வேண்டியிருக்கிறது.

அவர் காஞ்சி மகா பெரியவாளின் பரம பக்தர். அந்த நடமாடும் பேசும் தெய்வத்தை முக்காலும் வணங்குபவர். எங்கு சென்றாலும் மகா பெரியவா படம் இல்லாமல் செல்ல மாட்டார். தினமும் அந்த படத்தை எடுத்து வைத்துக்கொண்டு மனசார பூஜை பண்ணி வணங்கிவிட்டு தான் மற்றைய வேலைகள்.

ஒரு தடவை உலகப் பயணத்தில் எங்கோ ஒரு மூலையில் உள்ள நாட்டில் ஒரு முடுக்கு நகரத்தில் அவர் தங்கி இருக்க நேர்ந்தது. அந்த ஊரைப் பற்றி விவரங்கள் சேகரிக்க முயன்றார். அவரது நண்பர் ஒரு ஆங்கிலேயர் அங்கு அப்போது இருந்ததால் அந்த ஊருக்கு சென்றிருந்தார்.

இவர் வந்து அங்கு தங்கியிருக்க வேண்டிய வசதிகள் செய்து கொடுத்த வெள்ளைக்கார நண்பரின் உறவினர் வீட்டில் சில நாள் அந்த சிறிய ஊரில் தங்க முடிவானது.

எழுத்தாளரும் அங்கு சென்றார். அவருக்கு தனி அறை கொடுத்தார்கள். அதில் அவர் தங்கியிருந்தபோது ஒரு நாள் காலை அந்த ரெண்டு வெள்ளைக்காரர்களும் அதாவது நண்பரும் அந்த வீட்டுக்காரரும் எழுத்தாளரைக் கண்டு பேச, அவர் அறைக்கு வந்தனர். எழுத்தாளர் வழக்கம்போல் அந்தக் காலை வேளையில் மகாபெரியவர் படத்தை மேசையில் வைத்து வணங்கிக் கொண்டிருந்தார்.

வீட்டின் சொந்தக்காரர் கண்களில் அந்த மஹா பெரியவர் படம் பட்டதும் அவருக்கு ஏதோ ஆச்சர்யம், எழுத்தாளர் த்யானம் முடிந்ததும் கேட்டார்.

"இந்தப் படத்தில் இருப்பவர் யார்?"

"நான் வணங்கும் தெய்வம்"



“நீங்கள் எந்த மதத்தினர்?”

“இந்துக்கள்”

“இந்து கடவுள்கள் நிறைய கைகள், தலைகள், ஏதோ ஒரு பட்சி அல்லது மிருகத்தின் மேல் -- இப்படி தான் எனக்கு இதுவரை அறிமுகம். இந்த கடவுள் யாரோ ஒரு மனிதராக, கிழவராக அல்லவோ இருக்கிறார்”

“நீங்கள் சொல்வது வாஸ்தவம். இவர் நம்மைப்போல் இந்த உலகில் மனிதனாக இருப்பவர். மிக எளிமையானவர். ஆனால் தெய்வம்.”

“ரிஷி என்பீர்களே, அப்படிப்பட்டவரா இவர். எல்லோரும் அப்படித்தான் இவரைச் சொல்வார்களோ உங்கள் ஊரில்?”

“இவர் ஒரு சக்தி வாய்ந்த தெய்வம், ரிஷியும் கூட”

“சக்தி வாய்ந்த தெய்வம் என்றால் நாம் நினைத்தது எல்லாம் நடக்கச் செய்வாரா? என்று வீட்டுக்கார வெள்ளையர் ஆவலாக வினவினார்”

நாம் உண்மையாக வேண்டிக் கொண்டால், நிச்சயம் நாம் நினைத்தது போல் நடக்கும். அந்த கருணைக்கடல் அதை நிறைவேற்றி வைப்பார்.

எழுத்தாளர் அளவு கடந்த பக்திமான் ஆச்சே. அவர் குரலில் இருந்த அழுத்தம் சொன்ன தோரணை, அவர் குரலில் ஒலித்த பக்தி, ஆங்கிலேயரை நம்பச் செய்தது.

“நானும் அவரை வேண்டிக்கொண்டு என் முறையீட்டை சொன்னால் உதவுவாரா?” வீட்டுக்கார வெள்ளைக்காரர் குரலில் ஏக்கம் தொனித்தது.

“வித்தியாசமின்றி நம்பிக்கையோடு யார் வேண்டினாலும் குறை நிவர்த்தி செய்வார்”

“என் மகன் எங்கோ போய்விட்டான். சில மாதங்கள் ஆகிவிட்டது. அவனைப் பிரிந்து என் மனைவி ஓயாமல் அழுது கொண்டு இருக்கிறாள். அதனால் தான் ஒரு நம்பிக்கையோடு உங்களிடம் கேட்டேன்.”

எங்கள் குருவான காஞ்சி மகானை நீங்கள் மனமுருகி பிரார்த்தியுங்கள்.உங்களுக்கு அவரதுஅருள் நிச்சயம் கிட்டும்.

'டப்' பென்று அந்த வெள்ளைக்காரரர் சிலை போல் அங்கேயே அந்த இடத்திலேயே மகா பெரியவா படத்தின் முன்பு அமர்ந்து கொண்டார். கண்கள் மூடியிருந்தது. கைகளைச் சேர்த்து கட்டிக் கொண்டிருந்தார். நேரம் நழுவியது. நிசப்தம். சுமார் அரை மணி நேரத்திற்கு பிறகு கண்களைத் திறந்தார்.

"என்னவோ தெரியவில்லை, என் மனம் இப்போது லேசாகி விட்டது. இந்த மனித தெய்வத்தின் படத்தின் முன் மனமுருகி வேண்டி எனக்கு அருள் புரியும்படி வேண்டிக் கொண்டேன்"

இதைத் தொடர்ந்து ஒரு சில மணி நேரம் அந்த அறையில் மகா பெரியவா பற்றிய விஷயங்கள் பற்றி வெகு ஆர்வமாக அவர் பக்தியோடு கேட்டுக் கொண்டிருந்தார். அவரைப் பற்றி நிறைய தெரிந்து கொள்ளவேண்டும் என்று புத்தகங்கள் தேவை என்று கேட்டுக்கொண்டிருந்தார். ஒருமுறை இந்தியா வருகிறேன். அவரைப் பார்க்க வேண்டும் என்றார்.

அப்போது தான் அவரது வீட்டு போன் ஒலித்தது. ஆங்கிலேயர் போய் போனை எடுத்தார்.

"யார் பேசுவது?"

"என்ன அப்பா என் குரல் மறந்து போய் விட்டீர்களா" --

காணமல் போன அவர் பையன். போனில் வந்த செய்தி அவருக்கு அளவு கடந்த வியப்பை அளித்தது. காணாமற்போன அவரது மகன் தான் பேசினான், தான் எங்கேயோ போயிருந்ததாகவும், இப்போது ஊருக்கு வந்து விட்டதாகவும்,உடனே வீட்டுக்கு வருவதாகவும் தகவல் சொன்னான்.

அந்த ஆங்கிலேயருக்கு மெய் சிலிர்த்தது.காஞ்சி மகானை வணங்கியபடியே, எழுத்தாளரை இருக கட்டிக்கொண்டார். கண்களில் நீர் பனிக்க "இனி என் தெய்வமும் இவர்தான்.இந்த உருவில் தான் இனி நான் வணங்கும் தெய்வத்தைப் பார்ப்பேன்". அப்போது உள்ளே வந்த அவர் மனைவியும் விஷயம் கேட்டு, ஆனந்தித்து, தனது மகன் மீண்டும் வரப்போகிறான் என்று அறிந்து பெரியவாள் படத்தை வணங்கினாள்.

"மணியன் உங்களுக்கு நன்றி" என்று அந்த தம்பதிகள் மனமுவந்து சொன்னார்கள். ஆம் அந்த இந்திய எழுத்தாளர் மணியன் தான். மஹா பெரியவரை வேண்டினால் சகல புண்ணியமும் கிடைத்துவிடுமே.!



# 11. யக்ஞோபவீதம்

உபவீதம் முதுகு அரிப்புக்கு சுகமாக சொரிந்து கொள்வதற்கு பெரியோர்கள் கண்டுபிடித்த சாதனம் என்று மட்டும் தெரிந்து கொண்டிருக்கும் "த்விஜர்களுக்கு" (முதல் பிறப்பு அம்மா மூலம்,ரெண்டாவது அவனுக்கு இடுப்பிலே முஞ்சி என்கிற தர்பையை கட்டி சவிதா என்கிற சாவித்திரி தேவதை அம்மா, பிதா சர்மா நாமகரணம் பண்ணி கிடைக்கும் புதுபிறவி) ஆசீர்வாதம். உபய குசலோபரி. பூணல் இப்படியும் உபயோகப்படட்டும். பிரதானமாக அதன் அர்த்தம் முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். குருகுல வாசம் இல்லாத தற்காலத்தில் "அருகில் அமர்ந்து" வாத்தியார் சொல்லிக்கொடுக்கும் காயத்ரி மந்த்ரத்தை உபதேசமாக பெறுவது தான் பிரம்மோபதேசம். தந்தை மகனுக்கு காதில் உபதேசிப்பது. அன்று முதல் அவன் உலகில் கடைசி மூச்சு விடும் வரை அவன் உடலில் இருப்பது இந்த பூணல். காயத்ரி மந்த்ரம் சொல்வதால் ஏற்படுகிற நன்மைகள், சக்திகளை பற்றி ஏராளமாக சொல்லலாம். சொல்கிறேன். ஏற்கனவே சொல்லியும் இருக்கிறேன்.

ஒரு வைஷ்ணவ சிறுவன் பெரியவாளிடம் அபார பக்தி கொண்டவன். அவனுக்கு உபநயனம் நடந்து ரெண்டு வாரம் இருக்கும். அப்போது பெரியவா அவன் இருக்கும் கிராமத்தில் பட்டினப்ரவேசம் பண்ணினார். எல்லார் வீட்டிலும் பூர்ணகும்ப மரியாதை பண்ணினார்கள். இவன் வீட்டிலும் பூர்ணகும்பம் குடுத்துவிட்டு எல்லாரும் பெரியவாளுடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தனர். இந்தப் பையனும் புதுப் பூணூல் ஜோரில் "அபிவாதயே" சொல்லி பெரியவாளை நமஸ்கரித்தான்.

"அபச்சாரம்! அபச்சாரம்! டே, அம்பி! பெரியவாளுக்கு நமஸ்காரம் பண்றச்சே அபிவாதயே சொல்லப்டாதுடா!"

பக்கத்தில் பல குரல்கள் ஏககாலத்தில் ஒலித்தன. பையன் மனஸில் ஓடிய எண்ணமோ,

"பூணூல் போட்டு வைத்த வாத்யார்தானே பெரியவாளப் பாத்தா அபிவாதயே பண்ணுன்னு" சொன்னார்! இவா என்னடான்னா பண்ணப்டாதுங்கறாளே! அப்போ இவா பெரியவா இல்லையா? என்று பையன் மனசுலே சந்தேகம் எழுந்ததை அவன் பார்வை சொல்லியது.

மஹா பெரியவாளுக்கு சிரிப்பு வந்தது. "ஏண்டா பயலே, ஒனக்கு என்னைப் பாத்ததும் பெரியவாளா, இல்லியான்னு சந்தேஹம் வந்துடுத்தோல்லியோ?".

பையனுக்கு தூக்கி வாரிப் போட்டது! என்னது இது? X-ray எடுத்தா மாதிரி சொல்றாரே! நாம்ப நினைச்சது இவருக்கு எப்படி தெரிஞ்சுது?

பெரியவா பையனை முன்னிட்டு எல்லாருக்கும் திருவாய் மலர்ந்தார்.

"அபிவாதயேங்கறது ஒரு life history மாதிரி. ப்ரவரம்னு சொல்லுவா. அந்தக்காலத்ல மனுஷாள்ளாம் மாப்பிள்ளைய, நீலத்தனல்லூர் சந்தைல, மாடு வாங்கறா மாதிரி, வாங்க மாட்டா! இங்கிதம் தெரிஞ்சவா, அதுனால "அபிவாதயே" மூலமா, இவன் இன்ன கோத்ரம், இன்ன சூத்ரம், இன்னார் பையன்னு தெரிஞ்சுண்டு, பொண்ணைக் குடுக்கலாமா? வேணாமா? ன்னு முடிவு பண்ணுவா. நானோ சன்யாசி. எனக்கு பொண்டாட்டி இல்லே, பொண்ணும் இல்லே, ஒனக்குக் குடுக்க. அதுனால அபிவாதயே சொல்றது அவஸ்யம் இல்லியே ஒழிய, தப்புஇல்லே, புரிஞ்சுதா?"

அழகாக அன்பொழுக நடுரோடில் அந்த பையனுக்கு உபதேசம் பண்ணினார் உம்மாச்சி தாத்தா.

சமீபத்தில் நண்பர் ஒருவர் பேரனுக்கு உபநயனம். அமெரிக்கா வட கரோலினா பையன். 10 வயது இவனைப்பற்றி பால சங்கரர் டி ஷர்ட்டில் விஜயம் என்று உங்களுக்கு எழுதியிருந்தேன். அந்த பையனுக்கு குடும்ப வாத்தியார் தன்னுடைய சிஷ்ய கோடிகளோடு உபநயனம் செய்ய வந்திருந்தபோது "குழந்தே நீ கிராப் வச்சிண்டிருக்கே. அது அவ்வளவு ஸ்லாக்கியம் இல்லை. ஸாஸ்த்ரப்ரகாரம் சிகை வச்சுக்கணும் இல்லைன்னா மொட்டை அடிச்சுண்டுடு. என்ன? என்றார். பையன் வெகுநேரமாக அவர் மந்திரம் சொல்வதையே கவனமாக் கேட்டுக்கொண்டு திருப்பி சொல்லிக் கொண்டிருந்தவன் திடீரென்று அப்பா, அம்மா, தாத்தா பாட்டி எல்லா உறவினர்கள் நண்பர்கள் கேட்டுக்கொண்டிருக்க அவரிடம் ஒரு கேள்வி கேட்டான்."

மாமா நா தலையை மொட்டை அடிச்சுண்டு அமெரிக்கா ஸ்கூல்லே எப்படி போறது. பரவாயில்லை இன்னும் ஒருமாசம் இருக்கு அதுக்குள்ளே வளந்துடும். ஆனா ஒரு கண்டிஷன் உங்களோடு. நீங்க ஒத்துண்டா நான் மொட்டை அடிச்சுக்கிறேன்."

வாத்யார் சிரித்தார். "என்னடா குழந்தே உன் கண்டிஷன் என்னோட, சொல்லு"

"நீங்க மந்த்ரம் சொல்லும்போது நடுவுலே நடுவுலே செல்லுலே பேசக்கூடாது. எனக்கு என்னவோ போல இருக்கு. மந்திரம் சரியா கவனிச்சு சொல்ல முடியலே. நீங்க இந்த ரிச்சுவல் முடியறவரைக்கும் செல் போனை ஆப் பண்ணினா நான் நாளைக்கு காலேலே மொட்டை அடிச்சுண்டுடுறேன்."

வாத்யார் என்ன சொல்லுவார். விவேகானந்த பையன். வாத்தியார் செல்லை பைக்குள்ளே வச்சிட்டார். பையன் மொட்டை அடிச்சுண்டுட்டான். அதற்கு முன்னாலே ஒரு வார்த்தையும் சொன்னான்.

"எனக்கு பெரியவா கிட்டே ல்லாம் இப்படி மரியாதை குறைவா பேச கூடாது ன்னு தெரியும். ஆனால் என்னால் சொல்லாம இருக்க முடியலே, மன்னிச்சுக்கோங்கோ"



# 12. குறையை தெய்வத்துகிட்ட சொல்லு

தெய்வத்தை உபாசித்து பூஜை செய்கிறோமே அந்த தெய்வத்தோடு நாம் பேசமுடியுமா? முடியும். நாம் தெய்வத்திடம் நமது குறையெல்லாம் முறையிடுகிறோமே. நிறைவை ஓடிப்போய் சந்தோஷமாக சொல்கிறோமா? சிலர் சொல்கிறார்கள் என்பது எனக்கு தெரியும். அது ஒருபுறம் இருக்கட்டும். அந்த தெய்வம் நம்மோடு எப்போதாவது பேசியிருக்கிறதா? பேசுமா? இல்லை என்று சொல்பவர்களே. நன்றாகக் கேளுங்கள். தெய்வம் உங்களோடு பேசும். இது ஏதோ நான் சொல்கிறேன் என்று எடுத்துக் கொள்ளவேண்டாம். மஹா பெரியவா ஆணித்தரமா சொல்கிறார்கள்.

"அந்த உபாசனா தெய்வம் ஒன்னோட பேசும். என்ன? புரிஞ்சுதா?"

பெரியவாளுடைய இந்த அறிவுரை நம் எல்லோருக்கும் ஒரு சம்மட்டி அடி.

சிமிழி பிரஹ்மஸ்ரீ வெங்கட்ராம சாஸ்த்ரிகள் பெரியவாளுடைய அன்புக்கும் அபிமானத்துக்கும் ரொம்ப அருகதை உடையவர். அப்படியொரு அனுஷ்டானம்! பெரியவாளிடம் பக்தி!

அவர் மறைந்ததும், அவருடைய பிள்ளைக்கு பால்யத்திலேயே ரெண்டு சன்யாசிகள் மூலமாக தேவி உபாசனை உபதேசிக்கப்பட்டது. பல ஆண்டுகள் உபாசித்தும் உபாசனையில் வாக்கு, சரீரம் ரெண்டும் ஈடுபடுகிற அளவு, மனஸ் ஈடுபட மாட்டேங்கறது. அதனால மனசுக்கு சாந்தி கெடைக்கவே யில்லை என்ற இந்த உண்மையான எண்ணம் ரொம்ப வலுத்துக் கொண்டே போனது. பல வழிகளை கையாண்டும் ஒன்றும் பிரயோஜனமில்லை. பெரியவா மட்டுமே இதற்கு வழி காட்டமுடியும் என்ற நம்பிக்கையில் சிமிழியின் பிள்ளை பெரியவாளிடம் வந்தார்.

அப்போது பெரியவா கார்வேட் நகரில் ஒரு குளக்கரையில் அழகாக வேய்ந்திருந்த ஒரு சிறு கொட்டகையின் வாசலில் அமர்ந்திருந்தார். எத்தனைதான் அறிமுகம் இருந்தாலும், பூர்வர்கள் யார் யார் என்பதெல்லாம் தெரியாதது மாதிரி கேட்டுக் கொள்வார். நாம் இன்னாரது வம்சத்தில் வந்திருக்கிறோம் என்று சொல்லி அறிமுகப்படுத்திக் கொள்வதை அவர் மிகவும் விரும்புவதாக இருக்கும். இந்த உபாசகரும் தான் சிமிழி சாஸ்த்ரிகள் பிள்ளை என்று சொல்லிவிட்டு, தன் மனஸ் படும் கஷ்டத்தை சொல்லி, வழிகாட்ட வேண்டும் என்று வேண்டினார்.

"தேவி உபாசனை பல வர்ஷங்களா பண்ணிண்டு இருக்கேன். ஆனா, மனஸ் துளிகூட ஈடுபடலை. ரொம்ப உறுத்தறது. எனக்கு ஒரு வழி காட்டணும் பெரியவா"

"என்ன சொல்றே? அதனால என்ன தப்பு?"



"மனஸ் தனி வஸ்துவா இருக்கறதால, பூஜை முழுமையாகாத மாதிரி இருக்கு"

"அதுக்கு நா என்ன பண்ணறதுன்னு சொல்லு?"

"மனஸ் ஈடுபட பெரியவா தான் ஒரு வழி காட்டணும்"

"நீ என்ன படிச்சிருக்கே?"

தான் படித்ததை சிமிழியின் பிள்ளை சொன்னார்.

"இத்தனை படிச்சும், ஒனக்கு விவேகமில்லே! ஒன் மனஸை நா திருத்த முடியாது"

"என்னாலேயே என்னை திருத்திக்க முடியலை. அதான் பெரியவா கிட்ட வந்தேன்"

"என்னை என்ன செய்ய சொல்றே?

"மனஸ் சாந்தி அடைய பெரியவா அனுக்ரகம் பண்ணணும் "

"நீ என்ன பூஜை பண்றே?"

"அம்பாளை படத்துலேயும், விக்ரஹத்துலேயும், யந்த்ரத்துலேயும் பூஜை பண்ணறேன்"

"ரொம்ப சரி. படத்ல அம்பாள் இருக்கறதா நெனச்சுதானே பூஜை பண்றே?"

"ஆமாம்"

"அப்போ நீ உன்னுடைய இந்த கொறையைக் கூட அவகிட்டயே சொல்லியிருக்கலாமே? நெறைய படிச்சிருக்கே. படம், விக்ரஹம், யந்த்ரம்னு எல்லா எடத்துலேயும் அவ இருக்கறதா பூஜையும் பண்றே. ஆனா, ஒண்ணுலயும் ஒனக்கு பிடிப்போ, நம்பிக்கையோ இல்லை. அம்பாள் ஓங்காத்துலேயே, ஒன் பக்கத்துலேயே இருக்கறச்சே, ஒன் கொறையை அவகிட்ட சொல்லி அழத் தெரியலையே! இனிமே அவகிட்டயே சொல்லி அழு! இங்க வராதே. நான் என்ன பண்ண முடியும்?"

மிகவும் சூடாக பதில் வந்ததும், சிமிழி பிள்ளை , அம்பாள் உபாசகர் விக்கித்து நின்றார். மனஸ் இந்த பேரிடியை தாங்கமாட்டாமல், கண்களில் ஜலம் முட்டி நின்றது. நமஸ்காரம் பண்ணிவிட்டு உத்தரவு வாங்கிக் கொள்ள யத்தனித்தார். அம்பாள் மனஸ் இறங்கினாள்.

"ரொம்ப கோவிச்சுண்டுட்டேனா? நீயே ரொம்ப ஆசையா அம்பாளை உபாசனை பண்றே! மனஸ் ஈடுபடலை ன்னு ஒனக்கே தெரியறது. உபாசனைன்னா சமீபத்ல இருக்கறதுன்னு அர்த்தம். ஒனக்கு எப்பவுமே பக்கத்ல இருக்கறவள் கிட்டே ஒன்னோட கொறையை சொல்லாம, நீட்டி மொழக்கிண்டு எங்கிட்ட வந்தியேங்கற தாலதான் கொஞ்சம் அப்பிடி ஒரைக்கறா மாதிரி சொன்னேன்."

இனிமே என்ன கொறையானாலும், எதுக்கும் அவளைத் தவிர வேற யார் கிட்டயும் சொல்லக் கூடாது! நீ பூஜை பண்ற தெய்வத்துகிட்ட, அது அம்பாளோ, சிவனோ, விஷ்ணுவோ, பிள்ளையாரோ யாரா இருந்தாலும் சரி, அவா கிட்டேயே கேட்டாத்தான் ஒன்னோட நம்பிக்கைக்கு ஏத்த மாதிரி அனுக்ரகமும் கெடைக்கும். உன் உபாசனா தெய்வம் ஒன்னோட பேசும். என்ன? புரிஞ்சுதா? நம்பிக்கைதான் எல்லாம். அவளோட அனுக்கிரகம் ஒனக்கு நிச்சயமா உண்டு! கவலைப்படாதே க்ஷேமமா இரு! என்று அபயஹஸ்தம் கொடுத்தா பெரியவா!

சிமிழியின் பிள்ளைக்கு அப்புறம் குறை இருக்க ஞாயம் இருந்திருக்காது என்று எனக்கு தோன்றுகிறது. உங்கள் அபிப்ராயம் எப்படி?



# 13. உம்மாச்சி

நம் குடும்பங்களில் நிறைய குழந்தைகளுக்கு கடவுள் என்றால் புரியாது. உம்மாச்சி என்றால் உடனே புரியும். ஏனோ தெரியவில்லை, நிறைய பேர் குழந்தைகளுக்கு கடவுளைப் பற்றிய ஒரு பயத்தை உண்டு பண்ணிவிடுகிறார்கள்.

"உம்மாச்சி நீ என்ன பண்றேன்னு பார்த்துண்டே இருக்கும். தப்பு பண்ணா கண்ணைக் குத்திடும்." - இது தப்பு.

"உம்மாச்சி ரொம்ப நல்லது ஒண்ணுமே பண்ணாது. உன்னை மாறி குட்டிப் பாப்பான்னா ரொம்ப புடிக்கும்'' - இப்படித்தான் சொல்ல வேண்டும்.



உம்மாச்சியை எதுக்கு அது இதுன்னு சொல்லணும். உம்மாச்சியை அவர் என்று கூட சொல்லலாமே!

இதுவரை தப்பாக சொன்னவர்கள் இனிமேல் மாற்றிக் கொள்ள இதன் மூலம் ஒரு வாய்ப்பு.

மஹா பெரியவாவை குழந்தைகளுக்கு எத்தனையோ குடும்பங்களில் "உம்மாச்சி தாத்தா'' என்று அறிமுகம் செய்வது அறிந்திருக்கிறேன்.

இது அவருக்கு எதிரேயே ஒரு முறை நடந்திருக்கிறது. சுருக்கமாக பெரியவா சொன்னதை சொல்கிறேன்.

“எல்லோரும் காலையில் எழுந்ததும் நாராயண ஸ்மரணம் செய்யவேண்டும். மாலையில் பரமேசுவரனை தியானிக்க வேண்டும். மஹாவிஷ்ணு. உலகைப் பரிபாலிப்பவர். காலையில் உலக காரியங்களைத் தொடங்கும்முன் அவரை ஸ்மரிக்க வேண்டும். பரமேசுவரனிடம் உலகமெல்லாம் லயித்து ஒடுங்குகின்றன. மாலையில் நம் வேலைகள் ஓய்கின்றன. நாம் பார்த்துக் கொண்டிருக்கும் உலகம் இருளுக்குள் ஒடுங்குகிறது. பட்சிகள் கூட்டில் ஒடுங்குகின்றன. ஊரெல்லாம் மேய்ந்த பசுக்கள் கொட்டிலுக்குத் திரும்பி வந்து ஒடுங்குகின்றன.

நாமும் வெளியில் திரியும் எண்ணங்களை யெல்லாம் அப்போது இதயத்துக்குள் திருப்பி பரமேசுவரனை ஸ்மரிக்க வேண்டும். தோஷம் என்றால் இரவு. இரவு வருவதற்கு முற்பட்ட மாலை வேளை ப்ரதோஷம். பிரதோஷத்தில் பரமேசுவரனை நினைக்க வேண்டும்.

ஈஸ்வரனை எப்போதும் அம்பாளோடு சேர்த்தே தியானிக்க வேண்டும். ஈசுவரன் சிவன் எனப்படுகிறார். அம்பாளுக்கு சிவா, சிவே என்று பெயர்.

வேதத்தில் ஸ்ரீ ருத்ரம் சொல்கிறது. பயங்கர ரூபம் கொண்ட ருத்திரனுக்கு பரம மங்களமான ஒரு ஸ்வரூபம் உண்டு. அதற்கு சிவா என்று பெயர். அந்த சிவா தான் உலக தாபத்துக்கெல்லாம் ஔஷதமாக இருக்கிறது. ருத்திரனுக்கும் ஔஷதம் அந்த சிவாவே.

ருத்ரன் ஆலஹாலத்தை உண்டு பிழைத்திருப்பதற்குக் காரணம் இந்த சிவா என்கிற அம்பாளான மிருத ஸஞ்சீவினிதான். “அம்மா, உன் தாடங்க மகிமையால் அல்லவா பரமேசுவரன் விஷத்தை உண்டும் கூட அழியாமல் இருக்கிறார்?'' என்று ஆச்சாரியாள் ஸௌந்தரிய லஹரியில் கேட்கிறார்.

அப்படிப்பட்ட சிவனோடு சிவாவையும் சேர்த்துச் சொன்னது மட்டுமல்ல. நம் தேசக்குழந்தைகளும் அநாதி காலமாக நமக்கு அப்படியே உத்தரவு போட்டிருக்கின்றன. நம்மைப் போலக் கல்மிஷங்கள் இல்லாமல், நம்மைப் போலப் பாபங்கள் இல்லாமல் இருக்கிற குழந்தைகளின் வாக்கியமும் நமக்கு ஆக்ஞைதான்.

குழந்தைகள் நமக்குக் கட்டளை இடுவது என்ன?

குழந்தைகள் ஸ்வாமியை ''உம்மாச்சி'' என்றே சொல்லும். குழந்தைகளின் பரம்பரையில் சில தனி வார்த்தைகள் உண்டு. இவை ஆயிரக் கணக்கான வருஷங்களாக

வந்து கொண்டிருக்கின்றன. பெரியவர்களின் வார்த்தைகளும், அவற்றின் அர்த்தங்களும் மாறும். குழந்தை மொழி மாறுவதில்லை. உம்மாச்சி என்ற குழந்தை மொழிக்கு ஸ்வாமி என்று அர்த்தம்.

என்னிடம் குழந்தைகளை அழைத்து வருகிறவர்கள்கூட, உம்மாச்சித் தாத்தாவுக்கு நமஸ்காரம் செய் என்று அவற்றிடம் சொல்லிக் கேட்டி ருப்பீர்கள். இதென்ன உம்மாச்சி? இதன் சரியான மூலம் என்ன? என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

திருச்சி மலைக்கோட்டைக்குப் போயிருந்தேன். அங்கே உள்ள கோயில் ஸ்ரீ பாதந்தாங்கிகளில் திருநல்லத்திலிருந்து (கோனேரிராஜபுரம்) வந்திருக்கிறவர்களும் இருந்தார்கள். அவர்களில் ஒருவரை ஒருவர் உம்மாச்சி என்று கூப்பிடுவதைக் கேட்டேன். திருநல்லத்தில் ஸ்வாமியின் பெயர் உமாமகேஸ்வரன் என்பது. எனக்கு உடனே விஷயம் பளிச்சென்று புரிந்தது. உம்மாச்சு, உம்மாச்சி எல்லாம் உமாமகேசனைக் குறிப்பனவே என்று தெரிந்துகொண்டேன். ஆகு, குழந்தைகளின் பாஷையிலிருந்தே அவர்கள் மிகப் பழங்காலத்திலிருந்து உமாதேவியுடன் சேர்ந்த மகேசுவரனைத்தான் ஸ்வாமியாக நினைக்கிறார்கள் என்பது தெரிய வந்தது.

குழந்தைகளால் சொல்லப்படுகிற ஒரு விஷயத்துக்குப் பெருமை அதிகம். குழந்தைகளிடம் காமமும் குரோதமும் நிலைத்திருப்பதில்லை. இந்த விநாடி ஆசைப்பட்டு வாங்கிய பொருளை அடுத்த வினாடி கீழே போட்டுவிட்டுப் போய்விடும். இந்த விநாடி கோபித்துக்கொண்ட ஒருவரிடம் அடுத்த விநாடியே ஆசையோடு ஓடி தாவி

ஒட்டிக் கொள்ளும். குழந்தைக்கு மோச எண்ணம் இல்லை. கபடம் இல்லை. இதனால்தான் உபநிஷத்துக்களும் நம்மைக் குழந்தையாக இரு என்று உபதேசிக்கின்றன. குழந்தையே தெய்வம் என்றால் உமாமகேசுவரன் என்று சொல்கிறதென்றால், அந்தக் கட்டளையை நாம் ஏற்கவேண்டும். வேதத்தின் பாஷையும் குழந்தையின் பாஷையும் ஒன்றாகச் சொல்வதுபோல், எல்லோரும் சாயங்காலத்தில் அம்பிகை ஸஹிதனான ஈசுவரனை தியானிப்போமாக! நம: பார்வதீ பதயே:ஹர ஹர மஹாதேவா!



# 14. கடலும் கடவுளும்

மஹா பெரியவா எவ்வளவு கடினமான தத்துவமாக இருந்தாலும் எளிதில் புரிகிற மாதிரி சின்ன சின்ன எல்லோருக்கும் தெரிந்த உதாரணங்களை வைத்து விளக்குவா. சமுத்ர ஜலத்தை உதாரணமாக காட்டி பரமாத்மாவை நமக்கு புரிய வைத்த விஷயம் தான் இந்த செய்தி. இதை படிக்கிறபோது நான் அனுபவித்த சந்தோஷத்தை உங்களுக்கும் பரிமாறவே இந்த கட்டுரை உங்களுக்கு தரப்பட்டுள்ளது.

சில பேர் "எனக்கு இது ஏற்கனவே தெரியுமே, ஏன்யா இதையே திருப்பி திருப்பி அனுப்பறே?" என்று கோபித்துக்கொள்ள நிறைய காரணம் இருந்தாலும் "ஐயா, தெரியாதய்யா" என்று கெஞ்சப் போவதில்லை. தியாகராஜ சுவாமிகள் கீர்த்தனை எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னாலே எழுதி ஆயிரம் தடவை கேட்டபோதும் "நீ தய ராதா" என்று ஒருவர் பாவத்தோடு பாடினால் சைக்கிளை சுவற்றில் சார்த்தி விட்டு கண்களை மூடி தலையை ஆட்டி ரசித்து நின்று கேட்கிறோமே. மகாபெரியவா ஞானத்தை என் போன்றோர் ஏதோ தெரிந்தவரை ஆர்வத்தோடு எழுதினால் கூட படிக்க கசக்குமா?

"சமுத்திரம் ஆடாமல் அசையாமல் இருக்கிற போது ஒரு காற்று அடித்தால் உடனே அதில் ஜலத்துளிகள் குமிழ்களாகத் தோன்றுகின்றன. இன்னோரு காற்று அடிக்கிறபோது அந்தக் குமிழ்கள் உடைந்து போகின்றன. பரமாத்மா ஆடாத அசங்காத சமுத்திரம் மாதிரி. மாயை என்ற காற்றினால் அதிலே ஜீவாத்மாக்கள் என்கிற நாமெல்லாம் குமிழ் மாதிரி தோன்றியிருக்கிறோம். ஆசாரியாருடைய கடாக்ஷம் என்கிற நல்ல காற்று நம் மேல் பட்டால் குமிழ் உடைந்து ஜலத்துளி சமுத்திரத்தோடு ஐக்கியமாகி விடுவதுபோல், நாமும் பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து விடுவோம்."

"சமுத்திர ஜலம் என்றென்றும் அளவு குறையாமலேதான் இருக்கிறது. அதிலிருந்து ஆவி பிரிந்து மேகமாக மேலே சென்று மழையாகி, உலகத்தில் பல விதங்களில் நதி, ஓடை, வாய்க்கால், ஏரி, குளம், கிணறு என்று ஜலாசயங்களாக ஆகின்றன. சமுத்திரம் வற்றுவதில்லை. அதில் புதிதாக வெள்ளம் வருவதுமில்லை. அதிலிருந்து வந்த ஆறு குளங்கள் வற்றலாம். அல்லது இவற்றில் வெள்ளம் வரலாம். வெயில் நாள்களில் வீட்டுக் குழாய்களில் ஜலம் இல்லை. ரெட்ஹில்சில் ஜலம் இல்லை



என்கிறோம். மழைக்காலத்தில் கோதாவரியில் வெள்ளம், காவேரியில் உடைப்பு என்று பேசுகிறோம். ஆனால் சிருஷ்டி காலத்தில் இந்த உலகத்தில் எத்தனை ஜலம் இருந்ததோ அதில் ஒர் இம்மிகூட - க்ரெயின் கூட -இன்றுவரை குறைய வில்லை. கூடவும் இல்லை.''

"பணக்காரரர்கள் சிலர் நிலத்தை விற்று வீடு வாங்குவார்கள். வீடுகளை விற்று வங்கியில் போடுவார்கள். வங்கிப் பணத்தை ஷேர்களாக மாற்றுவார்கள். மொத்தச் சொத்து மாறாது. அவற்றின் ரூபம் தான் பலவிதங்களில் மாறும். எல்லாவற்றையும் கூட்டினால் கணக்கு சரியாக இருக்கும். அப்படியே தான் லோகத்தில் உள்ள மொத்த ஜலம் சமுத்திரத்தில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் மேகத்தில் இருக்க வேண்டும். அல்லது நதியாக, ஏரி, குளங்களாக இருக்க வேண்டும்.''

"பரமாத்மா பலவாகத் தோன்றி யிருக்கிறார். தோன்றிய பின்னும் சமுத்திரம் மாதிரி கூடாமல், குறையாமல் இருக்கிறார். நமக்குக் கூடுதல், குறைவு எல்லாம் உண்டாகிற தாகத் தோன்றுகிறது.ஆனால் உள்ளது ஒன்றேதான் என்ற ஞானம் வந்தால், எங்குமே கூடுதலும் இல்லை. குறைவும்இல்லை.''

ஜலத்தை திருஷ்டாந்தமாக வைத்துப் பரமாத்ம- ஜீவாத்ம ஸம்பந்தத்தைச் சொல்லும்போது நதிகளைப் பற்றி விசேஷமாகச் சொல்ல வேண்டும்.

சமுத்திர ஜலம் மழையாகி அதிலிருந்து ஏரியும், அதிலிருந்து குளமும், குட்டையும், கிணறும்உண்டாகின்றன. இவை மறுபடியும் சமுத்திரத்தில் கலப்பதில்லை. ஆனால், எல்லா நதிகளும்சமுத்திரத்தையே தேடி வந்து கலந்து விடுகின்றன

வடக்கே ஒரு நதிக்கு ஸோன் என்று பெயர். சோனம் என்றால் சிவப்பு. இந்த நதி சிவப்பான மண் வழியேஒடுகிறது. ஆந்திராவில் கிருஷ்ணா நதி இருக்கிறது. கிருஷ்ணா என்றால் கருப்பு. இந்த நதி கருப்பு மண்மீது ஒடுகிறது.

கங்கை என்றால் வெளுப்பு. இதுவும் அது ஒடுகிற பிரதேசத்தைப் பொருத்து அமைந்த பெயர்தான். மூன்றும் ஒரே கடலில்தான் கலக்கின்றன. சிகப்பு ரஜோ குணம், கருப்பு தமோ குணம். வெள்ளை ஸத்வகுணம். மனசானது முக்குணங்களில் எதில் பாய்கிறதோ, அதை ஒட்டி ஜீவாத்மாவின் சுபாவம் அமைகிறது. எப்படியானாலும், கடைசியில் பரமாத்ம சமுத்திரத்தில் தான் கலந்தாக வேண்டும். (water finds its level). தொடர்புடைய நீர்ப்போக்கு ஒரே மட்டத்தில் இருக்கமுயலும் என்பார்கள். மலை உச்சியில் மழை பொழிந்து நதி உண்டாகிறது. அங்கிருந்து கீழே கன வேகமாக, ஒரே இரைச்சலோடு நதி விழுகிறது. அப்போது அதற்கு நாம் வைக்கும் பெயர் நீர் வீழ்ச்சி. பூமியில் ஒடும்போது அத்தனை சத்தம் இல்லை. முடிவில் சமுத்திரத்தில் கலந்த பின் சத்தமே இல்லை. அப்போதுதான் நதி தன் லெவலுக்கு வருகிறது. அதாவது 'லெவலுக்கு' வந்தவுடன் பரம சாந்தமாகிறது. எதிலுமே சரி, 'லெவல்' - அதாவது அளவு அறிந்து, அந்த மட்டத்தோடு நிற்கிற மனோபாவம் வந்தால் தான் சாந்தம் உண்டாகும். 'லெவலுக்கு' மீறிச் செய்கிற தாட்பூட் காரியங்கள் பிறருக்குப் பிரமிப்பூட்டலாம். ஆனால் இதனால் நாமே நம் சாந்தியைக் குலைத்துக் கொள்வது தான் பலன். உருட்டல், புருட்டல், மிரட்டல், இரைச்சல் எல்லாவற்றையும் குறைத்து அடக்கமாக வருகிற நதியை சமுத்திரம் எதிர் கொண்டு சென்று ஏற்று பின் வாங்கிச் செல்கிறது. இதனால் தான் நதியின் சங்கம ஸ்தானங்களுக்குச் சிறிது தூரம் முன்னாலிருந்தே உப்புக் கரிக்கிறது. நாம் லெவலை மீறாமல், அடக்கமாகச் சென்றால், பரமாத்ம சமுத்திரமும் நம்மை எதிர் கொண்டு அழைத்துப் போய் தனக்குள் அடக்கம் செய்து கொண்டு விடும்"

இதைக்காட்டிலும் தெளிவாக யாராவது சொல்ல முடியுமா. இதை நீங்களும் ரசித்து தெரிந்த அறிந்த அத்தனை பேருக்கும் அனுப்புங்கள். உங்களால் ஒரு நல்ல காரியம் முடியுமென்றால் செய்ய என்ன யோசனை?



# 15. தெய்வத்துக்கு சேவை

காஞ்சி மடத்திலே மஹா பெரியவா இருந்தபோது அது பூலோக கைலாசம் என்று சொல்லலாம். இதில் யாருக்காவது சந்தேகம் உண்டா? யாருக்கு என்ன கொடுப்பினையோ, யாருக்கு பாக்யமோ. மஹா பெரியவா கூப்பிட்டு எதிர்பாராத படிக்கு அதிசயங்கள் நிகழ்த்துவார். உங்களுக்கு இது அருமையான விருந்து சமாசாரம்.

விடிகாலையில் சூர்யோதயத்துக்கு பல நாழிகை முன்பாகவே மகா பெரியவா எழுந்துடுவா. அமைதியான சூழலில், எங்கும் பக்ஷி ஜாலங்கள், மனதிற்கும் உடலுக்கும் குளிர்ச்சியாக காற்று ரம்யமாக வீசும்.

அன்றைக்கும் அப்படியே பொழுது விடிந்தது. வழக்கம்போலவே பெரியவாளுடைய விஸ்வ ரூப தர்சனம் முடிந்து அவரவர் அனுஷ்டானங்களில் மூழ்கி இருந்தனர். இந்த மாதிரி சமயங்களிலே அணுக்கத் தொண்டர்களிடம் பெரியவா சற்று விஸ்ராந்தியாக பேசிக்கொள்வது உண்டு. ஒரு நிகழ்ச்சியை சுருக்கமாக தருகிறேன்:

+ + +

"ஏண்டா நம்மூர்ல எத்தனையோ ஆயிரக் கணக்கான கோவில் இருக்கே. ஆனா, அந்தக் கோவில்ல இருக்கற அர்ச்சகா எல்லாரும் மூணு வேளை நிம்மதியா சாப்டறாளோ?



மதுரை வீரனுக்கு ஏதோ கெடச்சதை வெச்சு நைவேத்யம் பண்ற கிராமத்துப் பூஜாரில்லாம் சந்தோஷமா இருக்காளோ?

பெருமாளுக்கு பொங்கலையும் புளியோதரையையும் நைவேத்யம் பண்ற பட்டாச்சார்யார்குடும்பமெல்லாம் வயத்துக்கு மூணுவேளை சாப்ட்டுண்டு இருக்காளோ?

இதையெல்லாம் யாராவது அப்பப்போ விஜாரிக்கறேளோ?"

பெரியவா இதுபோல் ஏதாவது விஷயத்தை பீடிகையுடன் ஆரம்பித்தால், அதில் ஆயிரம் விஷயங்கள், அர்த்தங்கள் இருக்கும். எனவே எல்லாரும்

"நிச்சயமாக எங்களுக்கு இதெல்லாம் தோன்றியதே இல்லை" என்ற உண்மையை ஒத்துக்கொள்வது போல், பேசாமல் முழித்தார்கள். பெரியவாளே தொடர்ந்தார்.

"ஏன் கேக்கறேன்னா. ஏதோ மூணு நாலு கோவில்ல இருக்கற அர்ச்சகா மட்டும் நன்னா

இருந்தா போறாது. பகவானுக்கு சேவை பண்ற எல்லாரும் நன்னா இருக்கணும்னு யோசியுங்கோ!"

இந்த நேரத்தில் ராமலிங்க பட் என்ற குஜராத்தி ப்ராம்மணர் வந்து நமஸ்கரித்தார். பெரியவாளிடம் மிக மிக ஆழ்ந்த பக்தி கொண்டவர், ஆசாரம் அனுஷ்டானம் கடைப் பிடிப்பவர்கள் லிஸ்டில் இவருடைய பெயர் இருக்கும். சென்னை IITயில் ப்ரொபஸராக இருப்பவர். நமஸ்காரம் பண்ணியபின் மெதுவாக ஒரு ஓரமாக ஒதுங்கி நிற்கலாம் என்று திரும்பி நடந்தவரை, வலக்கையின் நடுவிரலையும், கட்டைவிரலையும் சேர்த்து போடும் "டொக்" கென்ற பெரியவாளுக்கே உரித்தான சொடக்கு சத்தம் திரும்பிப் பார்க்கவைத்தது. ஆள் காட்டி விரலால் "இங்கே வா" என்று சைகை பண்ணினார்.

விடியக்காலை தர்சனத்திலேயே ஒருமாதிரி ஆனந்த மயக்கத்தில் இருந்த ராமலிங்க பட், பெரியவா தன்னை அழைத்ததும் திக்குமுக்காடிப் போனார். பவ்யமாக அருகில் வந்து நின்றார்.

"ஒன்னோட ஒருமாச சம்பளத்த எனக்கு குடுப்பியா?"

குழந்தை மாதிரி கேட்டதும், நெக்குருகிப் போனார் பட். மோக்ஷத்தையே அனாயாஸமாக பிக்ஷயாகப் போடும் தெய்வம், ஒரு மாச சம்பளத்தை கேட்கிறதே! -- அதிர்ந்து பேச நா எழாமல் நின்றார் பட்.

"என்ன. யோசிக்கறே போலருக்கு? ஏதோ, இன்னிக்கு காலங்கார்த்தால ஒன்னை பார்த்தேனோல்லியோ. கேக்கணும்னு தோணித்து. கேட்டுட்டேன். குடுப்பியா?"

வேரறுந்த மரம் மாதிரி பாதத்தில் விழுந்தார் பட்.

"பெரியவா ஆக்ஞை! எங்கிட்டேர்ந்து என்ன வேணுன்னாலும் எடுத்துக்கலாம். இந்த ஜன்மா லே எனக்கு இதைத் தவிர வேறென்ன ஸந்தோஷம் நிலைக்கப் போறது?"

உடனேயே நாலாயிரம் ரூபாயை பெரியவாளின் திருவடியில் சமர்ப்பித்தார். அவரிடமிருந்த வந்த பணத்தை கொண்டுதான் "கச்சிமூதூர் அர்ச்சகா டிரஸ்ட்" துவங்கப்பட்டு, வருமானம் குறைந்த அர்ச்சகர்கள்,பூஜாரிகளுக்கு இன்றுவரை உதவி செய்துகொண்டு வருகிறது.

டிரஸ்ட் துவங்கியதும் வேதமூர்த்தி என்பவர் "ஹிந்து" பேப்பரில் விரிவான செய்தியாக எழுதியிருந்தார். பெரியவா அதைப் படித்துப்பார்த்து ரொம்ப சந்தோஷப்பட்டார். அப்போது அங்கே வந்த ராகவன் என்ற ஆடிட்டரிடம் "இந்த ஹிந்து பேப்பர்ல வந்திருக்கே. இதை எனக்கு ஆயிரம் காப்பி ஜெராக்ஸ் மெட்ராஸ்ல எடுத்துத் தருவியா"

குழந்தை போல ஸ்வாமி கேட்டார். ராகவனுக்கோ சந்தோஷம் தலைகால் புரியவில்லை.உடனே ஜெராக்ஸ் எடுத்துக்கொண்டு காஞ்சி வந்து பெரியவாளிடம் குடுத்தார்.

"ஜெராக்ஸ் எடுத்ததுக்கு பில் எடுத்துண்டு வந்தியோ?"

"இல்லே பெரியவா.ஆத்துல இருக்கும்"

"மெட்ராஸ்ல IIT-ல ராமலிங்க பட்ன்னு ஒர்த்தன் இருப்பான். அவன்ட்ட அந்த பில்லைக் குடுத்துட்டு காசு வாங்கிக்கோ! ஜெராக்ஸ் போட்டுக் குடுத்ததே நீ பண்ணின பெரிய கைங்கர்யம்!" சிரித்துக்கொண்டே ஆசிர்வதித்தார்

# 16. மகா பெரியவா போற்றிய பெரியவா

நாம் யாரைப் பெரியவா என்று மதிக்கிறோம்? ஒரு வார்த்தையில் சொல்வதானால். நம்மைப்போல் இல்லாதவரை எனலாம். எந்தவிதத்தில்?

எல்லா விதத்திலும் தான். அப்படியிருக்கும்போது பெரியவா மட்டுமில்ல, மஹா பெரியவா என்றால் எப்படிப்பட்டவராக இருப்பவர் என்று வார்த்தையில் வர்ணிக்கமுடியுமா".

சரி, ஒரு படி மேலே போவோம். மகா பெரியவாவே ஒருவரை பெரியவா என்ற அழைத்தாரென்றால், அந்த மகாபுருஷர் எத்தனை பெருமைக்கு உரியவராக இருந்திருக்க வேண்டும்!

மகாபெரியவா குறிப்பிட்ட அந்த பெரியவா 'மன்னார்குடிப் பெரியவா'. மஹா பெரியவா அவரைப்பற்றி தானே என்ன சொல்கிறார் என்பதை சுருக்கித் தருகிறேன்.

'கொஞ்சம் வேடிக்கை கலந்த மாதிரி இந்த விஷயத்தைப் பற்றி ஒரு பெரியவர் ஸ்லோகம் பண்ணியிருக்கிறார்.



'பெரியவர்' என்றேன். அவரைப் 'பெரியவா(ள்) 'என்றே தான், பெயரைச் சொல்லாமல், மரியாதையாகக் குறிப்பிடுவது வழக்கம். என் மாதிரி ஒரு மடாதிபதியாக இருப்பவரைப் 'பெரியவா' என்பதில் விசேஷமில்லை. ஸ்வயமான யோக்யதை இல்லாவிட்டாலுங் கூட, ஸ்தானத்தினாலேயே எங்களுக்குப் பெரியவர் பட்டம் கிடைத்துவிடும்.

'நான் சொல்கிற பெரியவர் மடாதிபதி இல்லை. அதற்கடுத்த படியாக லோக கௌரவத்தைத் தன்னுடைய ஆச்ரமத்தினாலேயே ஸம்பாதித்து விடுகிற

(மடாதிபதியாக இல்லாத) ஸந்நியாஸி கூட இல்லை. க்ருஹஸ்தராகவே வாழ்க்கை நடத்தியவர். ஆனால் "குலபதி" என்று புகழக்கூடிய அளவுக்கு ஏராளமான சிஷ்யர்களுக்கு குரு குலம் நடத்திப் பல மஹா வித்வான்களை உருவாக்கிய மஹா மஹோபாத்யாயராக இருந்தவர். ஸந்நியாஸிகளுங் கூட வந்து பாடம் கேட்டுக் கொண்டு போகும்படியான அப்பேர்ப் பட்ட பாண்டித்யத்தோடு கூடிய பண்டிதர் என்பது மட்டும் அவர் பெருமையல்ல. உசந்த குணவானாகவும் இருந்தார். சிவ பக்தியில் சிறந்தவர். பரம ஆசார அநுஷ்டானத்தோடு கூட ரொம்பவும் சீலராக வாழ்ந்த பெருமையும் அவருக்கு உண்டு. ஞானம், சீலம் இரண்டிலும் பெரியவராக இருந்த அவரைத்தான் 'பெரியவாள்' என்றே லோகம் சொல்லிற்று. அடையாளம் தெரிவதற்காக, அவர் வாழ்ந்து வந்த ஊரின் பெயரைச் சேர்த்து "மன்னார்குடிப் பெரியவாள்" என்று சொல்வார்கள்'.

உயர்ந்த அறிவு, சிறந்த ஒழுக்கம் இரண்டும் கூடிய அவர் 19-ம் நூற்றாண்டு ஆரம்பத்திலிருந்து இருபதாம் நூற்றாண்டு ஆரம்பம் வரை ஸுமார் தொண்ணூறு வயசு ஜீவ்ய வந்தராக இருந்து 'ஞான-சீல -வ்ருத்தர்' என்கிற புகழ்ச் சொல்லுக்கு முற்றிலும் உரியவராக இருந்தார். மஹானாகிய அப்பைய தீக்ஷிதரின் வம்சத்தில் வந்த அவருடைய சர்மன் த்யாகராஜர் என்பது. அவர் யாகங்கள் செய்ததால்' த்யாகராஜ மகி'என்று தம்முடைய நூல்களில் தம்மைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருப்பார். 'மகம்' என்றால் யாகம். சின்ன வயசிஸில் அவரை வீட்டிலே பெரியவர்கள் கூப்பிட்ட பேர் ராஜு. அதனால் ராஜு சாஸ்திரிகள் என்றும் சொல்வதுண்டு. ஆனால் பேச்சு வழக்கில் 'மன்னார்குடிப் பெரியவா' தான் பிரசித்தம். ஊர் உலகமெல்லாம் பெரியவா என்று அழைத்தாலும் ரொம்பவும் அடக்கத்தோடு எளிமையாகஇருந்தவ ரவர். அவருடைய குருமார்களில் கோபாலாசாரியார் என்பவர் ஒருவர். பிற்காலத்திலே இந்த கோபாலாசாரியாரின் புத்திரர் மன்னார்குடிப் பெரியவாளிடம் படித்த மாணவர்களில் ஒருவரானார். இவர் பெரியவாளை விட வயஸில் சிறியவர் அதோடு சிஷ்யர். அப்படியிருந்தும், குரு புத்ரனுக்கு மரியாதை காட்ட வேண்டும் என்ற வழக்கத்தை அநுஸரித்து இவர் வகுப்புக்கு வரும்போது இவருக்கு குரு வான மன்னார்குடிப் பெரியவாளே எழுந்திருந்து நிற்பாராம்! பக்தி ச்ரத்தை, ஆசாரம், ஸத் குணங்கள், அபாரமான வித்வத் இத்தனையும் பெற்று, ஸந்நியாஸிகளுக்கும் பாடம் சொன்னவரானாலும் அவர் கடைசி மட்டும் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்ளவில்லை. "நமக்கு ஏது அவ்வளவு யோக்யதை?" என்றே சொல்வாராம். அத்தனை அடக்க ஸம்பத்து!

அவருக்கு மஹா மஹோபாத்யாய பட்டம் சூட்டியதிலேயே இப்படி (அவரது அடக்க குணத்தைக் காட்டுவதாக) ஒரு விஷயம் உண்டு. (1887-ல்) விக்டோரியா பட்டமேறிய கோல்டன் ஜூபிலி கொண்டாடிய போது, இந்தியாவின் பழைய வழக்கத்தை அநுஸரித்து இனிமேல் வெள்ளைக்கார ராஜாங்கமும் பண்டிதோத்தமர்களுக்கு 'மஹா மஹோ பாத்யாய'பட்டம் கொடுக்க வேண்டு மென்று தீர்மானம் பண்ணினார்கள். அதன் பிரகாரம் முதல் வருஷமே வடக்கத்தி வித்வான் ஒருவருக்கும்,தெற்கத்தி வித்வான் ஒருவருக்கும் டைட்டில் தருவது என்று தேர்ந்தெடுத்த போது அவர்களில் ஒருவராக இருந்த தெற்கத்திக்காரரர் நம்முடைய மன்னார்குடிப் பெரியவாள் தான். ஆனாலும் அவருக்கு இந்த விஷயம் தெரிவிக்கப் பட்டபோது, 'பூர்வ காலத்தில் மஹாபெரிய வித்வான்களுக்கே கொடுத்து வந்த இந்தப் பட்டம் எனக்கா? அவ்வளவு யோக்யதை இல்லவே இல்லை'என்று சொல்லிச் சும்மா இருந்து விட்டாராம். பட்டம் வாங்கிக் கொள்ள அவர் டில்லி தர்பாருக்குப் போகவேயில்லை!விஷயத்தை மறந்து விட்டுத் தம் பாட்டுக்குப் பாடம் சொல்வது, சிவ பூஜை பண்ணுவது என்று இருந்து கொண்டிருந்தார். ராஜாங்கத்தில் இவருக்காகக் காத்துக் காத்துப் பார்த்தார்கள். டில்லிக்குப் போகா விட்டாலும் கிட்டத்தில் இருக்கிற தஞ்சாவூருக்காவது போய் கலெக்டரிட மிருந்து டைட்டிலை ராஜ மரியாதையோடு பெறுவாரா என்று காத்துப் பார்த்தார்கள். விநய ஸம்பன்னரான இவருக்கோ, அந்த எண்ணமே யில்லை! அப்புறம் கலெக்டர் அந்தப் பெரிய பட்டத்துக்கான ஸன்னதுகளை அவருடைய வீட்டுக்கே அனுப்பி வைத்த போதுதான் மறுக்க முடியாமல் ஏற்றுக்கொண்டார்.

வித்யை இருந்தால் தலைக்கனமும் இருக்கத்தான் வேண்டும் என்றில்லாமல் நேர் வித்யாஸமாக இருந்தார். வித்யாரம்பத்திலேயே விநாயகரை வந்தனம் செய்வதாலும், எந்த சாஸ்த்ரமா யிருந்தாலும்அதற்கான புஸ்தகத் தொடக்கத்திலேயே பிள்ளையார் ஸ்துதிக் கப்படுவதாலும் உண்மையான வித்வா னொருவன் எப்படியிருக்க வேண்டும் என்று காட்டிய அந்தப் பெரியவரைப் பற்றிச் சொல்வ தெல்லாமும் விக்நேச்வர ப்ரீதி தான். நாம் எடுத்துக் கொண்ட விஷயத்தை விட்டு எங்கோ போய் விட்டதாக ஆகாது.



# 17. இது பேத்தல் இல்லை

மஹா பெரியவா பற்றி படிக்கவோ எழுதவோ ஈடுபடுவது எதற்காக என்று யோசிப்பவர்கள், ஆஹா, அது ஒரு பெரிய ஆழமான சமுத்ரத்தில் முத்துக்குளிக்க இறங்குவது மாதிரி அல்லவோ? என்று புரிந்து கொள்வார்கள். எடுக்க எடுக்க முத்து வந்துகொண்டே இருக்கும். ஒரே அடியாக எல்லாவற்றையும் அள்ளிக் கொண்டு வர முடியாது. விட்டு விட்டு தான் திரும்ப திரும்ப மூழ்கவேண்டும்.இதைத் தான் நானும் பண்ணிக் கொண்டு வருகிறேன்.( உங்களோடு சேர்ந்து).

ஒரு நண்பர் இதைப்பற்றிக் குறிப்பிட்டு விடாது எழுதுங்களேன் என்றார். நிறைய பேர் எழுதுகிறார்களே, பேசுகிறார்களே, அதே விஷயங்களை எப்படி திருப்பி திருப்பி சொல்வது. என்ன பயன்? என்று யோசித்தபோது தான் எத்தனை தடவை மீண்டும் மீண்டும் படித்தாலும் எழுதினாலும் அலுக்காத ஒரு விஷயம் மகா பெரியவா என்று மனதில் பதிந்தது. ஏன் என்றால் அந்த விஷய த்தின் ரசானுபவம். மற்றொன்று தெரிந்ததுதே யானாலும் அவர் வாயால் மீண்டும் ஒருமுறை கேட்போமே என்று தலை தூக்கும் ஆர்வம்.

அப்படி "அவர் வாயால்'' கேட்கத் தோன்றும் வெகு சிலரில் முதலாவது நமது மஹா பெரியவா. -- அவர் சொன்னதின் சாராம்சத்தை சுருக்கி பய பக்தியோடு தருகிறேன்:

மறைந்த நம் தாய் தந்தையருக்கு, முன்னோர்க்கு, தர்ப்பணம் ஸ்ரார்தம் எல்லாம் பண்ணுவதால் என்ன பயன்?

யாரோ ஒருவருக்கு வாழைக்காய், அரிசி கொடுத்தால் அது முன்னோர்களைப் போய்ச் சேருமா?

வெறுமே எள்ளும் நீரும் இறைத்தால் அவர்களுக்கு திருப்தி தருமா?

வெறும் பேத்தல், மூட நம்பிக்கை, "வாட் நான்சென்ஸ்" என்று சில அரைகுறைகள் இன்றும் கேட்கின்றனர். இவற்றுக்கு பெரியவா தரும் விடை தான் இந்த கட்டுரை.

மநுஷ்யராகப் பிறந்தவர்கள் தங்களுடைய முன்னோர்கள், தெய்வம் இவர்களுக்கு நன்றி தெரிவிக்கவேண்டும். இதுவே பித்ருக்கடன், தேவ காரியம் என்பவை. நம்முடைய சக ஜீவர்களுக்கு நம்மாலானதைச் செய்ய வேண்டும்.

"ஆதித்யம்'' (ஒர் அதிதிக்காவது உணவு படைப்பது) விருந்தோம்பல் இதுதான். இது மனுஷ யக்ஞம்.

பிரம்ம யக்ஞம் என்று இன்னொன்று. பிரம்மம் என்றால் பல அர்த்தம். இந்த இடத்தில் வேதம் என்றுஅர்த்தம். வேதம் ஓதுவதும், ஓதுவிப்பதுமே பிரம்ம யக்ஞம். இது ரிஷிகளின் திருப்திக்காக ஏற்பட்டது.

எல்லோரும் செய்வதற்காக ஏற்பட்ட இன்னொரு கர்மம் பூத யக்ஞம் அதாவது மனுஷ்ய ஜீவனாக இல்லாத ஜீவராசிகளுக்குக்கூட நம் அன்பைத் தெரிவித்து உணவூட்டுகின்ற காரியம். எனவே தான் நாம் பித்ரு யக்ஞம், தேவ யக்ஞம், மநுஷ்ய யக்ஞம், பூத யக்ஞம் இவற்றை எல்லோரும் ஏதோ ஒருரூபத்தில் செய்யக் கடமைப் பட்டிருக்கின்றோம். வைதிக தர்மப்படி அவரவரும் தங்களுக்கான தொழிலைச் செய்து ஈசுவரார்ப்பணம் பண்ணுவதே அவரவருக்கும் பிரம்ம யக்ஞம் என்று சொல்லலாம். வேத நெறியில் சொல்லப்பட்டதையே தான் ஏறக்குறைய திருவள்ளுவரும் சொல்லியிருக்கார்.

“தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.'' புரியலையா? விளக்கம் இதோ.

தென்புலத்தார் = பித்ருக்கள். பித்ருக்களான தாய் தந்தையார்களுக்கும் மூதாதையார்களுக்கும் நமது கடமைகளை எல்லோரும் அவசியம் செய்தாக வேண்டும்.

“மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோ பவ'' (“அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்”) என்றும் சொல்லுகிறார்கள். தாய் தந்தையர் ஜீவிய வந்தர்களாக இருக்கையில், அவர்களிடம் பணிவுடன் நடந்து கொண்டு, அவர்களுக்கு நம்மால் இயன்ற சௌக்கிய மெல்லாம் செய்து தரவேண்டும். (இதைப் படிக்கும் வரை அப்படிச் செய்யாதவர்கள் இந்தக் கணம் முதல் அப்படி தவறாமல் செய்ய ஒரு வேண்டுகோள்) தாய் தந்தையர் நமக்காக ஆதியில் செய்துள்ள தியாகங்களுக்கு நாம் பிரதியே செய்ய முடியாது. அவர்களது மனம் கோணாமல் அவர்களை வைத்துக் காக்க வேண்டும். (சிலர் இதை ஒரு காகிதத்தில் எழுதி பர்சில் வைத்துக் கொள்ளவும்.)

அவர்கள் இந்த உலகத்தை விட்டுப்போன பிற்பாடும், அவர்களுக்காக சாஸ்திரப் பிரகாரம், தர்ப்பணம், சிரார்த்தம் இவற்றை அனைவரும் தவறாமல் செய்ய வேண்டும். பெற்றோர் உயிரோடு இருக்கும் வரையில் அவர்களை வைத்துப் பராமரிக்க வேண்டும்.

“எள், தர்ப்பண ஜலம், பிண்டம், அரிசி, வாழைக்காய், சாப்பாடு எல்லாம் இங்கேயே இருக்கின்றன.அல்லது கண் முன்னாலேயே ஒருத்தன் எடுத்துப் போனான். அல்லது சாப்பிட்டுவிட்டான். பிதிரர்கள் எங்கேயோ மறு ஜன்மா எடுத்து விட்டார்கள் என்று நீரே சொல்கிறீர். அப்படியிருக்க இங்கே உள்ள வஸ்து அங்கே போய் அவர்களை சேருகிறது என்பது பைத்தியக்காரத்தனம் அல்லவா?'' -- ஒரு சீர்த்திருத்தக் காரரர் வாய் விட்டுக் கேட்கிறார். அவரை விடுங்கள் இதைப் படிக்கும், படிக்கக் கேட்கும் உங்களில் பலருக்கும் மனசுக்குள் இப்படிச் சந்தேகம் இருக்கலாம். இது விஷயமாக ஒரு கதை சொல்கிறேன்.

ஒருவர் பட்டணத்தில் பிள்ளையை படிக்க வைத்திருந்தார். காலேஜில் பரிட்சைக்குப் பணம்கட்டவேண்டியிருக்கிறது. அதுவும் மறுநாள் கட்ட வேண்டியிருக்கிறது. உடனே பையன் அப்பாவுக்கு தந்தி மணியாடரில் பணம் அனுப்பு என்று எழுதினான். அப்பாவுக்குத் தந்தியும் மணியார்டரும் தனித் தனியாகத் தான் தெரியும். எப்போதோ அடித்திருக்கிறார். சில நேரம் சிலருக்கு மணி ஆர்டர் அனுப்பியிருக்கிறார். அது என்ன "தந்தி மணியார்டர்?" அவருக்கு புரியவில்லை. தபாலாபீசுக்கு போனார். ரூபாயைக் கொடுத்து விட்டுத் "தந்தி மணியார்டர்" பண்ண வேண்டும் என்றார். தபாலாபீஸ் குமாஸ்தா ரூபாயில் ஒட்டை பண்ணித் தந்திக் கம்பியில் கட்டி அனுப்புவார் என்று காத்திருந்தார். ஆனால் பணம் வாங்கிக் கொண்ட குமாஸ்தா ரசீது கொடுத்துவிட்டு, சரி, உம்முடைய பணம் நாளை போய் சேர்ந்துவிடும். அனுப்பியாகிவிட்டது என்றார் குமாஸ்தா பணத்தை பெட்டியில் போட்டதையும், ஒட்டை பண்ணிக் கம்பியில் கோர்க்காம லிருப்பதையும் பார்த்த அப்பாக் காரர்,

"என் பணம் இங்கேதானே இருக்கிறது. அதில் ஒட்டை ஒன்றும் போட்டு நீங்கள் அனுப்பவில்லையே. அது எப்படிப் போய்ச் சேரும்?" -- அப்பா

"அது தானாகவே போய்ச் சேர்ந்து விடும்" -- குமாஸ்தா கட்டுக் கடகட என்று தந்தி அடித்தான். ஏதோ லொட்டுலொட்டென்று சப்தம் பண்ணுகிறான். பிறகு பணம் போய் சேர்ந்துவிடும் என்று சொல்கிறான். ருபாயோ என் கண்ணெதிரே இங்கேயே இருக்கிறது. லொட் லொட்டென்று கட்டையை இங்கே அடித்தால் அங்கே பணம் எப்படிப் போய் சேரும்? நான் கொடுத்த பணம் இங்கயே இன்னும் பெட்டியில் இருக்கிறதே? அப்பாவுக்குச் சந்தேகம். ஆனால் பணம் போய் சேர்ந்து விட்டது.

தர்ப்பணம் முதலிய பண்ணுவதும் அந்த மாதிரியே ஆகும். நாம் எதைக் கொடுத்தாலும் அதற்கென சட்டப்படி கொடுக்க வேண்டும். சாஸ்திரம் என்கிற சட்டம் விதித்தபடி நாம் கொடுப்பதைத் தெரிந்து கொள்கிற பிதுர் தேவதைகள் அது யாருக்கு போய்ச் சேர வேண்டுமோ அவர்களுக்குச் சேர்த்து விடுவார்கள். பிதிருக்கள் மாடாகப் பிறந்திருந்தால் வைக்கோலாக்கிப் போட்டுவிடுவார்கள். குதிரையாகப் பிறந்திருந்தால் கொள்ளாக்கி, புல்லாக்கிப் போட்டிருப்பார்கள். பிதுர் தேவதைகளுக்கு பரமேச்வரன் இப்படி உத்தரவு பண்ணி, இதற்கான சக்தியும் தந்திருக்கிறார். ஆகையால் சிரார்த்தத்தன்று கொடுப்பதைப் பெற்றுக் கொள்ள அப்பா நேரில் வர வேண்டியதில்லை.

தந்தி மணியார்டர் அனுப்பியவனுடைய பணமோ வாங்கிக் கொள்ளுகிறவனிடம் நேராகப் போவதில்லை யல்லவா? மணியார்டர் பெறுகிறவன் வேறு தேசத்தில் இருந்தால் அங்கே நம் ரூபாய் நோட்டு செல்லவே செல்லாது. இங்கே ரூபாயைக் கட்டினாலும் வெளி தேசத்தில் டாலராகவோ, பவுனாகவோ அதை மாற்றித் தரவும் ஏற்பாடு இருக்கிறது. ஆனால், நம் ஊரில் நம் ரூபாயை அந்த ஊர் டாலராக,



பவுனாக மாற்றமுடியாது. இங்கே செல்லுபடியாகிற ரூபாயைத்தான் ஏற்றுக்கொள்ளுவார்கள். அப்படியே சாஸ்திரப்பிரகாரம் விதிக்கப்பட்ட எள், தண்ணீர், வாழைக்காய் இதுகளை ஏற்று பித்ருக்களுக்கு தேவையான உணவாக மாற்றித் தரப்படும்.

பிதிருக்களிடம் நமக்குள்ள நன்றி மனோபாவமும், சாஸ்திரத்தில் நமக்குள்ள சிரத்தையுமே முக்கியம். இன்னொருவனுடைய ஆரோக்கியத் துக்காக நான் டோஸ்ட் சாப்பிடுகிறேன். என்று பார்ட்டியில் வெள்ளைக்காரர்களும் வெறொருவன் பெயரைச் சொல்லிக் கொண்டு தாங்களே போஜனம் செய்கிறார்கள் ஒரு கப்பில் மதுவை ஊற்றி மற்றவன் பெயரைச் சொல்லி தூக்கிக் காட்டிவிட்டு அவனுடைய டமளருடன் இடித்து விட்டு தானே குடிப்பான். இதில் என்ன தெரிந்து கொளவேண்டும் தெரியுமா?

ஒருவரின் மனோபாவத்தின் சக்தியால் இன்னொருவனுக்கு ஆரோக்கியம் உண்டாகும் என்று நம்புவது. சிராத்தம் என்பதற்கே சிரத்தையோடு பண்ணுவது என்பது அர்த்தம். சிரத்தை நமக்கு முக்கியம். ஒரு காரியம் என்று பண்ண ஆரம்பித்தால் அதற்குரிய சட்டப்படியாகத் தான் பண்ண வேண்டும். லெட்டர் எழுதினால், என் இஷ்டப்படி தான் அட்ரஸ் எழுதுவேன். அந்தத் தபால் பெட்டியில் போடுவானேன்? எங்கள் வீட்டில் அதைவிட நல்ல பெட்டி செய்து அதில் தான் போடுவேன் என்று சொல்லலாமா? காரியமில்லாத மனோபாவமாக இருக்கிற வரையில் அன்பு, பக்தி, ஞானம் இலற்றைக் கட்டுப்பான்றிச் செலுத்தலாம்.

காரியம் என்று செய்கையில் அதற்காக ஏற்பட்ட விதியை விடவே கூடாது. இது தான் சாஸ்த்ரம். இது தான் விதி முறை.

நான் எழுதும் இந்த "பேசும் தெய்வ" கட்டுரையால் பயன் இருக்கிறதா? நிறைய எழுதலாமா? அல்லது எதற்கு ஏற்கனவே தெரிந்த விஷயங்களா?"



# 18. புத்தாண்டு

நாம் வெள்ளைக்காரர்கள் அல்ல. ஜனவரி முதல் நாள் எந்த விதத்திலும் நமது புத்தாண்டு அல்ல. ஆனால் பல நூறு ஆண்டுகள் வெள்ளையர் ஆண்ட நாடு இது. அவர்கள் அறிமுகப்படுத்திய பழக்க வழக்கங்கள் இன்றும் நம்மை விட்டு போகவில்லையே. ஆங்கிலத்தில் வீட்டிலேயே பேசும் தமிழ்க்குடும்பங்கள் அதை நாகரிகமாக கருதுகிறோமா? தாய்மொழி தள்ளி வைக்கப்படுவது ஏன்? அதன் சிறப்பு ஏன் புரியவில்லை? கொஞ்சம் கொஞ்சமாக நாம் மேற்கு நோக்கி ஏன் நகர்கிறோம்? நாம் என்ன காட்டு மிராண்டிகளா இன்னும்? எனக்கு இதற்கெல்லாம் விடை தெரியாது. ஏனெனில் நானும் கும்பலில் ஒருத்தன் தானே.

சரி, வழக்கம் போலவே "ஹாப்பி நியூ இயர்" சொல்கிறேன் அதோடு அங்கொரு கால் இங்கொரு காலாக ஒரு உருப்படியான விஷயமும் தருகிறேனே. நான் தரவில்லை இந்த விஷயம். மகா பெரியவா உங்களுக்கு தந்தது.

புது வருஷம் அன்றாவது/புது வருஷம் முதலாவது இதை கொஞ்சம் படித்து சாவதானமாக மனத்துக்குள்ளே உலவ விட்டால், தக்க வைத்தால், துக்குணியூண்டாவது பின்பற்றினால் இது மகா பெரியவாளுக்கு சமர்ப்பிக்கும் புது வருஷ நமஸ்காரமாகட்டுமே.

மஹா பெரியவா சொன்னது நிறைய நிறைய சமுத்ரமாக இருக்கிறதே. அதை எல்லாம் எப்படி ஒரு கட்டுரையில் நிரப்ப முடியும்? பத்து அல்லது பதினைந்தாக தரட்டுமா? இதோ ஆரம்பித்தாகி விட்டது.

1. உடம்பினால் நல்ல காரியம் செய்யவேண்டும். கோயிலுக்குப் போய் பிரதக்ஷிணம் செய்து நமஸ்காரம் செய்ய வேண்டும். தண்டம் சமர்ப்பித்தல் என்று சமஸ்காரத்தைச் சொல்லுவார்கள். தடியைப்போல் விழுவது தான் அது. இந்த உடம்பு நமதன்று, அவருடையது என்று நினைத்து அவர் சந்நிதியில் போட்டு விட வேண்டும்.

2. இந்த ஜென்மத்திற்குப் பின்பும் உபயோகப்படக் கூடிய சில காரியங்கள் செய்யப்பட வேண்டியது அவசியம். விபூதி இட்டுக் கொள்ளுதல், ருத்ராக்ஷம் அணிதல், ச்ராத்தம் செய்தல் முதலிய காரியங்கள் நாம் எப்பொழுதும் சௌக்யமாக இருப்பதற்கு உதவுங்காரியங்கள்.

3. நாமாவும் ரூபமும் இல்லாத மதம் நமது மதம். பேர் ஏன் இல்லை? அடையாளம் ஏன் இல்லை? மற்ற மதங்களுக்கெல்லாம் இருக்கிறதே என்று ஒரு சமயம் யோசித்துப் பார்த்தேன். அப்புறம் எனக்கு நிரம்ப சந்தோஷமாக இருந்தது. பேரில்லாமல் இருப்பது ஒரு கௌரவம் என்பது ஏற்பட்டது.

4. நம்முடைய மதம் எவ்வளவோ யுகங்களாக நீடித்து வாழ்ந்து வருகிறது. நமக்குத் தெரியாமல் ஏதோ ஒன்று இதைத் தாங்கிக் கொண்டிருக்கிறது. எவ்வளவோ

வித்யாசங்கள் இருந்தாலும் இந்த மதம் அழியாமல் நிற்கிறது. லோகம் புரண்டு போனாலும் நம்முடைய கடமைகளைச் செய்து கொண்டு பயமின்றி அன்புடன் சாமான்ய தர்மங்களை நன்றாக ரக்ஷித்து விசேஷ தர்மத்தைக் கூடியவரை ரக்ஷிக்க வேண்டும். அதற்குரிய சக்தியைப் பகவான் அளிப்பாராக.

5. மூன்று மூர்த்திகளுக்கும் மேலே அதீதராகப் பரமசிவன் இருக்கிறார். அவர் ப்ரம்மாவுக்கு அனுக்ரஹம் பண்ணுகிறார். காமேச்வரனாக அருள் புரிகிறார். பராசக்தி காமேச்வரியாக அனுக்ரஹிப்பாள். பரமேச்வரனுடைய அனுக்ரஹத்தால் ப்ரம்மா வேதங்களை அறிந்து கொள்கிறார். நான்கு வேதங்களையும் நான்கு முகத்தில் சொல்லிக் கொண்டு சிருஷ்டியைச் செய்து கொண்டிருக்கிறார்.

6. வேதத்திலிருப்பதை எல்லோருக்கும் நன்றாக விளங்க வைப்பது பதினெட்டு புராணங்கள். பதினெட்டு உப புராணங்கள் வேறே இருக்கின்றன. பதினெட்டு புராணங்களும் சேர்ந்து நான்கு லட்சம் கிரந்தம். ஒரு கிரந்தம் என்பது 32 எழுத்துக்கள் கொண்டது. பதினெழு புராணங்கள் மூன்று லட்சம் கொண்டவை. மிகுதியுள்ள ஒரு லட்ச கிரந்தம் ஸ்காந்த புராணம். பரமசிவனைப் பற்றிச் சொல்பவை பத்து புராணங்கள், அவைகளுள் ஒன்றே லட்சம் கிரந்தம் உடையது.

7. பாபத்தை ஒரே க்ஷணத்தில் துவம்சம் பண்ணும் ஒரு வஸ்து உண்டு. இரண்டு எழுத்துக்களாலான பெயர் அது. வேதங்களின் ஜீவரத்னம் அதுவே. கோயிலில் மஹாலிங்கம் போலவும் தேகத்தில் உயிர் போலவும் அது வேதங்களின் மத்தியில் இருக்கிறது. ("சிவ" என்ற இரண்டு எழுத்துக்களே அது) அதை ஒருதரம் சொன்னால் போதும். வேறு ஒரு காரியத்துக்கு நடுவிலும் சொல்லலாம். சொன்னால் அந்த க்ஷணத்திலேயே பாபத்தைப் போக்கிவிடும்.

8. வேதங்களுள் யஜுர் வேதம் முக்கியமானது. அதற்குள் அதன் மத்திய பாகமாகிய நாலாவது காண்டம் முக்கியமானது. அதற்குள்ளும் மத்திய பாகமான நாலாவது ப்ரச்னம் முக்கிய மானது. அதுதான் ஸ்ரீருத்ரம். அதற்குள்ளும் 'நம: சிவாய' என்ற பஞ்சாக்ஷர வாக்கியம் மத்தியில் இருக்கிறது. அதன் மத்தியில் 'சிவ' என்ற இரண்டு அக்ஷரங்கள் அடங்கியுள்ளன. இதையே ஜீவரத்னம் என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இந்த அபிப்பிராயத்தை அப்பய்ய தீக்ஷிதர் ப்ரம்மதர்க்க ஸ்தவத்தில் சொல்லியிருக்கிறார்கள். அந்த ப்ரம்மம் சிவஸ்வரூபம் என்று தெரிகிறது.

9. அப்படிப்பட்ட ஸ்வரூபத்தை ஆராதிப்பதற்கு அடையாளமாகச் சிவபக்தர்கள் எல்லோரும் ஐந்து வித காரியங்களைச் செய்து கொண்டிருக்க வேண்டும். அவைகளாவன: (1) விபூதி தரித்தல், (2) ருத்ராக்ஷம் அணிதல், (3) பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபம் செய்தல், பஞ்சாக்ஷர மந்திரம் உபதேசமாகாதவர்கள் 'சிவ' என்ற பதத்தை ஜபம் செய்தல், (4) வில்வ தளத்தால் பரமேச்வரனைப் பூசித்தல், (5) இருதயத்தில் சதா சிவத்யானம் செய்தல் இவைகள் ஒவ்வொன்றும் ஈச்வரனுக்கு விசேஷப்ரீதியைக் கொடுக்கக் கூடியது.

(குறிப்பு: பஞ்சாக்ஷர மந்திரத்தை உபதேசம் பெற்று ஜபம் செய்தல் சிறப்பு. எனினும் உபதேசம் பெறாதவரும் இம்மந்திரத்தைத் தாராளம் சொல்லலாம்.

“கொல்வாரேனும், குணம் பல நன்மைகள் இல்லாரேனும் இயம்புவராயிடின் எல்லாத் தீங்கையும் நீங்குவர் என்பரால் நல்லார் நாமம் நமச்சிவாயவே'' - சம்பந்தர்.)

*10.* பரமேச்வரனுடைய கீர்த்தியை நாம் வாக்கினால் சொல்லுவதனாலும் கேட்பதனாலும் பவித்திரர்களாக ஆகிறோம். அவருடைய ஆக்ஞையை யாரும் மீற முடியாது. அகம்பாவமாக இருக்கும்போது அவர் சிக்ஷிக்கிறார். குழந்தைகள் ஏதாவது தப்பு செய்தால் நாம் அடிக்கிறோம். அதுபோல பரமேச்வரன் தேவதைகளை சிக்ஷித்தார். ஹாலஹால விஷம் பாற்கடலில் உண்டானபொழுது அதைச் சாப்பிட்டு ரக்ஷித்தார். சகல தேவதைகளும் பரமேச்வரனுடைய குழந்தைகள்.

*11.* பரமேச்வரன் ஓங்காரம், ஸ்வரூப ப்ரம்மமும் ஓங்காரந்தான். அதனுடைய அர்த்தத்தை விசாரிக்கும் ஓர் உபநிஷத்தே தனியாக இருக்கிறது. அதற்கு மாண்டூக்யோபநிஷத் என்று பெயர். அதில் 'சாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் மன்யந்தே' என்று சொல்லப்பட்டிருக்கிறது. சிவஸ்வரூபம் தான் பரப்பிரம்மம். ப்ரதோஷ காலத்தில் ஈச்வர தரிசனம் செய்ய வேண்டும். ஈச்வரன் கோயிலில் ப்ரதோஷ காலத்தில் எல்லாத் தேவர்களும் வந்து ஈச்வர தரிசனம் செய்கிறார்கள்.

*12.* சாங்க்ய சூத்திரத்தில் மூன்று கண் உள்ளவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அமரமும் அப்படியே சொல்லுகிறது. லோகத்தில் ஈச்வரன் என்ற சப்தம் சிவனுக்கே வழங்கப்படுகிறது. அவன் மஹாபுருஷன், ப்ரம்ம சூத்திரத்தில் 'சப்தாதேவப்ரமித' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஈசானன் என்னும் சப்தத்திற்கு எது அர்த்தமோ அதுதான் பரமேச்வர ஸ்வரூபம்.

*13.* நம்முடைய ஆசார்ய ஸ்வாமிகள் ப்ரஸ்நோத்தர ரத்ன மாலிகா என்ற க்ரந்தத்தில் ஒரு கேள்வி கேட்கிறார். 'கோ ப்ராம்மணை ருபாஸ்ய:?' 'காயத்ரி அர்க்காக்னி கோசர: சம்பு:' எந்த வஸ்து காயத்ரி, அக்னி, அர்க்கன் (சூரியன்) என்னும் மூன்றிலும் ப்ரகாசிக்கிறது? சிவன் தான். காயத்ரியின் பரமதாத்பர்யமாயிருப்பவர் அவரே. சூரியனிடத்தில் பிரகாசிப்பவரும் அவர் தான். ஸ்ரீருத்ரத்தில் பரமேச்வரன் அக்னி ஸ்வரூபியாக இருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எனவே இந்த மூன்றிலும் பரமேச்வரனை ஆராதிக்க வேண்டும்.

*14.* விவாஹ காலத்தில் அம்பாளை அவசியம் ஆராதிக்க வேண்டும். ருக்மணி ஸ்ரீகிருஷ்ணன் பர்த்தாவாக வரவேண்டுமென்று அம்பிகையை ஆராதித்தாள். அம்பிகையின் ஆராதனத்தால் பதிபக்தியும் குருபக்தியும் உண்டாகிறது. அதற்காகத்தான் ருக்மணி பூஜை செய்தாள்.

*15.* ஜகத்துக்குத் தாயாகவும் கருணையுடையவளாகவும் இருக்கும் பரதேவதையிடம் பக்தி இருக்க வேண்டும். எப்படி குழந்தைக்கு வேண்டியதைத் தாய் தருவாளோ அப்படி அம்பிகை லோகத்தில் வித்தை, செல்வம் முதலியவைகளை அடையச் செய்து பின்பு தானாகப் பழுத்துப் பரமானந்தத்தைப் பெறும்படி அனுக்ரஹம் செய்வாள்.



# 19. போடா புண்ணாக்கு

"போடா புண்ணாக்கு" இந்த வார்த்தை புதிதா? இல்லவே இல்லை. தமிழ் நாட்டில் இந்த வார்த்தை ஒருவன் மேல் உபயோகித்தால் அந்த ஆசாமி உபயோகமில்லாதவன், முட்டாள், என்று பொருள் படுகிறது. உண்மையில் புண்ணாக்கு ரொம்ப புரதச்சக்தி வாய்ந்தது. கிராமங்களில் குழந்தைகள் இவற்றை தின்பண்டமாக உண்பதை பார்த்திருக்கிறேன்.

மண்ணீரல் நோய்களை எள்ளு புண்ணாக்கிலிருந்து செய்த சில மருந்துகள் குணப்படுத்தும். கால்நடைகள், கோழி போன்றவை இந்த சிறந்த தீவனத்தால் வளர்ந்து பயன் தருகின்றன.

இது புண்ணாக்கு பற்றிய சாதாரண விஷயம் அல்ல. இதற்கும் மஹா பெரியவாளுக்கும் சம்பந்தம் உண்டான சமாசாரம். ஒரு விறு விறுப்பான அபூர்வ நிகழ்ச்சி இதில் ஆரம்பமாகிறது.

பெரியவா மேல் அதீத பக்தி கொண்ட ஒருவர் அமெரிக்காவில் வேலையாயிருந்தார். ஆண்டுகள் சில சென்று, விடுமுறை கிடைத்தது. குடும்பம் மதராசிலிருந்தது. (அப்போதைய சென்னையின் பெயர்) குடும்பத்தைப் பார்க்கவேண்டும் என்ற ஆவலைவிட ஒரு படி அதிகமாக ஒரு உந்தல் மனதில். மீனம்பாக்கத்தில் (அப்போதைய விமான நிலையம்) விமானம் வந்து எப்போது இறங்கும் என்று துடித்துக் கொண்டிருந்த அந்த மனிதர் ஒரு வண்டியைப் பிடித்து காஞ்சிபுரம் விரைந்தார்.

அன்று பெரியவா காலையில் வழக்கமாக நிர்வாகஸ்தர்களோடு பேசிக் கொண்டிருந்தவர் "இன்றைக்கு மடத்தில் என்ன சாப்பாடு?" என்று கேட்டு, சில அயிட்டங்களை சொல்லி இதெல்லாம் பண்ணினால் கூட நன்றாக இருக்குமே என்று அபிப்ராயம் சொன்னார். அவர் சாப்பாடு விஷயம் பற்றி எப்போதுமே பேசாதவர் ஏன் இன்று இதெல்லாம் கேட்கிறார் என்று சிப்பந்திகள் அதிசயித்தனர்.

ஐந்து மணி நேரம் கழித்து அமெரிக்க பக்தர் பெரியவா முன்னால் போய் நின்றவர் சாஷ்டங்கமாக நமஸ்காரம் செய்தார். புன்முறுவலோடு பெரியவா அவருக்கு ஆசீர்வாதம் பண்ணி ஒன்றுமே அவருடன் பேசாமல் 'முதலில் போய் சாப்பிட்டு விட்டு வா' என்று ஒருவருடன் அனுப்பினார். வந்தவர் சந்தர்ப்பணைக்கு சென்றார்.

பெரியவா அருகிலிருந்தவர்களிடம் "இப்போ அமெரிக்காவிலிருந்து வந்திருக்காரே அவர் கிட்டே மடத்துக்கு என்ன கேட்கலாம் சொல்லுங்கோ?"

பெரியவா யாரிடமும் எதையும் கேட்பதுமில்லை, பெறுவதுமில்லை. அவர் என்ன அதிசயமாக இன்று இப்படி நம்மை கேட்கிறாரே என்று அவர்கள் விழித்தனர்.

பக்தர் சாப்பாடு முடிந்து பெரியவரிடம் வந்தார்.

உன்னுடைய சங்கல்பம் நிறைவேறியதா?

அந்த மனிதர் உடைந்து போனார். அப்படியே தடார் என்று தரையில் விழுந்தார். கண்கள் கங்கை காவிரி. வார்த்தை வரவில்லை.நாக்கு தழுதழுத்தது.

பெரியவாளே மற்றவர்களிடம் "இதோ இருக்காரே இவர் ஏறக்குறைய ஒருநாள் பூரா விமான பயணம் செய்து அலுத்து வந்திருக்கிறார். மனுஷன் ப்ளேன் ஏறினதிலிருந்து என்னைப் பார்க்காம ஒண்ணுமே சாப்பிடுவதில்லை என்று ஒரு சங்கல்பம். அதான் முதல்லே போய் சாப்பிட சொன்னேன். அவருக்கு பிடித்த சில காய்கறிகளையும் இன்றைய சமையலில் சேர்க்க சொன்னேன்."

அந்த பக்தரின் கண்கள் மட்டும் சுனையாக ஊற்றெடுக்க சிலையாக நின்றார். கூப்பிய கரம் கீழே இறங்கவில்லை.பேச்சே இல்லை.

"அது சரி இவரை அழைத்துக்கொண்டு போய் அவர் கைங்கர்யமாக மடத்துக்கு நிறைய எள்ளுப்புண்ணாக்கு வாங்கிக்கோங்கோ"

பக்தருக்கு ஆச்சர்யம். பெரியவாளே தனக்கு ஒரு கட்டளையிட்டு மடத்துக்கு ஒரு கைங்கர்யம் பண்ண சொல்கிறாரே என்று சந்தோஷ வானில் பறந்தார். பெரியவாளுக்கும் மடத்துக்கும் தன்னாலியன்ற ஒரு கைங்கர்யம் செய்ய வேண்டும் என்று அவருக்கு ஒரு ஆசை. அதை வெளியிடுவதற்கு முன்பாகவே பெரியவா கட்டளையிட்டது மட்டற்ற மகிழ்ச்சி.

எதற்கு எள்ளு புண்ணாக்கு?

அவர்கள் போனதும் பெரியவா மற்றவர்களிடம் கடல் கடந்து போனவா கிட்ட ஸாஸ்த்ரப்ரகாரம் தானம் வாங்கறது உசிதமாகாது. அப்படி வாங்கற தானம் பசுவுக்கு தான் முதல்லே போய் சேரணும். அப்போ தான் பாபம் விலகும். அவரோ எனக்கு ஏதோ பண்ணனும்னு ஆசைப்படறார். ஒத்தைக் கல்லுலே ரெட்டை மாங்கா அடிக்கத்தான் எள்ளுப்புண்ணாக்கு வாங்கிண்டு வான்னு அனுப்பிச்சேன். பசுவுக்கு ஆகாரம். அதுனாலே பசுகிட்டேர்ந்து கிடைக்கற பால் எனக்கும் சேரும். அந்த நல்ல பக்தருக்கும் நான் அவரோட ஆசையை நிறைவேற்றினேன்னு ஒரு சந்தோஷம் கிடைக்கும் இல்லையா. சாஸ்திரத்தையும் மதிச்சு பரிகாரம் கோ வுக்கு ஆகாரம் பண்ணினாப்பலே ஆச்சு.



# 20. சாமி தாத்தாவின் ஈரோடு விளக்கம்

"நமஸ்காரம் சார். நான் ராமகிருஷ்ணன்"

"யாரு தெரியல்லியே?"

"உங்க பேரன் கோபுவும் என் பையன் ராஜாவும் க்ளாஸ்மேட். உங்களைப்பத்தி அடிக்கடி வீட்டிலே சொல்லுவான். உங்களைப்பார்த்து இன்னிக்கு ஆசீர்வாதம் வாங்கிக்க வந்தேன்.

'என்ன விசேஷம் இன்னிக்கு?'

'எனக்கு பர்த்டே.'

'ரொம்ப சந்தோஷம். எல்லாம் அந்த கிருஷ்ணன் க்ரிபை. நாம எல்லோரும் நன்றாக வாழ என்னென்னவெல்லாம் செய்திருக்கிறான் அந்த கிருஷ்ணன். அவனே ராமனாகவும் கருணாசாகரமா இருந்து சேவை பண்ணியிருக்கிறான். அருமையான பேர் உங்களுக்கு. எந்த ஊர் உங்களுக்கு?'

'ஈரோடு.'

'அப்படியா, ரொம்ப அருமையான ஊரு. நான் போயிருக்கேன். பவானிலே ஸ்நானம் பண்ணியிருக்கேன். அருமையான சிவன் கோவில் கரையிலே இருக்கே. அதுசரி உங்க ஊருக்கு அந்த விசேஷ பேர் எப்படி வந்துதுன்னு உங்களுக்கு தெரியுமோ?'

'ஈரோடு என்றால் என்ன அர்த்தம் என்றே தெரியவில்லை எனக்கு. ஈ தெரியும், ரோடு தெரியும், ரெண்டுக்கும் என்ன சம்பந்தம் என்று தெரியாது' வேறே மொழியில் "இந்த ரோடு" என்று அர்த்தம் வரும்' என்று சிரித்தார் ராமகிருஷ்ணன்

ஈரோடு பேர் வந்த காரணம் நான் சொல்லலே. மஹா பெரியவா சொன்னது. அதைச் சொல்றேன் கேளுங்கோ:

பெரியவாளை வணங்க வந்த ஒருவரை ஊர், பேர் விசாரித்ததில் ஈரோட்டைச் சேர்ந்தவர் என்று தெரிந்தது.

"உன் ஊருக்கு அந்தப் பேர் எப்படி வந்தது தெரியுமா?"

"தெரியவில்லை பெரியவா"

"சரி உங்க ஊர் சுவாமி பேரென்ன?"



"ஏதோ வித்தியாசமாக இருக்கும், பேர் மறந்து போச்சு. பெரியவா"

"ஆர்த்ர கபாலீசுவரர்னு பேரோ?" - பெரியவா.

"ஆமாம். ஆமாம்!"

அதற்குத்தான் 'ஈரோடு'னு அர்த்தம். எப்படின்னா:

'ஆர்த்ரம்'னா ஈரம்; 'கபாலம்'னா மண்டையோடு. ஈர ஓட்டைக் கையிலே வைத்திருப்பதால் [ஈரோடு] சுவாமிக்கு அதனாலே அந்தப் பெயர். பிரும்மாவோட அஞ்சு தலைலே ஒரு தலையை சிவபெருமான் திருகி எடுத்ததால், பிரம்மஹத்தி தோஷத்தினால் சிவன் கையிலேயே கபாலம் ஒட்டிக் கொண்டு விட்டது. திருகி எடுத்ததால் ரத்தம் சொட்டிய ஈரத்துடன் கூடிய ஓட்டைக் கையிலே வைத்திருக்கும் சுவாமியை உடைய ஊர் 'ஈரோடு' என்றார். [ஈர+ஓடு]

"சார் இன்னிக்கு தான் ஈரோடு பேர் மகிமை எனக்கு உங்க மூலம், அதாவது பெரியவா சொன்னதை கேட்டதாலே தெரிஞ்சுது" என்றார் ராமகிருஷ்ணன்.

அசாத்யம். பெரியவா ஒரு மொபைல் என்சைக்ளோபீடியா. தெரியாத விஷயமே கிடையாது. அதில் ஒண்ணும் ஆச்சர்யம் இல்லை. தெய்வத்துக்கு தெரியாம ஏதாவது ஒண்ணு இருக்கமுடியுமா?



# 21. நிறுத்து நிறுத்து

உங்களில் எத்தனை பேர் பண்ருட்டி போயிருக்கிறீர்கள். பண்ருட்டி என்றதும் நமக்கு என்ன ஞாபகம் வரும்? பலருக்கு பலாப்பழமும் சிலருக்கு அந்த ஊர் பெயர் கொண்ட ஒரு அரசியல் வாதி. இதெல்லாம் மீறி ஒரு அதிசயம் அந்த பக்கம் நடந்திருக்கிறதே அது தெரியவேண்டாமா?

காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் வரிசையில் 58வது ஆச்சார்யார் ஸ்ரீ ஆத்மபோதேந்திர சரஸ்வதி (1586 - 1638) அவர்கள். இந்த சுவாமிகள் விருத்தாசலம் பகுதியை சேர்ந்தவர். அவரது இயற்பெயர் (தாய் தந்தையர் இட்டது) விச்வேஸ்வரன். அவர் நிறைய ஸ்தலங்களுக் கெல்லாம் சென்று க்ஷேத்ராடனம் செய்து காசியில் வெகுகாலம் தங்கி இருந்திருக்கிறார். ஸ்ரீ ருத்ரத்துக்கு பாஷ்யம் எழுதியவர்களில் அவரும் முக்யமான ஒருவர். இவர் தான் அவதூதர் சுவாமி சதாசிவ ப்ரம்மேந்திரரை குரு ரத்ன மாலிகாவை எழுதுங்கள் என்று பணித்தவர். போதேந்திராள் என்ற பெயரில் அவர் காலத்திலேயே மற்றொருவரும் இருந்தார். அவரை ஆச்சார்யாள் பகவன் நாமத்தை பரப்புங்கள் என்று அதில் ஈடு படுத்தி அந்த போதேந்திரருக்கு பகவன் நாமா போதேந்திரர் என்ற பெயர் வழங்கப்பட்டது. அவர் தான் பின்னால் கோவிந்தபுரத்தில் தங்கி நாம சித்தாந்தத்தையும் பகவன் நாமாவையும் பரப்பியவர்.

ஆச்சார்யாள் தக்ஷிண பினாகினி என்ற ஆற்றின் கரையில் (இது தான் தென் பெண்ணை) ஈஸ்வர வருஷம், (1638 ம் வருஷம்) துலா மாசத்தில் கிருஷ்ண அஷ்டமி அன்று முக்தி அடைந்தார். அவரது அதிஷ்டானம் இப்போது பண்ருட்டி செல்லும் வழியில் வடவாம்பலம் என்கிற அமைதியான இடத்தில் உள்ளது. இதில் என்ன அதிசயம்?

இந்த அதிஷ்டானம் மகாபெரியவாளின் வழி காட்டலால் தான் கண்டுபிடிக்கப்பட்டு 17.1.1927 அன்று புனருத்தாரணம் செய்யப்பட்டது. எப்படி என்று பார்த்தால் தானே, அதாவது படித்தால் தானே, அதிசயமும் அற்புதமும் புலப்படும்?

1926 வாக்கில் மகா பெரியவா விழுப்புரத்தை கடந்து பாத யாத்திரை போய் கொண்டிருந்த ஒரு சமயம். வடவம்பலம் என்கிற கிராமம் வழியாக போய்க்கொண்டிருந்த பெரியவாளுக்கு ஏதோ உள்ளுணர்வு ஒன்று யாரோ கூப்பிடுவது போன்று உந்த விடு விடுவென்று வடவம்பலம் கிராமத்துக்குள் நுழைந்தார். கூட வந்த அனைவரும் பின் தொடர்ந்தனர். அங்கு காணப்பட்ட சில வயதானவர்களிடம்"இங்கே யாராவது சன்யாசிகள் இருந்தார்களா? எனக்கேட்டார்.



யாருக்குமே தெரியவில்லை. எப்படியோ ஓர் வயதான கிழவருக்கு கொஞ்சம் விஷயம் தெரிந்திருந்தது. கூட்டத்திலே இருந்து முன்னே பெரியவா அருகிலே வந்த அந்த கிழவர் "சாமி, சில நூறு வருஷங்களுக்கு முன்னாடி யாரோ இங்கே ஒரு சன்யாசி இருந்தாருங்களாம். அவரு இங்கே தான் எங்கேயோ சமாதியாயிட்டார்னு சொல்லி கேட்டிருக்கேனுங்க. ஆனால் அவரு யாரு, அவர் சமாதி எங்கேன்னுட்டு தெரியாதுங்க. இந்த ஊர்லே தான் எங்கிட்டேன்னு பேசிக்குவாங்க நான் சின்னப்பிள்ளையா இருக்க சொல்ல''.

பரமாசார்யாளுக்கு ஞான திருஷ்டிலே தெரிஞ்சு போச்சு. இங்கே தான் எங்கேயோ 58வது பெரியவா ஆத்ம போதேந்திரருடைய சமாதி இருக்கணும். இந்த கிராமம் முழுக்க அலசினாதான் அது எங்கேன்னுட்டு கண்டு பிடிக்கமுடியும். எங்கே பார்த்தாலும் வயல் வெளி, வாழைத்தோப்பு நிறைந்து இருந்தது. பெரியவா ஒரு இடம் விடாம எல்லா இடமும் சுத்தி பார்த்தாள். ஒரு வாழைத்தோப்பு பக்கம் போன போது அவருக்கு திடீரென்று ஒரு வித்யாசமான படபடப்பு ஏற்பட்டது. ஒரு இடத்தில் நின்றபோது அது அதிகமாயிற்று. ஏதோ ஒரு தெய்வ சந்நிதிலே இருக்கிறமாதிரி அவாளுக்கு பட்டது. பக்கத்திலே இருக்கிறவர்களை "இங்கே கொஞ்சம் தோண்டுங்கோ'' என்று ஒரு இடத்தைக் காட்டினார்.

கூட இருந்தவா சிலபேரில் குமாரமங்கலம் சாம்பமூர்த்தி சாஸ்திரி என்று ஒருவர் தான் அந்த தோண்டும் வேலைக்கு மேஸ்திரியாக அவர்களுக்கு எப்படி தோண்ட வேண்டும் என்று சொல்லி மேற்பார்வை பார்த்துக்கொண்டிருந்தார். கொஞ்சம் ஆழம் தோண்டியாயிற்று.

சாம்பமூர்த்தி திடீரென்று "நிறுத்து நிறுத்து தோண்டாதே" என்று பெரிதாக கத்தினார். வாழைத்தோப்பு பூரா அவர் குரல் எதிரொலித்தது. மனிதர் அப்படியே கீழே மயக்கமாய் வயலில் தரையில் சாய்ந்து விட்டார். தோண்டிக்கொண்டிருந்தவன் பயத்தில் நடுங்கி விட்டான். ஓடிப்போய் எங்கிருந்தோ கொஞ்சம் ஜலம் கொண்டுவந்து அவர் முகத்தில் தெளித்து கொஞ்சநேரத்தில் கண் விழித்தார். சிறிது ஜலம் பருகினார். எழுந்து உட்கார்ந்த சாம்ப மூர்த்தி மூச்சு பேச்சு இன்றி மலங்க மலங்க விழித்தார். எல்லோரையும் பார்த்தார். ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு ஆச்வாசப்படுத்திக்கொண்டார். பெரியவா வந்து அருகில் நின்றார்.

"சாம்ப மூர்த்தி என்னாச்சு?"

"பெரியவா, யாரோ ஒரு பெரிய சந்நியாசி எதிர்க்க நின்னார். அவரை முழுசா என்னாலே பாக்க முடியலே. ஆகாசத்துக்கும் பூமிக்குமா நிக்கறார். கழுத்து நிறைய ருத்ராக்ஷம். கையிலே கமண்டலு. காவி வஸ்த்ரத்தோடு. நெத்தியிலே பட்டை பட்டையா விபூதி. சுத்தி ஆயிரக்கணக்கா பிராம்மணா வேதம் சொல்றா. அந்த பெரிய சந்நியாசி என்னைப்பாத்து "தோண்டாதே தோண்டாதே"ங்கறா. அப்படியே மலைச்சு நிக்கறேன். வார்த்தை வரல்லே. கண்ல தாரை தாரையா ஜலம். க்ஷண காலத்திலேயே எல்லாமே மறைஞ்சுடுத்து'. அப்பறம் யாரோ "சதாசிவம் சதாசிவம்" என்கிறா. அப்பறம். அப்பறம். எனக்கு என்னாச்சுன்னே தெரியலே, புரியலே, பெரியவா.

இதைக்கேட்ட மகா பெரியவா அவர்கள் தோண்டின இடத்தைக் காட்டி "இப்போ நிச்சயமாயிடுத்து இது தான் கோவிந்தபுரம் போதேந்திராளுடைய குரு ஸ்ரீ ஆத்ம போதேந்திராளுடைய முக்தி ஸ்தலம்."

அந்த வருஷம் (1927) ஜனவரி 17 அன்று ஒரு சிவலிங்கத்தை பிரதிஷ்டை பண்ண மகாபெரியவா ஒரு பிருந்தாவனத்தை அங்கே ஸ்தாபிதம் பண்ணினார். ஆத்ம போதேந்திரா அதிஷ்டானம் இப்போது அங்கே இருக்கிறது. ஒவ்வொரு வருஷமும் வடவம்பலத்தில் ஆராதனை நடக்கிறது. முடிந்தவர்கள் அங்கே சென்று பார்க்கலாம். நான் ரெண்டு மூணு தடவை அங்கே நிறைய பேரை அழைத்து சென்று காட்டி தரிசனம் பண்ணியிருக்கேன். ரம்மியமான க்ஷேத்ரம் என்று தான் சொல்லத் தோன்றுகிறது.



# 22. எங்கே படிச்சே?

மகா பெரியவாளைப்பத்தி எண்ணிலடங்கா விஷயம் நம்மை வந்தடைகிறது. ஸ்ரீ சி. ஆர். சுவாமிநாதன் - மத்திய அரசில் பெரும் பதவி வகித்தவர் ஒரு விஷயம் அவர் ஆங்கிலத்தில் சொன்னதிலிருந்து: எனக்குத் தெரிந்த தமிழில் தருகிறேன்

"நம்ம சென்னை ஸம்ஸ்க்ரித கல்லூரியிலே **1956-57**லே மஹா பெரியவா சில நாள் தங்கி, சாயந்திரம் தினமும் பிரசங்கம் நடைபெறும். கேக்கணுமா? பெரியவா பேச்சைக் கேட்க கூட்டம் அலை மோதும். அன்று ராஜாஜி வந்திருந்தார். என்ன பேசறதுன்னு மகாபெரியவா முடிவு பண்ணலை. பக்கத்திலே ப்ரொபசர் சங்கரநாராயணன் நிக்கறதை பெரியவா பாத்து அவரை பக்கத்திலே கூப்பிட்டா. அவர் கிட்டே ஒரு ஸ்லோகத்தைச் சொல்லி அதிலே முதல் ரெண்டு வரியைச் சொன்னா.

"உனக்கு அடுத்த ரெண்டு வரி இருக்கே அது தெரியுமா?"

"பெரியவா க்ஷமிக்கணும். எனக்கு தெரியலை"

இப்படி பெரியவா ஒரு ஸ்லோகத்தை பத்தி பேசினது மைக்லே எல்லோருக்கும் கேட்டுடுத்து.

கூட்டத்திலே ஒருத்தருக்கு அந்த ஸ்லோகம் தெரிஞ்சிருந்தது. அவர் மெதுவாக மேடைக்கு அருகே வந்து ப்ரொபசர் சங்கரநாராயணன் கிட்டே சார், "பெரியவா கேட்ட அந்த பாக்கி ரெண்டு அடி எனக்கு தெரியும், அது இதுதான்'' என்று அவரிடம் சொன்னதை ப்ரொபசர் சந்தோஷமா மேடையிலேறி பெரியவா கிட்ட "பெரியவா அந்த மீதி ரெண்டு வரி இது தான் என்று சொன்னவுடன் நான் கேட்ட போது தெரியாதுன்னியே"

"ஆமாம் பெரியவா. கூட்டத்திலே யாரோ ஒருவருக்கு தெரியும்னு வந்து எங்கிட்ட சொன்னதைத்தான் பெரியவா கிட்ட சொன்னேன்."

"அவரை இங்கே அழைச்சிண்டு வா"

இந்த நிகழ்ச்சியை சொன்ன சி.ஆர். சுவாமிநாதனை மேடையில் தன் கிட்ட கூப்பிட்டு பெரியவா

"நீ தான் அந்த ரெண்டு வரியை சொன்னதா?"

"ஆமாம் பெரியவா"

"எங்க படிச்சே?"

"மெட்ராஸ்லே பிரெசிடென்சி காலேஜ்லே"

"நான் அதைக் கேக்கலே. இந்த ஸ்லோகத்தை எங்கே படிச்சே?"

“எங்க தாத்தா சொல்லிக் கொடுத்தது சின்ன வயசுலே”

“எந்த ஊர் நீ, உங்க தாத்தா யார்?”

சுவாமிநாதன் விருத்தாந்தம் எல்லாம் சொன்னார்.

பெரியவாளும் சுவாமிநாதனும் பேசினது அத்தனையும் மைக் வழியா சகல ஜனங்களும் கேட்டிண்டு இருந்தா. பெரியவா சொன்ன ஸ்லோகம் இது தான்

அர்த்தாதுரணாம் ந குருர் ந பந்து,

க்ஷுதாதுராணாம் ந ருசிக்கி ந பக்வம்,

வித்யாதுராணாம், ந சுகம் ந நித்ரா,

காமாதுராணாம் ந பயம் ந லஜ்ஜா”

பணமே லக்ஷியம் என்று தேடுபவனுக்கு குரு ஏது? பந்துக்கள் ஏது?

பசி காதடைக்கிறவனுக்கு ருசியோ, பக்குவமோ அவசியமா?

படித்து முன்னேற முனைபவனுக்கு வசதியோ தூக்கமோ ரெண்டாம் பக்ஷம் தானே? காமாந்தகாரனுக்கு பயமேது வெட்கமேது?

தான் பிறகு பேசும்போது பெரியவா கேநோபநிஷதிலிருந்து மேற்கோள்கள் காட்டினார். எப்படி பார்வதி தேவி மற்ற தேவர்களுக்கு பிரம்மத்தை உபதேசித்தாள் என்றெல்லாம் விளக்கிவிட்டு

“இப்போ பேசுறதுக்கு முன்னாலே ஒருத்தரை மேடைகிட்ட கூப்பிட்டு ஒரு ஸ்லோகத்தின் முதல் ரெண்டு அடிகளை சொல்லி பாக்கி தெரியுமா என்றதற்கு தெரியும் என்றார். எங்கே தெரிஞ்சுண்டே என்று கேட்டதற்கு,சின்ன வயசிலே தாத்தா வீட்டிலே சொல்லிக்கொடுத்தார் என்றார். எனக்கு அவா குடும்பத்தைத் தெரியும்.”

+ + +

இந்த நிகழ்ச்சியிலிருந்து என்ன தெரிகிறது?

நான் எதுக்கு இதை பெரிசா எடுத்து சொல்றேன்னா, இதெல்லாம் வீட்டிலே பெரியவா கிட்டே தெரிஞ்சிக்கணும். இதெல்லாம் பள்ளிக்கூடத்திலேயோ, காலேஜ்லேயோ சொல்லித்தரமாட்டா. சேர்ந்து ஒண்ணா வாழற குடும்ப வாழ்க்கையிலே இது ஒரு பெரிய லாபம் என்பதைப் புரிந்து கொள்ள உதவும்.

தாத்தா பாட்டிகள் ஒரு பொக்கிஷம். நிறைய விஷயங்களை அவா கிட்டேயிருந்து தெரிஞ்சிக்கலாம்

சின்ன வயசிலேயே சொல்லிக் கொடுக்க தாத்தா பாட்டியை விட வேறே சிறந்த குரு யாரும் கிடையாது. மனதில் நன்றாக படியும். அது தான் பசுமரத்தாணி என்கிறது.



# 23. நமஸ்காரம் - 1

"பெரியவா எதையுமே யாருமே ஈஸியா புரிஞ்சிக்கிறமாரி சொல்றது தான் அவருடைய சாதுரியம்."

"இன்னொரு சம்பவம் சொல்றேன் கேள் கோபு,"

"பெரியவாளைக் கண்டு தரிசனம் பண்ண அஞ்சு ஆறு பெரிய படித்த மகா பண்டிதர்கள் காஞ்சி மடத்துக்கு வந்தார்கள். அவர் எதிரே தரையில் அமர்ந்தார்கள்.



பெரியவா யாரிடமோ பேசிண்டிருந்தா. அதை அவர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். திடீர்னு அவர்கள் பக்கம் திரும்பி பெரியவா என்கிட்டே வர பக்தர்கள் எனக்கு நமஸ்காரம் பண்ணுகிறார்களே நான் அவர்களுக்கு பதிலுக்கு

"நாராயணா, நாராயணா என்று சொல்றேனே. நீங்கள் எல்லோரும் உங்களை நமஸ்காரம் பண்ணுகிறவர்களை என்ன சொல்லி வாழ்த்துகிறீர்கள்?"

"நாங்கள்" தீர்காயுஷ்மான் பவ: என்று சொல்றது தான் பெரியவா வழக்கம்.

"அப்படின்னா என்ன அர்த்தம்?"

பெரியவா இதுக்கு போய் அர்த்தம் கேக்கறாளே? தெரியாமயா இருக்கும்? ஏதோ இதிலே சூட்சுமம் இருக்கிறது என்று உஷாரானார்கள்.

"என்ன அர்த்தம்னு கேட்டேன்?"

"தீர்காயுஷ்மான் பவ என்றால் நீண்டகாலம் சௌக்யமா இரு என்று அர்த்தம்" என இழுத்தார் ஒரு பண்டிதர்.

"என்ன?" என்று பெரியவா அவர்கள் அத்தனை போரையும் ஒவ்வொருவராக பார்த்தார். எல்லோருமே அது தான் அர்த்தம் என்கிறமாதிரி ஆமோதித்தார்கள்.

பெரியவா கொஞ்ச நேரம் மௌனமா அவர்களைப் பார்த்துவிட்டு "நீங்க சொன்ன அர்த்தம் தப்பு, அதுக்கு வேற ஒரு அர்த்தம்"

அவர்கள் எல்லோருமே பெரிய பெரிய மகா பண்டிதர்கள், சிரோமணிகள். முகத்தில் ஈயாடவில்லை எவருக்குமே. வாயைப் பிளந்தபடி கைகட்டி அமர்ந்து பெரியவாளையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். நிசப்தம். "எப்படி இந்த சாதாரண எல்லோருக்கும் தெரிந்த ஸம்ஸ்கிருத வார்த்தை தப்பாகும்?"

"நானே சொல்லட்டா? என்று மஹா பெரியவா "தீர்க்காயுஷ்மான் பவ" என்பதற்கு அர்த்தம் சொன்னார்கள். காதைத்தீட்டிக் கொண்டு அனைவரும் கேட்க

"இருக்கிற மொத்த 27 யோகத்திலே, ஒன்றின் பெயர் "ஆயுஷ்மான்'' 11 கரணங்களிலே ஒன்றின் பெயர் "பவ''. வாரம் 7 நாளிலே "சௌமிய வாசரம்" என்கிற புதன் கிழமையிலே இந்த 'ஆயுஷ்மானும் பவ' வும் சேர்ந்து வந்தால், அது ரொம்பவே ச்லாக்கியமானது. இந்த மூணும் சேர்ந்து அமையறது ரொம்ப அதிர்ஷ்ட வசம். நல்ல பலனை தரக்கூடியது. எனவே, அப்படிப்பட்ட அபூர்வமான பலன் உனக்கு கிடைக்குமாக என்று வாழ்த்துவது தான் அது."

அசந்து போன பண்டிதர்கள் அனைவருமே அந்த சிம்பிள் நடமாடும் தெய்வத்தை வணங்கி பிரசாதம் பெற்று சென்றார்கள்.



# 24. நமஸ்காரம் - 2

தாத்தா, உங்களை எங்க டீச்சர்களுக்கெல்லாம் ரொம்ப பிடிக்கிறதாம் இன்னிக்கு கிளாஸ்லே எல்லா மாணவ மாணவிகளுக்கும் உங்க "நமஸ்காரம்" கட்டுரை அர்த்தத்தை எடுத்துச் சொல்லி எல்லோருமே இனிமே நமஸ்காரம் என்றே கைகூப்பி கண்மூடி சொல்லுங்கள் என்று கூறினார்கள். அவர்களுக்கும் இது புரிந்தது. அவ்வாறே செய்கிறோம் என்று உரத்த குரலில் அனைவரும் பதில் சொன்னார்கள்.



'மகா பெரியவா கூட நமஸ்காரம் பற்றி எத்தனையோ சொல்லியிருக்கா என்று சொன்னீர்களே ஏதாவது சிலது சொல்லுங்கோ.'

சொல்றேன் கேளு. பெரியவா ஒரு ஸ்லோகம் அர்த்தம் சொன்ன அழகிலேயே "நமஸ்காரம்" பற்றிய பெருமை புரியும். நான் தெரிந்துகொண்டதை சுருக்கமாக சொல்கிறேன்.

"மகாதேவா, நீ என்னுடைய இரண்டு அபராதங்களை க்ஷமிக்க வேண்டும். அது என்ன தெரியுமா? போன ஜன்மத்தில் நான் உன்னை நமஸ்கரிக்காதது ஒர் அபராதம். வரப்போகிற ஜன்மத்தில் உன்னை நான் நமஸ்கரிக்காமல் இருக்கப்போறேனே அது இரண்டாவது அபராதம். போன ஜன்மத்தில் நான் உன்னை நமஸ்கரிக்கவில்லை என்று எப்படித் தெரிகிறது என்கிறாயா? எனக்கு இப்போது ஒரு ஜன்மம் ஏற்பட்டிருப்பதிலிருந்தே அது தெரிகிறது. போன பிறவியில் உன்னை நமஸ்கரித்திருந்தால் அப்போதே எனக்கு மோக்ஷம் கிடைத்திருக்கும். இந்த மறு பிறவியே ஏற்பட்டிராது. அது சரி, அடுத்த ஜன்மாவில் நமஸ்கரிக்கமாட்டேன் என்றது ஏன் தெரியுமா? இந்த ஜன்மாவில் உன்னை நமஸ்கரித்து விட்டேன் அல்லவா? அதனால் நீ இனி எனக்குப் பிறவியே தரமாட்டாய். மறு ஜன்மாவே இல்லாதபோது அப்போது உனக்குச் செய்ய வேண்டிய நமஸ்காரம் மட்டும் எப்படி இருக்கும்? இப்படியாக போன ஜன்மா, வருகிற ஜன்மா இரண்டிலும் உன்னை வணங்காத குற்றத்தை மன்னித்துவிடு."

இந்த ஸ்லோகத்திலிருந்து என்ன ஏற்படுகிறது? மனப் பூர்வமாக ஈஸ்வரனை நமஸ்காரம் செய்துவிட்டால் போதும், அவர் நம்மை ஜனன மரண சக்கரத்திலிருந்து விடுவித்து விடுவார். நம் பாவங்களையெல்லாம் போக்கி முக்தி தந்து விடுவார். இந்த ஸ்லோகத்தைச் சொன்னவர் கவித்வ சமத்காரத்தில் பாடியவரில்லை. அவர் பழுத்த அநுபவசாலி, எனவே அவரது வார்த்தையை பரிபூர்ணமாக நம்பி நாமும் ஈசுவரனிடத்தில் சரணாகதி என்று விழுந்து நமஸ்காரம் பண்ணுவோம். நமஸ்கரித்தால் மோக்ஷம் நிச்சயம் என்ற நம்பிக்கையுடன் பண்ணினால் அப்படியே கிடைக்கும்! சந்தேகமில்லை.

நமஸ்காரம் செய்வதைத் தண்டம் சமர்ப்பித்தல் என்பார்கள். தண்டம் என்றால் கழி அல்லது கோல் என்று அர்த்தம். கையில் பிடித்திருக்கிற ஒரு கோலை விட்டுவிட்டால் அது அப்படியே தடாலென்று கீழே விழுந்துவிடும். அப்படியே இந்த சரீரத்தை நமதல்ல, இது ஈஸ்வரனுடையது என்கிற எண்ணத்துடன் கீழே போடுவதுதான் நமஸ்காரம். நம் சரீரம் வெறும் மரக்கோல்தான். உதவாத பொருளை 'அது தண்டமாகி விட்டது' என்கிறோம். அப்படி தண்டமான வஸ்துதான் நம் சரீரம். இதைத் தூக்கிப்பிடித்து நிறுத்தி வைத்து ஆட்டுகிற சக்தி ஈஸ்வரன் கொடுத்ததே ஆகும். இந்த உடம்பை ஏதோ நாமே தாங்கி நடத்துகிறோம் என்ற எண்ணத்தை ஒழித்துவிட்டு, அதாவது அகங்காரத்தை விலக்கிவிட்டு, அதற்கு அடையாளமாக ஈசுவரன் முன் இந்தச் சரீரத்தைக் கீழே போடவேண்டும். அதுதான் தண்டம் சமர்ப்பிப்பது. ஜுரம் வந்தால் நம் சரீரத்தால் நிற்கவும் நடக்கவும் முடிகிறதில்லை. இந்த ஜன்மாவே பெரிய ஜுரமாக வந்திருக்கிறது. இதிலிருந்து நம்மைக் கடைத்தேற்றுவதற்காக, நமக்கு வந்திருக்கிற சம்ஸார ஜுரத்தை புரிந்துகொண்டு, அதற்கு அடையாளமாக ஸ்வாமியின் முன் தண்டாகாரமாக விழுந்து நமஸ்கரிக்க வேண்டும்.

'நாம் செய்கிறோம்' என்கிற எண்ணம் போய்விட்டால் அதுவே ஸதாகால நமஸ்காரம். அந்த அநுபவம் நமக்கு ஸித்திக்காத போதிலும் ஈஸ்வர சந்நிதியிலாவது அப்படி பாவித்து வணங்கித் தரையோடு, தரையாக எளிமையாகக் கிடக்க வேண்டும். இங்கே வணங்கிவிட்டால், அப்புறம் வெளியே எங்கேயும் வணங்காமல் இருக்கலாம். 'பொறுப்பை உன்னிடமே பூரணமாகக் போட்டேன்' என்பதற்கு அடையாளம் சரீரத்தைத் தரையில் போடுவது, கொஞ்சம் பொறுப்பை நமக்கு என்று வைத்துக் கொண்டால்கூட ஸ்வாமி தம் பங்கைக் குறைத்துக் கொண்டு விடுவார். இதில் அரைகுறைக்கு இடமே இல்லை. நம்முடைய நல்லது பொல்லாதது அவ்வளவும் அவர் விட்டபடி என்று சகல பொறுப்பையும் அவரிடம் தள்ளுவதற்கு வெளி அடையாளமாக உடம்பைத் தரையில் தள்ளி நமஸ்காரம் பண்ணவேண்டும். அப்படிச் செய்தால் நம் பாரம் அனைத்தையும் கிருபா சமுத்திரமமான ஸ்வாமியே ஏற்று அநுக்கிரகிப்பார். இது புரியறதா கோபு?



# 25. நடக்க வைத்த நடமாடும் தெய்வம்

எப்போதோ ஒரு முறை ஒரு நண்பர் என்னிடம் ஒரு கட்டுரையை கொடுத்து இதை படியுங்கள் என்றார். மஹா பெரியவரைப் பற்றியது என்பதால் ஆர்வத்தோடு படித்தேன். அதன் சாராம்சத்தை சுருக்கி தருகிறேன்.

ஒரு குழந்தை இரண்டரை வயது வரை நடக்க வில்லை. சுப்பிரமணியன். எங்கும் தவழ்ந்தே நகர்ந்தால் தாய் தந்தை மனம் என்ன பாடு படும்? தாய் தந்தை தாத்தா பாட்டி எல்லோருமே பரிதவித்துப் போனார்கள். 'பேரன் சரியாக வேண்டுமே' என்பதுதான் அவர்களின் கவலையாக இருந்தது.

"பூர்வ ஜன்ம கர்மாவாக இருக்கும். அதனால் தான் அவன் இப்படிப் பொறந்திருக்கான். நிறைய கோயில்களுக்கு அவனைக் கூட்டிட்டுப் போய்ப் பிரார்த்தனை பண்ணு. பரிகாரம் செய்" என்று தாத்தா கிருஷ்ணமூர்த்தியிடம் சொன்னார் நண்பர் ஒருவர்.

அதன்படி பல கோயில்களுக்கும் போய் தெய்வத்திடம் பிரார்த்தனை நடந்தது. மருத்துவர்கள், ஆஸ்பத்திரிகள், என்று எல்லாம் கூட சுப்ரமணியனைக் 'க்யூர்' செய்ய அலைந்தார்கள். சுப்பிரமணியன் எழுந்து நடப்பதற்காக கிருஷ்ணமூர்த்தி பார்க்காத மருத்துவர் இல்லை; செய்யாத சிகிச்சை இல்லை. மருத்துவர்களாலேயே 'இதுதான் பிரச்னை' என்று ஆணித்தரமாக எதையும் எடுத்துச் சொல்ல முடியவில்லை. நாட்கள் நகர்ந்தனவே தவிர, எந்த சிகிச்சையும் பலனளிக்க வில்லை. சுப்பிரமணியனின் செயல்பாடுகளிலும் முன்னேற்றம் இல்லை. பண விரயமும் மன வ்யாகூலமும் தான் மிச்சம்.

ஒருநாள் கிருஷ்ணமூர்த்தியின் அலுவலக நண்பர் ஒருவர், "ஏம்ப்பா கிட்டு, ஒருநாள் காஞ்சிபுரம் போய் மஹா பெரியவாளைப் பாரு. குழந்தைக்கு அவரோட ஆசி கிடைச்சா, எல்லாம் சரியாப் போயிடும். கூட்டிண்டு போய்ப் பாரப்பா." என்று அநுசரணையாகச் சொன்னார்.

மனைவி ராஜத்திடம் இந்த விஷயத்தைச் சொல்ல, "கண்டிப்பாப் போயிட்டு வருவோம். கண் கண்ட அந்த தெய்வத்தோட பார்வை இவன் மேல விழுந்தா, ஒருவேளை எல்லாம் சரியாயிடும்னு தோணறது!" மனைவி ராஜமும் தன் பங்குக்குச் சொல்ல. ஒரு நாள் வாடகைக் காரை அமர்த்திக் கொண்டு காஞ்சிபுரம் கிளம்பினார்கள்.

அது ஒரு கோடை விடுமுறைக்காலம். பள்ளி மற்றும் கல்லூரிகள் விடுமுறை விடப்பட்டு விட்டதால், குடும்பத்தோடு பலரும் காஞ்சி ஸ்ரீமடத்திற்கு வந்திருந்தனர்.

தங்கள் ஊரில் இருந்து கிட்டத்தட்ட ஒரு பிக்னிக் போல் புறப்பட்டு, காஞ் சிபுரத்திலுள்ள திருத்தலங்களையெல்லாம் தரிசித்து விட்டு, அப்படியே ஸ்ரீமடத்திற்கும் பெரியவா தரிசனத்திற்காக வந்திருந்தார்கள்.

காஞ்சி மடமே மனிதத் தலைகளால் நிரம்பியது போல் காணப்பட்டது. கூட்டத்தினிடையே ஒருவாறு ஊர்ந்து - நீந்தி மஹா பெரியவா அமர்ந்து அருட்காட்சி தந்து கொண்டிருக்கும் சந்நிதானத்தை அடைந்தார் கிருஷ்ணமூர்த்தி மற்றும் அவரது குடும்பத்தினர்.

பேரன் சுப்பிரமணியனைத் தன் இடுப்பில் தூக்கி வைத்திருந்தார் கிருஷ்ணமூர்த்தி. ஏகத்துக்கும் காணப்பட்ட கூட்டம் வேறு சுப்பிரமணியனை ஹிம்சை செய்தது போலும். விடாமல் அழுது கொண்டே இருந்தான்.

தாய் புவனேஸ்வரியும் பாட்டி ராஜமும் பெரியவா சந்நிதானத்தைக் காட்டி, “அங்கே பார், உம்மாச்சித் தாத்தா. அழக்கூடாது; அவரைக் கும்பிட்டுக்கோ” என்று சொல்லிக் கொண்டே இருந்தனர்.

அன்று மஹா பெரியவா மௌனத்தில் இருந்தார். எவரிடத்திலும் எதுவும் பேசவில்லை. முக்கியமான சந்தர்ப்பங்களில் மட்டும் தன் அந்தரங்க காரியதரிசிகளிடம் சைகையின் மூலம் சில விஷயங்களைக் கேட்டறிந்தார்.

மற்றபடி தன் முன் வந்து செல்லும் பக்தர்களின் குறிப்பறிந்து பிரசாதத்தையும் திருக்கரங்களால் ஆசியையும் வழங்கிக் கொண்டிருந்தது அந்தப் பரப்ரம்மம்.



கூட்டம் வேறு அதிகமாக இருந்ததால், பெரியவா தரிசனம் முடிந்து செல்லும் பக்தர்களை விரைவாக அனுப்பிக் கொண்டிருந்தார்கள் சீடர்கள். தரிசனம் முடிந்து பத்துப் பேர் வெளியேறினால், இருபது பேர் வந்து புதிதாக சேர்ந்து கொள்கிறார்கள்.

அப்போதுதான் கிருஷ்ணமூர்த்தியின் மனதுக்குப் பட்டது - கூட்டமே இல்லாமல் இருக்கும் ஒரு தினத்தில் வந்து மஹா பெரியவாளிடம் இவனைப் பற்றி ஓரிரு வார்த்தைகள் சொல்லி ஆசியை வேண்டிப் பெற்றிருக்கலாமே என்று! ஆனால் பெரியவாளின் அநுக்ரஹம் எப்படி இருக்கும் என்பது யாருக்குத் தெரியும்?

'ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர' நாம கோஷத்தை மனதுக்குள் முணுமுணுத்தபடியே, 'கருணை தெய்வத்தின் திருக்கண் பார்வை பேரன் மேல் விழுந்து அவன் நல்லபடியாக நடக்க வேண்டும்' என்று ப்ரார்த்தித்துக் கொண்டே வரிசையில் நடந்து கொண்டிருந்தார் ராஜம். இப்படி ஒரு பிள்ளையைப் பெற்ற புவனேஸ்வரியும் தன் தாயைப் பின் தொடர்ந்து நடந்தார்.

பெரியவாளின் அருகே வந்து நின்றபோது, பரவசப்பட்டுத் தான் போனார் கிருஷ்ணமூர்த்தி. சுப்பிரமணியனைக் கீழே இறக்கித் தரையில் அமர வைத்தார். பிறகு நமஸ்கரிப்பது போன்ற பாவனையில் அவனையும் குப்புறப் படுக்க வைத்து தானும் கீழே விழுந்து நமஸ்கரித்தார். இவரைத் தொடர்ந்து ராஜமும் புவனேஸ்வரியும் பெரியவாளை நமஸ்கரித்தனர்.

சுப்பிரமணியன் மீது தீர்க்கமாகத் தன் பார்வையைச் செலுத்தினார்கள் மஹா பெரியவா. பிறகு 'அவனைத் தூக்கி வெச்சுக்கச் சொல்லு' என்பதாக, ஒரு சிஷ்யனுக்குப் பெரியவா சைகை காண்பிக்க, அவர் கிருஷ்ணமூர்த்தியிடம், 'மாமா, குழந்தையைத் தூக்கி இடுப்புல வெச்சுக்கோங்கோ' என்றார். அதன் படிப் பேரனைத் தூக்கித் தன் இடுப்பில் வைத்துக் கொண்டார் கிருஷ்ணமூர்த்தி.

இவர்கள் அனைவருக்கும் கல்கண்டு மற்றும் குங்குமப் பிரசாதம் கொடுத்தார் பெரியவா. ஏதோ சொல்ல வேண்டுமென்று சுப்பிரமணியனின் நிலையை விவரிப்பதற்காகக் கிருஷ்ணமூர்த்தி வாயைத் திறக்கவும், பெரியவாளே அவரைக் கையமர்த்திவிட்டார்.

ராஜமும் புவனேஸ்வரியும் கண்களில் நீர் பெருக அந்த மஹானின் சந்நிதியில் தங்களது பிரார்த்தனைகளை வைத்தனர். "குழந்தை நடக்க வேண்டும். குழந்தை நடக்க வேண்டும்" என்பது மட்டுமே அப்போதைய அவர்களின் கோரிக்கையாக இருந்தது.

"தரிசனம் செஞ்சவா எல்லாரும் நகருங்கோ நகருங்கோ" என்று பெரியவாளுக்கு முன்னால் நின்று கொண்டிருந்த சில சிஷ்யர்கள் குரல் கொடுக்கவும், மெள்ள நகரலாம் என்று தீர்மானித்துக் கொண்டு ஓரடி எடுத்து வைத்தார் கிருஷ்ணமூர்த்தி.

"அவாளை சித்த இருக்கச் சொல்லு" என்பதாகத் தன் சீடன் ஒருவனுக்குப் பெரியவா சைகையால் உத்தரவு பிறப்பிக்க, சட்டென்று நகர்ந்த அவர், கிருஷ்ணமூர்த்தியின் தோள்களைப் பிடித்து, காத்திருக்குமாறு பெரியவா சொன்னதாகச் சொன்னார்.

பெரியவாளுக்கு முன்னால் நெகிழ்ச்சியுடன் காத்திருந்தார் கிருஷ்ணமூர்த்தி. அதற்கு மேல் அவரால் அமைதியாக இருக்க முடியவில்லை. குரல் உடைய, "திருவையாறு பூர்விகம். எம் பேரன் இவன். பொறந்து ரெண்டரை வருஷம் ஆச்சு. இன்னும் தரையில் கால் பாவிச்சு நடக்கலை எத்தனையோ வைத்தியர் கிட்ட போயிட்டேன். காசு செலவானதும் கவலை அதிகமானதும் தான் மிச்சம். பெரியவா கருணை பண்ணணும்" என்றார்.

ஒரு புன்னகை பூத்த அந்தப் பரப்ரம்மம், தன் முன்னால் சற்றுத் தள்ளி வைக்கப்பட்டிருந்த பழத்தட்டத்தை இன்னும் தன் அருகே கொண்டு வருமாறு சீடனிடம் செய்கையால் சொன்னார்.

அவரும் அப்படியே செய்தார். அந்தத் தட்டில் இருந்து ஒரு ரஸ்தாளி வாழைப்பழத்தைத் தன் கையால் எடுத்தார். உரித்துச் சாப்பிடும் பாவனையில் அதன் மேல் தோலை உரித்தார். பாதி வாழைப்பழம் உரிக்கப்பட்ட நிலையில் அது காட்சி அளித்தது.

இதை கிருஷ்ணமூர்த்தியின் இடுப்பில் இருந்த சுப்பிரமணியனுக்கு நேராக நீட்டினார் பெரியவா. அதற்கு ஏற்றாற் போல் கிருஷ்ணமூர்த்தியும் கொஞ்சம் நெருங்கி வந்தார். இருந்தாலும் மஹா பெரியவா நீட்டிய அந்தப் பழத்தைத் தான் வாங்கி, சுப்பிரமணியனுக்குக் கொடுத்து விடலாமே என்கிற எண்ணத்துடன் ஒரு சீடன் சட்டென முன்வந்து பெரியவாளிடம் கையை நீட்டினான்.

அப்போது பெரியவாளின் முகத்தைப் பார்க்கணுமே! "தள்ளிப் போ" என்பதாக அந்தச் சீடனுக்கு உத்தரவு போல் வலது ஆட்காட்டி விரலை மட்டும் இடமும் வலமுமாக வேகமாக அசைத்துக் காண்பித்தவர்,

சுப்பிரமணியனைத் தன் அருகிலே வந்து அந்த வாழைப்பழத்தை வாங்கிக் கொள்ளுமாறு முக பாவனையால் அழைத்தார். அதற்கேற்றாற்போல் கிருஷ்ணமூர்த்தியும் தன் இடுப்பில் இருந்த சுப்பிரமணியனை இன்னும் கொஞ்சம் அருகே கொண்டு போனார். தன் கையில் உரித்த நிலையில் இருந்த வாழைப்பழத்தைப் பெரியவா நீட்ட. தன் கையை நீட்டி அதை வாங்கிக் கொண்டான் சுப்பிரமணியன்.

அங்கே கூடியிருந்த பக்தர்கள் அனைவரும் ருசிகரமான இந்தக் காட்சியைப் பார்த்து மெய்சிலிர்த்தனர்.

வயதான ஒரு மாமி, "எத்தனையோ குழந்தைகளுக்குப் பெரியவா கல்கண்டு கொடுத்துப் பார்த்திருக்கேன். ஆனா ஒரு வாழைப்பழத்தை - அதன் தோலை

உரிச்சு - பெரியவாளே அந்தக் குழந்தையோட கையில கொடுத்தார்னா, இது அந்தக் குழந்தைக்குப் பெரிய அநுக்ரஹம்!" என்று பக்கத்தில் யாரிடமோ சொல்லிக் கொண்டிருந்தார்.

சுப்பிரமணியன் தன் கையிலிருந்து வாங்கிய வாழைப்பழத்தை முழுதுமாக அவன் சாப்பிடும் வரை வேறு எந்த பக்தரையும் பார்க்கவில்லை பெரியவா. அவன் சாப்பிட்டு முடித்து, அவர்களை அங்கிருந்து அனுப்பிய பின்னர்தான் மற்ற பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்க ஆரம்பித்தார் மஹா பெரியவா.

ஊருக்கு வந்த கிருஷ்ணமூர்த்தி குடும்பத்தினர் பெரிதும் சந்தோஷப்பட்டனர். "ஏதோ நம் பிரார்த்தனை அந்த மஹான் காதில் விழுந்தாப் போலவே நம்மை எல்லாம் நன்னா ஆசீர்வாதம் பண்ணிட்டார் - அதுவும் நம்ம சுப்பிரமண்யனுக்குத் தன் கைப்பட வாழைப்பழம் கொடுத்ததை இப்ப நினைச்சுப் பார்த்தாலும் சிலிர்ப்பா இருக்கு" என்றார் ராஜம் தன் கணவரிடம்.

"பெரியவா ஆசீர்வாதத்துல அவன் நடக்க ஆரம்பிச்சாலே போதும். வேற எதுவும் வேண்டாம்"என்ற கிருஷ்ணமூர்த்தி, அந்த வேளையில் காஞ்சி மஹானை நினைத்து இருந்த இடத்திலிருந்தே வணங்கினார்.

காஞ்சிபுரத்தில் இருந்து வீட்டுக்கு வந்து சுமார் மூன்று நாட்கள் ஆகி இருக்கும். பணி புரியும் அரசு அலுவலகத்தின் உயர் அதிகாரி ஒருவரிடம் ஏதோ ஒரு பேச்சுவாக்கில் தான் காஞ்சி சென்று வந்ததைப் பற்றிச் சொன்னார் கிருஷ்ணமூர்த்தி. கூடவே பெரியவாளின் ஆசி குறித்தும் அங்கு தன் பேரனுக்கு வாழைப்பழம் தந்த அனுபவத்தையும் சொன்னார். அப்போது சென்னையில் ஓரிடத்தில் ஒரு பள்ளியைப் பற்றிச் சொல்லி, "அங்கு உன் பேரனைக் கூட்டிக் கொண்டு போய்ப் பார். எதற்கும் ஒரு வேளை வர வேண்டும். உனக்கு இப்பதான் பெரியவா உத்தரவு கொடுத்திருக்கா போலிருக்கு" என்றார்.

அதை அடுத்து உயர் அதிகாரி சொன்ன அந்தப் பள்ளிக்குக் கூட்டிப் போனார் கிருஷ்ணமூர்த்தி. சரியாக நான்கே மாதங்களில் சுப்பிரமணியனுக்கு நடக்கக் கூடிய பயிற்சியை அன்போடு சொல்லித் தந்தார்கள். "பெரியவாளின் பார்வை பட்ட சில மாதங்களிலேயே அவனிடம் நல்ல முன்னேற்றம் தெரிந்தது. பயம் குறைந்தது. தைரியமாக நடக்க ஆரம்பித்தான். இப்ப அவனுக்கு வயசு இருபத்திரண்டு. அவன் நடக்கிற நடைக்கு யாருமே ஈடு கொடுக்க முடியாது. அப்படி ஒரு வேகம். அவன் வேகமா நடக்கிறதைப் பார்த்தா எனக்குப் பெரியவா ஞாபகம் தான் வருது. அந்த தெய்வம் தானே இவனை இப்படி நடக்க வெச்சிருக்கு!" என்று நெகிழ்ச்சியுடன் சொல்கிறார்கள் கிருஷ்ணமூர்த்தி தம்பதியர்.



# 26. காஞ்சி மாமுனியும் காக்கையும்

(ஒரு தீபாவளி அன்று எழுதியது)

'தாத்தா நீங்கள் சொன்ன பெரியவா காக்கா கதை ரொம்ப நன்றாக இருக்கிறது' என்றான் கோபுவின் நண்பன் ராமு

காக்கை ஒரு அழகிய பறவை. புத்திசாலி பறவை. கருப்பான நிறம். அது அழகில்லை என்று பலர் சொன்னாலும் அதன் அழகை கருமைநிற கண்ணனாக பாடுவோர் எண்ணற்ற புலவர்களும் பக்தர்களும். காக்கையின் கருப்பு நிறத்தில் அந்த கிருஷ்ணனை காண்பதாக பாரதியார் பாடியிருக்கிறாரே ஞாபகம் வருகிறதா? காக்கைச் சிறகினிலே நந்தலாலா உந்தன் கரியநிறம் கண்டேனடா நந்தலாலா. அருமையான குரல் படைத்த ஜேசுதாஸ் இந்த பாடலைப் பாடியதை கேட்காதவர்கள் செவி என்ன செவியோ!

'தாத்தா கருப்பு தான் எனக்கும் பிடிச்ச கலரு' என்று கத்திக்கொண்டே கோபு ஓடிவிட்டான். தாத்தா அப்படி என்ன சொன்னார் என்று பார்ப்போம்.

தீபாவளிக்கும் பெரியவாளுக்கும் என்ன சம்பந்தம்? ரொம்ப நெருங்கிய சம்பந்தம் என்றே சொல்லலாம்.

தீபாவளி பொழுது விடியலில் கொண்டாடுகிறோம். வாழ்க்கை நன்றாக விடிய கொண்டாடுகிறோம். பெரியவாளை வணங்குவதும் வாழ்க்கை சிறப்பதற்கே.

தீபாவளி சந்தோஷம் தரும் ஒரு பண்டிகை. பெரியவாளின் நினைப்பே குதூகலத்தை உண்டாக்கும் ஒரு செயல்.

தீபாவளிக்கு புதுசு நம் மேலே ஏறிக்கொள்கிறது. பெரியவாளின் எண்ணமே நம் உள்ளத்தை புதுசு பண்ணிடிவிடுகிறது.

தீபாவளிக்கு படார் படார் பட்டாசு உண்டு. பெரியவாளிடம் படார் படார் என்று புதுப் புது அர்த்தங்கள், விவரங்கள் நமக்கு கிடைக்கும்.

தீபாவளி என்றாலே வண்ண வண்ண ஒளி. பெரியவா படமே நமக்கு ஆன்ம ஒளி தரும் ஒரு சாதனம். எங்கள் காலத்திலும் சரி இப்போதும் சரி தீபாவளி மலர் என்றாலே பெரியவாளின் படம் இல்லாமல் ஒரு பத்திரிகையும் பார்த்ததில்லை.

தீபாவளி இனிப்பு ரொம்ப தின்றால் திகட்டும். இங்கு தான் வித்தியாசம் இருக்கிறது. பெரியவா உபதேசங்கள் எவ்வளவு நாம் கேட்டாலும் இனிக்கும், ஆனால் திகட்டாது.

இந்த நன்னாளில் ஒரு பெரியவா சம்பவம் உங்களுக்கு தீபாவளி இனிப்பாக தரப்பட்டுள்ளது.

"இந்த காக்காயோட உபத்ரவம் ரொம்ப தாங்கலே பெரியவா! தெருவுல போறச்சே கூட எங்கேர்ந்தோ வந்து தலை மேல உக்காந்துக்கறது. என்னிக்கோ ஒரு நாள் தான் இப்டி நடக்கறதுன்னு இல்லே. தெனோமும் இப்டியே நடக்கறது; ரொம்ப வேதனையா இருக்கு. பெரியவாதான் எனக்கு ஒரு வழி சொல்லணும். கல்யாணத்துக்கு ஒரு பொண்ணு இருக்கா. ரெண்டு பசங்கள் படிச்சிண்டிருக்கா. அனாதைகளா போயிடுமோன்னு கவலையா இருக்கு"

"காக்காய்க்கு தெனோமும் சாதம் போடு! தெனோமும் வீட்டிலே பூஜை அறையில் நல்லெண்ணெய் விளக்கு ஏத்தி வை! சனிக்கிழமை யன்னிக்கு சிவன் கோவிலுக்குப் போய் ஸ்வாமி தர்சனம் பண்ணு!"

ப்ரஸாதம் வாங்கிக்கொண்டு நிம்மதியாக சென்றாள் அந்த பக்தை. பெரியவா பாரிஷதர்களிடம் சொன்னார்.

"நம்ம மடத்துக்கு, யானை,பசு, பூனை, நாய், பெருச்சாளி, எலி, குருவி, கொரங்குன்னு எல்லா ப்ராணிகளும் வருது. ஆனா, காக்கா மட்டும் வரதேயில்லை! கவனிச்சேளோ?"

"பெரியவா சாக்ஷாத் பரமேஸ்வரனாச்சே! அதுனால சனீஸ்வரனுக்கு மடத்துக்குள்ள நொழையக்கூட பயம்! அதான் தன்னோட வாஹனத்தை கூட அனுப்பறதில்லே!". அழகாக பதில் சொன்னார் ஒரு பாரிஷதர். பெரியவா புன்முறுவல் பூத்தார்.

"நம்ம அஹங்கள்ள காக்காய்க்கு சாதம் போடறச்சே, "காக்காய், காக்காய்ன்னோ காகம் காகம். வா! வா!ன்னோ கூப்டறதில்லே! காகான்னு தானே சொல்றா? அப்டீன்னா என்ன அர்த்தம்?"

"காக்கா, சாப்ட வா!ன்னு அர்த்தம்" என்றார் ஒரு பாரிஷதர்.

"அதான் எல்லாருக்கும் தெரிஞ்சிருக்கே! காகான்னா, காப்பாத்து! காப்பாத்துன்னு அர்த்தம். நம்ம பித்ருக்கள் எல்லாருமே காக்கா ஸ்வரூபமா வர்றதா ஐதீகம்! காகான்னா, பித்ருக்களே! எங்களை ரக்ஷியுங்கோ!ன்னு அர்த்தம் சொல்லலாமோல்லியோ? அதுமட்டுமில்லே.பகவான் எல்லா ஜந்துக்கள் கிட்டயும் ஆத்மாவா இருக்கான். காக்காய்க்குள்ளேயும் இருக்கத்தானே செய்வான்? பகவானுக்கு நைவேத்யம் பண்ணறச்சே. அவன் சாப்டறதை நம்மளால பாக்க முடியலே! அவனே காக்காயா வந்து, நாம போடற சாதத்தை சாப்பிடறச்சே, நம்மளால பாக்க முடியறது. ஏதோ ஒரு ஜீவன், வினைப்பயனா,காக்காயா பொறந்திருக்கு. அந்த ஜீவனுக்கு, அதாவது, நம்ம ஸரீரத்துக்குள்ள இருக்கற ஆத்மாவுக்கு, ஸ்வரூபம்தான் வேறே! சாதம் போடறோம்! இது அத்வைதம்தானே?"

அத்வைதம் இத்தனை எளிதா? அத்வைதம் ஆஸ்ரமங்களில் மட்டும் இல்லை, அடுப்பங்கரையிலும் இருக்கிறதா! அதைத்தான் மஹாகவி "காக்கை குருவி எங்கள் ஜாதி" என்று அனுபவத்தில் பாடியிருக்கிறார்!



# 27. ஒரு வியாக்யானம்

சிருங்கேரியில் ஒரு வெள்ளிக்கிழமை.

ஜகத்குரு அபிநவ வித்யாதீர்த்த மஹா சந்நிதானம், தனது நித்திய பூஜையும் பிக்ஷையும் முடித்து, ஏகாந்தமாக அமர்ந்து மடத்துச் சீடர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார்.

அப்போது திருநெல்வேலி, மதுரை. ராமநாதபுரம் ஊர்களில் வேதபாடசாலைகளில் படிக்கும் மாணவர்கள் பலர் சிருங்கேரி வந்து சாரதாம்பாளையும் ஜகத்குருவையும் தரிசிக்க வந்திருந்ததால் அவர்களைச் சில நாட்கள் தங்கிப் போகும்படி, ஸ்வாமிகள் கட்டளை. எனவே அந்த மாணவர்களும் ஸ்வாமிகளது உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

பிரவசன (ஆன்மிக விளக்க உரை) உபன்யாசகர்களைப் பற்றி பேச்சு.

மதுரை தல்லாகுளம் வேத பாட சாலையைச் சேர்ந்த சங்கர சுப்பிரமணியன், ஜகத்குருவை நமஸ்கரித்து "இந்த பிரவசனம் பற்றி மனசுல உள்ள ஒரு விஷயத்தை, குருநாதர் கிட்ட விக்ஞாபனம் (வேண்டுகோள்) பண்ணிக்க ஆசைப்படறேன்" என்றான்.

"என்னது? சொல்லேன்!"

வேற ஒண்ணுமில்லே குருநாதா! இப்பல்லாம் கதா பிரவசனம் பண்ற சில உபன்யாசகர்கள், சாராம்சத்தை விட்டுட்டு, இதர விஷயங்களைத்தான் நிறைய பேசறா! இதனால சாராம்சம் மறந்து போயிடறது. இதர விஷயங்கள் மட்டும் நன்னா ஞாபகத்தில் இருக்கு. 'ஒரு நல்ல பிரவசனம் கேட்டோம்'கிற திருப்தி ஏற்பட மாட்டேங்கறது! இது, பிரவசனம் பண்றவாளோட குறைபாடா அல்லது கேக்கறவாளோட குறைபாடா? மகா ஸ்வாமிகள்தான் தெளிவுபடுத்தி அனுக்கிரகிக்கணும்!

ஜகத்குரு புன்னகைத்தார். "மொதல்ல, நீங்கள்லாம் போஜனம் பண்ணியாச்சா?" என்றார்.

அனைவரும் கைகூப்பி, "பண்ணியாச்சு ஸ்வாமி" என்றனர்.

"சந்தோஷம். எங்கே ப்ரவசனம் யார் சொல்லக் கேட்டாலும், அதுல இருக்கிற நல்ல சாராம்சத்தை மாத்திரம் நாம கிரகிச்சுண்டு, மத்ததை விட்டுடணும். இதுக்கு, நம்ம மனசை பரிபக்குவப் படுத்திக்கணும். அதுதான் ஒசத்தியான குணம். உபன்யாசம் பண்றவா, காலத்தையும் சபையையும் அனுசரிச்சுண்டு அதே நேரம்,

'சப்ஜெக்ட்'டையும் விட்டுடாமத்தான் பூர்த்தி பண்றா! நாமதான் அன்னபட்சி மாதிரி அதுலேர்ந்து கிரகிச்சுக்கணும் என்ன புரியறதா?" என்றார்.

சூர்யநாராயணன் என்ற சிஷ்யன் பய பக்தியுடன் "ஜகத்குருவிடம் ஒரு பிரார்த்தனை! நாங்கள்லாம் ஸ்ரீமத் ராமாயணம் கேக்கணும்னு ஆசைப்படறோம். ஜகத்குருதான் கிருபை பண்ணி!"

"அதுக்கென்ன பேஷா ஏற்பாடு பண்ணிட்டா போறது. நன்னா வாசிச்ச பௌராணிகாளா (உபன்யாசகர்) மைசூர்லேர்ந்து வரவழைச்சு சொல்லச் சொல்றேன்" என்றார் ஸ்வாமிகள்.

யக்ஞநாராயணன் என்ற சிஷ்யன் "ஜகத்குருவின் அம்ருத வாக்கால ஸ்ரீமத் ராமாயணம் சிரவணம் (கேட்டல்) பண்ணணும்னு எங்களுக்கு ரொம்ப நாளா ஆசை. குருநாதர் அனுக்கிரகிக்கணும்!"

"ஓஹோ இதுக்குத்தான் இவ்வளவு பீடிகையா?! பார்ப்போம் பார்ப்போம்!" என்றபடி எழுந்து உள்ளே சென்று விட்டார்.

நாட்கள் கடந்தன.

அன்றும் வெள்ளிக்கிழமை; சந்தியாகால வேளை. சாரதாம்பாள் ஆலயத்தில் கூட்டம் நிரம்பி வழிந்தது. திடீரென அம்பாளைத் தரிசிக்க வந்தார் ஸ்வாமிகள். அவர் தரிசனம் முடிந்து வெளியே வரும்போது மணி எட்டு இருக்கும்!

வேத பாடசாலை மாணவர்கள் வணங்கினர். புன்னகைத்தபடியே, "ஏதேது, விடமாட்டேள் போல இருக்கே. சரி சரி நீங்க ஆசைப்பட்டபடியே நடத்திடலாம்! ஒரு நல்ல நாள் பார்த்து ப்ராரம்பம் (ஆரம்பம்) பண்ணுவோம்" என்றார். அந்த நல்ல நாளும் வந்தது. ஏழு நாட்கள் ஆச்சார்யாள் சுந்தரகாண்டம் சொல்வதென முடிவாயிற்று.

'மஹா சந்நிதானமே பிரவசன அனுக்கிரகம் பண்ணப் போறார்' என்ற செய்தி பரவ, ஏகக் கூட்டம். மழை வேறு தூறி ஓய்ந்திருந்தது!

ஆசனத்தில் அமர்ந்த ஜகத்குருவை தரிசித்தவர்கள், சாட்சாத் வேத வியாஸ பகவானே வந்து அமர்ந்திருப்பது போல் உணர்ந்தனர். கணீரென்ற குரலில் பிரவசனம். அரை மணி நேரம் கடந்திருக்கும். திடீரென பிரவசனத்தை நிறுத்திய ஸ்வாமிகள், மடத்தைச் சேர்ந்த ஒருவரை அழைத்தார். அவரிடம், "ஆரம்பத்திலேயே சொல்லணும்னு இருந்தேன் மறந்துட்டேன்! நீ என்ன பண்றே என் பக்கத்துல கொஞ்சம் தள்ளி, ஒரு மணைப் பலகையைக் கொண்டு வந்து போடு. அதுமேல பட்டு வஸ்திரத்தை விரி. அப்புறம், ஒரு வெள்ளித் தட்டுல ரெண்டு பெரிய கொய்யாப் பழத்தை கொண்டு வந்து வை சீக்கிரம்!" என்று கட்டளையிட்டார். உத்தரவு பூர்த்தி செய்யப்பட்டு, உபன்யாசம் தொடர்ந்தது.



ஐந்தாம் நாள் உபன்யாசமும் பூர்த்தி அடைந்தது. மாணவர்களுக்கும் நன்கு புரிகிற மாதிரி விவரித்த ஸ்வாமிகள், இடையிடையே தர்மசாஸ்திர நுணுக்கங்களையும் விளக்கினார்.

திருநெல்வேலி வேத பாடசாலையைச் சேர்ந்த வேங்கடேசன் என்ற மாணவன் மெள்ள வந்து ஜகத்குருவை நமஸ்கரித்து, "எனக்கு ஒரு சந்தேகம் குருதேவா" என்றான் தயங்கியபடி.

"என்ன சந்தேகம், கேள்!" என்றார் ஸ்வாமிகள்.

திக்கித் திணறியபடி "குருநாதா! உபன்யாசம் ஆரம்பிச்ச நாள்லேர்ந்து உங்க பக்கத்துல ஒரு பலகையைப் போட்டு, அதுக்கு முன்னால ஒரு தட்டுல கொய்யாப் பழத்தையும் வைக்கச் சொல்றேள்! அது எதுக்குனு புரியலை!"

கலகலவென சிரித்த ஆச்சார்யாள், "சொல்றேன் கேளு 'யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம் தத்ர தத்ர க்ருதமஸ்த காஞ்சலிம்'னு எங்கெல்லாம் ஸ்ரீ ராமனின் பெருமை பேசப்படறதோ, அங்கெல்லாம் ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்வாமி வந்துடுவார்னு ஒரு நம்பிக்கை. இங்கே நாம ஸ்ரீமத் ராமாயணம்னா சொல்றோம். அதனால நிச்சயம் ஸ்வாமி வருவாரில்லையா?

அவரை நாம நிக்க வைக்கலாமோ? அவர் 'நவ வ்யாகரண' பண்டிதராச்சே! அவர் உட்காரத்தான் ஆசனப் பலகை! அப்புறம் நம்ம வீட்டுக்கு யாராவது 'கெஸ்ட்' வந்தா பழம்- பட்சணம், காபியெல்லாம் குடுத்து உபசாரம் பண்ற மாதிரிதான் இது! ஸ்வாமிக்கு கொய்யாப் பழம்னா ரொம்பவும் புடிக்கும். இப்ப புரிஞ்சுண்டியா?

தலையாட்டினான் வேங்கடேசன். அந்த இளம்பிஞ்சு இன்னும் தெளிவடைய வில்லை என்பது அந்த தெய்வத்துக்கு தெரியாதா என்ன!

ஆறாம் நாளன்றும் நல்ல கூட்டம். அன்றைய உபன்யாசத்தை உருக்கமாகக் கூறி முடித்தார் ஜகத்குரு.

அனைவரும் ஸ்வாமிகளை நமஸ்கரித்துச் சென்ற பின்னர், பாடசாலை மாணவர்களும் ஒருவர்பின் ஒருவராக நமஸ்கரித்து நகர்ந்தனர். கடைசியாக, முதல் நாள் சந்தேகம் கேட்ட வேங்கடேசன் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து விட்டு, கைகூப்பி நின்றான். புன்முறுவலுடன் அவனை ஏறிட்ட ஸ்வாமிகள், "ஓம் முழுப் பேரென்ன?" என்று வினவினார்.

"பிரசன்ன வேங்கடேசன் குருநாதா!"

"பூர்வீகம் எது?" என்று கேட்டார்.

"திருநெல்வேலி- கடையநல்லூர் பக்கம் ஒரு குக்கிராமம் குருநாதா"

"தகப்பனார் என்ன பண்றார்?"

"உபாத்தியாயம் (வைதீகத் தொழில்) குருநாதா!"

"பேஷ் பேஷ்". அன்றைய தினம் ஆஞ்சநேய ஸ்வாமிக்கு அர்ப்பணிக்கப்பட்ட இரண்டு கொய்யாப் பழங்களை தன் தங்கக் கைகளால் எடுத்து, அவனுக்குத் தந்து" வேங்கடேசா! இது ஆஞ்சநேயர் சாப்பிட்ட உச்சிஷ்ட (மீதி) பிரசாதம். நறுக்கி நீயும் வாயில போட்டுண்டு, எல்லாருக்கும் கொடு!" என்று விடைகொடுத்தார்.

ஆனால், பிரசன்ன வேங்கடேசன் அந்த இடத்தை விட்டு நகரவில்லை. ஆச்சார்யாள் அளித்த இரு கொய்யாப் பழங்களையும் கைகளால் உருட்டி உருட்டிப் பார்த்துக் கொண்டே இருந்தான்!

அவனது எண்ண ஓட்டத்தைப் புரிந்து கொண்ட ஆச்சார்யாள் தனக்குள் சிரித்தபடி, "என்ன பிரசன்ன வேங்கடேசா! பழங்களைக் கையில் வெச்சுண்டு அப்டி என்ன யோசனை? கொஞ்சம் சொல்லேன், நானும் தெரிஞ்சுக்கறேன்!" என்றார். அவன் தயங்கினான்.

"சொல்லு"- தைரியப்படுத்தினார் ஜகத்குரு.

"வேற ஒண்ணுமில்லே குருநாதா! அந்த ஆசனத்துல ஆஞ்சநேய ஸ்வாமி வந்து ஒக்காந்து ஸ்ரீமத் ராமாயணம் கேட்டுட்டு, அவருக்கு அர்ப்பணிச்ச கொய்யாப் பழங்களையும் சாப்டுட்டுப் போறதா!" என்று அவன் முடிப்பதற்குள் ஸ்வாமிகள் இடைமறித்தார்.

"இத நான் சொல்லலே! பரம்பரை பரம்பரையா நம்ம தேசத்துல ஸ்ரீமத் ராமாயண பிரவசனம் பண்ணிண்டு வர பெரியவாள்லாம் பூர்ண நம்பிக்கையோட கடைப் பிடிக்கிற வழக்கம். இது சத்தியமும் கூட! இதுல, உனக்கு என்ன சந்தேகம்?" என்று கேட்டார் ஞானகுரு.

பிரசன்ன வேங்கடேசன் பேசத் தயங்கினான்.

"கிட்டே வா. எதுவா இருந்தாலும் மனசுல பட்டதை தைரியமா சொல்லு!".

"நானும் பிரவசனம் கேக்கறச்சே அந்தப் பலகையையே அடிக்கடி பார்த்துண்டிருந்தேன் என் கண்ணுக்கு ஆஞ்சநேய ஸ்வாமி வந்து ஒக்காந்ததா தெரியவே இல்லியே! பக்கத்துல இருந்த சகாக்களையும் கேட்டேன். அவாளும் 'தெரியலே'னுட்டா. அதான்!" மென்று விழுங்கினான் வேங்கடேசன்.

"சரி சரி. இது தானே உன் சந்தேகம்! 'ரெண்டு கொய்யாப் பழமும் வெச்சது வெச்சபடி அப்படியே இருக்கே! ஆஞ்சநேய ஸ்வாமி சாப்பிட்டிருந்தா, குறைஞ்சிருக்கணுமே' இல்லையா?"

"ஆத்மார்த்தமான பக்தியும், சிரத்தையும் இருந்தா ஆஞ்சநேய ஸ்வாமி பவ்யமா, பக்தியோடு அமர்ந்து ஸ்ரீமத் ராமாயண சிரவணம் பண்றத நாமும் தரிசிக்கலாம்! ஆஞ்சநேயர் விஸ்வரூபியா வந்து உட்கார்ந்துட்டார்னா அத பார்த்துட்டு, தாங்கிக்கிற சக்தி எல்லோருக்கும் இருக்குமா? அதனால அவர், சூட்சுமமா வந்து கேட்டுட்டுப் போவார்!" என்று விளக்கம் அளித்தார்.

"உனக்கு கிரந்த எழுத்து வாசிக்கத் தெரியுமோ?" என்று வேங்கடேசனிடம் கேட்டார்.

"தெரியும் குருநாதா".

உள்ளேயிருந்து உபநிஷத் சம்பந்தமான ஒரு கிரந்த புத்தகத்தைக் கொண்டு வரச் செய்தார் ஆச்சார்யாள். அதில் ஒரு பக்கத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு, ஒரு சிறு பகுதியை சுட்டிக் காண்பித்து, "இதை, ஐந்து நிமிஷத்தில் மனப்பாடம் செய்து அப்டியே என்னிடம் ஒப்புவிக்க வேண்டும். முடியுமா பார்" என்றார் சிரித்தபடி!

புத்தகத்துடன் சற்றுத் தள்ளிப் போனான் பிரசன்ன வேங்கடேசன். சரியாக ஐந்து நிமிடம் ஆயிற்று. ஆச்சார்யாளிடம் வந்தவன், அவர் குறிப்பிட்ட பகுதியை அட்சர பிசகின்றி ஒப்பித்தான்.

ஆச்சார்யாள் முகத்தில் பரம சந்தோஷம். புத்தகத்தைக் கையில் எடுத்தார். தான் உருப்போடச் சொன்ன அந்தப் பகுதியை எடுத்து வைத்துக் கொண்டு,

"வேங்கடேசா, நான் சொன்னபடி அஞ்சே நிமிஷத்துல படிச்சு ஒப்பிச்சுட்டே! நீ அந்த புஸ்தகத்திலேர்ந்து குறிப்பிட்ட அட்சரங்களை கிரகிச்சுட்டதால அதெல்லாம், அங்கேயிருந்து மறைஞ்சு போயிடலையே! கிரந்த எழுத்துக்கள்லாம் இருந்த இடத்துல அப்படியே இருக்கோல்லியோ? அது மாதிரிதான் இதுவும்!

தெய்வத்துக்கு நாம எதை அர்ப்பணிச்சாலும், அதுல இருக்கிற பக்தி சிரத்தையுடன் கூடின ருசியை மாத்திரம் ஸ்வீகரிச்சுண்டு, பதார்த்தங்களைப் பரம கருணையோடு நமக்கே விட்டுடுறார். வெச்ச கொய்யா ரெண்டும் வாடாம- வதங்காம, முழுசா அப்படியே இருக்கிற ரகசியம் இப்ப புரியறதா உனக்கு?"

பிரசன்ன வேங்கடேசன் பிரமித்தான். அங்கு, சற்று நேரம் அமைதி நிலவியது. அனைவரும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனர்.

பிரவசன பூர்த்தி நாள்! மதியம் மூன்று மணிக்கே மேடைக்கு ஆச்சார்யாள் வந்து விட்டார். உபன்யாசம், மிக உருக்கமாகப் போய்க் கொண்டிருந்தது. பூர்த்தி கட்டம். அனைவரும் மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்தனர். அப்போதுதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது!

பெரிய வானரம் ஒன்று தாவித் தாவி அந்த உபன்யாச கூடத்துக்கு வந்தது. ஒருவரையும் லட்சியம் பண்ணாமல் மேடையில் பாய்ந்து ஏறி, ஆஞ்சநேய ஸ்வாமிக்காக போடப்பட்டிருந்த பலகையில், ஆச்சார்யாளைப் பார்த்தபடி- சாதுவாக அமர்ந்து கொண்டது! ஜகத்குரு சற்று நேரம் வைத்த கண் வாங்காமல் அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். எதிரிலிருந்த கொய்யாப் பழங்களை 'அது' ஏறெடுத்தும் பார்க்கவில்லை! கூட்டம் இதைப் பார்த்து வியந்தது!

மாலை ஐந்து மணி. அதுவரை, அந்த வானரம் அப்படி இப்படி அசையவே இல்லை! பழங்களையும் தொடவில்லை. ஆச்சார்யாள் உபன்யாசத்தைப் பூர்த்தி செய்து, 'பலசுருதி' (பலன்) சொல்லி முடித்தார். பிறகு வலப் புறம் திரும்பி வானரத்தைப் பார்த்து,

"ஆஞ்சநேய ஸ்வாமி! ஸ்ரீமத் ராமாயணம் கேக்கறதுக்காக நீங்க வந்து உக்காந்திருக்கறதுல ரொம்ப சந்தோஷம்! அந்த ரெண்டு கொய்யாப் பழங்களும் உங்களுக்குத்தான் ஸ்வீகரிச்சுக்கணும்" என்று கேட்டுக் கொண்டார்.கூட்டத்தை ஒருமுறை நோட்டம் விட்ட வானரம், பழங்களை எடுத்துக் கொண்டு, ஆச்சார்யாளையே வாஞ்சையுடன் சற்று நேரம் உற்றுப் பார்த்தது.

கூட்டத்திலிருந்து குரலொன்று, "ஆஞ்சநேயா ராமா ராமா!" என்று முழங்கியது. அனைவரும் குரல் வந்த திசையை ஆர்வத்துடன் பார்த்தனர். அங்கே பிரசன்ன வேங்கடேசன், கண்களில் நீர் மல்க கைகூப்பி நின்றிருந்தான்! இந்த நேரத்தில், மெள்ள மேடையை விட்டுக் கீழிறங்கிய வானரம், ராஜநடை போட்டபடி நடந்து சென்று மறைந்தது.

கண்களில் நீர் முட்ட ஜகத்குருவிடம் வந்த பிரசன்ன வேங்கடேசன், "குருதேவா! ஒங்க பக்கத்துல பலகையில வந்து ஒக்காந்துட்டுப் போனது, என் கண்ணுக்கு வானரமா தெரியலே. சாட்சாத் ஆஞ்சநேய ஸ்வாமி, ஆஜானுபாகுவான சரீரத்தோட கம்பீரமா உட்கார்ந்திருந்ததைப் பார்த்தேன்! ஆச்சார்யாளோடு ஸ்வாமி ஏதோ பேசியதையும் பார்த்தேன்! நீங்க சொன்ன தாத்பர்யம் இப்ப எனக்குப் புரிஞ்சுடுத்து குருநாதா!" என்று ஜகத்குருவின் பாதார விந்தங்களில் விழுந்தான். எத்தனையோ பேர் தேற்றியும் அவனது கண்ணீரை மட்டும் எவராலும் கட்டுப்படுத்த முடியவில்லை.

பரப்பிரம்மம் கரம் உயர்த்தி வேங்கடேசனை ஆசீர்வதித்தது!



# 28. பெரியவா அனுக்ரஹம்

நான் ஏற்கனவே ஒரு தடவை படித்துவிட்டு எழுதினது தான் இது. கொஞ்சம் மாற்றங்களுடன் மீண்டும் உங்களுக்கு.

மஹா பெரியவா என்கிற வார்த்தையே பிராண வாயு. மூச்சுக்காற்று. சகல துக்க நிவாரணி. சர்வ ரோக நிவாரணி. சர்வ பாபநாசினி. இன்னும் என்ன சொல்ல? கோடானு கோடி சம்பவங்களில் ஒன்று அடி மனதை தொட்டு விட்டது. அதை உங்களுக்கும் பரிமாறி அந்த வார்த்தைக்கப்பாற்பட்ட சுகானுபவம் நீங்களும் பெற எனக்கு ஒரு ஆசை. எங்கிருந்தோ எனக்கு வந்ததை சற்று செப்பனிட்டு அளிக்கிறேன்.

ஒரு டாக்டர் அமெரிக்காவே தஞ்சம் என்று இருப்பவர். அவரைப்பொறுத்தவரை பிறந்த தமிழகமோ தாய் நாடு இந்தியாவோ ஒரு உபயோகமற்ற, உருப்படாத சாக்கடை, இந்தியர்கள் திருத்த முடியாத காட்டுமிராண்டிகள் (தன்னைத்தவிர) என்ற அமெரிக்க- தா(க்)க- இந்தியர். இந்தியாவுக்கு வருகிறார்--- மனத்தில் விருப்பமில்லாமல், மனைவியின் தொண தொணப்பு தாங்காமல்---

போயிங் விமானத்தின் ஜன்னல் வழியாக சென்னையின் தென்னை மரங்கள் மெல்ல அணுகிக் கொண்டிருக்க, கட்டடங்கள் கான்க்ரீட் கொம்புகள் போல முளைத்தன. நுரை மீசை வைத்திருந்த கடலலைகளின் அருகே வெண்மணல் பாக்கி இருந்தது.

“சரியா இருபது வருஷம் ஆச்சு இந்த மெட்ராசை விட்டு”

“நிறைய மாறுதல் இருக்கும்” என்றாள் பாகீரதி.

“கடலை மட்டும் தான் இவங்களாலே மாத்தமுடியலே!”

பாகீரதி தன் கைப்பெட்டியைத் திறந்து, சின்னச் சின்ன பல வர்ணக் குப்பிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துத் திறந்து கவிழ்த்து கிடைத்த ரோஜா நிறக் குழம்பை எடுத்து முகத்தில் தேய்த்துக் கொண்டு தன் வயசைப் பத்து ( வருஷம்) நிமிஷம் குறைத்துக் கொண்டாள். விமானத்தில் குப்பென்ற வாசனை சூழ்ந்தது.

“சங்கராச்சாரியாரைப் பார்க்கப் போறதுக்கு மேக் அப்பா?”

“மேக் அப் இல்லை வெய்யில் தாங்காது என் ஸ்கின்.”

“மே ஐ ஹேவ் யுர் அட்டென்ஷன் ப்ளீஸ்!” என்று மண்டை மேல் இருந்த ஸ்பீக்கர் கமறியது. அதற்கப்புறம் கொர கொர பேச்சு புரியவில்லை.

"உலகத்திலேயே மோசமான ஏர்லைன்னு வருஷா வருஷம் இந்தியன் ஏர்லைன்சுக்குத்தான் பரிசு தரணும்."

பாகீரதியின் ஆழ்ந்த மௌனத்தைத் தொடர்ந்து, "உலகத்திலேயே மோசமானதொரு ஏர்போர்ட் பாம்பே" என்றார்.

பாகீ அவரைக் கடைக் கண்ணால் பார்த்து, "உங்க இந்தியா தூஷணையை ஆரம்பிச்சுட்டீங்களா?"

"உண்மையைத்தானே சொல்றேன். இந்த நாடு உருப்படுமா சொல்லு. ஏர்போர்ட்டில் குடிக்க ஒரு வாய் தண்ணி கிடையாது. உட்கார ஒரு நாற்காலி கிடையாது. அமெரிக்கால கன்பர்ம் பண்ண டிக்கெட் இங்க மெசேஜ் வரலைங்கிறான். ப்ளேன் மூணு மணி நேரம் லேட்டு. எதுக்காக இந்த நாட்டுக்கு ஏரோப்ளேன்?"

பாகீரதி பேசாமல் இருந்தாள். இந்த மாதிரி கேள்விகளுக்கெல்லாம் பதில் சொன்னால் இன்னும் பெரிசாக வாக்குவாதம் வ(ள)ரும்.

"காஞ்சீபுரத்தில் ஓட்டல் ஏதாவது உண்டா இல்லை வயக்காட்டு பக்கம் ஒதுங்கலாமா?"

பாகிரதி முரட்டு புருஷனோடு பேசவில்லை.

"அலுமினிய சொம்போட?"

பா.பேசவில்லை.

விமானம் தரை தொட்டு ஒரு தடவை குதித்தது.

"என்ன மோசமான லாண்டிங், சனி!"

விமானம் ஊர்ந்தது.

"உனக்கு வேணும்னா அந்த சாமியாரை தரிசனம் பண்ணிக்கோ. எதுக்காக என்னை இழுக்கறே!"

"நீங்களும் பார்க்கணும்."

"எதுக்கு நான்? எனக்குத்தான் இதில் எல்லாம் நம்பிக்கை கிடையாதே. நான் ஒரு ஃபிசிக்ஸ் ஆசாமி - அக்னாஸ்டிக்!"

பாகீ இந்தப் பேச்சைத் தொடர விருப்பமின்றி,

"இன்னிக்கு என்ன கிழமை?" என்றாள்.

"இந்தியாவுக்கு வந்து இந்தியன் ஏர்லைன்ஸ் விமானத்துக்குக் காத்திருந்து கிழமையே மறந்து போச்சு."

"எத்தனை நேரம்? இவங்களுக்கெல்லாம் எதுக்கு ஏரோ பிரிட்ஜ்?"

பிரயாணிகள் இறங்க அவசரப்பட்டு முன் வாசலில் நெருக்கினார்கள்.

"மூணு மணி நேரம் உட்கார்ந்திருந்தாங்க. மூணு நிமிஷம் கதவு திறக்கப் பொறுமை இல்லை. ப்ளடி இந்தியன்ஸ்!"

"நீங்க இந்தியன் இல்லையா?" என்று கேட்க விருப்பமின்றி பாகீ பேச்சை மாற்றினாள்.

"நீங்க முதல்ல அமெரிக்கா புறப்படறப்ப எத்தனை டாலர் வச்சிருந்தீங்க?"

"ரெண்டு டாலர்! ஜஸ்ட் டூ டாலர்ஸ்!" (அது டாக்டருடைய செல்ல 'டாபிக்.' எத்தனை தடவை சொல்லியிருக்கிறார்!)

"கென்னடில வந்து இறங்கறேன், டெலிபோன் செய்யக் காசு இல்லை. 'கலெக்ட் கால்' னா என்னன்னே தெரியாது. அப்ப அங்க ஒரு."

அவர் வாழ்க்கையில் முன்னேறிய கதையை 27வது தடவை கேட்கத் தயாரானாள்.

சீட்டிலேயே உட்கார்ந்திருந்து, எல்லோரும் இறங்கியதுமே அவர்கள் வெளியே வந்து பாலம் கடக்கும் போது, உஷ்ணம் அவர்களைத் தாக்கி, ஐம்பது அடி அவர்களுடனேயே கூட வந்து 'ஏசி'க்குக் கொண்டு வந்துவிட்டது.

'எஸ்கலேட்டர் அவுட் ஆப் ஆர்டர் ' என்று போர்டைப் பார்த்து சிவசங்கரன் நக்கலாகச் சிரித்தார்.

"இருக்கிற ஏழை ஜனங்களுக்கு உணவும் உடையும் கொடுத்து, பாப்புலேஷனை கண்ட்ரோல் பண்ணா போதும். மத்த எதுவும் வேண்டாம் இந்தியாவுக்கு. சாட்டிலைட் எதுக்கு? எதுக்காக மிசைல் ப்ரோக்ராம்?" என்று மூன்று வரியில் இந்தியாவுக்கு விமோசனம் சொன்னார்.

பாகீ மௌனமாகவே வந்தாள். அமெரிக்காவில் இருந்தால் விவாதித்திருப்பாள். 'நாமெல்லாம் இதைச் சொல்வது ரொம்பச் சுலபம், நடைமுறை தான் கஷ்டம்' என்று.

இங்கே பாகீரதி அவருடன் எந்த விதத்திலும் வாதாட விரும்பவில்லை, காஞ் சிபுரம் போய்ச் சேரும் வரையாவது!

கீழே ஹாலில் இறங்கினதும் கைவண்டி எடுத்துக் கொண்டார். அதன் சக்கரங்கள் சண்டி பண்ண, "சேச்சே! ஒரு கைவண்டி சரியா பண்றாங்களா பாரு இந்தியாவிலே!"

கன்வேயரில் சுயம்வர ராஜகுமாரி போல் ஊர்ந்து வந்து கொண்டிருந்த அவர்கள் பெட்டியை, ஒரு சிப்பந்தி அதன் பாகேஜ் சீட்டைத் தப்பாகப் படித்து, எடுத்து வைத்துக் கொள்ள, சிவசங்கரன் "எக்ஸ்க்யூஸ்மி, எக்ஸ்க்யூஸ்மி" என்று ஓடிப் போய் அவன் கையைப் பிடித்துத் தடுக்க, அந்தச் சிப்பந்தி. "பொட்டி உன்னுதுன்னா சொல்லு - மேல கை போடாதே! நீ கை வச்சா நான் கை வைக்க எத்தினி நேரமாகும்? நீ சீமான்னா உங்க ஊரோட வச்சுக்க - இந்தப் பேட்டைல நான் சீமான் " என்றான்.

"வாட் வாட்?"

அவர் திரும்பிய போது முகம் சிவந்திருந்தது. கைகள் உதர ஸார்பிட்ரேட் மாத்திரை எடுத்து நாக்குக்கீழே அடக்கிக் கொண்டார்.

"ஃபூல்ஸ்! ஃபிலிஸ்டைன்ஸ்!" பாகீரதியின் மேல் பாய்ந்தார்.

"எல்லாம் உன்னால தான். எதுக்காக என்னை இந்த மாதிரி அவமானப்படுத்தறே? நான்தான் இந்தியா வர மாட்டேன்; பிரின்ஸ்டன்லயே இருக்கேன்; எனக்குப் பிடிக்காது இதெல்லாம்னு சொன்னேனில்லையா? எதுக்காக என்னை டார்ச்சர் பண்றே? நான் எதுக்காக மெட்ராஸ் ஏர்போர்ட்டில ஒரு பொறுக்கி கிட்ட கெட்ட வார்த்தை கேட்கணும்?"

"டேய். யார்ரா பொறுக்கி! ஒரு உதை விட்டன்னா அரை டிராயர்லாம் ரத்தம் ஆயிரும்!"

"நீங்க வாங்க; அவனோட என்ன?"

பாகீரதி அவசரமாக வெளியே வந்தாள்.

இந்த உச்ச சமயங்களில் பேசவே கூடாது.

வராந்தாவுக்கு வந்தார்கள். வாசலில் கார் காத்திருக்கும் என்று சொன்னார்கள். யார் என்று தெரியவில்லை. அவரவர் அவரவர் கார்களில் ஆரோகணித்துக் கதவு சாத்திக் கொண்டு புறப்பட்டுச் செல்ல, சற்று நேரத்தில் வராந்தா காலியாகி விட்டது.

"ஆட்டோ போலாங்களா? செவண்டி ருப்பீஸ் கொடுத்துருங்க. எங்க மைலாப்பூர் தானே!"

"நான் எங்கே போனா உனக்கென்ன?"

"அவனோட பேச வேண்டாம்."

"சும்மனாங்காட்டியும் கேட்டேன். கோவிச்சுக்கிறியேம்மா!"

அப்போது ஒரு டிரைவர் வந்து, "நீங்க டாக்டர் சிவராமனா?"

"டாக்டர் சிவசங்கர்."

"காஞ்சி பார்ட்டி நீங்கதானே?

ப்ரதிபா டிராவல்சிலே வண்டி கேட்டிருந்தீங்களே!"

"ஆமாம்."

"இருங்க வண்டி வந்திருக்குது."

"நான் சிவராமன் இல்லைப்பா."

"சரி சிவசங்கர். வாங்க! உங்களுக்குத்தான் வண்டி."

பாகீரதிக்கு அந்த டாக்ஸி டிரைவரைப் பிடித்திருந்தது. பெட்டியை எடுத்து வைத்துக் கதவை மரியாதையாகத் திறந்து, மூடி, ஓடிப் போய் சீட்டில் அமர்ந்தான்.

"ஒரு பேரை ஒழுங்காக் கொடுக்கத் தெரியலை; என்ன ட்ராவல் எஜெண்டுப்பா!"

"அது சில சமயங்கள்ள தப்பாயிருதுங்க, டெலெக்ஸ்ல."

"எது சரியாய் இருக்கு உங்க நாட்டில?"

"டிரைவர் உங்க பேரு என்ன?"

"பால்ராஜுங்கம்மா. ஏசி போட்டுரலாங்களா? காசட் போட்டுரலாங்களா?" காசட்டைச் செருகினான்.

"கண்ணும் கண்ணும் கொள்ளையடித்தால் காதல் என்று அர்த்தம்."

"எனக்குக் காதல் வேண்டாம்ப்பா!" பட்டென்று நிறுத்தினான்.

கார் கிளம்பி நெடுஞ்சாலையில் சேர்ந்து கொண்டது.

"பக்தி பாட்டு போடட்டுங்களா?"

"எதுவும் வேண்டாம்ப்பா, ஆளை விடு!"

"பூந்தமல்லி பக்கம் திரும்பியதும், "பால் ராஜ், மெதுவாப் போங்க, அவசரமே இல்லை."

"நீங்க பெரியவரைத் தரிசனம் பண்ண வேண்டாமா இன்னைக்கு? போயிரலாங்க ரெண்டு அவர்ல."

"நாளைக்கு மெதுவா தரிசனம் பண்ணிக்கறம்பா. எனக்கு அவசரம் இல்லை. நான் பார்க்கலைன்னாக்கூட பரவால்லை. இந்த அம்மாதான் இதுக்காகவே அமெரிக்காவிலிருந்து வந்திருக்குது!"

"அப்படீங்களா? சந்தோசங்க. மனித தெய்வம் சார் பெரியவரு. இதுவரைக்கும் எம்பத்தொன்பது முறை தரிசனம் பண்ணிட்டேங்க! இன்னம் பதினொன்று பண்ணா நூறாயிடும் - அவருக்கு நூறு வயசு ஆனாப்பல."

"பால்ராஜ் நீங்க கிறிஸ்டியன்தானே?

"ஆமாங்க அதனாலே என்ன சார்?"

"Funny!" என்றார் சிவசங்கர்.

"எங்க வீட்டுல அவருதாங்க தெய்வம். அவரு என்ன சொல்றாரு? நீ சர்ச்சுக்குப் போ - மசூதிக்குப் போ - கோயிலுக்குப் போ - கடைசில - எல்லா தெய்வங்களும் ஒண்ணு தானேம்பார்."

"விபூதி வரவழைப்பாரா?"

"அது சாய்பாபாங்க. அவர் உங்களைப் பார்த்தாலே போதுங்க - நினைச்ச காரியம் நடக்கும்."

"உனக்கு நடந்ததா?"

"பின்ன? நம்ம புள்ள ரோஸ்மேரிக்குத் தபால் ஆபீஸ் உத்தியோகம் கிடைக்கணும்னு ஒருமுறை கேட்டேங்க. அடுத்த ட்ரிப்ல ஆர்டர் வந்துருச்சு!"

"அப்படியா டெலிபோன்ஸ்லயும் இருக்காரா இவர்!" என்றார்.

அந்தக் கேலியை பால்ராஜ் கவனிக்கவில்லை.

"பெரியவர் தாங்க தெய்வம். தூரக்க இருந்து பார்த்து மனசில கேட்டா காரியம் நடக்குது. உங்களுக்கு என்ன வேணுங்க!"

"காஞ்சிபுரத்தில நல்ல ஓட்டல்பா!"

"அம்மா உங்களுக்கு?"

"நிம்மதி" என்றாள்.

"அய்யாதான் கேலியாய்ப் பேசறாரு!"

"பால்ராஜ், பாருங்க எனக்கு இதிலே எல்லாம் நம்பிக்கை இல்லை. நான் செய்யற ஆராய்ச்சில கடவுள் தேவைப்படறதில்லை."

"எனக்குத் தேவைப்படுதுங்க."

"லுக் அவுட்!" என்று கத்தினார்.

"டாக்டர் சிவசங்கர்."

"காஞ்சி பார்ட்டி நீங்கதானே?

ப்ரதிபா டிராவல்சிலே வண்டி கேட்டிருந்தீங்களே!"

"ஆமாம்."

"இருங்க வண்டி வந்திருக்குது."

"நான் சிவராமன் இல்லைப்பா."

"சரி சிவசங்கர். வாங்க! உங்களுக்குத்தான் வண்டி."

பாகீரதிக்கு அந்த டாக்ஸி டிரைவரைப் பிடித்திருந்தது. பெட்டியை எடுத்து வைத்துக் கதவை மரியாதையாகத் திறந்து, மூடி, ஓடிப் போய் சீட்டில் அமர்ந்தான்.

"ஒரு பேரை ஒழுங்காக் கொடுக்கத் தெரியலை; என்ன ட்ராவல் எஜெண்டுப்பா!"

"அது சில சமயங்கள்ள தப்பாயிருதுங்க, டெலெக்ஸ்ல."

"எது சரியாய் இருக்கு உங்க நாட்டில?"

"டிரைவர் உங்க பேரு என்ன?"

"பால்ராஜுங்கம்மா. ஏசி போட்டுரலாங்களா? காசட் போட்டுரலாங்களா?" காசட்டைச் செருகினான்.

"கண்ணும் கண்ணும் கொள்ளையடித்தால் காதல் என்று அர்த்தம்."

"எனக்குக் காதல் வேண்டாம்ப்பா!" பட்டென்று நிறுத்தினான்.

கார் கிளம்பி நெடுஞ்சாலையில் சேர்ந்து கொண்டது.

"பக்தி பாட்டு போடட்டுங்களா?"

"எதுவும் வேண்டாம்ப்பா, ஆளை விடு!"

"பூந்தமல்லி பக்கம் திரும்பியதும், "பால் ராஜ், மெதுவாப் போங்க, அவசரமே இல்லை."

"நீங்க பெரியவரைத் தரிசனம் பண்ண வேண்டாமா இன்னைக்கு? போயிரலாங்க ரெண்டு அவர்ல."

"நாளைக்கு மெதுவா தரிசனம் பண்ணிக்கறம்பா. எனக்கு அவசரம் இல்லை. நான் பார்க்கலைன்னாக்கூட பரவால்லை. இந்த அம்மாதான் இதுக்காகவே அமெரிக்காவிலிருந்து வந்திருக்குது!"

"அப்படீங்களா? சந்தோசங்க. மனித தெய்வம் சார் பெரியவரு. இதுவரைக்கும் எம்பத்தொன்பது முறை தரிசனம் பண்ணிட்டேங்க! இன்னம் பதினொன்று பண்ணா நூறாயிடும் - அவருக்கு நூறு வயசு ஆனாப்பல."

"பால்ராஜ் நீங்க கிறிஸ்டியன்தானே?

"ஆமாங்க அதனாலே என்ன சார்?"

"Funny!" என்றார் சிவசங்கர்.

"எங்க வீட்டுல அவருதாங்க தெய்வம். அவரு என்ன சொல்றாரு? நீ சர்ச்சுக்குப் போ - மசூதிக்குப் போ - கோயிலுக்குப் போ - கடைசில - எல்லா தெய்வங்களும் ஒண்ணு தானேம்பார்."

"விபூதி வரவழைப்பாரா?"

"அது சாய்பாபாங்க. அவர் உங்களைப் பார்த்தாலே போதுங்க - நினைச்ச காரியம் நடக்கும்."

"உனக்கு நடந்ததா?"

"பின்ன? நம்ம புள்ள ரோஸ்மேரிக்குத் தபால் ஆபீஸ் உத்தியோகம் கிடைக்கணும்னு ஒருமுறை கேட்டேங்க. அடுத்த ட்ரிப்ல ஆர்டர் வந்துருச்சு!"

"அப்படியா டெலிபோன்ஸ்லயும் இருக்காரா இவர்!" என்றார்.

அந்தக் கேலியை பால்ராஜ் கவனிக்கவில்லை.

"பெரியவர் தாங்க தெய்வம். தூரக்க இருந்து பார்த்து மனசில கேட்டா காரியம் நடக்குது. உங்களுக்கு என்ன வேணுங்க!"

"காஞ்சிபுரத்தில நல்ல ஓட்டல்பா!"

"அம்மா உங்களுக்கு?"

"நிம்மதி" என்றாள்.

"அய்யாதான் கேலியாய்ப் பேசறாரு!"

"பால்ராஜ், பாருங்க எனக்கு இதிலே எல்லாம் நம்பிக்கை இல்லை. நான் செய்யற ஆராய்ச்சில கடவுள் தேவைப்படறதில்லை."

"எனக்குத் தேவைப்படுதுங்க."

"லுக் அவுட்!" என்று கத்தினார்.

வண்டி ஒரு லாரியை நூலிழையில் தவிர்த்து, தார் சாலையை விட்டு இறங்கி பாம்பு போல் நெளிந்து மரத்தருகே நின்றது.

அவர் உடல் நடுங்கி நெற்றி வியர்வை படர்ந்திருக்க, பால்ராஜ் இறங்கி டயரை உதைத்து, "பஞ்சர்ங்க! பதினைந்து நிமிஷத்தில ஸ்டெப்னி போட்டுரலாங்க. இளநி சாப்பிடுங்க."

சிவசங்கர் சிகரெட் பற்றவைத்தார். மரத்தடியில் கயிற்றில் குலை குலையாக இளநீர் தொங்கியது.

"இளநி சீவலாங்களா?"

"வேண்டாம்ப்பா."

"சீவிட்டேங்களே!"

பாகீரதி பதற்றத்துடன் மற்றொரு வாக்குவாதத்தை எதிர்பார்த்தாள்.

"சரி, குடு" என்றார். நல்ல வேளை.

இளநீரை உறிஞ்சுகையில், "இந்தியால இது ஒண்ணு தான் உருப்படியா இருக்கு!"

பால்ராஜ் டயர் ஸ்பானரை டிக்கி இடைவெளியில் செருகி விட்டு, "போவலாங்க" என்றார்.

"இளநி சாப்பிடுங்க பால்ராஜ்" என்றாள் பாகீ.

"வேண்டாம்மா. பெரியவரைப் பார்க்கிற வரைக்கும் பச்சை தண்ணி பல்லுல படக்கூடாது."

"மயிரிழைல தப்பினம்."

"எல்லாம் பெரியவர் ஆசிங்க!"

"அப்படியா?" மறுபடி டாக்டரின் கேலிக் குரல்.

காஞ்சிபுரத்தை அணுகும்போது மணி மூன்றாகிவிட்டது. ஏரியில் வாத்துகள் நீந்த, அதை அணைத்துச் சென்ற பாதையில் பனைமர சோல்ஜர்கள் காவல் நின்றன. கோபுரங்கள் வெண்மையாக, புதுசாகத் தெரிந்தன. நகரமே நூறாவது ஆண்டைக் கொண்டாட அலங்கரித்துக் கொண்டிருந்தது. குறுக்கும் நெடுக்கும் தட்டியும் மூங்கிலும், சுதந்திர மாடுகளும், ஓடும் நாய்களும், லாட்டரி டிக்கெட் நிறைந்த சைக்கிள்களும். பாகீரதிக்கு உற்சாகம் பொங்கியது.

பெரிசாக பந்தல் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

"இங்கதான் விழா நடக்கப் போகுதுங்க."

"யாராவது இந்த ஊரைப் பார்த்தா பழைய பல்லவர் காலத்து தலைநகர்னு சொல்வாங்களா? வாட்டிகனைப் பார்த்தியே எப்படி இருந்தது? ஆயிரம் ஆண்டு பழசுன்னா அமெரிக்கால என்னமா 'ப்ரிசர்வ்' பண்ணுவா!"

"நமக்கு அதெல்லாம் முக்கியமில்லைங்க,"

"நான் உன்கிட்ட பேசலை பால்ராஜ்."

"நேராப் போய்ப் பெரியவரை முதல் தரிசனம் பண்ணிரலாங்க. அப்புறம் போயி மத்த சாமிங்களைப் பார்த்துரலாம்."

சிவசங்கர் தீர்மானமாக மறுத்தார். "முதல்ல ஓட்டல் போய் 'செக் இன்' பண்ணிட்டு அப்புறம்தான் மத்ததெல்லாம்."

"இல்லைங்க. அரைமணிதான் அவரைப் பார்க்க சமயம். அதுக்கு தாங்க வண்டியை விரட்டிக்கிட்டே வந்தேன்."

"நாளைக்குப் பார்த்துக்கலாம். முதல்ல ஓட்டல். எனக்குப் பசிக்கிறது."

ஆர்ச் வளைவுகளில் மூன்று பெரியவர்களும் ஆசிர்வதிக்க நரசிம்மராவ் எழுதிக் கொண்டிருந்தார்.

'காமாந்தகார கன்னி' என்ற சினிமா சுவரொட்டியை உரக்கப் படித்தார்.

ஒரே ஒரு த்ரீ ஸ்டார் ஓட்டல்தான் இருந்தது. அதிலும் ரூம் போட்டு உள்ளே சென்று படுக்கையில் உட்கார்ந்ததும் குறை சொன்னார்.

"பாத்ரூமில் கரப்பான் பூச்சி, சுவர்களில் ரத்தக் கறை, டவல் அழுக்கு, மருந்து நாற்றம் அமெரிக்கால ஒரு மினிமம் க்ளின்லினெஸ் - ஆவது."

பாகீரதி கடைசியாகப் பொறுக்க முடியாமல், "ரெண்டு நாளைக்கு அமெரிக்காவை விட்டு இந்தியாவுக்கு வாங்களேன். நாம வந்தது பரமாச்சாரியாளைத் தரிசனம் பண்ண. ஓட்டல் மூட்டைப்பூச்சியை எண்ண இல்லை."

"நாம வந்ததுன்னு சொல்லாதே. நீ வந்ததுன்னு சொல்லு! எனக்கு இதில இஷ்டமில்லை; நம்பிக்கை இல்லை. அவரைப் பார்க்காட்டிக் கூட எனக்குப் பரவாயில்லை. தலைவலி எனக்கு!"

அதற்குள் பால்ராஜ் வந்து, "அம்மா, அம்பாள் பூசை செய்யறாரு சின்னவரு. வாங்க போய் தரிசனம் பண்ணிடுங்க."

"வரேன் பால்ராஜ் கிளம்புங்க. சார் நீங்க "

"நான் வரலை நீ போ. நான் ரூம்ல இருக்கேன்."

"நீங்க வராம தனியாப் போக மாட்டேன்."

"அதான் உனக்கு புது ப்ரெண்ட் பால் இருக்கானே?"

"அய்யா நான் உள்ளே வர மாட்டேங்க! வெளியே பெரியவரை ஒருமுறை தரிசனம் செய்தா போதும்."

"சரி சரி சீக்கரம் கிளம்புங்கோ"

"ச்சே! உன்னோட எப்போதுமே பெரிய வேதனை பாகீ!"

"ப்ளீஸ்! ஒரு நாளைக்கு, ஒரே ஒரு நாளைக்கு உங்க ஃபிசிக்ஸ் பேசறதை மறக்கக் கூடாதா, பிடிவாதத்தை விட்டுக் கொடுக்கக் கூடாதா? இந்தப் பிடிவாதம் பிடிச்சுத் தானே பிள்ளையைப் பறிகொடுத்தோம்."

அவர் சட்டென்று மௌனமாகத் தீய்க்கும் கண்களால் பாகீரதியைப் பார்த்து, "நான் தான் காரணமா! நான் மட்டும்தான் காரணமா?" என்றார்.

"மறுபடி ஆரம்பிக்க வேண்டாம்."

"நான் தான் காரணமா சொல்லு?"

"சரி நானும்தான் காரணம்."

பால்ராஜ் தர்மசங்கடத்தை உணர்ந்து, "நான் ஓட்டல் வாசல்ல வண்டி கொண்டு வரேங்க!"

சிவசங்கர் "ஆல் ரைட்! வரேன். ஆனா என்னால சட்டையெல்லாம் கழட்ட முடியாது. அப்பப்ப ஸ்மோக் பண்ணுவேன். நான் நாஸ்திகன். மதமும் ஒரு போதைப் பொருள். ஒரு ஏமாற்று வேலைன்னு நம்பறவன்."

"சும்மா வாங்களேன் துணைக்கு!"

அவர் அரை டிராயரையும் யுனிவெர்சிட்டி பனியனையும் மாட்டிக் கொண்டு தலையில் பேஸ்பால் குல்லா போட்டுக் கொண்டு "லெட்ஸ் மூவ்!" என்றார்.

பாகீரதிக்கு அழுகை வந்தது. ஏன் இத்தனை பிடிவாதம் பிடிக்கிறார்! ஏதோ நிகழப் போகிறது என்று வயிற்றில் பயம் முலாம் பூசியது.

மடத்துக்குள் நூற்றுக்கணக்கானவர்கள் உட்கார்ந்திருக்க மேடை மேல் பூஜை நடந்து கொண்டிருந்தது.

"ஹூ இஸ் திஸ் பாய்?"

"புதுப் பெரியவா."

"வாட் நான்சென்ஸ், இந்தப் பையன் கால்ல விழணுமா?"

"நீங்க விழ வேண்டாம்."

"இவர் நம்பர் த்ரீயா? வேர் இஸ் நம்பர் டூ?"

"பேசாம இருங்களேன் ப்ளீஸ்."



ஆயாசம் தரும் அளவுக்குக் காத்திருந்த பின் ஆரத்தி எடுத்தார்கள்.

அங்கிருந்து சுவரோரமாக நடந்து நழுவி, பெரியவரைப் பார்க்கச் சென்றார்கள்.

சிவசங்கரன் ஓரமாக நிற்க.

"நிக்கறேளே உட்காருங்கோ. பேரு? "

"ஷிவ்ஷங்கர்."

"ஊரு?"

"அமெரிக்கால ப்ரின்ஸ்டன்ல பிசிக்ஸ் ப்ரொபசரா இருக்கேன்."

"ப்ரின்ஸ்டன்லதானே ஜெயராமன்னு மடத்துக்கு ரொம்ப வேண்டப்பட்டவர் இருக்கார்."

"எனக்குத் தெரியாது. ப்ரின்ஸ்டன்ல ஐன்ஸ்டைன்னு ஒரு மகாமேதை இருந்தார்."

"உங்க பௌதீக சாஸ்திரம் என்ன சொல்றது, ஆதி சங்கரர் சொன்னதைத் தானே!"

"இல்லை சுவாமி. பௌதீகம் ரொம்ப தூரம் போயிட்டது. பிரபஞ்சத்தையே ஒரு துகள், ஒரே ஒரு சக்தி இதில் விளக்க முடியுமா பார்க்கறா!"

"அதையே தான் - சக்தியும் சிவமும்னு ஒரு சரீரத்தில் அர்த்தநாரீஸ்வர திருக்கோலத்தோட ஒரே பொருளா விளங்கறா!"

"இல்லை நாங்க சொல்றது வேற."

"அது இங்கிலீஷ், இது சம்ஸ்கிருதம். பவானீத்வம். இனி நீயாவே நான் ஆகி விடுகிறேன். நான், என்னுடையது என்கிறதை உன்னிடத்திலேயே கரைச்சுடறேன்னு சொல்றார்!"

"அப்படி இல்லை " என்றார் சிவசங்கரன்.

"வாங்க போகலாம்" என்றாள் பாகீரதி.

"உங்களுக்கு மிராகிள்ஸ்ல நம்பிக்கை இல்லையா?"

"இல்லை."

"பால்ப்ரண்டன், ஆர்தர் கோஸ்லர் எல்லாரும் எழுதிருக்காளே படிச்சதில்லை?"

"இல்லை."

"பரமாச்சார்யாள் மெஹபூப் நகர்ல சாதுர்மாஸ்ய பூஜைக்காக காம்ப் இருக்கறப்ப, உங்களைப் போலத் தான் ஒருத்தர் அமெரிக்காவில இருந்து வந்திருந்தார். பஸ் ஸ்டாண்டில சைக்கிள் ரிக்ஷாவைப் போட்டுண்டு வந்தார். ஆசீர்வாதம் வாங்கிண்டார்.

அப்பல்லாம் மஹாபெரியவா நன்றாகவே எல்லோருடனும் பேசுவா. அவர் கொடுத்த குங்குமத்தைத் தன் தலையிலே அப்பிண்டு, ஆப்பிளைக் கொடுத்து அனுப்பிச்சார்.

அவர் மடத்திலேயே சாப்பிட்டுட்டு ஏதாவது காண்ட்ரீப்யூஷன் பண்ணலாம்னு பர்சை எடுக்கறார். காணோம். பதறிப் போய்ட்டார்.

பர்ஸ் மட்டும் இல்லை. பாஸ் போர்ட்டு, 'டிராவலர் செக்'குங்கறாளே - பதினஞ் சாயிரம் டாலர் - எல்லாமே காணும். அப்படியே ஒடிஞ்சு போய்ட்டார். எங்கன்னு தேடுவார்? சாப்ட்ட இடத்தில இல்லை. சைக்கிள் ரிக்ஷாக்காரனை வீடு தேடிப் போனா அவங்கிட்டேயும் இல்லை.

கடைசில எங்க இருந்தது தெரியுமா? பஸ் ஸ்டாண்டில சிமெண்ட் பெஞ் சில அவர் உட்கார்ந்திருந்த இடத்தில. அந்த இடத்தில் ரெண்டாயிரம் பேராவது புழங்கியிருப்பா. இதுக்கு என்ன சொல்றேள் சிவசங்கரன், மிராக்கிள் இல்லையா இது? இதை உங்க பௌதீக சாஸ்திரம் எப்படி விளக்க முடியும்?"

"நீங்க மிராக்கிள்ன்னு சொல்லலாம். நான் இதை பிராபபிலிட்டி - சான்ஸ் இப்படித்தான் சொல்வேன். தரிசனம் ஆச்சோல்லியோ போகலாமா பாகீ!"

அவர் புன்னகைத்துப் பிரஸாதம் படாமல் கொடுத்தார்.

வெளியே வரும்போது பாகீரதி கோபத்தில், "அவர் கிட்ட கூடவா ஆர்க்யுமென்ட்?"

"ஏன்? அவரும் என்னைப் போல் ஒரு ஆத்மா தானே? அதானே அத்வைதம் சொல்றது?"

பால்ராஜ் வெளியே காத்திருந்தான். "வேகமா வாங்க, நீங்க அதிர்ஷ்டம் பண்ணவங்க. மஹா பெரியவரை இன்னும் அரை மணி பார்க்கலாமாம்!"

அந்த மண்டபத்தை ஒட்டி புறப்பட்ட க்யூ தெருவில் தொடர்ந்தது. மெல்ல மெல்ல நகர பாகீரதி ஓட்டமும் நடையுமாக அதன் வாலில் சேர்ந்து கொண்டாள். மற்றதெல்லாம் மறந்து போய் விட்டது.

ஒரு வெள்ளைக்காரி பல்பொடி கலரில் ஜிப்பா அணிந்து கொண்டு நிஷ்டையில் எதிரே திறந்திருந்த வாசலையே நோக்கிக் கொண்டிருந்தாள். உள்ளே இலேசான இருட்டாக இருந்தது. மெல்ல அணுகினார்கள்.

உள்ளே அந்த நூறு வயதுப் பெரியவர் ஏறக்குறைய மல்லாந்த வாக்கில் உட்கார்ந்திருந்தார். காவி முட்டாக்கின் மேல் இலைக் கிரீடம் வைத்திருந்தார்கள். முழங்கால் மடங்கியிருந்தது. யாரையும் குறிப்பாகப் பார்க்கவில்லை.

அருகே ஒரு பிராமண இளைஞன் வரிசையை "ம்ம் நகருங்க" என்று துரிதப்படுத்திக் கொண்டிருக்க, அவ்வப்போது மாலையை அணிவித்துக் கழட்டிக் கொண்டிருந்தான். இளைஞன் பால்ராஜை அடையாளம் கண்டு கொண்டு, "என்ன பால்ராஜ் எத்தனாவது தடவை தரிசனம்?"

"தொண்ணூறுங்க! அய்யா. அமெரிக்காவிலிருந்து வந்திருக்காரு"

"அமெரிக்காலருந்து நிறைய பேர் வரா! வாங்கம்மா கிட்ட பாருங்கோ " என்று பாகீரதியை அருகே அழைக்க.

பாகீரதி அந்தக் கணத்தில் தன் சகல கட்டுப்பாடுகளையும் இழந்து கண்ணீர் உதிர்க்க, புடவை மேல் பட்டுத் தெறித்தது.

"பரமாச்சார்யாள் கிட்டே சொல்லுங்கோ. இந்த க்ஷணத்துக்குத்தான் பத்தாயிரம் மைல் கடந்து வந்திருக்கோம். மேம்போக்கா இவர் குதர்க்கம் பேசினாலும் உள்ளுக்குள்ளே இவருக்கும் நம்பிக்கைதான்.

ஒரே பிள்ளை. பாலாஜின்னு பேர் வச்சோம். 12 வயசு வரைக்கும் சமத்தா வளர்ந்தான். பாழாப்போன அமெரிக்காவில அப்பாவுக்கும் பிள்ளைக்கும் சரிப் படாம வாக்குவாதம் வந்து வீட்டை விட்டுப் போய்ட்டான்!

உலகம் பூரா தேடியாச்சு. நேபாள், சிலோன், ஜப்பான், எல்லாம் தேடியாச்சு. ஆக்சிடெண்டில போய்ட்டானா, செத்துப் போய்ட்டானா, இருக்கானா? எம்புள்ளை போய்ட்டான். நிம்மதியே இல்லை. இன்னி வரைக்கும்!"

"பரமாசார்யாளைத் தரிசனம் பண்ணிக்குங்க. சார் நீங்களும்தான் சார்."

அந்த இளைஞன், அருகில் சென்று அவர் காதுடன் சொல்ல, ஸ்ரீமஹா பெரியவா கைகளை உயர்த்தி வாழ்த்தினார். பாகீரதியின் நெஞ்சு நிறைந்தது.

காட்டராக்ட் கண்ணாடி வழியாகப் பெரிய கண் ஒன்று அவளைப் பார்த்தது.

ஆப்பிள் பழத்தையும் ரோஜாவையும் கொடுத்த அந்த இளைஞன்,

எல்லாம் சரியாய்ப் போய்டும்.

கவலைப்படாதீங்கோ.

பையன் பேர் என்ன சொன்னேள்?

"பாலாஜி."

அவர்கள் வெளியே வந்தனர்.

சிவசங்கர் கோபமாக, "ஏன் சின்னக் குழந்தை மாதிரி அழறே?"

சினிமாவில வர மாதிரி உன் பிள்ளை வருவான்னு நினைச்சியா!

அவள் அடங்காமல் அழுதாள்.

"பாகீ! பாகீ. டோன்ட் பி சில்லி. டோன்ட் மேக் எ ஸீன்! கமான்!" அவளைத் தோளில் பற்றி, பரிவு என்பதன் முதல் அடையாளம் சற்றே தெரிய நடத்தி அழைத்துச் சென்றார். பின்னால் குரல் கேட்டது. மடத்து சிப்பந்தி ஒருவர் ஓடி வருகிறார். "மாமி மாமி, பெரியவா உங்க கிட்ட யாரையோ அனுப்பியிருக்கா"

யார்?

ஒரு கட்டுக்குடுமிக்காரர் ஒருவர் ஒரு இளம் வாலிபனுடன் வந்தவர் "டேய் பாலாஜி நேத்திக்கி பெரியவா சொன்னாளே இன்னிக்கி வருவான்னு" இவா தானே அது -

"எங்க அப்பா அம்மா தான் வந்திருக்கா!"

இதற்கு மேல் எழுதுவது அர்த்தமில்லை. படிப்பவர்களே, உங்கள் இதயமும் மனமும் பெரியவாளின் அனுக்ரஹத்தை தானே எழுதிக்கொள்ளும்.



# 29. ஒரு அட்வைஸ்

கோடிக்கணக்கான சாதாரண முகம் தெரியாத நபர்களில் அவரும் ஒருவர். அம்பத்தூரில் ஒரு பட்டறையில் தினக்கூலி வேலை ஆனாலும் செய்த வேலைக்கு மாதந்திர சம்பளம். லீவு போட்டாலோ, விடுமுறை நாட்களுக்கோ சம்பளம் கிடைக்காத தொழிலாளிகளில் ஒருவர். அவர் மனைவி ஒரு நோயாளி. இம் மாதிரியான கஷ்ட ஜீவன குடும்பங்களில் அனேக வீடுகளில் பிறந்த பிள்ளைகள் பொறுப்பு இல்லாமல் தறுதலையாக அலைந்தால் கஷ்டம் எவ்வாறு விஸ்தரிக்கும் என்று எண்ணிப் பார்த்துக் கொள்ளலாம். இப்படி சிரமங்களையே சந்தித்துக் கொண்டிருந்த அந்த தொழிலாளிக்கு நண்பர் ஒருவர். மகா பெரியவா பக்தர்.

“இதோ பாருடா, நீ ஒரு நாள் காஞ்சிபுரம் போ. கருணைக் கடலான காஞ்சிப் பெரியவரை ஒரு தடவை சென்று தரிசித்து அவரது ஆசியைப் பெற்றுக் கொண்டு வா. அப்புறம் பாரேன், உன் சிரமங்கள் எல்லாம் காற்றோடு போய்விடும்”, என்று தொழிலாளியின் நண்பர் யோசனை சொன்னார். அப்போதிலிருந்து அந்த ஏழைத் தொழிலாளி மனதில் “காஞ்சி மகானைப் போய் ஒரு தரம் பார்க்க வேண்டும்” என்கிற எண்ணம் வேர் விட்டது.

முதலாளி ஒரு சில மாதம் கழித்து ஏதோ தொழில் சம்பந்தமாக வெளியூர் அனுப்பினார். போக வேண்டிய இடமும் காஞ்சி வழியாகப் போகும் சந்தர்ப்பத்தை கொடுத்தது. ஆனதால் காஞ்சியில் இறங்கி யாரிடமோ வழி கேட்டுக் கொண்டு பெரியவா எங்கு தங்கியிருக்கிறார் என்று விசாரித்துக் கொண்டிருந்தார். அவருக்குள் அப்போது ஒரு எண்ணம் தோன்றியது.

“உலகோர் போற்றிப் புகழும் நிலையில் பக்தர்கள் கூட்டம் தரிசனத்துக்காக நிற்க, பரிவாரங்களுடன் அமர்ந்திருப்பாராமே, இந்த சாமியாரைத் தான் எப்படிப் போய் பார்ப்பது? என்னை அவர் பார்ப்பாரா?” என்கிற ஒரு சந்தேகத்தோடு அந்த தொழிலாளி யாரோ குறிப்பிட்ட இடத்தை நோக்கிச் சென்று கொண்டு இருந்தார்.

இவர் எதிர்பார்த்த மாதிரி ஆடம்பரங்களோ. ஆரவாரமோ ஏதும் அந்த இடத்தில் தென்பட வில்லை.

“அந்த சாமியார் வேறு எங்கோ போய்விட்டார் போலிருக்கிறது. அது தான் ஆரவாரமில்லை. கூட்டமில்லையோ?” என்று இவர் நினைத்துக் கொண்டார். தனக்கு விடிவுகாலம் பிறக்க அவரிடம் ஆசி பெறலாம் என்று வந்த அவரது கடுகளவு ஆசையும் மறையத் தொடங்கியது. நமக்கு கொடுத்து வைத்தது அவ்வளவுதான்.

யாரிடம் போய்க்கேட்பது? ஆள் அரவமே இல்லையே என்று அவரது கண்கள் தேடியபோது, ஒரு வயதானவர் அவரது கண்களில் தென்பட்டார்.

வந்தவர் அவரிடம் கேட்டார்.

"இங்கே ஒரு சன்யாசி இருக்காராமே. அவர் எங்கேபோயிருக்கார்?"

"அவரையா பார்க்க வந்தாய்? யார் சொல்லி அனுப்பினது உன்னை?"

"இந்தக் கேள்வியும் அவரது அமைதியான முகபாவமும் தொழிலாளியின் உள்ளத்தில் நம்பிக்கையை ஏற்படுத்தின. அதனால் வந்தவர் தனது குடும்ப சூழ்நிலையையும் தற்போது ஏற்பட்டுள்ள வறுமையையும் சொல்லி, தன் நண்பர் ஒருவர் இங்கே இருக்கும் காஞ்சி பெரிய சாமியாரைப் பார்த்து ஆசிகள் வாங்கச் சொன்னார்" என்றார்.

"அவர் கிட்டே போய் உன்னுடைய சிரமங்களைச் சொன்னால் தீர்வு கிடைக்குமா என்ன?" என்று அந்த கிழவர் பதிலுக்கு ஒரு கேள்வி கேட்ட போது'

'ஏன் இந்த வயதான கிழவர் தன்னிடம் ஏன் இப்படி ஒரு கேள்வியைக் கேட்கிறார்'? வயதானவர் தொடர்ந்தார்.

"சிரமம், சிரமம்னு சொல்றியே. அதை ஏன் நீ படறதா நினைக்கிறேப்பா? அந்தப் பாரம் உன்னோடது இல்லையின்னு நீ நினைச்சிட்டா மனம் லேசாயிடுமே." என்று கிழவர் மேலும் சொன்னார்.

"இது எப்படிங்க சாத்தியம்?' நான் தானே அத்தனை கஷ்டங்களையும் தாங்கிக்க வேண்டிருக்குது. என் கஷ்டங்களை வேறு யார் சுமப்பாங்க?" என்றார் தொழிலாளி.

வயதான பெரியவர் சிரித்தபடியே அந்த தொழிலாளியிடம் "இப்போ ஊருக்குப் போறோம்னு வையுங்க. உங்களோட பெட்டி,மூட்டை முடிச்சு எல்லா பாரத்தையும் சுமந்துண்டு போய்த்தானே ஆகணும்? அப்ப என்ன பண்றோம்? யாராவது கூலியாள் கிட்டே குடுத்து சுமக்கச் சொல்றோம் இல்லையா? அது போலத் தான் நாம படற சிரமங்களை நம்மது இல்லே, பகவான் பார்த்துப்பான்னு பூரண சரணாகதி அடைஞ் சுட்டா நமக்கு எந்த பாதிப்பும் வராது.

இதைக் கேட்ட அம்பத்தூர் தொழிலாளிக்கு கொஞ்சம் மனத்தெளிவு ஏற்பட்டது. அவர் வயதானபெரியவரைப் பார்த்து.

"பெரியவரே, இப்ப எனக்கு கொஞ்சம் மனசு லேசானது போலஇருக்கு. என்பாரம் உன்னோடதுன்னு பகவான்கிட்டே சொல்லிடறது நல்லதுதான். நீங்கள் சொல்ற மாதிரி இந்த சாமியார் கிட்ட வந்து என் பாரங்களை இறக்கி வெச்சுட்டுப் போகலாமுன்னு வந்தா, இங்கே அவரைப் பார்க்க முடியல்லே. எங்கிருக்கார்னும் தெரியலே, என்னை அவர் பார்ப்பாரோன்னும் சந்தேகமா இருக்கு. எனக்கு உடனே மெட்ராஸ் போயாகணும். என் மொதலாளி கோவிப்பான். அதனாலே இங்கே காத்திருந்து அந்த சாமியாரை பார்க்கமுடியாது போலிருக்கு. எனக்கு இன்னமும் நல்ல காலம் வரலே



போலத் தோணுது. எதோ உங்களாண்டை பேசினதுனாலே மனசுக்குக் கொஞ்சம் இதமாக இருக்கு. ஆமா நீங்க யாரு? இதே ஊரா?" என்று கேட்டார்.

வயதானவர் முகத்தில் சிரிப்புடன் 'என்னை இங்கே சங்கராச்சார்யார்னு சொல்லுவா" என்று சொன்னதும் அம்பத்தூர்காரருக்கு இன்ப அதிர்ச்சி.

வியப்போடு அந்த எளிமையின் உருவத்தைப் பார்த்த வண்ணம் ஒன்றுமே தோன்றாமல் மலைத்து நின்றார்.

அதுவரை அந்த சாதாரண தொழிலாளியிடம் அன்பாகப் பேசிக் கொண்டிருந்த அந்தத் தவ முனிவரைத் தரிசிக்க இப்போது ஒரு பெருங்கூட்டமே காத்திருந்தது.

இத்தனை நேரம் ஒரு மாபெரும் மகானிடம் சர்வ சாதாரணமாக பேசி, அவரிடம் யோசனைகள் பெற்றதை எண்ணி அந்தப் தொழிலாளி பக்தர் வியந்தார்.

"நமஸ்காரம் பண்ணிக்கிறேன் சாமி'' என்ற அந்த பக்தரை ஆசிர்வதித்தார் மகான்.

யாருக்குமே கிட்டாத மாபெரும் பாக்கியம் அவருக்குக்கிடைத்தது. தொடர்ந்து அவரது இன்னல்கள் யாவும் பனிபோல் விலகின என்று சொல்லவோ எழுதவோ வேண்டாமே?



# 30. என்ன உத்தியோகம்?

அன்று ரொம்ப உத்சாகமாக ஒரு நண்பர் தாத்தாவை பார்க்க வந்தவர் பாட ஆரம்பித்தார். "கருணை தெய்வமே கற்பகமே" என்று சிந்துபைரவியில் ஆலாபனை பண்ணி முடித்தார்.

"பேஷ்'' கருணை தெய்வம் என்னை பொறுத்தவரை கஞ்சி மகான் தான்.

"இன்னிக்கு என்ன சப்தரிஷிக்கு இவ்வளவு உத்சாகம். இதுவரை என்னை சந்தித்தபோது பாடிக்காட்டியதே இல்லையே.''

"என் மகனுக்கு பாங்க்லே வேலை கெடைச்சிருக்கு. பெரியவா அனுக்ரஹம்''

வாஸ்தவம். பெரியவா அனுக்ரஹத்தாலே இன்னொருத்தருக்கும் பாங்க்லே வேலை கிடைச்ச விஷயம் இருக்கே.

சொல்லுங்க சார் அதைக் கேக்கணும்!

திருச்சி பக்கத்துலே ஒரு ஊர். அங்கேயிருந்து கணபதி என்று ஒரு பக்தர். காலேஜ் படிக்கும்போதே பெரியவா கிட்ட ரொம்ப பக்தி. அவருக்கு வேலை கிடைப்பது பெரும் பிரச்னையாக இருந்தது. எங்கெங்கோ தேடியும் சரியாக ஒரு வேலை கிடைக்கவில்லை. அப்பா அம்மாவைக் கூட்டிண்டு பெரியவாளை தரிசனம் பண்ண. காஞ்சிபுரம் போனார். பெரியவா கிட்ட தரிசனம் பண்ற நேரத்திலே மனதிலே இதே நெருடல்

"மகானிடம் அதை எப்படிச் சொல்றது?" என்று தயக்கம் கணபதிக்கு.

"உன் பேர் என்ன?"

"கணபதி சுப்ரமணியன்"

எங்கே உத்தியோகம் பண்றே?

"இன்னும் சரியா எதுவும் கிடைக்கலே"

"எங்கே இருக்கே நீ இப்போ?"

"திருச்சி பக்கத்திலே."

"சரி, திருச்சிலே நிறைய பெரிய பாங்குகள் எல்லாம் இருக்கே"

"இருக்கு பெரியவா''



''அப்படின்னா என்ன உனக்கு அதிலே எதிலேயாவது ஒண்ணுலே கிடைக்குமே''

“பெரியவா அனுக்ரஹம்''

பிரசாதம் பெற்றுக்கொண்டு வீடு திரும்பின கணபதிக்கு சில நாட்கள் கழித்து இரண்டு இடங்களில் வேலைக்குச் சேரும்படி ஆர்டர் வந்தது. சென்னையில் ஒன்று- திருச்சியில் ஒன்று-சென்னை வேலை நிரந்தரம். திருச்சியில் தற்காலிகமானது. எதில் சேருவது என்று குழம்பிப்போன கணபதி காஞ்சிக்கு ஓடினார். அங்கே பல மணி நேரம் காத்திருந்து பெரியவா தரிசனம் கிடைத்தது. மகானை அணுகி யோசனை கேட்டார்.

“திருச்சி பாங்க் உத்யோகத்திலேயே போய்ச் சேர்”

கணபதிக்கு உள்ளூர உதைப்பு. பெரியவா திருச்சியிலேயே டெம்பரரி பாங்க் உத்தியோகத்திற்குப் போகச்சொல்கிறாரே.

'மனத்தில் கலக்கத்தோடு திருச்சி பாங்க் உத்தியோகத்திற்குப் போனார். திருச்சி பாங்க்லே அவருக்கு கிடைச்சது தற்காலிக வேலை. யாரோ ஒருவர் லீவில் போய்விட்டவருக்கான உத்தியோகம். அவர் திரும்பவும் வந்து உத்தியோகத்தில் சேர்ந்துவிட்டால் கணபதி மீண்டும் வீட்டிற்குத் திரும்ப வேண்டியதுதான்!

கணபதி என்ன செய்வது என்று தெரியாமல் கவலையோடு அந்த உத்தியோகத்தில் ஒட்டிக்கொண்டு இருந்தார். “என்னிக்கு இந்த உத்தியோகம் போகப்போறதோ?”.

என்ன ஆச்சர்யம்? லீவில் போனவர் தனது வேலையை ராஜினாமா செய்துவிட்டார். அதன் பலனாக அந்த நல்ல பாங்க்வேலை கணபதிக்குக் கிடைத்தது.

கருணைக்கடலே கற்பகமே. பெரியவாளின் தீர்க்க தரிசனத்தை எண்ணி கணபதி ஆனந்தக் கண்ணீர் வடித்தார்.

உள்ளன்போடு அணுகி பிரார்த்திப்பவர் யாராக இருந்தாலும், மகானிடம் நன்மை ஒன்றையே அடைந்திருக்கிறார்கள் என்பது அனுபவம்.



# 31. வெங்கண்ணா கோவிலுக்கு ஆபத்து!

திருப்பதி வெங்கடாசலபதியை தெரியாது என்று யாராவது சொன்னீர்களேயானால் உங்கள் பேரே உங்களுக்கு தெரியாது என்று சொல்கிறமாதிரி தான்.

சக்தி வாய்ந்த தெய்வத்தின் க்ஷேத்ரம் திருப்பதி திருமலை. கலியுக வரதன் கண்கண்ட தெய்வம் என்றெல்லாம் போற்றப்படுகிற அந்த பகவானின் க்ஷேத்ரம் ஆந்த்ர ப்ரதேசத்தில் இருக்கிறது. சிறந்த திவ்ய வைணவ க்ஷேத்ரம், எண்ணற்றோரால் பாடல் பெற்ற ஸ்தலம். லட்சோப லக்ஷம் பக்தர்களை அனுதினமும் ஈர்க்கும் மாபெரும் காக்கும் சக்தி அந்த மாமலை மாதவனுக்கு உண்டு.

காக்கும் கடவுளின் அந்த திருப்பதி க்ஷேத்ரத்தையே ஒருமுறை நமது மகா பெரியவா எப்படி காப்பாற்றினார் என்பது தான் இன்றைய விஷயம்.

சுமார் 55 வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவம் திருப்பதி அறநிலையத் துறை அதிகாரிகள் எப்போதும் கோவிலில் ஏதாவது புதுசு புதுசாக மாற்றங்கள் பண்ணிக் கொண்டே இருப்பவர்கள் அல்லவா? எனவே ஒரு திட்டம். பக்தர்களுக்கு சௌகர்யம் பண்ணித் தர வேண்டும் என்ற நல்லெண்ணம்! எனவே அங்கிருந்த பொதுப்பணித் துறை அதிகாரிகளும், அறநிலையத் துறை மந்திரியும் சேர்ந்து பக்தர்கள் உள்ளே மூலஸ்தானத்துக்கு வந்து, பிறகு அதே வழியாகத்தான் திரும்பிப் போகிறார்களே இதனால் ஒரே நெருக்கடியாகி விடுகிறதே. எனவே மூலஸ்தானத்தை அடுத்த அர்த்த மண்டபத்தின் இருபுறமும் இருக்கும் சுவற்றை இடித்து வழி பண்ணிவிட்டால், மக்கள் வலது, இடது பக்கம் போகலாம், வரலாம். நெருக்கடி, ஸ்ரமம் இல்லை; இன்னும் நிறைய கூட்டம் வந்தாலும் சமாளிக்கலாம். கீழ்மட்டத்தில் அதிகாரிகள் இதை விவரமாகப் பேசி,சுவரை கச்சிதமாக உடைக்க அமெரிக்காவில் இருந்து 40 லக்ஷத்துக்கு ஒரு cutting machine வாங்கவும் முடிவு செய்யப்பட்டது. இந்த முடிவைக் கேட்டுக் கொண்டு, நிம்மதி இழந்தவராக அமர்ந்திருந்தவர், கணபதி ஸ்தபதி.

"என்ன ஸ்தபதி! நீங்க என்ன சொல்லறீங்க? இதுல உங்களுக்கு சம்மதந்தானே?" ஆந்திர அமைச்சர் கேட்டார்.

"என்னோட மனசுக்குப் பட்டதை நான் இங்க சொல்லலாமா?"

"தாராளமா."

"எத்தனையோ ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால, ஆகம சாஸ்த்ரங்களை கரைச்சு குடிச்ச வல்லுனர்கள்தான் இந்தக் கோவிலை கட்டியிருக்காங்க. மூலஸ்தானத்துக்கு அடுத்தபடியா இருக்கற அர்த்த மண்டபம் ரொம்ப பவித்ரமானது. அதோட ரெண்டுபக்க சுவரையும் இடிச்சு வழி பண்ணறது நல்லதில்லை. அப்பிடி ஏதாவது பண்ணினா, மூலவரோட சக்தியும், பரிசுத்தமும் போய்டும். அதுனால இதையெல்லாம் மனசுல வெச்சுண்டு தயவு செய்து இந்த இடிக்கற வேலையை நிறுத்திடுங்கோ!"

எந்த ஒரு குழுவிலும், ஒரு முடிவு எடுக்கும்போது, உண்மையில் எது நல்லது என்பதை உளமார உணர்ந்து செய்பவர்கள் குறைவு தானே?

ஸ்தபதியின் சொல் அங்கே எடுபடவில்லை. இடித்தே தீருவது! என்று தீர்மானம் பண்ணி, ஸ்தபதியிடமும் கட்டாயமாக கையெழுத்து வாங்கப் பட்டது. எப்போது கையெழுத்துப் போட்டாரோ, அந்தக்ஷணத்திலிருந்து ஸ்தபதியின் நிம்மதி அவரை விட்டுப் போய்விட்டது. தன் கண் முன்னால், கோவிலின் அர்த்த மண்டபம் இடிக்கப்படுவதை எப்படி சஹிக்க முடியும்? இந்த அசம்பாவிதம் நடக்காமல் இருக்க என்ன செய்வது?

குழம்பித் தவித்த அவர் உள்ளம் அப்போது பெரியவாளின் சரணத்தை நினைத்தது. அப்போது பெரியவா ஆந்த்ராவில்தான் யாத்ரை பண்ணிக் கொண்டிருந்தார். பெரியவாளை எங்கிருந்தாலும் பார்த்து விட வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் கால் போன போக்கில் ஸ்தபதி கிளம்பிவிட்டார். அன்ன ஆகாரமில்லை; மனஸ் முழுக்க பாரம்; விடியற்காலை பெரியவா தங்கியிருந்த கார்வேட் நகருக்கு வந்து, பெரியவா முன் நின்றார். கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது!

பெரியவா அவரைப் பார்த்ததும், நெற்றியில் நாமம் போட்டுக் காட்டி, “அங்கேர்ந்து வரயா?” என்றார்.

ஆமா. பெரியவாகிட்ட முக்யமான விஷயம்.

அவர் பேச ஆரம்பிக்கும்முன் அவரை கையமர்த்தி, “இப்போ நீ ஒண்ணும் சொல்ல வேணாம். மொதல்ல போய் வயத்துக்கு ஏதாவது சாப்ட்டுட்டு வா!”

ரெண்டு நாளாக எதுவும் சாப்பிடாமல் தன்னைத் தேடிக் கொண்டு வந்திருக்கும் ஸ்தபதிக்கு முதலில் வயிற்றை நிரப்ப எண்ணினார் மஹா பெரியவா அருகில் இருந்தவரிடம் “இவரை எந்த ஹோட்டல் தொறந்திருந்தாலும் அழைச்சிண்டு போய், வயறு நெறைய ஆஹாரம் குடுக்கச் சொல்லு! பணத்தை நான் தரேன்னு சொல்லு.”

ஒரு ஹோட்டல் திறந்திருந்தது.பெரியவாளுடைய உத்தரவைக் கேட்டதும் அந்த முதலாளி, “பெரியவா அனுப்பினவாகிட்ட நான் எப்பிடி பணம் கேப்பேன்? நன்னா வயிறார சாப்பிடட்டும். என்னோட பாக்யம்” என்றுசொல்லி, சுடச்சுட தயாராக இருந்த உணவைப் பரிமாறினார்.

சாப்பிட்டுவிட்டு பெரியவா முன்னால் வந்து நின்றார் ஸ்தபதி.

“இப்போ சொல்லு.” எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த பெரியவா “அப்பிடி அர்த்த மண்டபத்தை ஒடைச்சா, என்ன ஆகும்?” தெரியாதவர் மாதிரி கேட்டார்

“அர்த்த மண்டபத்ல கைவெச்சா. பெருமாளோட சக்தி பூரா போய்டும். பெரியவா! திருப்பதில எந்த மாறுதல் பண்ணணும்னாலும் பெரியவாகிட்ட கேட்டுண்டுதான் பண்ணுவா. ஆனா, இந்த விஷயத்தை உங்ககிட்ட கேக்காம, செய்யறா. பெரியவா அனுக்ரஹம் பண்ணி, இதை நிறுத்த ஏதாவது வழி சொல்லணும்.”

மணிமணியாக அபயச்சொற்கள் வந்தன!

"ஒன்னோட மனசுப்ரகாரம் எல்லாம் நடக்கும்! கவலைப்படாதே! போ" ப்ரஸாதம் குடுத்து அனுப்பினார்.

வீட்டுக்கு வந்து அசந்து படுத்த ஸ்தபதிக்கு பின்னிரவு ரெண்டு மணிக்கு திடீரென்று யாரோ எழுப்பிவிட்ட மாதிரி, படக்கென்று எழுந்தார். மனஸில் ஏதோ தோன்ற, விடுவிடுவென்று முதலமைச்சர் ப்ரம்மானந்த ரெட்டியின் வீட்டை நோக்கி நடந்தார்! அப்போது சரியாக விடிகாலை மணி மூன்று! வாசலில் செக்யுரிட்டி ஆபீசர் இவரை அடையாளம் கண்டுகொண்டு.

"என்ன ஸ்தபதி ஐயா!இவ்வளவு அதிகாலை முதலமைச்சரைப் பாக்க வந்திருக்கீங்க!" என்றார்.

"ரொம்ப அவசரம்.நான் அவரைப் பாக்கணும்."

"அப்பாயின்ட்மென்ட் இருக்கா?"

"இல்லையே."

"அப்போ அவரைப் பாக்க முடியாதே ஐயா!

இல்லை இல்லை அவசரம் அவசியம் முதல்வரை.நான் பாத்தே ஆகணுமே!" ஆபீசர் யோசித்தார். ஸ்தபதி ரொம்ப மரியாதைக்குரியவர். நிச்சயம் ஏதோ அவசரமான காரியமாகத்தான் இருக்கும்.

"ஐயா. ஒண்ணு செய்யலாம். சரியா 4.30 மணிக்கு முதலமைச்சர் காபி சாப்பிட மாடியிலேர்ந்து இறங்கி வருவார். அப்டி வந்து உள்ள நுழையும் போது ஒங்களைப் பாத்துட்டார்ன்னா, ப்ரச்சினை தீர்ந்தது! இல்லாட்டா.காலேலதான்!"

ஸ்தபதி வாசலிலேயே நின்று கொண்டிருந்தார். சரியாக 4.30 மணிக்கு ரெட்டிகாரு மாடியிலிருந்து இறங்கியவர், வாசலில் நிற்கும் ஸ்தபதியைப் பார்த்துவிட்டார்! முகமெல்லாம் வியப்பாக.

"என்ன கணபதி? இத்தனை காலைல?"

"உங்ககிட்ட முக்யமான விஷயம் பேசணும்."

"என்னது? வாங்க." என்று வாசலுக்கு வந்து, அவர் தோள் மேல் கையைப் போட்டு அணைத்தவாறு உள்ளே அழைத்துச் சென்றார் முதலமைச்சர் ப்ரம்மானந்த ரெட்டி!

"திருப்பதி கோவிலுக்கு ஆபத்து!" என்று எடுத்த எடுப்பில் "கண்டேன் சீதையை!" மாதிரி போட்டு உடைத்தார். ஸ்தபதி.

"என்ன உளறரீங்க? திருப்பதிக்கு என்ன ஆபத்து! எப்படி வரும்?" அதிர்ச்சியோடு கேட்டார் ரெட்டிகாரு. எல்லா விஷயத்தையும் சொல்லி, "பெருமாளோட சக்தி பூரா போய்டும்" என்று நிறுத்தினார் ஸ்தபதி. முதலமைச்சர் முகத்தில் கோபம்



கொப்பளித்தது! கார்யஸ்தரை கூப்பிட்டு "ஒடனே அறநிலையத்துறை அமைச்சரை போனில் கூப்பிடு!" அதிரடி உத்தரவு பறந்தது. அறநிலையம் லைனில் வந்தார்.

"முந்தா நாள் திருப்பதில என்ன நடந்தது?"

"அந்த விஷயமா பேசத்தான் fileகளோடு உங்களைப் பாக்க இன்னிக்கி பொறப்பட்டு வந்திட்டு இருக்கேன்." இழுத்தார், அதிகாரி.

"திருப்பதியில் என்ன நடந்ததுன்னு தான் கேட்டேன்!" கத்தினார் முதமைச்சர். அறநிலையம் தாங்கள் எடுத்த முடிவை விவரித்தார்.

"மொதல்ல நான் சொல்றதை கேளுங்க! வெங்கண்ணா ஜோலிக்கு போகண்டி!" என்று ஒரே போடாகப் போட்டார்!

"திருப்பதி வெங்கடாசலபதி விஷயத்தில் தலையிட வேண்டாம்.இது என் உத்தரவு!" பட்டென்று போனை வைத்தார்.

"கணபதி! திருப்பதில எதுவும் நடக்காது! நீங்க நிம்மதியா போயிட்டு வாங்க." வழியனுப்பி வைத்தார் முதலமைச்சர்.

வெளியே வந்தபின்தான், எந்த சக்தியால் தான் உந்தப்பட்டு இன்று இவ்வளவு அதிகாலையில் முதலமைச்சரைக் கண்டு விஷயத்தை சொல்ல முடிந்தது! என்று ஸ்தபதி வியந்தபோது, உள்ளிருந்து பெரியவாளுடைய தெய்வீகமான வார்த்தைகள் ஒலித்தன.

ஒன்னோட மனசுப்ரகாரம் எல்லாம் நடக்கும்! கவலைப்படாதே! போ. பெருமாள் கோவிலின் அர்த்த மண்டபம் இடிபடாமல் காப்பாற்றியது யாரால்?

ஸாக்ஷாத் ப்ரஹ்ம ஸ்வரூபமான பெரியவாளால்தான்! திருப்பதி மட்டுமில்லை இன்னும் இந்தியாவில் உள்ள எண்ணற்ற கோவில்களை பழுது பார்த்து, ஒரு தீபத்துக்க்குக் கூட வழியில்லாமல் இருந்த கோவில்களுக்கு தன்னுடைய ப்ரபாவத்தால் பூஜைகள் நடப்பது பெரியவா என்ற நடமாடும் தெய்வத்தால்தான் என்பது புரியவேண்டும்.



# 32. எல்லோருக்கும் வளையல்

அன்று ஒரு வெள்ளிக்கிழமை.

அப்போது மே மாத கடுங்கோடை காலம். வெய்யில் கடுமையாக தஹித்துக் கொண்டிருந்தது. காஞ்சியில் மடத்தில் சந்திரமௌலீஸ்வரர் பூஜையை முடித்துவிட்டு முன்பக்கத்தில் மகா பெரியவா அமர்ந்திருந்தார்.



அந்தச் சமயம் வெய்யலின் கொடுமையைத் தாங்காமல் வயதான ஒரு வளையல் வியாபாரி மடத்துக்குள் வந்து தன் வளையல் பெட்டியை ஓர் ஓரமாக இறக்கி வைத்துவிட்டு ஓய்ந்துபோய் உட்கார்ந்தார். அவருடைய சோர்ந்த முகம் மகானின் கண்களில் பட்டது. மடத்து ஊழியர் ஒருவர் மூலமாக வியாபாரியைத் தன் அருகே அழைத்து வரச் செய்தார். மெதுவாக வியாபாரியை விசாரித்தார்.

"உனக்கு எந்த ஊர்?"

"சாமி எனக்கு இதே ஊரு தானுங்க"

வளையல் வியாபாரம் எப்படி நடக்கிறது?

ஒன்னும் சரியில்லீங்க ஆறுமாசமாவே ரொம்ப டல்.சோத்துக்கே வழ்யில்லேன்னா பாத்துக்குங்களேன். எல்லோரும் கடையிலே போய் வாங்கறாங்க. வீடு தேடி வந்தா விலை குறைச்சு கேக்காறாங்க. நஷ்டத்துக்கு விக்கமுடியலீங்க. சமயத்துலே கொடுத்துடறேன். சாப்பாட்டுக்கு காசு வேணாமுங்களா?

உனக்கு எத்தனை குழந்தைகள்?"

“வீட்டிலே என்னோட சம்சாரம், 4 குழந்தைங்க. எங்கம்மா ரொம்ப வயாசானவங்க என்கூட இருக்காங்க.”

அப்போது மகா பெரியவாள், பக்கத்திலே இருந்தவர்களிடம் “இந்தவளையல் வியாபாரியின் பாரத்தை இன்று நாம் தான் ஏற்றுக் கொள்ளவேண்டும். இன்று வெள்ளிக்கிழமை இவரிடம் இருக்கும் எல்லா வளையல்களையும் மொத்தமாக வாங்கி, மடத்துக்கு வரும் எல்லா சுமங்கலிகளுக்கும் பெண் குழந்தைகளுக்கும் கொடுத்தால் புண்ணியம். இந்த ஏழையிடமிருந்து வாங்கி அவர்களுக்குக் கொடுப்பது விசேஷமல்லவா? இந்தப் புண்ணிய கைங்கர்யத்துக்கு அளவு கோலே கிடையாது!”

மடத்துக்கு வந்திருந்த பக்தர் ஒருவர் தான் வளையல் எல்லாவற்றையும் வாங்கும் புண்யத்தை ஏற்க முன்வந்தார்.

“நீங்க வளையல் அத்தனையும் வாங்கிட்டேள் இப்போ. அதில் ஒருடஜன் வளையலை எடுத்து வளையல்காரரிடமே கொடுங்கோ.”

ஏன் பெரியவா இப்படி சொல்றான்னு புரியலே. அவாளே சொன்னப்புறம் தான் புரிஞ்சுது.

“இன்னிக்கு வெள்ளிக்கிழமையில்லையா? வளையல் பெட்டி காலியாக இருக்கவே கூடாது. அந்த வளையல்களை அவன் வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போகட்டும்.”

பிறகு வளையல்காரருக்கு மடத்தின் மூலமாக வேஷ்டி, புடவைகளைக்கொடுத்து அவருக்கு சாப்பாடும் போட்டு அனுப்பும்படி மகான் உத்தரவு போட்டார்.

“இன்று வளையல் காரருக்கு தலைபாரமும், மனபாரமும் நிச்சயம் குறைந்திருக்கும் இல்லையா?”

தன்னை நாடி வருபவர்களுக்கு அவர்கள் எதிர்பாராத விதமாக உதவியைச் செய்து விடுகிறார் மகான் என்று அங்கிருந்த பக்தர்கள் போற்றிப் புகழ அன்று மடத்திற்கு வந்த அவ்வளவு சுமங்கலிப் பெண்களுக்கும் வளையல்கள். அதுவும் நடமாடும் தெய்வம் கையால் தொட்டுக் கொடுத்த வளையல்கள்.

அந்த பாக்கியம் அன்று வந்த சுமங்கலிகள் எல்லோருக்கும் கிடைத்தது.



# 33. பிரசவம்

தெய்வ பலம் நிறைந்தும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் அடக்கமாக நம்மில் ஒருவராக வாழ்ந்தவர் மகா பெரியவா. எத்தனையோ அபூர்வ அதிசயங்களை அசாதாரண நிகழ்ச்சிகளை தனது தபோ பல சக்தியினால் சர்வ சாதாரணமாக காதும் காதும் வைத்தாற்போல் நடத்திக் காட்டிய நடமாடும் தெய்வம். ஒரு சம்பவம் படித்த ஞாபகம். சொல்கிறேன் கேளுங்கள். இது பெரியவா காஞ்சி மடத்தில் இருந்தபோது நடந்தது.

நாள் தோறும் பெரியவா காலையில் எழுந்தவுடன் மடத்தில் இருக்கும் தொழுவத்தில் கோ தர்சனம் (பசுவை தரிசிப்பது) வழக்கம்.

மாலை வேளைகளில் பசுமாடுகள் கட்டியிருந்த கொட்டகை சென்று அங்கு அமர்ந்து உரையாடுவது வழக்கம். சுற்றியிருக்கும் மக்களைக் கொசுக்கள் பிடுங்கி எடுக்கும். அவர் கொசுவையா லட்சியம் பண்ணுவார்?

எதைப் பற்றியும் சிந்திக்காமல், தான் சொல்ல நினைத்தது எதுவோ அதை மட்டும் எல்லோருக்கும் சொல்லிக்கொண்டே இருப்பார். அவரை நேரடியாக பார்த்து அவர் சொல்வதைக் கேட்டவர்களுக்கு இனி பிறவி கிடையாது என்பது நிச்சயம்.

ஒருநாள் காலை இவ்வாறு கோதர்சனம். அங்கு பக்தர்களோடு சம்பாஷணை செய்யும்போது அந்தக் கொட்டகையில் உள்ள ஒரு பசு நிறைமாத கர்ப்பிணியாக இருந்தது. பேறுகாலம். அதனால் பசு வேதனைப் பட்டுக்கொண்டே இருந்ததே தவிர, அதனால் கன்றை ஈன்றெடுக்க முடியவில்லை.வைத்தியர்கள் வரவழைக்கப்பட்டனர். கால்நடைத் துறையில் சிறந்து விளங்கும் டாக்டர்கள் அவர்கள்; ஒருவர் அல்ல இருவர் அல்லர், காஞ்சிமகான் மடம் என்பதால் ஆறுபேர் வந்திருந்தனர்.

பசுவை நன்றாகப் பரிசோதித்துப் பார்த்த அவர்கள், பசு ஏன் இன்னமும் பிரசவிக்க வில்லை என்கிற காரணத்தைக் கண்டு பிடித்தனர். கன்றுக்குட்டி வயிற்றுக்குள் இறந்து போயிருந்தது. அதை வெளியே எடுக்காவிட்டால் பசுவும் இறந்துவிடும். அந்த ஆறுபேரும் ஏகோபித்து சொன்ன முடிவு அது. இதைக் கேட்ட நிர்வாகிகள் நேராக மகானிடம் போய் மெதுவாக விஷயத்தைச் சொன்னார்கள்.

தன் இருக்கையை விட்டு எழுந்த அவர், நேராக பசு இருந்த கொட்டகைக்கு வந்தார். பசுவின் எதிரே அமர்ந்தார். அவரது பார்வை வேறு பக்கம் திரும்பவே இல்லை.கன்று வயிற்றுக்குள் இறந்து போயிற்று என்று ஏகோபித்த முடிவாகச் சொன்ன டாக்டர்கள் ஒருபக்கமாக நின்று, மகானையும், பசுவையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டே இருந்தார்கள். இப்படியும் அப்படியுமாக நிலைகொள்ளாமல் தடுமாறிக்



கொண்டிருந்த பசு. ஓர் இடத்தில் நின்றது. சற்று நேரத்தில் அதன் வயிற்றில் இருந்த கன்றுக்குட்டி வெளியே வந்தது. துள்ளியபடி நின்றது. இறந்து போனது என்று டாக்டர்கள் சொன்ன அதே கன்றுதான் உயிரோடு வெளியே வந்தது. இறந்ததாக பெரிய பெரிய வேடேரினரி சர்ஜன்கள் அடித்து சொன்ன கன்றுக்குட்டி எப்படி உயிர் பெற்றது?

ஆறு டாக்டர்களுக்கும் இது விந்தையான நிகழ்ச்சிதான். அவர்களும் அப்போதுதான் மகானின் அருட்பார்வை எப்படிப்பட்டது என்கிற பேருண்மையைத் தெரிந்து கொண்டனர்.

பசுமாட்டை நன்றாகத் தடவிக் கொடுத்தபின் புன்னகையோடு மஹா பெரியவா உள்ளே போனார்.



# 34. ரெண்டு ஆச்சர்யங்கள்

சார் போஸ்ட்''.

படுத்துக்கொண்டிருந்த தாத்தா எழுந்து போய் கதவைத் திறந்தார். வெயில் தஹித்துக்கொண்டிருக்கிறது. ஜூன் முடியும் நேரத்திலும் கோடைவெயில் போல் கொளுத்தியது. டொப் என்று எங்கேயோ ஒரு ட்ரான்ஸ்பார்மர் வெடித்து நெருப்புபொறி புகை. அதைத் தொடர்ந்து மின்சாரம் செத்து விட்டது. வெயிலில் மின் விசிறியும் இல்லை. என்றும் உதவும் பனை ஓலை விசிறி பக்கத்திலேயே வைத்திருந்தார் தாத்தா. அதால் காற்று வீசிக்கொண்டு படுத்துக்கொண்டிருந்தார். பனை ஓலை விசிறி அனலைத்தான் அவர் மேல் வீசியது. அப்போது தான் வாசலில் "சார் போஸ்ட்.''

அந்த பேட்டை போஸ்ட்மேன் ராமானுஜம் அடுத்த மாதம் ரிடையர் ஆகவேண்டும். மூச்சைப் பிடித்துக்கொண்டு தபால் பட்டுவாடா பண்ணிக் கொண்டிருந்தார். எந்த கெட்ட பெயர், கம்ப்ளைண்ட் இல்லாமல் வேலை ஒய்வு பெற முயற்சிப்பவர். வெயில் அவரைப் பிழிந்தது அவரது காகி சட்டையின் வியர்வை கறையில் தெரிந்தது. வழுக்கை மண்டை வியர்வையில் பளபளத்தது.

"வாங்கோ ராமானுஜம். வேலை முடிஞ்சுடுத்தா?''

"இல்லே மாமா. இன்னும் 17 இடம் போகவேண்டும். எப்படியும் 4.30 ஆகிவிடும். அப்பறம் ஆபீஸ் போய் கணக்கு ஒப்படைத்துவிட்டு வீடு போக 6 மணி ஆயிடுறது. பல்லைக் கடிச்சிண்டு இன்னும் ஒரு திருப்பாவை காலம். (முப்பது நாள் என்கிறார்) ஒட்டிட்டா, அப்புறம் இந்த வெயிலில் சுத்தல் கிடையாது. ஆனால் வரும்படிக்கு எதாவது வழி பண்ணிக்கணும். பெருமாள் என்ன நினைச்சுண்டிருக்காரோ. எப்படி படி அளப்பாரோ தெரியல. பெரியவா அனுக்ரஹம் இருந்தா கடைசிகாலமாவது கொஞ்சம் சுகமா தள்ளணும் என்று அபிலாஷை''

"ஒரு அரைமணி உக்காந்துட்டு போங்கோ. மோர் தரேன். இருங்கோ உச்சி படைபடைக்கிற வெயிலில் வந்திருக்கிறேள்''

ஒரு லோட்டா நீர் மோர் சில்லுன்னு குடித்த ராமானுஜம் "வயத்துக்கு குளிர்ச்சியா இருந்துது மாமா. மனசுக்கு குளிர்ச்சியா பெரியவா பத்தி ஒரு விஷயம் சொல்லுங்கோ கேட்டுட்டு தெம்பா வேலையை முடிக்கிறேன்.''

"சொல்றேனே. அதைவிட வேறென்ன பாக்கியம் எனக்கு.''

பெரியவாளுடைய பரமபக்தர் ஒருவருக்கு காது கேட்காது! கண் பார்வை மங்கல். உச்சி வெயிலில் தண்ணி லாரி கூட மேலே ஏற வரும்போது தான் சற்று நிழல் மாதிரி புகைமண்டலமா தெரியும். அவருக்கு ஒரு ஏக்கம். ரொம்ப நாளா ஒரு ஆசையும் கூட. காஞ்சிபுரம் வந்தபோது ஒரு தடவை பெரியவா தரிசனத்துக்கு மணிக்கணக்கா காத்திருந்து பெரியவா கண்லேயும் பட்டுட்டார். அருகே சென்று நின்று அப்படியே சாஷ்டாங்க நமஸ்காரம். அவரது கண்பார்வை குறை, பக்கத்துல இருக்கிறவா சொல்றது அவருக்கு கேக்கலை என்று எல்லாம் பெரியவா நொடியிலே தெரிஞ்சுண்டுட்டா. "என்ன?" என்று ஜாடையா கேட்டா பெரியவா.

"பெரியவா. எனக்கு ராமாயணம், ஸ்ரீமத் பாகவதம், பகவத்கீதை, பதினெட்டு புராணங்கள் எல்லாத்தையும் படிச்சு என்னோட ஜன்மாவை கடைத் தேத்திக்கணும்னு ஒரு ஆசை. ஆனா, என்னால புஸ்தகம் படிக்க முடியாது. கண் பார்வை முக்காவாசி கெடையாது. காதால கேக்கலாம்ன்னா காதும் கேக்கலை. நான் என்ன பண்ணுவேன்? பெரியவாதான் எனக்கு கதி"

அப்போது பெரியவாளை சுற்றி சில பண்டிதர்களும் அங்கே இருந்தார்கள். பெரியவா அவர்களை பார்த்துவிட்டு

"இவரோ ராமாயண, மஹாபாரதம், புராணம் எல்லாத்தையும் படிக்கணும்ன்னு ரொம்ப ஆசைப்படறார். கண் பார்வை செரியில்லே! என்ன பண்ணலாம்?"

சர்வஞத்வம் என்பதே, தனக்கு எல்லாம் தெரிந்தும், அதை லக்ஷியம் செய்யாமல் [ஆஞ்சநேய ஸ்வாமி மாதிரி] மற்ற பேருக்கு முக்யத்வம் குடுப்பதுதான். இல்லையா?

பண்டிதர்களுக்கு சரியான பதில் சொல்ல முடியவில்லை. பெரியவாளே சொன்னார்.

"நைமிசாரண்யம்ன்னு ஒரு க்ஷேத்ரம் இருக்கு தெரியுமோ?".

"தெரியும்"

"அங்க என்ன விசேஷம்?"

"அங்கதான் ரிஷிகள்ளாம் புராணங்கள் கேட்டா."

"புராணங்களை எழுதினது யாரு?"

"வ்யாஸர்."

"வ்யாஸாச்சார்யாள் புராணங்கள் எழுதின எடம்ன்னு ஒரு ஸ்தலம் இருக்கு. "வ்யாஸகத்தி"ன்னு பேரு தெரியுமோ?".

பண்டிதர்களுக்கோ ஆச்சர்யம்! அவர்களுக்கு இது புது விஷயம் கூட. நைமிசாரண்யம் போய்விட்டு வந்தவர்களுக்கு கூட இந்த இடம் பற்றி தெரியலை. ஆனால் பெரியவாளுக்கு நுண்ணிய விஷயங்கள் கூட திருஷ்டாந்தம்.

அவர் அருகில் இருந்த ஒருவரை அழைத்து அந்த கண் தெரியாத, காதுகேளாத பக்தரிடம் உரக்க சொல்ல சொன்னார்.

அவரும் உரக்க அன்பரின் செவிட்டு காதில் "பெரியவா உங்களை குடும்பத்தோட நைமிசாரண்யம் போயி, கொஞ்சநாள் அங்க தங்கு! வ்யாஸர் புராணங்கள் எழுதின எடத்ல விழுந்து விழுந்து நமஸ்காரம் பண்ணு! அப்புறம் ஒனக்கே எல்லாப் புராணங்களும் மனஸ்ல ஸ்புரிக்கும்'' அப்படின்னு உங்களுக்கு சொல்றார்.

அவரும் புரிந்துகொண்டு தலையாட்டினார். நைமிசாரண்யம் சென்றார் கொஞ்சம் கொஞ்சமாக காது கேட்க ஆரம்பித்தது. கண்ணும் கண்ணாடி போட்டுக்கொண்டு புஸ்தகம் படிக்கும் அளவுக்கு அபிவிருத்தி ஆனது என்று பின்னாலே எப்பவோ பெரியவா கிட்டே வந்து சொன்னாராம்.

ராமனுஜம் "சார், பெரியவா, பெரியவா தான்'' கலியுகத்தில் கண் கண்ட தெய்வமா இருந்தவா''

இதையும் கேளுங்கோ ராமானுஜம்.

"வடக்கே ராஜஸ்தான்லே எங்கேயோ வேலையா இருந்த ஒருத்தருக்கு காதில் எப்பவும் ஏதோ யாரோ பேசறா மாதிரி சத்தம் கேட்டுக் கொண்டே இருந்ததால், அதுவும் அந்த குரல் ஆஞ்சநேயர் பேசறா மாதிரி தோணினதாலே நிறைய பேர் அவரிடம் வந்து குறி கேட்டனர். அவரும் தனக்கு தோணினதை, அதாவது ஆஞ்சநேயர் என்ன சொல்கிறார் என்பதை சொல்லி விஷயம் எங்கும் பரவ ஆரம்பித்தது. அவருக்கு நேரம் இல்லாமல் போய் விட்டது. உத்தியோகத்துக்கே சரிவர போகமுடியாமல் போய்விட்டது. ஆபிசில் அவருக்கு பிரச்சினை இதால். இத்தனைக்கும் அவர் இலவசமாக தான் குறி சொல்லி வந்தார். கஷ்டத்தை யாரிடம் சொல்வது? மனதில் கவலை அதிகரிக்க, யாரோ சொல்லி அவர் காஞ்சிபுரத்தில் பெரியவா கிட்டே இது பத்தி சொல்லிவிட்டு அவரை நமஸ்காரம் பண்ணலாம் என்று வந்தார்.

அவர் வந்தபோது நிறைய பேர் பெரியவாளை தரிசிக்க வந்திருந்தார்கள். ஓரத்தில் வெகுநேரம் நின்றுகொண்டிருந்தவரை பெரியவா அருகில் வா என்று கையால் ஜாடை காட்டினார்.

"எதுக்கு ரொம்ப நாழியா நின்னுண்டே இருக்கே?''

"வடக்கே ராஜஸ்தான்லே வேலையா இருக்கேன். அங்கே இருக்க பிடிக்கவில்லை. பெரியவா அனுக்ரஹத்தாலே, மெட்ராசுக்கு டிரான்ஸ்பர் கிடைக்கணும்."




"எங்கிட்ட ஏன் இதை சொல்றே? உனக்குத்தான் ஆஞ்சநேயர் அருள் பரிபூரணமா இருக்கே ஹனுமான் கிட்டேயே நீ பிராத்தனை பண்ணிக்கோயேன்."

அந்த பக்தர் ஆடிப்போய் விட்டார். "அபசாரம் பெரியவா. ஆஞ்சநேயர் பேசுகிறார் என்பது நானாகச் சொன்னதுதான். என்னமோ எனக்கு அப்படி தோணித்து. ஒரு வேளை எதாவது துர்தேவதையோ கூட இருக்குமோ என்று கவலையா இருக்கு. ஒண்ணுமே தெரியவில்லை. என்னைத் தூங்கவிடமாட்டேன் என்கிறது. அது சொல்கிற பதில் சிலபேர்களுக்குப் பலித்துவிடுவதால் எல்லோரும் நம்புகிறார்கள். எனக்குத்தான் உள்ளூர அது ஆஞ்சநேயரா இல்லையா என்று தெரிஞ்சுக்கணும்னு தோணித்து.பெரியவா கிட்ட இதை சொல்லிட்டு என் கஷ்டத்தைப் போக்கணும்னு வேண்டிக்கதான் காத்திண்டிருகேன்."

"எப்போதும் ராமநாமா சொல்லிண்டு இரு. கும்பகோணம் பக்கத்துலே கோவிந்தபுரம் போதேந்திராள் அதிஷ்டானத்திலே கொஞ்சநாள் தங்கு."

பத்து நாள்கள் கழித்து மகிழ்ச்சியோடு வந்து பெரியவாளை தரிசனம் செய்தார் அன்பர்.

"என்ன ஆஞ்சநேய ஸ்வாமி, இன்னமும் காதுக்குள்ளே தான் இருக்காரா இல்லை ராமசேவைக்குப் போயிட்டாரா? " என்று கேட்டார் பெரியவா தனக்கே உரிய ஒரு க்ரிஷ்ணத்தனமான புன்னகையோடு. அன்பரும் பெரியவா சொன்னபடி ராம சேவைக்கு தான் போயிருக்கணும்." என்றார் சிரித்துக்கொண்டே.

பிரமாதம் மாமா. இதுக்கு தான் உங்க கிட்டே வரது. நானும் என் பெருமாள் எனக்கிட்ட சேவைக்கு போறேன். போஸ்ட்மேன் ராமானுஜம் சைக்கிளில் தாவி ஏறினார் புதுத் தெம்போடு.



# 35. காவிரிலே நெறய ஜலம் போறதோ?

பல வருடங்களுக்கு முன் காஞ்சி மகா ஸ்வாமிகள், தன் பரிவாரங்களுடன் தஞ்சை மாவட்டப் பகுதிகளுக்கு விஜயம் செய்தார். அது, ஆனி மாதம். ஆடுதுறையில், பெரிய தர்மசத்திரம் ஒன்றில் முகாமிட்டிருந்த மகா பெரியவாளை, சுற்று வட்டார கிராமங்களைச் சேர்ந்த ஜனங்கள், வந்து தரிசித்துச் சென்றபடி இருந்தனர். நடந்த ஒரு சம்பவத்தை ஒருவர் விவரித்தது இது. அப்போது.

ஆடுதுறையைச் சுற்றியுள்ள நடராஜபுரம், கோவிந்தபுரம், தியாகராஜபுரம், சாத்தனூர், திருமங்கலக்குடி ஆகிய ஊர்களைச் சேர்ந்த பிரமுகர்கள், தங்கள் ஊர் சார்பாக ஆச்சார்யாளுக்கு சமஷ்டி பிக்ஷா வந்தனம் (பல பேர் சேர்ந்து பிட்சை அளித்து வழிபடுவது) நடத்த ஏற்பாடு செய்திருந்தனர்.

ஆடுதுறையிலிருந்து தெற்கே சுமார் ஒரு கி.மீ. தொலைவில் தான் அடியேனின் சொந்த ஊரான மருத்துவக்குடி கிராமம் உள்ளது. என் தந்தையார் பிரம்ம சந்தான வாத்தியார், அப்போது அந்தப் பகுதியின் காஞ்சிமட முத்திராதிகாரியாக இருந்தார். எங்களது கிராமத்தின் சார்பாகவும் சமஷ்டி பிக்ஷா வந்தனம் நடத்த வேண்டும் என்று விரும்பினார் அவர். இதை, உள்ளூர் பிரமுகர்களும் ஏற்றுக் கொண்டனர். மறு நாள் காலை. ஸ்வாமிகள் முகாமிட்டிருந்த சத்திரத்துக்குக் கிளம்பினார் என் தகப்பனார். என்னையும் உடன் அழைத்துச் சென்றார்.

அவரைக் கண்டதும் மடத்துக் காரியஸ்தர், "சாஸ்திரிகளே நீங்க மருத்துவக்குடி பகுதி மடத்து முத்திராதிகாரிதானே? ஒரு நாளைக்கி உங்க ஊர் பிக்ஷை வெச்சுக்க வேண்டாமோ? வர்ற ஞாயித்துக்கிழமை உங்க ஊருல வெச்சுக்கோங்களேன்!" என்றார்.

உடனே என் தந்தையார், "நானும் அத கேட்டுண்டு போகத்தான் வந்தேன். ஞாயித்துக் கிழமையே வெச்சுண்டுடறோம். சுமாரா எவ்ளோ ரூவா செலவாகும்?" என்று அந்த காரியஸ்தரிடம் வினவினார்.

காரியஸ்தர் சிரித்தபடியே, "சொல்றேன் மடத்துக் காணிக்கையா இருநூத்தம்பது ரூவா கட்டிப்டணும். அப்புறம் தேங்கா, பழம், காய்கறிகள்னு நீங்க வாங்கிண்டு வர்ற செலவு. எல்லாம் முடிஞ்சு, ஆச்சார்யாள்ட்ட பிரசாதம் வாங்கிக்கறச்சே உங்க கிராம வசதிப்படி பாத சமர்ப்பணை (காணிக்கை) அப்டி இப்டினு ஐநூறு, அறுநூறு ரூவா செலவு புடிக்கும்! உங்க ஊர்ல வசூல் ஆயிடுமோல்லியோ?" என்று கேட்டார்.

சற்றும் தயங்காமல், "பேஷா ஆயிடும்" என்ற என் தகப்பனார், "அது சரி மத்த ஊர்க்காராள் லாம் பாத சமர்ப்பணையா எவ்ளவு பண்றா?" என்று ஆவலுடன் கேட்டார்.

"ஐநூறுலேர்ந்து ஆயிரம் வரை பண்றா" என்றார் காரியஸ்தர். தகப்பனார் யோசனையில் ஆழ்ந்தார்.

சற்று நேரத்தில் ஆச்சார்யாளை தரிசித்த நாங்கள், அவரை நமஸ்கரித்து எழுந்தோம். என் தந்தையார் பிக்ஷா வந்தன விஷயத்தை ஸ்வாமிகளிடம் தெரிவித்தார்.

"பேஷா நடக்கட்டுமே" என்று அனுக்கிரகித்த ஸ்வாமிகள், "ஏகதேசம் (தனியாக) பண்றாப்ல நம்மூர்ல நிறைய தனிகாள்லாம் (பணக்காரர்கள்) இருக்காளோ?" என்று வினவினார்.

உடனே என் தகப்பனார் குரலை தாழ்த்தி, "மூணு நாலு பேர்வழிகள் இருக்கா. அவாள்ள ரெண்டு மூணு பேர், இப்போ மெட்ராஸ் போயிருக்கா. ஊர்ல எல்லாருமா சேர்ந்துதான் பெரியவாளுக்கு பிக்ஷா வந்தனம் பண்றதா உத்தேசம். ஆச்சார்யாள் அனுக்கிரகிக்கணும்" என வேண்டினார். புன்னகைத்தபடியே இரு கரங்களையும் தூக்கி ஆசீர்வதித்தார் ஸ்வாமிகள்.

ஞாயிற்றுக்கிழமைக்கு இன்னும் நான்கு நாட்களே இருந்தன. வசூலை ஆரம்பித்தார் தகப்பனார். மூன்று அக்ரஹாரத்திலும் சேர்த்து சுமார் 30 வீடுகள் இருக்கும். வியாழக்கிழமை மாலை வசூல் முடிந்தது. 400 ரூபாய் சேர்ந்தது. என் தகப்பனாரும் ஊரிலுள்ள மற்ற வைதீகர்களும் சேர்ந்து நூறு ரூபாய் சமர்ப்பித்தனர். ஆக, மொத்த வசூல் 500 ரூபாய்! பிக்ஷா வந்தன செலவுக்கு இது போதும்.

இனி, பெரியவாளின் பாத சமர்ப்பணைக் குத்தான் பணம் வேண்டும். 'ஐநூறு ரூபாயாவது பாத சமர்ப்பணை பண்ண வேண்டும்' என்பது என் தந்தையின் ஆசை. ஆனால் பணமில்லை. அன்றிரவு அவர், சரியாகவே தூங்கவில்லை.

வெள்ளிக்கிழமை! ஆச்சார்யாளைத் தரிசிக்கச் சென்றோம். சத்திரத்து வாயிலில்- கீற்றுக் கொட்டகையில் அமர்ந்து தரிசனம் அளித்துக் கொண்டிருந்தார் ஸ்வாமிகள். கூட்டம் அலை மோதியது. நாங்கள், சற்றுத் தள்ளி ஓர் ஓரமாக ஸ்வாமிகள் இருந்த இடத்தை நோக்கி கை கூப்பி நின்றிருந்தோம். நான் தகப்பனாரை பார்த்தேன். முகத்தில் கவலை தோய்ந்திருந்தது. 'பாத சமர்ப்பணை ஐநூறுக்கு என்ன பண்ணப் போகிறோம்?!' என்கிற கவலை அவருக்கு.

திடீரென்று ஒரு கருணைக் குரல்: "சந்தானம்! கிட்ட வாயேன் ஏன், அங்கேயே நின்னுண்டிருக்கே?" - சிரித்தபடி ஜாடை காண்பித்து, அருகில் அழைத்தார் ஆச்சார்யாள். இருவரும் சென்று, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்தோம்.

"என்ன சந்தானம் நேத்திக்கு நீ கண்ணுல படவே இல்லியே! ஊர்ல ஏதாவது வைதீக ஜோலியோ?" என்று வினவினார் ஸ்வாமிகள்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே பெரியவா. ஞாயித்துக் கிழமை எங்க ஊர் சார்பா பிக்ஷா வந்தனம் பண்றமோல்லியோ அது விஷயமா ஏற்பாடுகள் பண்ணிண்டிருந்தேன்.

அதனாலதான்!" என்று என் தகப்பனார் முடிப்பதற்குள் இடைமறித்த ஸ்வாமிகள், "அது சரி சந்தானம் லௌகிகமெல்லாம் (வசூல்) எதிர்பார்த்தபடி பூர்த்தி ஆச்சோல்லியோ?" என சிரித்தபடியே வினவினார். இதற்கு பதில் சொல்லத் தயங்கினார் என் தகப்பனார்.

அவர் ஏதோ சொல்ல வாயெடுப்பதற்குள் ஸ்வாமிகள் எதையோ புரிந்து கொண்டவர் போல, "ஒண்ணும் கவலைப்படாதே! சந்திரமௌளீஸ்வரர் கிருபையால எல்லாம் நீ நெனைச்சுண்டு இருக்கறபடியே நடக்கும்!" என வார்த்தைகளால் வருடிக் கொடுத்தார்.



திடீரென, "ஏன் சந்தானம் இந்த ஊர் காவிரி நதியிலே இப்போ நெறய ஜலம் போறதோ தெரியுமோ ஒனக்கு?" என்று கேட்டார். 'காவிரி ஜலத்தைப் பற்றி பெரியவா ஏன் விசாரிக்கிறார்?' என்று அனைவரும் குழம்பினர்.

"போயிண்டிருக்கு பெரியவா" என்றார் தகப்பனார்.

பெரியவா விடவில்லை: "அது சரி! நீ எப்ப காவிரி ஸ்நானத்துக்குப் போயிருந்தே?"

"ஒரு வாரம் முன்னாடி பெரியவா!"- என் தகப்பனார் பதில் சொன்னார்.

"அதிருக்கட்டும் இப்ப ஜலம் போயிண்டிருக்கோ தெரியுமோ?" - இது பெரியவா.

உடனே அருகிலிருந்த உள்ளூர் அன்பர் ஒருவர் பவ்வியமாக, "இன்னிக்குக் காத்தால நான் காவிரி ஸ்நானத்துக்குப் போயிருந்தேன். சுமாரா ஜலம் போறது பெரியவா" என்றார்.

ஸ்வாமிகளுக்கு சமாதானம் ஏற்படவில்லை. "சுமாரா போறதுன்னா புரியலியே! அமிழ்ந்து ஸ்நானம் பண்றாப்ல போறதா, இல்லியானு எனக்குத் தெரியணும்" என்றவர், என் தகப்பனாரைப் பார்த்து, "சந்தானம், நீ ஒரு காரியம் பண்ணு. நாளக்கி விடியக் காலம்பற காவிரி ஸ்நானத்துக்குப் போ. நன்னா முழுகி ஸ்நானம் பண்றாப்ல தீர்த்தம் போறதானு பாத்துண்டு வந்து சொல்லு!" என்று கூறிவிட்டு, 'விசுக்'கென்று எழுந்து உள்ளே சென்று விட்டார்!

'தான் காவிரியில் ஸ்நானம் பண்ணிவிட்டு வருவதற் காகத்தான், இவ்வளவு விவரங்களையும் பெரியவா கேட்கிறார் போலும்' என்று எண்ணியபடியே ஊர் திரும்பினோம்.

சனிக்கிழமை! பொழுது விடிந்தது. மழை லேசாகத் தூறிக் கொண்டிருந்தது. பெரியவா ஆக்ஞைப்படி காவிரி ஸ்நானத்துக்குப் புறப்பட்டோம். அப்போது காலை ஏழு மணி. கரையில் என்னையும் தகப்பனாரையும் தவிர ஒரு ஈ, காக்கா கூட இல்லை. என் தகப்பனார் ஸ்நானம் பண்ணியபடியே சொன்னார்: "நன்னா முழுகி ஸ்நானம் பண்றாப்லதான் ஜலம் போறது! பெரியவாகிட்ட போய் சொல்லணும்."

தொடர்ந்து, உரத்தக் குரலில் காவிரி ஸ்நான சங்கல்பம் சொல்ல ஆரம்பித்தார் என் தந்தையார். திடீரென கரையிலிருந்து, "சாஸ்திரிகளே! கொஞ்சம் இருங்கோ. நானும் வந்துடறேன். எனக்கும் கொஞ்சம் ஸ்நான சங்கல்பம் பண்ணி வையுங்கோ புண்ணியமுண்டு!" என்றொரு கணீர்க் குரல் கேட்டது. இருவரும் திரும்பிப் பார்த்தோம். சுமார் 55 வயது மதிக்கத் தக்க ஒருவர், ஜலத்தில் இறங்கிக் கொண்டிருந்தார். முன்பின் பார்த்திராத முகம்!

சங்கல்ப ஸ்நானம் முடிந்து கரையேறினோம். உடை மாற்றிக் கொண்ட அந்த நபர், தகப்பனாருக்கு ஸ்நான சங்கல்ப தட்சணையாக ஐந்து ரூபாய் கொடுத்தார்.

அவரைப் பற்றி என் தகப்பனார் விசாரித்தார்.அவர் சொல்ல ஆரம்பித்தார்: "எனக்கும் பூர்வீகம் மருத்துவக்குடிதான். என் அம்மா வழித் தாத்தாவும் இந்த ஊர்தான். அப்பா வழி தாத்தா வெங்கடாசலம் ஐயருக்கு மருத்துவக்குடியிலே சொந்த வீடு இருந்தது. எங்க தாத்தாவுக்கு அப்புறம் இங்கே ஒருத்தரும் இல்லே. பம்பாய் போயிட் டோம். திருநீலக்குடிக்கு அருகில் இருக்கிற மேலூர் சந்திரமௌலீஸ்வர ஸ்வாமிதான் எங்க குலதெய்வம். 'நீ எப்ப நம்மூர் பக்கம் போனாலும் ஆடுதுறை காவிரியில ஸ்நானம் பண்ணிட்டு வா'னு எங்கம்மா அடிக்கடி சொல்லுவா. அந்த பாக்கியம் இன்னிக்குக் கிடைச்சுது. குடும்ப கேஸ் விஷயமா தஞ்சாவூர் போயிண்டிருக்கேன். இப்போ சங்கல்பத்தோடு காவிரி ஸ்நானம் கிடைச்சுதுல ரொம்ப திருப்தி!" என்றவர், "ஆமா சாஸ்திரிகளே! ரயிலை விட்டு எறங்கி வர்றச்சே பார்த்தேன். நிறையப் பேர் மடிசாரும் பஞ்சகச்சமுமா போயிண்டிருக்காளே இங்கே என்ன விசேஷம்?" என்று கேட்டார்.

ஆச்சார்யாள் விஜயம் பற்றியும், கிராம பிக்ஷா வந்தனம் பற்றியும் தகப்பனார் அவரிடம் விவரித்தார். அவருக்கு பரம சந்தோஷம்.

"கேக்கவே சந்தோஷமா இருக்கு. நம்மூர் சார்பா லோக குருவுக்கு நடக்கிற பிக்ஷா வந்தனத்துல என்னால கலந்துக்க முடியாத நிர்ப்பந்தம். இருந்தாலும் எங்க குடும்ப காணிக்கையா பிக்ஷா வந்தனத்துல இதையும் சேர்த்துக்கோங்கோ" என்ற படி என் தகப்பனாரை நமஸ்கரித்து, அவரது கையில் ஒரு கவரைக் கொடுத்தார். தகப்பனாருக்கு ஒன்றும் புரியவில்லை. கவரைப் பிரித்துப் பார்த்தார். அதில் 500 ரூபாய்!

"நான் போயிட்டு வரேன் சாஸ்திரிகளே" என்று கிளம்பியவரைத் தடுத்து நிறுத்திய என் தகப்பனார், "ஒங்க நாமதேயம் (பெயர்)?" என்று கேட்டார்.

அவர் சொன்ன பதில்: "சந்திரமௌலீ!" இருவரும் பிரமித்து நின்றோம்.

பின்னர், நேராக சத்திரத்துக்குச் சென்றோம். அங்கே பெரியவா இல்லை. கோவிந்தபுரம் போதேந்திராள் மடத்துக்குச் சென்றிருப்பதாகச் சொன்னார்கள். என் தகப்பனார் மடத்துக் காரியஸ்தரிடம் சென்று, "பெரியவா, காவிரியில் அமிழ்ந்து ஸ்நானம் பண்றாப்ல, ஜலம் போறதானு பாத்துண்டு வரச் சொன்னா!" என்று முடிப்பதற்குள் அவர், "பெரியவா விடியகாலம் நாலரை மணிக்கே காவேரில ஸ்நானம் பண்ணிட்டு வந்துட்டாளே" என முத்தாய்ப்பு வைத்தார். எங்களின் பிரமிப்பு அதிகரித்தது!

ஞாயிற்றுக்கிழமை. பிக்ஷாவந்தனம் முடிந்தது. கிராமத்தைச் சேர்ந்த அனைவரும் பெரியவாளை நமஸ்கரித்தோம். தகப்பனார், பழத் தட்டில் பாத காணிக்கையாக அந்த 500 ரூபாயை வைத்து சமர்ப்பித்தார்.பழத் தட்டையே சற்று நேரம் உற்றுப் பார்த்த ஸ்வாமிகள் சிரித்துக் கொண்டே, "என்ன சந்தானம்! சந்திரமௌளீஸ்வரர் கிருபையால உன் மன விருப்பம் பூர்த்தி ஆயிடுத்தோல்லியோ? காவிரி ஸ்நான பலனும் கெடச்சுடுத்தோல்லியோ" என்று வினவ, வியப்புடன் நின்ற அனைவரும் சாஷ்டாங்கமாக பெரியவா முன்னே விழுந்தோம்.



# 36. மனிதனும் மிருகமும்

ரெண்டுமே உயிருள்ள ஜீவன் தானே. ஏன் கடவுள் இப்படி வித்யாசமாக படைத்திருக்கிறார்? என்ன காரணம்? இந்த கேள்விகள் உங்களுக்கோ எனக்கோ எழவில்லை. அதைப்பற்றி நாம் நினைக்கவில்லை.

ஒருவேளை ரெண்டுக்கும் வித்தியாசமின்றி நாம் நடந்து கொள்வதாலோ?"

நாம் நினைக்காவிட்டாலும் எதைப்பற்றியும் எல்லோரைப்பற்றியும் சதா சர்வ காலமும் நினைத்துகொண்டிருந்த மஹா பெரியவாளுடைய சிந்தனையை பகிர்ந்து கொள்வோம்:

"மிருகங்கள் குறுக்குவாட்டில் (horizontal) வளர்கின்றன. இதனாலேயே அவற்றுக்குத் "திர்யக்" என்று பெயர். இதற்கு மாறாக உயர்ந்துமேல்நோக்கி (vertical) வளருகின்ற மனிதன் மற்றப் பிராணிகளைக்காட்டிலும் மேலான நோக்கத்தைப் பெறவேண்டும். இப்படிச் செய்தால் இவன்தான் சகல ஜீவ இனங்களையும்விட அதிகமான சுகத்தை அநுபவிக்கலாம். ஆனால் நடைமுறையிலோ அவற்றைவிட அதிகமாக துக்கத்தைத்தான் நாம் அநுபவிக்கின்றோம். மிருகங்களுக்கு நம்மைப்போல் இத்தனை காமம், இத்தனை கவலை, இத்தனை துக்கம், இத்தனை அவமானம் இல்லை. எல்லாவற்றுக்கும் மேலாக அவற்றுக்குப் பாபமே இல்லை. பாவங்களைச் செய்து துக்கங்களை நாம் தான் அநுபவிக்கின்றோம்.

ஒரு வழியில் பார்த்தால் மிருகங்களுக்குக் கொடுத்திருக்கும் சௌகரியங்களை ஸ்வாமி நமக்குக் கொடுக்கவில்லை என்று தோன்றும். நம்மை யாராவதுஅடித்தால் திருப்பி அடிக்க ஒர் ஆயுதமும் இல்லை. மாட்டை அடித்தால் அதற்குக் கொம்பு கொடுத்திருக்கிறார். அதனால் திருப்பி முட்ட வருகிறது. புலிக்கு நகம் கொடுத்திருக்கிறார். நமக்குக்கொம்பு இல்லை. நகம் இல்லை. குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்ள ஆட்டுக்கு உடம்பில் போர்வை வைத்திருக்கிறார். வேறு மிருகங்களுக்கும் போர்வை வைத்திருக்கிறார். மனிதன் ஒருவனைத்தான் வழித்து விட்டு இருக்கிறார். யாராவது அடிக்க வந்தால் எதிர்க்க முடியவில்லை.குதிரைக்குக் கொம்பு இல்லா விட்டாலும் ஓடுவதற்கு வேகம் கொடுத்திருக்கிறார். அதுவும் நமக்கில்லை.

இருந்தாலும் ஸ்வாமி மனிதனுக்குத்தான் புத்தியை அதிகமாக வைத்திருக்கிறார். குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் மற்றப் பிராணிகளின் போர்வையை இவன் பறித்துக் கொண்டு விடுகிறான். கம்பளியாக நெய்து கொள்கிறான். வேகமாகப் போக வேண்டுமா?

வண்டியிலே குதிரையைக் கட்டி, அதன் வேகத்தை உபயோகப் படுத்திக்கொள்கிற சாமர்த்தியத்தை இவனிடத்தில் ஸ்வாமி வைத்திருக்கிறார். தன் சரீரத்திலேயே தற்காப்பு இல்லாவிட்டாலும், வெளியிலிருந்து தினுசுதினுசான ஆயுதங்களைப் படைத்துக் கொள்கிறான். இவ்வாறாக புத்திபலம் ஒன்றை மட்டும் கொண்டு, மற்ற ஜீவராசிகள், ஜடப்பிரபஞ்சம் எல்லாவற்றையும் மனிதனே ஆளுகிறான்.

மிருகம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிராந்தியத்தில்தான் இருக்கும். குளிர்ப் பிரதேசத்துக் கரடி நம் ஊரில் வாழாது. இங்குள்ள யானை அங்கேவாழாது. ஆனால் மனிதன் உலகம் முழுதும் வாழ்கிறான். அங்கங்கே அவன் தன் புத்தியை உபயோகப்படுத்தித் தனக்குச் சூழ்நிலையைச் செய்துகொள்வான் என்று இப்படி விட்டிருக்கிறார்.

இந்த உயர்ந்த புத்தியை வைத்துக் கொண்டு மனிதன் கஷ்டப்படுகிறான். துக்கப்படுகிறான். பிறந்து விட்டதனாலே இவ்வளவு கஷ்டம். இனி பிறக்காமலிருக்க வேண்டுமானால் என்ன பண்ணுவது? பிறப்புக்குக் காரணம் என்ன? நாம் ஏதோ தப்புப் பண்ணியிருக்கிறோம். அதற்குத் தண்டனையாக இத்தனை கசையடி வாங்க வேண்டும் என்று விதித்திருப்பதால் இந்த உடம்பை எடுத்து அவற்றை வாங்குகிறோம். பத்து ஆன பிறகு இந்த உடம்பு போய்விட்டால், இன்னோர் உடம்பு வருகிறது. பாக்கி அடியை இந்த உடம்பு வாங்குகிறது. காமத்தினால், பாபத்தைச் செய்வதினாலே ஜனனம் உண்டாகிறது. காரியம் எதுவும் பண்ணாமல் இருந்து விட்டால் ஜனனம் இல்லை. கோபத்தினாலேயே பல பாபங்களைச் செய்கிறோம்.

கோபத்துக்குக் காரணம் ஆசை, காமம். முதலில் காமத்தை, ஆசையை ஒழிக்க வேண்டும். பற்றை நிறைய வளர்த்துக் கொண்டு காரியம் செய்யாமல் இருப்பது என்றால் முடியாது. பற்றை ஒழித்து விட்டால் பாபம் செய்யாமல் இருக்கலாம். ஆசைக்குக் காரணம் என்ன?

நம்மைத் தவிர இன்னோன்று இருப்பதாக எண்ணுவதால் அதனிடம் ஆசை வருகிறது.

உண்மையில் சாந்தமாகிய ஒரே சிவமே எல்லாமாக இருக்கிறது. ஒரு மாடு தன்னைக் கண்ணாடியில் பார்த்துவிட்டு, இன்னொரு மாடு இருப்பதாக நினைத்து அதை முட்டப்போகிறது. ஒரு மனிதன் தன் பிரதிபிம்பத்தைப் பார்க்கிறான். இன்னொரு மனிதன் இருக்கிறான் என்று அவன் நினைக்கிறானா? இரண்டும் ஒரே பொருள் என்று நினைத்து அவன் சாந்தமாக இருக்கிறான்.நாம் பார்க்கிற அனைத்துமே ஒன்றுதான்.

இரண்டாவது என்று எண்ணினால் ஆசை வரும்.

ஆசை வருவதினால் கோபம் வருகிறது.

கோபம் வருவதினால் பாபங்களைச் செய்கிறோம்.

அதனால் ஜன்மம் உண்டாகிறது.

எல்லாம் ஒன்று என்ற ஞானம் நமக்கு வந்துவிட்டால், வேறு பொருள் இல்லாத தனாலே ஆசை இல்லை. பாபம் இல்லை. காரியம் இல்லை. ஜனனம் இல்லை. துன்பமும் இல்லை.



இந்த ஞானத்தை எப்படிப் பெறுவது?

நம்மைப் பெற்ற அம்மா உடம்புக்குப் பால் கொடுப்பாள். அறிவுக்கு ஞானப்பால் கொடுப்பவள் அம்பாள்தான். ஞான ஸ்வரூபமே அவள்தான். அவளுடைய சரணார விந்தங்களைப் பற்றிக் கொண்டு அவளுடைய ஸ்வரூபத்தோடு நம்மை நாம் கரைத்தாலே ஞானம் வரும். மனிதன் அப்போது தெய்வமாவான்.

முதலில் மனிதனை மிருகமாக இல்லாமல் மனிதனாகவே ஆக்கவேண்டும். அப்புறம் அவனைத் தெய்வமாகவே உயர்த்திவிட வேண்டும். இந்தக் குறிக்கோளுடன்தான் சகல மதங்களும் உண்டாயிருக்கின்றன. சித்தாந்தம், தத்துவங்களில் அவற்றுக்குள் எத்தனை பேத மிருந்தாலும், இப்போதிருக்கிற மாதிரி மனுஷ்யனை ஒரே காமக் குரோதிகளுடன் இருக்க விடக்கூடாது. இவனை நல்லவனாக ஆக்கி அன்பு, அடக்கம், சாந்தம், தியாகம் முதலிய குணங்கள் உள்ளவனாகப் பண்ண வேண்டும் என்பதில் எல்லா மதங்களும் ஒரே குரலில்தான் பேசுகின்றன."



# 37. ஈசா யேசு / கிரிஸ்ட் –கிருஷ்ணன் – அபேதம்

ஒவ்வொரு வருஷமும் கிறிஸ்மஸ் பண்டிகையும் நமது திருவாதிரையும் பக்கத்திலே வரும். எல்லாமே டிசம்பர் மாசத்திலே தான். இந்த ரெண்டு பெரிய பண்டிகைகளை பற்றி மஹா பெரியவா 1966ல் என்ன சொல்லியிருக்கிறார்?

"லோகம் பூராவிலும் ரொம்பப் பேர் 'ஹோலிடே'யாகவோ, வெறும் 'ஹாலிடே'யாகவோ - கொண்டாடும் நாளாக இருக்கிறது. இதன் காரண புருஷரையும் நம்மைச் சேர்ந்தவராக, அதிலும் தம்முடைய பேராலேயே நான் சொன்ன அந்த சிவ-விஷ்ணு அபேதத்தைக் காட்டுகிறவராக, சொல்லிக் கொள்ளலாமோ என்று தோன்றுகிறது!

அவர் பெயர் என்ன? ஜீஸஸ் க்ரைஸ்ட்' என்கிறோம். அது ஜெர்மானிக் என்றும் ட்யூடானிக் என்றும் சொல்கிற பாஷா 'க்ரூப்'பைச் சேர்ந்த ஜெர்மன் பாஷை, இங்கிலீஷ், டட்ச், இன்னும் ஸ்காண்டிநேவியன் பாஷைகள் என்பதாக நார்வே, ஸ்வீடன், டென்மார்க் முதலான தேசங்களில் பேசப்படும் பாஷைகள் ஆகியவற்றில் அவருக்கு ஏற்பட்டிருக்கிற பெயர்தான். அவருக்கு மூலத்தில் ஹீப்ருக்களின் பாஷையில் என்ன பெயரோ அதுவே - ஸம்ஸ்க்ருத 'ச்ராவணீ' தமிழ் 'ஆவணி'யாக உருமாறின மாதிரி - இந்த பாஷைகளில் ஜீஸஸ் என்று ஆகியிருக்கிறது.

அவர் இந்த பாஷைகள் வழங்குகிற ஐரோப்பாவைச் சேர்ந்தவரேயில்லை.

நம்முடைய ஆசியாக் கண்டத்துக்காரர்தான் அவர். அவருடைய தாய்பாஷை அரமீயன் என்கிறது. அது ஹீப்ருக்களின் பாஷைகளான ஸெமிடிக் க்ரூப்பைச் சேர்ந்த ஒரு பாஷையே. அதிலே அவருக்கு வைத்த பெயர் 'யீஷுவ (Yeshua) என்கிறதே! அந்த final 'வ' வை 'அ' மாதிரி பட்டும் படாமலும் சொல்ல வேண்டும். அதுதான் மற்ற ஐரோப்பிய பாஷைகளில் 'ஜோஷுவா' என்றும் 'ஜீஸஸ்' என்றும் ஆயிற்று.

'ய'கர வரிசை 'ஜ'கர வரிசையாவது எல்லா இடத்திலேயும் உண்டு. வேதத்திலேயே மற்ற சாகைகளில் (கிளைப் பிரிவுகளில்) 'ய' என்று வருவது வடதேசத்தில் இப்போதும் அநுஷ்டானத்திலிருக்கிற சுக்லயஜுர் வேதத்தின் மாத்யந்தின சாகையில் 'ஜ' என்றுதான் வரும். யமுனாவை ஜமுனா என்கிறார்கள். யந்த்ரம் என்பதை ஜந்தர் என்கிறார்கள். தமிழிலே ஸம்ஸ்க்ருத 'ஜ'வை 'ய' ஆக்குவது ஸஹஜம். வேடிக்கையாக இதற்கு ஒரு 'கான்வெர்ஸ்'! ஸம்ஸ்க்ருதத்தில் 'யாமம்' என்றே இருப்பதை நாம் 'ஜாமம்' என்கிறோம்! எதற்குச் சொல்ல வந்தேன் என்றால், 'யீஷுவ'வின் 'யீ'தான் 'ஜீஸ்'ஸில் 'ஜீ'யாகியிருக்கிறது. அந்த 'ஜீ'யை நாம் மறுபடி 'ய'காரப்படுத்தி, ஆனால் கொஞ்சம் வித்யாஸமாக, 'யேசு' என்கிறோம்.

மூல 'யீஷுஅ' நம்முடைய 'ஈச' தான், அதாவது சிவ நாமாதான் என்று வைத்துக் கொள்ளலாமே என்று தோன்றுகிறது.

அப்படிச் சொன்னால் நம்மவர்கள், அந்த மதஸ்தர்கள் இரண்டு பேரிலுமே யாராவது அபிப்ராய பேதமாகச் சொல்வார்களோ, என்னவோ? பேதம் வேண்டாம்

என்றுதானே சொல்லிக் கொண்டிருக்கிறேன்? ஆனபடியால் வைத்துக் கொள்ளலாமே என்றில்லாமல் வைத்துக் கொள்ளலாமோ என்று சொல்லத் தோன்றுகிறது என்று வேண்டுமானால் திருத்திக் கொள்கிறேன்!

'ஜீஸஸ் க்ரைஸ்ட்'டில் 'ஜீஸ்'ஸை 'ஈச'னாகச் சொல்லலாமோ என்று!

'க்ரைஸ்ட்'டுக்கு வருகிறேன். அது முழுக்கவும் ஐரோப்பிய பாஷையாகவே ரூபமான (உருவான) வார்த்தை தான். நாம் பட்டாபிஷேகம் என்று விசேஷமாக அபிஷேகம் பண்ணுகிறோமோல்லியோ? மங்கள ஸ்நானம் என்று தலைக்குத் தைலம் வைத்து அப்படிப் பண்ணுகிறது. இதே மாதிரி எல்லா தேசங்களிலும் மத சாஸ்த்ரபூர்வமாகத் தைலம் தேய்ப்பதாக இருந்திருக்கிறது. அப்புறம் ஸ்நானம் பண்ணுவிக்கிறது இல்லை; தைலம் தேய்த்து மட்டும் நிறுத்தி விடுவது. கொஞ்சமாகப் பூசுவதால், அதுவே உள்ளே போய் விடும். அதற்கு 'அனாயிண்ட்' பண்ணுவதென்பது பெயர். ஈச்வரனே அந்த மாதிரிச் சில பேரை லோகோத்தாரணம் பண்ணுவதற்காக 'அனாயிண்ட்' பண்ணி, அதாவது பட்டாபிஷேகம் பண்ணி, 'மெஸையா' (Messiah) என்று அனுப்புவதாகச் சொல்வார்கள். ஹீப்ரு 'மேஷியா' இங்கிலீஷில் 'மெஸையா' ஆயிற்று. அதற்கே ஐரோப்பிய பாஷையான க்ரீக் (Greek)-ல் இருக்கிற பெயர் 'க்ரைஸ் டோஸ்' என்பது. அதன் அடியாகத்தான் இங்கிலீஷ் முதலான பாஷைகளில் 'க்ரைஸ்ட்' என்ற வார்த்தை ஏற்பட்டது. ஜீவ ஸமூஹ உத்தாரணத்துக்கென்றே ஈச்வரன் அனாயிண்ட் பண்ணி அனுப்பினவரே ஜீஸஸ் என்கிற நம்பிக்கையுள்ள மதஸ்தர்கள் அவரொருத்தரையே குறிப்பாக அப்படிச் சொல்வதாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

'ஜீஸ்'ஸுக்கு 'ஈச' ஸம்பந்தம் காட்டின மாதிரி இந்த 'க்ரைஸ்டு'க்கு க்ருஷ்ண ஸம்பந்தம் காட்டினாலென்ன என்று தோன்றுகிறது!

க்ருஷ்ணனை நாம் கிஷ்டன், கிட்டன், கிருட்டிணன் என்றெல்லாம் சொல்கிறோமோ இல்லியோ? இந்த மாதிரி 'க்ரிஸ்டன்' என்றும்தான் சொல்லலாம். முடிவிலே சொல்லும் 'அன்' விகுதி தமிழில்தான் உண்டு. நாம் 'ஈச்வரன்' என்பது வடக்கத்திக்காரர்களுக்கு 'ஈச்வர்'தான்; நம் சங்கரன், ராமன் எல்லாமே சங்கர், ராம் என்றிப்படித் தான்! வர வர இங்கேயும் அதுவே ஃபாஷனாகி வருகிறது அது இருக்கட்டும். 'அன்' விகுதி போய்விட்டால் க்ரிஸ்டன் ஆன க்ருஷ்ணன் என்ன ஆவான்? 'க்ரிஸ்ட்' என்று தானே ஆவான்? 'சிவ' ஸம்பந்தமானது 'சைவம்', 'விஷ்ணு' ஸம்பந்தமானது 'வைஷ்ணவம்' என்று ஆரம்ப இகாரம் ஐகாரமாகிற மாதிரி

'க்ரிஸ்ட்' ஸம்பந்தமானது 'க்ரைஸ்ட்' என்றே ஆகும்! அப்படித்தானே?

ஆகக்கூடி, 'ஜீஸஸ் க்ரைஸ்ட்' = 'ஈச க்ருஷ்ணன்'.

(நெடுநேரம் தாமும் சிரித்து உடனிருந்தோரையும் சிரிக்க வைத்து விட்டு ஸ்ரீசரணர் தொடர்கிறார்:) இப்படியாகத்தானே சிவ-விஷ்ணு அபேதம் காட்டுகிற மாஸத்திலே அந்த இரண்டு பேருக்குமான திருநாள்களுக்கு மத்தியிலே வருகிற கிறிஸ்துமஸ் பண்டிகையின் காரண புருஷர் தம்முடைய பெயரிலேயே ஈச்வரன் என்று சொல்லப்படும் சிவன், விஷ்ணுவின் பூர்ணாவதாரமான க்ருஷ்ணன் ஆகிய இரண்டு பேரின் பேர்களையும் பேதம் பார்க்காமல் ஒன்று சேர்த்து வைத்துக் கொண்ட மாதிரிக்

காட்டுகிறார் என்று ஸமய ஸமரஸத்தை மேலும் கொஞ்சம் நீட்டிப் பார்க்கலாமோ என்று தோன்றிற்று. தோன்றினதைச் சொன்னேன்.

மேலே சொன்ன மஹா பெரியவாள் கருத்தை ஒட்டி கிறிஸ்மஸ் சமயத்தில் நான் எழுதி உங்களுக்கு அனுப்பினது ஞாபகம் இருக்கிறதா: அதை மறுபடியும் கீழே கொடுத்திருக்கிறேனே (சிவன்).

மரகதமும் மார்கரெட்டும் இணை பிரியாத தோழிகள். அடுத்த அடுத்த வீடு. ஒரே வகுப்பில் தான் ஆரம்பத்திலிருந்தே படிப்பவர்கள். மகிழ மரத்தடியில் பாண்டி விளையாடியவர்கள்.



மரகதம் இன்னிக்கு உனக்கு கிறிஸ்மஸ் கேக் கொண்டு வந்திருக்கிறேன் சாப்பிடு. நீ கொடுத்த திருவாதிரைக் களி இன்னும் நாக்கில் தேன் சொட்டுறது. எல்லா பண்டிகைகளும் இந்த மாதிரி கிட்டே கிட்டேயே வந்து நம்மை சந்தோஷப் படுத்துகிறதைப் பார்த்தாயா?

"மார்கி, சந்தோஷம் சாப்பாட்டிலே இல்லை, மனசிலேதான் இருக்கு என்று தாத்தா அடிக்கடி சொல்வார். வாஸ்தவம். நான் இன்னிக்கு காலம்பர படிச்ச ஒரு விஷயம் உனக்கு சொல்லட்டுமா?"

"மரகதம் நீ எப்பவுமே ரொம்ப அழகா பேசுவியே. உன் வாயாலே சொல்லேன் கேக்கறேன்."

"இல்லே இந்த ரெண்டு மதத்திலேயும். உங்க கிறிஸ்டியன் மதத்திலே போற்றும் கிறிஸ்துவும் எங்க மதத்திலே நாங்க வணங்கும் கிருஷ்ணனும் ஏறக்குறைய ஒரே மாதிரி வாழ்ந்திருக்கலாமோ என்று தோணித்து."

"எப்படி சொல்றே?" என்றாள் மார்கரெட்

''மார்கி சொல்றேன் கேளு:

''கிருஷ்ணனும் கிறிஸ்துவும் ரெண்டு பேருமே பகவான் அவதாரம். ரெண்டுபேருமே பொறந்ததே கடவுள் அனுக்ரஹத்தாலே மனிஷாளாக வந்தவாளாம்".

பொறந்ததே ஒரு லோக சம்ரக்ஷண காரியத்துக்காகவாம். அவா பிறக்கப் போகிறதே முன்னாலேயே தெரியுமாம்.

பொறந்ததும் எங்கேயோ மாட்டுதொழுவம், சிறைச்சாலை என்று யாரும் யோசித்துப் பார்க்காத இடமாம்.

ரெண்டு பெரும் குழந்தையா இருக்கும்போதே உயிருக்கு ஆபத்தோடையே தானாம்.

அவாளைக் கொல்றதுக்கு எத்தனையோ முயற்சிகளாம்

ஒருத்தர் ஆடு மத்தவர் மாடு மேய்ச்சவராம்.

அவா ரெண்டு பேர் பிறந்த சமயம் அவர்களுடைய நாடு ரொம்ப கஷ்டப்பட்டுக்கொண்டே இருந்ததாம். அவா பிறந்தா தான் விடிவு காலம் என்று இருந்ததாம்.

ரெண்டு பேருக்குமே ஏதோ சாதாரணமாக மரணம் இல்லையாம். ஒருத்தருக்கு ஆணியாலே, ஒத்தருக்கு அம்பாலே.

"என்ன ஆச்சர்யமா இருக்கு மரகதம்? மேலே சொல்லுடி."

"இதைக்கேளு. ரெண்டு பேருமே எல்லாரையும் அன்பாக நேசியுங்கள்" என்று தான் சொல்லியிருக்கா.

ரெண்டு பேருமே நீலக் கலராம்.

இன்னொன்று சொல்லட்டுமா? ஒருத்தர் ஆட்டுக்குட்டி வச்சிண்டிருப்பார். கிருஷ்ணன் கன்னுக்குட்டியோடு இருப்பார்

ரெண்டு பேருக்குமே இந்த மார்கழி மாசம் (டிசம்பர்) ஒசத்தி. ஒருத்தர் பிறந்தது. ஒருத்தரை முழுக்க முழுக்க வழிபடறது.

பேரே கூட கிட்டத்தட்ட ஒரே மாதிரி இல்லையா? கிருஷ்ணன் - கிறிஸ்து.

ஒருத்தர் சொன்னதை பைபிள் என்றும் அடுத்தவர் சொன்னதை பகவத் கீதை என்றும் போற்றுகிறோம்.

''மரகதம் நீ சொல்றதைப் பார்த்தால் இன்னும் ரொம்பவே சொல்வே போல் இருக்கு.''

''ஆமாண்டி மார்கி. யோசித்துப் பார்த்தா இன்னும் அனேக ஆச்சர்யமான விஷயங்கள் இருக்கும்போல தான் தோணறது.

ரெண்டு பேருமே கோடானு கோடி மனிஷா கொண்டாடற தெய்வங்கள் என்று பார்க்கும்போது அவாளுக்குள்ளே இத்தனை ஒத்துமை இருக்கே எப்படி மரகதம்?''

"ஆமாம் மார்கி. அவா ரெண்டு பேருமே ஒரே மாதிரி இருந்ததே நாம எல்லாரும் அதே மாதிரி ஒத்துமையா இருக்கணும் என்று காட்டவே தான்."



# 38. சம காலத்திய ரெண்டு மஹா ஸ்வாமிகள்

பக்தர்கள் சில சமயங்களில் கொஞ்சம் வித்யாசமாக நடந்துகொள்வது உண்டு. ஒரு குருவை அண்டி அவரிடம் அபரிமிதமான பக்தி ஏற்பட்டு அவரைத்தவிர மற்ற குரு, ஆசார்யர்கள் எடையில் சற்று குறைந்தவர்கள் தான் என்கிற அளவில் மதிப்பிடுவதை கவனித்திருப்போம். ஒருவருக்கு ஒரு குருவிடம் அதீத விஸ்வாசம் உண்டு என்பதால் மற்றவர் வணங்கும் குரு சுவாமிகள் எந்த விதத்திலும் ஒப்பிடப்பட வேண்டியதில்லையே. எல்லோரும் ஒவ்வொருவிதத்திலும் உயர்ந்தவர்களே. அவர்கள் நடை யுடை பாவனை, பழகும் விதம் பக்தர்களிடம் அனுசரணை எல்லாம் வேறுபடத் தான் செய்யும். இதனால் மஹான் களிடையே எந்த வித்தியாசமும் கிடையாது. ஆனால் அவர்களை வழிபடுபவர்களின் மனப்பக்குவத்தில் தான் வித்தியாசம் ஏற்படுகிறது. ஒரு குருநாதரை ஏற்று கொண்டு மற்றவரை வெறுக்காமல், மஹானுக்கு மஹான் வித்தியாசம் என்ற நிலை மேற்கொள்ளாமல் அனைவரும் சமம் என்று வணங்கவேண்டும்.

இது நடந்தது ஒரு சமயம் விழுப்புரம் அருகில் ஸ்ரீ ஞானந்தஸ்வாமிகள் தபோவனத்தில். அப்போது பகல் வேளை. சில பக்தர்கள் குருநாதர் (ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகள்) முன்னிலையில் அமர்ந்து பாடி கொண்டிருந்தனர். எப்போதும்போல் அவர் புன்னகையுடன் அவர்களது பாடல்களை ரசித்துக்கொண்டிருந்தவர் திடீரென்று எழுந்து உள்ளே சென்று விட்டார். பக்தர்கள் வெகுநேரம் காத்திருந்தனர். அவரோ வெகு நேரமாகியும் வெளி வரவில்லை. பக்தர்கள் அவர் வரவை எதிர்ப்பார்த்துக் கொண்டு தொடர்ந்து பாடிகொண்டிருந்தனர்.

சுமார் 2 மணி நேரம் கழித்து அப்போது தான் குளித்துவிட்டு வந்தது போன்ற தோற்றத்துடன் உள்ளே இருந்து வெளியே குருநாதர் ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகள் வந்தார்.

எல்லோரையும் பார்த்து சிரித்துக்கொண்டே " இங்கே உட்கார்ந்து இருந்தேனா? அங்கே இளையாத்தங்குடியில் ஆச்சார்யாள் பெரிய பூஜைபண்றது மட்டும் இல்லை. அதிலே கலந்துக்க இதையும் கூப்பிட்டு விட்டதாலே. சந்தோஷமாக போய் கலந்து கொண்டு பூஜை இப்போதான் முடிஞ்சுது. பிரசாதம் வாங்கிண்டு இங்கே திரும்பி வர எத்தனை நேரம் ஆயிடுத்து இல்லை?''.

பலருக்கு அது ஸ்வாமியின் பல ஆச்சரிய லீலைகளில் ஒன்று என தோன்றினாலும் ஒரு சிலருக்கு மட்டும் சுவாமியின் வார்த்தைகளில் சந்தேகம் வந்தது. தபோவனம் ஆச்ரமம் எங்கே இருக்கிறது. இளையாத்தங்குடி பரமாச்சார்யாவின் ஆச்ரமம் எங்கே இருக்கிறது. இந்த உச்சி வெயிலில் எப்படி நடந்து போய் அவ்வளவு சீக்கிரம் திரும்ப

முடியும்? இந்த சுவாமி சொல்வது கொஞ்சம் கற்பனையோ?'' இந்த எண்ணம் மேலெழும்பி நம்பிக்கை இழச்செய்தது. சற்று நேரத்திற்கேல்லாம் பஜனை முடிந்தது. சந்தேகப்பட்ட நபர்கள் அவர்களது உணர்ச்சியை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. ஊர் திரும்பி செல்ல உத்தரவு வேண்டி நின்றனர். ஸ்வாமி அவர்களை "இருந்து விட்டு நாளை போகலாம்" என்று கூற அவர்களும் ஸ்வாமியின் வார்த்தைக்கு கட்டுப்பட்டு தங்கிவிட்டனர்.

மறுநாள் காலையில் தினசரி வழிபாட்டில் இந்த சந்தேகப்பட்ட பக்தர்களுடன் பலரும் இருந்த நேரத்தில் யாரோ ஒரு புதிய தம்பதியர் வந்தனர். ஸ்வாமி அவர்களை பார்த்து கையசைத்தார். அருகில் வந்தனர்.

"நாம் எங்கிருந்து வருகிறது?"



"சுவாமி நாங்கள் நேற்று இளையாத்தங்குடி கிராமத்தில் இருந்தோம். அங்கேயிருந்து நேராக இங்கே வந்தோம்."

"அப்படியா! அங்கு என்ன விசேஷம்?"

"நேற்று மஹா பெரியவா அங்கே ஒரு விசேஷ பூஜை பண்ணினார்கள்.நைவேத்யம் செய்யும் சமயம் ஒரு ஆடு வந்தது. பரமாச்சார்யாள் அந்தநைவேத்தியத்தை அதனிடம் காண்பிக்க அந்த ஆடு சிலவற்றை சாப்பிட்டவுடன் பெரியவாள் தீபாரதனை பண்ணினார்கள். பிறகு அந்த ஆடு அங்கிருந்து ஓடிப் போய்விட்டது. அப்போது பெரியவாள் "இன்றைய பூஜைக்கு தபோவனம் பெரியவாளை கூப்பிட்டிருந்தேன். அவர்கள் தான் இப்போது வந்து சென்றார்க்ள்" என்று சொன்னவுடன் இளையாத்தங்குடியில் அப்போது தரிசனம் செய்யக் காத்திருந்தவர்கள் திகைத்தனர்.

"அப்புறம்" என்றார் குருநாதர் சிரித்துக் கொண்டே வந்திருந்த தம்பதியர் சுவாமிஜி, நாங்கள் ஊருக்கு கிளம்பும் சமயம் எங்களுக்கு இருந்த சந்தேகத்தை பரமாச்சார்யரிடம் கேட்டோம்: தபோவனம் பெரியவாள் யார் ஸ்வாமி'?''' என்று.

பரமாச்சார்யார் "நீங்கள் தபோவனம் அவசியம் சென்று அந்த மகானைத் தரிசனம் செய்துவிட்டுப் போங்கள்" என்று ஆசிர்வதித்து அனுப்பினார். நாங்கள் வழி விசாரித்துக்கொண்டு இங்கு வந்தோம். எங்கள் பாக்கியம் உங்கள் தரிசனம் எங்களுக்கு பரமாச்சார்யாளின் அனுக்ரஹத்தால் கிடைத்தது" என்றனர்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த அந்த "சந்தேகப்பட்ட" பக்தர்கள் நால்வரும் வெட்கித் தலை குனிந்து கண்ணீர் வடித்தனர்.



# 39. ஒரு ஓட்(டை)டு வீடு

மஹா பெரியவாளை அனுபவித்தவர்கள் மஹா பாக்யசாலிகள். அப்படி நேரில் பார்க்காதவர்களுக்குத் தான் இந்த விஷயங்களை எல்லாம் எழுதுகிற காரணம். எங்கெங்கோ கிடைத்த சில விஷயங்களைச் சுருக்கி புரியும்படியாக ஆனால் மூலத்திலிருந்து மாறாமல் சுவை குறையாமல் கொடுக்க பிரயத்தனப் பட்டு செய்கிற காரியம் இது.

அதனால் இதற்கு இந்த தொடர் கட்டுரைகளை நடந்த தெய்வம் (The god who walked) என்ற தலைப்பால் வாட்சப் முக நூல், மின்னஞ்சல்களில் அன்றாடம் அனுப்பி வந்தேன். "நடந்த ஒரு தெய்வம்" என்று பெயர் கொடுத்து "நடந்த" சமாச்சாரங்களை சொல்கிறேன்.

அநுஷம் முடிந்த மறுநாள். காஞ்சியில் ஏராளமாக பக்தர்கள் தர்சனம் பண்ண வந்தார்கள். அதில் ஒரு வயசான பாட்டி.

"சர்வேஸ்வரா. மஹாப்ரபு." என்று பாட்டி கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

"எப்டி இருக்கான் ஒன் ஸ்வீகாரம்?!"-- மகா பெரியவா.

"ஏதோ இருக்கான்!" விட்டேத்தியாக பதில் வந்தது பாட்டியிடமிருந்து.

"வயசான காலத்ல ஒனக்கு பிடிப்பே இல்லேன்னியே? அதான் ஒதவியா இருக்கட்டுமேன்னு தான் குடுத்தேன்" முகத்தில் சிரிப்பு!

"பிடிப்பு இருக்கட்டும்னு குடுத்தேன்" சுற்றி இருந்தவர்கள் முகத்திலும் சிரிப்பு.

"சரி ஒன் ஒடம்பு எப்டி இருக்கு?!"

"ஏதோ இருக்கேன். பெரியவா அனுக்ரகம் மழை பெஞ்சா, ஆத்துல முழுக்க ஒரேயடியா ஒழுகறது. அதை கொஞ்சம் சரி பண்ணிக் குடுத்தா, தேவலை பெரியவா"

என்னது?

சுற்றி இருந்தவர்கள் அதிர்ந்தனர்! மோக்ஷத்தை தரவல்ல பராசக்தியிடம் இப்படி ஒரு விண்ணப்பமா!

"இந்த ஊர்ல மழையா! காஞ்சிபுரந்தான் காஞ்சு போன புறமா இருக்கே.!." மறுபடியும் கிண்டல் சிரிப்பு.

"இல்லையே. இப்போ ரெண்டு நாள் முன்னால பெஞ்ச மழைல கூட என் வீடு ஒழுகித்தே!."

"அப்டியா! சரி ஏற்பாடு பண்றேன்."

பாட்டி நகர்ந்தாள். இத்தனை உரிமையோடு பெரியவாளிடம் பேசும் அந்த பாட்டி, எட்டு வயசில் திருமணமாகி விதவை ஆனவள். கணவர் வழியில் ஏராளமான சொத்து! ஒரு பெண்ணிடம் இத்தனை சொத்து இருக்க சொந்தக்காரர்கள் விடுவார்களா? அதே சமயம் தன்னிடம் வரவேண்டிய ஜீவன் ஒரு நாயாக இருந்தால் கூட பகவான் விட்டு வைப்பானா?

பாட்டிக்கு விவரம் கொஞ்சம் நன்றாக தெரிந்திருந்ததால், சற்று சுதாரித்துக் கொண்டாள். காஞ்சிபுரத்துக்கு எதேச்சையாக வந்தவள், "தன் சொத்துக்கள் அத்தனையும் காமாக்ஷிக்கு!" என்று சொல்லிவிட்டாள். பெரியவா எவ்வளவோ மறுத்தும், கடைசியில் அந்த பெண்ணின் அன்பான பிடிவாதம் வென்றது. எனவே அவளுக்கு மடத்துக்கு சொந்தமான வீடு ஒன்றை தங்கிக் கொள்ள குடுத்துவிட்டார். அல்லும் பகலும் பெரியவாளை தர்சனம் பண்ணும் பாக்யம் ஒன்றே போதும் என்று பரம த்ருப்தியுடன், பணத்துக்கு துளியும் முக்யத்வம் குடுக்காத ஒரு ஆத்மாவை பெரியவா அல்லும் பகலும் ரக்ஷித்தார்.

பாட்டியோடு சிரித்துப் பேசிக் கொண்டிருந்தவரிடம் சில பிரமுகர்கள் வந்து ஒரு தட்டில் ஏதோ பத்திரிகையை வைத்தார்கள். சிரித்துக் கொண்டிருந்த முகம் சட்டென்று மாறியது.

"என்னது இது?"

"காமாக்ஷி அம்மன் ப்ரம்மோத்சவ பத்திரிகை!"

"கலெக்டருக்கு குடுத்தாச்சா?"

"குடுத்துட்டோம். பெரியவா"

"இவாளுக்கு?" என்று பக்கத்தில் அமர்ந்திருந்த மற்ற ரெண்டு பெரியவாளையும் காட்டி கேட்டார்.

"குடுத்தாச்சு. பெரியவா!"

"ஓஹோ சரி. எல்லார்க்கும் குடுத்துட்டு, இவன் மடத்த விட்டு எங்கேயும் போக மாட்டான்னுட்டு கடேசில போனாப் போறதுன்னு எனக்கும் ஒரு பத்திரிகை கொண்டு வந்தேளாக்கும்?"

ருத்ர முகம்!

"இல்லை. அது வந்துபெரியவா" நிர்வாகிகள் எச்சில் கூட முழுங்க முடியாமல், கால்கள் நடுங்க நின்றனர்.

"கேட்டுக்கோங்கோ! மடத்து சம்ப்ரதாயம்ன்னு ஒண்ணு இருக்குன்னாவது தெரியுமோ? பத்திரிகை மொதல்ல எங்க தரதுன்னு தெரியுமோல்லியோ?

எல்லா சம்பிரதாயத்தையும் மீறி நடந்துண்டா எப்டி?

நீ எத்தனை வர்ஷமா இங்க இருக்கே?"

குண்டுகளாக துளைத்தன!



பெரியவா பத்திரிகையை தொடவே இல்லை! மடத்து நிர்வாகிகள் நடுங்கிப் போய்விட்டனர்.

ஆம். தவறுதானே?

"எப்டி வரணுமோ அப்டி வாங்கோ" திரும்பி நடந்தவர்களை, "ஒரு நிமிஷம்." நிறுத்தினார்.

"நீ எங்கே குடியிருக்கே?"

"வடக்கு சன்னதிப் பக்கம் ஒரு ஆத்துல."

"அங்க வேற ரெண்டு மூணு வீடு இருந்ததே!"

"அங்க சுப்புராமன் இருக்கார்!"

பெரியவாளுக்கோ எந்தெந்த வீடு, யார் யார் இருக்கிறார்கள் எல்லாம் அத்துப்படி!

"சுப்புராமன்தான் மேல போயிட்டாரே அவரோட வாரிசுகள் மடத்ல வேலை செய்யறாளா என்ன?"

"இல்லை."

"மடத்ல வேலை செய்யறவாளுக்குத்தான் நாம வீட்டை குடுத்திருக்கோம். இங்க வேலை செய்யாதவாளுக்கு எதுக்கு வீடு? நீ என்ன செய்வியோ, ஏது செய்வியோ எனக்கு தெரியாது! நாளைக்கு மறுநாள், இந்த பாட்டி அந்த வீட்டுக்கு குடி போகணும்!டேய்! நாளன்னிக்கு நல்ல நாளான்னு பாரு"

"ஆமா பெரியவா நல்ல நாள்தான்"

"அப்போ சரி. இந்த பாட்டி நாளன்னிக்கு அந்தாத்துக்கு போறதுக்கு ஏற்பாடு பண்ணிடுங்கோ"

பெரியவா சங்கல்பம் நிறைவேறியது!

இதற்கப்புறம் மூன்று மாசம் கழித்து காமாக்ஷி கோவிலில் தர்சனம் பண்ணிவிட்டு சன்னதி தெரு வழியாக நடந்து வந்து கொண்டிருந்த பெரியவா, சட்டென்று ஒரு வீட்டின் முன் நிற்கிறார்.

பின்னால் வந்து கொண்டிருந்த பக்தர் குழாம் குழம்பியது. ஒரு பக்தரிடம், "ரெண்டு மூணு நாளா பாட்டியை காணும். உள்ள போய் பாரு. ஒடம்புக்கு கிடம்புக்கு முடியலையோ என்னவோ."

உள்ளே ஏழ்மையான எளிமையான வாஸம். ஒரே ஒரு குமுட்டி அடுப்பு. ரெண்டே ரெண்டு பாத்ரம். வேறு எதையுமே காணோம். பாட்டி ஒரு ஓரத்தில் முடங்கிக் கிடக்கிறாள். பக்தர் மெதுவாக பாட்டியிடம் பெரியவா வாசலில் நிற்கும் விஷயத்தை சொன்னதுதான் தாமதம்! தடாலென்று எழுந்து, தன் நார்மடியை சரி பண்ணிக் கொண்டு ஓடோடி வருகிறாள்.

இரைந்து சர்வேஸ்வர மஹாப்ரபு நீயே என்னைத் தேடிண்டு வந்துட்டியா?" என்று அலறிக் கொண்டு பெரியவா பாதத்தில் விழுந்தாள். மூன்று முறை வலம் வந்து நமஸ்கரித்தாள். இதை உண்மையான பக்தனும் பகவானும் மட்டுமே அனுபவிக்க முடியும்.

தினம் தினம் ஆயிரக்கணக்கானோர் வந்து தர்சனம் பண்ணுகிறார்கள். ஆனால், தன்னிடம் ஆத்மார்த்தமாக ப்ரேமை பூண்டவர்கள் ஒரு நாள் பார்க்க வராவிட்டால், பகவானால் தாங்க முடியாமல், தானே அவர்களைப் பார்க்க வந்துவிடுவான். அந்த பாட்டிக்கு கிடைத்த பாக்யம் எல்லோருக்கும் கிடைக்குமா? தன்னையே பெரியவாளிடம் முழுவதுமாக அர்ப்பணித்தவர்களுக்கு மட்டுமே நிச்சயம் கிடைக்கும்.



# 40. கடன் தீர்ந்தது

வாழ்க்கை ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு மாதிரி அமைகிறது. எத்தனை ஜனங்கள் இருக்கிறார்களோ அத்தனை வகை வாழ்க்கை என்பது ஆச்சர்யமான ஒரு விஷயம். அம்மா வாழ்க்கை மாதிரி பெண் வாழ்க்கை இல்லை. அண்ணன் வாழ்க்கை மாதிரி தம்பியுடையது இல்லை. மனது தான் காரணம். இத்தனை மனதுகளையும் படைத்தவன் மட்டும் மாறாத குணம் படைத்தவன் என்று நினைத்தால் அதுவும் தவறு. அவனுக்கு குணமே இல்லை. நிர்க்குணன். அதுவே அவனை சர்குணனாக காட்டுகிறது.

எனக்கு எத்தனையோ நண்பர்கள், எத்தனையோ உறவினர்கள். அவ்வளவு பேரையும் நான் நினைத்துக்கொண்டா இருக்கிறேன்? அவ்வளவு பேரிடமும் நான் அன்றாட வாழ்க்கையில் பழகுகிறேனா? எப்போதோ என்றோ எதிர்ப்படும்போது அடையாளம் புரிந்து கொண்டு அளவளாவி அகமகிழ்கிறோம். நன்மை செய்தால், நல்லதை நினைத்தால், நிறைய பேர் நண்பர்களாகி விடுகிறார்கள். இந்த சந்தோஷத்தை உறவினர்கள் அவ்வளவாக கொடுக்க முடியவில்லை. உரிமை என்று கொண்டாடி வரும்போது விருப்பு வெறுப்பு கூடவே ஒட்டிக்கொள்வதால் வித்தியாசம் மெதுவாக வளர்கிறது. உள்ளே ஒன்று வெளியே ஒன்று என்று இரட்டை வேஷம் போட்டுக் கொள்கிறோம். ஆத்மார்த்தம் என்பதற்கு இங்கே இடமில்லை.

இரண்டு பேர் எப்படி ஒன்றாகவே ஒரு காரியம் செய்தார்கள் என்பது பற்றி ஒரு விஷயம். இதில் மூன்றாவதாக சம்பந்தப்பட்டவர் மகா பெரியவா. மேலே படியுங்கள்.

மகாபெரியவா ஒரு தீர்ப்பு சொன்னார்கள். இந்த தீர்ப்பு எதைபற்றி? ஒரு பழைய கடன் விவகாரம். இதைப் பற்றி ஒரு தரம் படித்தது ஞாபகம் வருகிறது. அதை இப்போது சொல்கிறேன்.

இந்த சம்பவம் சுமார் எழுபது- எண்பது வர்ஷங்களுக்கு முன் நடந்தது என்று கூட வைத்துக் கொள்ளலாம்.

பெரியவாளிடம் அளவற்ற பக்தி கொண்ட ஒரு முதியவர், காலகதி அடையும் தறுவாயில் தன் மகனை அழைத்து சில விஷயங்களை சொல்லும் போது, தான் ஒருவரிடம் நூறு ரூபாய் கடன் வாங்கியதாகவும், அதை அவன் திருப்பித் தரவேண்டும் என்று சொல்லிவிட்டு இறந்தார். அப்போது மகனுக்கே 62 வயது. கிராமத்தில் கர்ணம் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். சம்பளமோ 15 ரூபாய்தான். அப்பாவின்



கடைசி வாக்கை காப்பாற்ற கஷ்டப்பட்டு மூன்று வருஷங்களில் எப்படியோ 100 ரூபாய் சேர்த்தார். இதில் வேடிக்கை என்னவென்றால், அப்பாவுக்கு கடன் குடுத்தவர் யாரென்றே அந்த வயதான மகனுக்கும் தெரியாது! சேமித்த பணத்தை யாரிடம்

கொடுப்பது? இந்த கவலை அவர் மனதை அரித்தது. ஏன் இப்படிச் செய்தால் என்ன என்று பொட்டில் அடித்தாற்போல ஒரு எண்ணம் தோன்றியது.

மஹாபெரியவா - அவர் தானே நம்மைப் போன்ற திக்கற்றவருக்கு துணையாக நிற்கும் தெய்வம். ஓடினார் பெரியவாளிடம்! விவரத்தை சொன்னார்.

"மடத்ல ஒரு நாள் தங்கு"

பெரியவா உத்தரவு அவரை அந்த இரவு அங்கே தங்க வைத்தது. மறுநாள் காலை பெரியவா அவரிடம் "இங்கேர்ந்து நேரா நீ ஆலத்தம்பாடி கிராமத்துக்கு போ! அங்க இருக்கும் அக்ரஹாரத்ல கடைசியா இருக்கும் வீட்ல இருக்கறவர் கிட்டதான் ஒங்கப்பா கடன் வாங்கினார்".

ஆலத்தம்பாடி அக்ரஹாரத்தில் பெரியவா சொன்ன வீட்டுக்கு சென்றால் ஆச்சர்யம்! அந்த வீட்டுப் பெரியவர் (கடன் கொடுத்தவர்) ஏற்கனவே சில வருஷங்களுக்கு முன்னால் காலகதி அடைந்துவிட்டார்.

அவருடைய மகனிடம் விஷயத்தை சொன்னதும், அவருக்கு ஒரே வியப்பு!

"எங்கப்பாவும் செத்துப் போகும்போது சில விஷயங்கள்லாம் சொன்னார். ஆனா, உங்கப்பாவுக்கு குடுத்த கடன் பத்தின விஷயத்தை சொல்லவேயில்லையே! அதுனால, இந்த பணத்தை நான் வாங்கிக்க மாட்டேன்"

திட்டவட்டமாக சொல்லிவிட்டார். கடன் பட்டவர் மகன் கடன் கொடுத்தவர் மகனை அழைத்துக் கொண்டு பெரியவாளிடம் வந்தார். ரெண்டு பக்கத்து ஞாயத்தை கேட்ட பெரியவா முகத்தில் புன்னகை.

"இங்கதான் தர்மம் இருக்கு. இன்னொர்த்தர் சாமானை வாங்கறப்போ.நமக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கும். ஆனா, அதை திருப்பித் தரணும்னா யோசிப்போம்! அதுனால, கடன் வாங்கின பாவத்துக்கு பரிகாரமே இல்லை. இங்க, ஒங்க ரெண்டு பேரோட விவகாரம் எப்டி? வாங்கினவர் திருப்பித் தரணும்ன்னு நெனைக்கிறார். குடுத்தவரோட பிள்ளையோ, அப்பா தங்கிட்ட அதைப் பத்தி சொல்லாததால, வாங்கிக்க மாட்டேங்கறார் ஆனா, தர்மம் ஒங்களுக்கு தெரியாது இல்லியா? அடுத்தவா பொருளுக்கு ஆசைப்படாதவன் தர்மத்தை காப்பாத்தறான். நான் ஒரு தீர்ப்பு சொல்றேன் கேக்கறேளா ரெண்டுபேரும்?"

ரெண்டு பேரும் காமாக்ஷி கோவிலுக்கு போய், இந்த பணத்தை அங்க உண்டியல்ல போட்டுடுங்கோ! அது அவளோட பணம்" ஆசீர்வாதம் பண்ணினார்.



# 41. பெரியவா பத்தி நிறைய செய்திகள்

தாத்தா ஏன் நிறைய பேர் இப்போ எல்லாம் மஹா பெரியவா பத்தி நிறைய செய்திகள் அதிசயங்கள் எல்லாம் பத்திரிகையிலே மெயில்லே, வாட்சப்லே, முகநூல்லே புத்தகத்திலே பத்ரிகையிலே TVயிலே எல்லாம் போடறா. முன்பெல்லாம் அவர் இருக்கும்போது இவ்வளவு விஷயங்கள் வெளியே வரவில்லையே?

'ரொம்ப நல்ல கேள்வி கேட்டாய் கோபு?'

உன்கிட்டே பர்ஸ்லே 100 ரூபா நோட்டு இருக்கு. அதை தேடுவியா? அது கீழே எங்கோ விழுந்தோ, காணமால் போனாலோ தேடுவியா?

'அது எங்கிட்டே இல்லாம போனால் தேடுவேன்?'

'எதுவரையிலும் தேடுவே?'

'கிடைக்கிற வரையிலும்.'

மஹா பெரியவா இருக்கிற வரைக்கும் காஞ்சிக்கும் அவர் இருக்கிற இடத்திற்கும் அலை அலையா சென்று அவரை தரிசித்தோம். மனதில் நினைத்ததெல்லாம் திருப்தியானது. பேசவோ, எழுதவோ என்ன தேவை?"

அவா மகா சமாதி அடைந்ததற்குப் பிறகு தான் அடடா இனி அவரை எங்கே காண்போம் என்று தேடி அலைந்து அவர் பற்றிய செய்திகள் எல்லாம் சேகரித்தும் ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொள்கிறோம்.

இதுவரை அவரை அறியாதவர்களும் "இப்படி ஒரு தெய்வம் நம்மோடு இருந்ததா?" என்று அறிந்து முன்பை விட இப்போது அவரது பக்தர்கள் எண்ணற்றவர்கள் ஆகிவிட்டார்கள்.

மஹா பெரியவா அப்பவும் இப்பவும் எப்பவும் சர்வ வியாபி. புரிகிறதா. அள்ள அள்ள குறையாத அமிர்த கடலில் இருந்து ஒரு துளி முத்துக்கள் தான் இது.



# 42. ஒரு பிள்ளை (யார்) கதை!

படித்ததில் பிடித்ததை கொஞ்சம் செப்பனிட்டு இங்கு தருகிறேன்.

திருவையாறு என்றால் அஞ்சு நதிகள் சேர்ந்த இடம். காவிரி, குடமுருட்டி, வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு என்ற ஐந்து நதிகள் பாய்வதால், திருவையாறு என்று அந்த ஊருக்குப் பெயர். 70 -75 வருஷங்களுக்கு முன்னால் நடுக்காவேரியில் வசித்து வந்தது சின்னஸ்வாமி ஐயரின் குடும்பம். இறை பக்தி, ஆசார அனுஷ்டானங்கள், எல்லாவற்றுக்கும் மேலே பெரியவாளிடம் அப்படி ஒரு ஆத்மார்த்தமான பக்தி! திருவையாறு வரும்போதெல்லாம் பெரியவா இவருடைய க்ருஹத்துக்கு கட்டாயம் வருவார். சின்னஸ்வாமி ஐயர் நித்யம் வீட்டில் சிவபூஜை, அப்புறம் உள்ளூரில் இருக்கும் சிவன் கோவிலுக்கு சென்று பரமேஸ்வரனை மனமுருகி வழிபடுவார். சாயங்கால வேளைகளில் இராமாயண உபன்யாசம் செய்வார். இவருடைய பிள்ளை நாட்டுப்பெண் பெயர் பொருத்தம் வெகு அழகாக ராமச்சந்திரன்,ஸீதாலக்ஷ்மி என்று அமைந்தது. மனமொத்த குடும்பமாக இருந்தாலும், கல்யாணமாகி 13 வர்ஷங்கள் ஆகியும் ஸந்தான ப்ராப்தி இல்லையே என்ற குறை எல்லார் மனசையும் அரித்துக் கொண்டிருந்தது. முதலில் பிறந்த குழந்தை தங்கவில்லை. நிச்சயம் பெரியவா அனுக்ரகத்தால் தங்களுக்கு குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை மட்டும் அவர்களுக்கு துளியும் குறையவில்லை.

அப்போது மஹா பெரியவா நடுக்காவேரிக்கு விஜயம் செய்தார். அங்கு வேறொரு பக்தர் க்ருஹத்தில் பெரியவா தங்க ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. வேதகோஷம் முழங்க பூர்ணகும்பங்கள் ஒவ்வொரு வீட்டு வாசலிலும் வைக்கப்பட்டு பெரியவா ஒவ்வொரு வீட்டு வாசலிலும் நின்று ஆசிர்வாதம் பண்ணிக்கொண்டிருந்தார். ஸீதாலக்ஷ்மி வீட்டு வாசலில் அழகாக கோலமிட்டுக் கொண்டிருந்தாள். இவர்கள் வீட்டைத் தாண்டித்தான் பெரியவா தங்கப்போகும் வீட்டுக்கு செல்ல வேண்டும். ஸீதாலக்ஷ்மியை பார்த்ததும், ஊர்வலத்திலிருந்து விலகி விறுவிறுவென்று அவள் போட்டிருந்த மாக் கோலத்தின் மேல் திருப்பாதங்கள் பதிந்தும் பதியாமலும் நின்றார்.

திடீரென்று தன் எதிரில் வந்து நின்ற கண்கண்ட தெய்வத்தை கண்டதும், சந்தோஷம், பக்தி, குழந்தை இல்லா ஏக்கம் எல்லாம் சேர்ந்து அப்படியே சீதாலக்ஷ்மி அவர் பாதங்களில் விழுந்து கேவிக்கேவி அழ ஆரம்பித்தாள்.

"எந்திரு சீதே ஒன்னோட ராமன் எங்க? கூப்டு அவனை." என்றவர் யாரும் எதிர்பாராத நேரத்தில், சின்னஸ்வாமி ஐயரின் க்ருஹத்துக்குள் ப்ரவேசித்தார். ஸீதாலக்ஷ்மி தன் அகத்துக்காரரர் ராமச்சந்த்ரனை தேடிக்கொண்டு ஓடினாள். முன்னறிவிப்பு ஏதுமின்றி தனது வீட்டுக்குள் சாக்ஷாத் பரமேஸ்வரனே வந்து நின்றதைக் கண்டு சின்னஸ்வாமி ஐயர் ப்ரமித்தார்! அவ்வளவுதான்! தெருவே அவர் க்ருஹத்துக்குள் கூடிவிட்டது!



மஹா பெரியவா தனக்கு ரொம்ப ஸ்வாதீனமான இடம் போல விறுவிறுவென்று நுழைந்து அங்குமிங்கும் பார்வையால் துழாவினார். பிறகு தாழ்ப்பாள் போட்டிருந்த ஒரு அறையை, தானே திறந்து அதற்குள் சென்றார். அது ஜாஸ்தி பயன்படுத்தாததால், தட்டுமுட்டு சாமான்கள் நிறைய காணப் பட்டது. அதோடு ஒரு வண்டி தூசி! பெரியவா கதவைத் திறந்ததும் ஒரே புழுதிப்படலம் மேலே கிளம்பியது! தன்னுடைய ஒத்தை வஸ்த்ரத்தின் ஒரு முனையால் கீழே தூசியைத் தட்டிவிட்டு, அதையே லேசாக விரித்துக்கொண்டு தரையிலேயே அமர்ந்துவிட்டார் கருணைவள்ளல்!

"பெரியவா, இந்த ரூம் ஒரே புழுதியா இருக்கு. கூடத்திலே ஒக்காந்துக் கோங்கோளேன்!" என்றார் ஐயர். இதற்குள் ஸீதாலக்ஷ்மி கணவனுடன் வந்து பெரிய வாளுக்கு நமஸ்காரம் பண்ணினாள்.

"ராமா! ஒடனே போயி ஒங்காத்து பசுமாட்டுலேர்ந்து பால் கறந்து ஒரு சொம்புல எடுத்துண்டு வா. போ!"

"உத்தரவு பெரியவா." அடுத்த க்ஷணம் ஒரு சொம்பு பசும்பாலோடு ராமசந்திரன் பெரியவா முன் நின்றார். பெரியவா கண்களை மூடிக்கொண்டு சற்றுநேரம் அமர்ந்திருந்தார். பிறகு, "ராமா, இந்தப்பாலை கொண்டு போயி கொடமுருட்டி ஆத்துல ஊத்திடு! அப்றம் சொச்சம் இருக்கற கொஞ்சூண்டு பாலை அந்த ஆத்தோட கரைல ஊத்திடு! அந்த ஊத்தின எடத்ல இருக்கற மணலை கொஞ்சம் தோண்டு. அதுல ஒரு அஸ்திவாரம் தெரியும். அதுக்கு மேல பிள்ளையாருக்கு ஒரு கோவில் கட்டு. க்ஷேமமா இருப்பேள்" என்று சொல்லிவிட்டு, வஸ்த்ரத்தை எடுத்து உதறிவிட்டு வெளியே வந்து, தான் தங்க வேண்டிய க்ருஹத்தை நோக்கி நடந்தார்.

மஹா பெரியவா சொன்னபடி உடனே குடமுருட்டி ஆற்றுக்கு சென்று பாலை விட்டுவிட்டு, அதன் கரையில் மீதிப்பாலை ஊற்றி மண்ணை தோண்டினால். அஸ்திவாரம் தெரிந்தது! உடனேயே விநாயகருக்கு ஒரு அழகான சிறிய ஆலயம் எழும்பியது! அதற்கு அடுத்த வருஷமே ஸீதாலக்ஷ்மி ஒரு அழகான ஆண் குழந்தைக்கு தாயானாள்! "கணேசன்" என்ற நாமகரணம் சூட்டப்பட்டான் அந்தக் குழந்தை.

இப்போதும் நடுக்காவிரியில் "காவிரிக்கரை ப்ரஸன்ன மஹாகணபதி" கோவிலில் உள்ள விநாயகப் பெருமான் அருள் பாலித்துக் கொண்டிருக்கிறார்.



# 43. பெரியவா சொன்ன தமிழ் பாட்டு

"கோபு இங்கே வா. நீ இப்போ என்ன பாட்டு உரக்க வைச்சுக் கேட்டுக்கொண்டிருந்தே?"

"தாத்தா நீ இருக்கிறதை கவனிக்காம உரக்க வைச்சிட்டேன். சாரி தாத்தா"

அது சரி என்ன பாட்டு அது.

அது ஒரு தமிழ் சினிமா பாட்டு.

"என்னன்னு தான் கேட்டேன் அதைச் சொல்லு?"

"எவண்டி உனைப் பெத்தான் கையிலே கிடைச்சா செத்தான்"

அட இதுவும் ஒரு தமிழ் பாட்டடா? இது தான் எதுகை மோனையா? உருப்படுவியாடா நீ?

"நீங்க ஒரு தமிழ் பாட்டை சொல்லுங்க தாத்தா. நான் இதை ஏதோ என் பிரெண்ட் காபி பண்ணி கொடுத்தானேன்னு சும்மா கேட்டேன்."

"தூக்கத்திலே கூட இந்த தப்பை பண்ணாதே. தமிழ் அழகான மொழி மகா பெரியவா கூட ஒரு தடவை தமிழ்ப் பேரறிஞர் கி.வா. ஜகந்நாதன் கிட்டே பேசும்போது என்ன சொன்னார் தெரியுமா?

"சொல்லுங்க தாத்தா."

பெரியவா எல்லா மொழிகளிலும் ஞானம் உள்ளவா. தமிழ் மொழியிலே கூட அவருக்கிருக்கும் அறிவு பிரமிக்க வைக்கிறது. ஒரு முறை கி.வா.ஜ-விடம், "தமிழ் என்றால் என்ன?" என்று கேட்டார். "சமஸ்கிருதம் என்றால், செம்மை செய்யப்பட்ட மொழி என்று அர்த்தம்! அப்படி தமிழுக்கு ஏன் அந்தப் பெயர் வந்தது சொல்லுங்கள்!"என்கிறார்.

கி,வா.ஜ. அடக்கமாக,"பெரியவா சொன்னால் தெரிந்து கொள்கிறேன்!" என்றார்.

"எந்த மொழியிலும் இல்லாத சிறப்பான எழுத்து 'ழ' என்பது இந்த எழுத்து வரக் கூடிய எந்தச் சொல்லும், அழகு,இனிமை அவற்றைக் குறிப்பதகாவே இருக்கும். மழலை, குழல், அழகு, குழந்தை, கழல், நிழல், பழம், யாழ் இப்படி 'ழ' வருகிற எல்லாமே நமக்குப் பிடித்தவை. ஆகவே இனிமையான 'ழ'வைத் தம்மிடத்தில் உடையது 'தமிழ்' (தமி+ழ்) என்று சொல்லலாமா" என்கிறார்.

உடனே கி.வா.ஜ., "இதைவிடப் பொருத்தமாக சொல்ல முடியுமா? இனி எல்லா மேடைகளிலும் நான் இதைச் சொல்லுவேன்!" என்றாராம்.

சீர்காழிப் பதிகத்தில் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர் பாடியிருக்கும் "யாமா மாநீ யாமா மா" என்ற மாற்றுமாலைப் பதிகம் மிகவும் கடினம். அவற்றுள் ஒன்றைப் பெரியவா எடுத்து, மிகவும் கடினமான அந்தப் பதிகத்தைப் பிரித்துப் பிரித்து மிக எளிமைப்படுத்திப் பொருள் சொன்னார். பெரிய வித்வான்கள் பிரமித்துப் போனார்கள்.

அதுபோல் காளமேகப் புலவர் பாடிய பாடலில் ஒன்று, முக்கால், அரை, கால், அரைக்கால், இருமா, மாகாணி,ஒருமா,கீழரை என்று குறைந்துகொண்டே வரும் அளவுகளை வைத்து எழுதுகிறார், தெரியுமா?" என்று கேட்டு,

"முக்காலுக்கு ஏகாமல் முன்னரையில் வீழாமுன்
அக்கா வரைக்கால் கண்டு அஞ்சா முன்
விக்கி இருமாமுன், மாகாணிக்கேகாமுன்
கச்சி ஒருமாவின் கீழரை இன்றோது."

என்ற பாட்டை பெரியவா எடுத்துக் காட்டுகிறார்.

அதன் பொருளையும் தனக்கே உரிய முறையில்,

"முக்கால்னா மூன்று கால்கள். வயதான் பின் இரண்டு காலில் நடக்கத் தள்ளாடி ஒரு தடியை மூன்றாவது காலாகப் பயன்படுத்துகிறோமே.அந்த நிலை வருவதற்குள்,முன்னரையில் வீழாமுன் நரை வருவதற்கு முன்னாலே விக்கலும் இருமலும் வருவதற்கு முன். யமனுடைய காலடி நம்மை அணுகுவதற்கு முன். ஊருக்கு வெளியிலுள்ள மாகாணி என்ற சுடுகாட்டுக்குப் போகும் முன் காஞ்சியில் ஒரு மாமரத்தின் கீழ் உள்ள ஏகாம்பரேசுவரரை இன்றைக்கே துதிப்பாய்!"

"என்ன அழகு பார்த்தேளா! ஏகாம்பரரை, அந்த ஒன்று என்ற எண்ணுக்குக் கீழேயே கொண்டுவந்து கீழரை வரை எட்டு அளவுகளையும் கோத்துத் துதித்திருக்கிறாரே!" -- சொல்லும்போது பெரியவா மட்டும் இல்லே அருகில் நின்று கெட்டவர்கள் ஏன் இதைப் படிக்கும் நாமே எண்ணற்ற மகிழ்ச்சியில் திளைக்கிறோமே.

இது எனக்கு யார் மூலமோ வந்த செய்தி. செய்தி யாரிடமிருந்து வந்தால் என்ன. அதன் ருசி தான் முக்கியம்.

எண்ணற்ற பாபங்களை தொடர்ந்து செய்துவருகிறோம். நமக்கு கதி மோட்சமுண்டா? எப்படி மீள்வது? என்று திணறும் நமக்கு ஆபத் பாந்தவராக மஹா பெரியவா சுலபமான வழியை சொல்லித் தருகிறார். படியுங்கள். தெரிந்தவர்களுக்கெல்லாம் அனுப்புங்கள். இதுவும் ஒரு லோகார்த்தமான செயல் அல்லவா?

இந்த உலகில் நாம் எவருமே பாபியாக இருக்க விரும்பவில்லை. ஆனால் பாப காரியமே அதிகம் செய்கிறோம். நாம் எல்லோருமே புண்ணிய பயன்பெறத்தான் விரும்புகிறோம். ஆனால் புண்ணிய காரியங்களைச் செய்வதில்லை.

"பாபம் செய்ய யாருமே விரும்பவில்லை. ஆனாலும், கிருஷ்ணா! அவனை எதுவோ பாபத்திலேயே பலாத்காரமாகத் தூண்டிக் கொண்டிருக்கிறதே. அது என்ன?" என்று அர்ஜுனன் பகவானைக் கேட்டான்.

"அதுதாண்டா அப்பா! ஆசை ஆசை என்பது"

ஆசையினால் ஒன்றை அடைய முயல்கின்றோம். எப்படியாவது அதை அடைந்துவிட வேண்டும் என்பதால் தர்ம அதர்மங்களைப் புறக்கணித்து விடுகிறோம். அந்த ஆசை நிறைவேறிவிட்டால் அதோடு திருப்தி உண்டாகிறதா? இல்லை. அக்னியில் நெய்யை விட்டால் அது அணைந்தா போகிறது? மேலும் பெரிதாக வளர்கிறது. அப்படியே ஒர் ஆசை பூர்த்தியான மனஸில் இன்னோர் ஆசை பெரிதாக மூளுகிறது.

சரி, அப்படியானால் ஆசை நிறைவேறாவிட்டாலே நல்லது என்று சொல்லவா? அப்படியும் இல்லை. ஆசை நிறைவேறாவிட்டால் நமக்கு ஆத்திரம் உண்டாகிறது. சுவரில் எறிந்த ரப்பர் பந்து திரும்புவதுபோல் நிறைவேறாத ஆசையானது கோபமாகத் திருப்பி வந்து நம்மைப் பாபத்தில் மேலும் தள்ளுகிறது. ஆசைக்கு அடுத்தபடி இந்தக் குரோதத்தைத் தான் பகவான் கீதையில் சொன்னார். இதுவும் ஆசையின் விளைவு தான்.

அப்படியானால் பாபம் செய்யாதிருப்பதற்கு ஒரே வழி ஆசைகளை அழிப்பதுதான். இதை எப்படிச் செய்வது. நாம் காரியம் செய்யாமல் இருக்க முடியாது. உடம்பு காரியம் பண்ணாதபோது கூட நம் மனசு காரியம் பண்ணிக்கொண்டே தான் இருக்கிறது. எதையாவது எண்ணிக் கொண்டேயிருப்பது தான் மனஸின் காரியம். உடம்பு, மனசு ஆகியவற்றால் இந்த இரு வகையிலும் நாம் செய்கிற அத்தனை காரியங்களும் இப்போது நம்முடைய சொந்த ஆசை அபிலாஷைகளையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கின்றன.

இதனாலேயே அவை நம்மை மேலும் மேலும் பாபத்திலே கொண்டு போய் தள்ளிக் கொண்டிருக்கின்றன. அப்படியானால் இனி காரியமே இல்லாமல் சும்மாயிருந்து விடலாமா? என்று பார்த்தால், மநுஷ்ய ஸ்வாபாவம் நம்மை அப்படியிருக்க விடமாட்டேன் என்கிறது.

சிந்தையை அடக்கி சும்மாயிருக்கின்ற திறம் அரிது என்று தாயுமாநஸ்வாமிகள் சொன்னார். உடம்பின் காரியத்தைக் கொஞ்சம் நிறுத்தினால் கூடசித்தத்தின் காரியம் நிற்கமாட்டேன் என்கிறது. அது, தான் காரியம்செய்வதோடு உடம்பையும் காரியத்தில் ஏவி விடுகிறது.

ஆசையை நேராக நிறுத்த முடியவில்லை. காரியத்தையும் நிறுத்தமுடியவில்லை என்றால் நமக்கு கதிமோ க்ஷமே இல்லையா? இந்தப்பிரச்சனைக்கு (Problem) தீர்வே (Solution) இல்லையா? இருக்கிறது. அதாவது இப்போது நாம் இருக்கிற நிலைமையில்

காரியத்தை அடியோடு நிறுத்திவிடவேண்டுமென்பதில்லை. ஆனால் நாம் சொந்த ஆக்ஞைக்காகவே காரியம் செய்து கொள்கிறோம் என்ற நிலைமையை மாற்றி, நமக்கு லௌகிகமாக லாபம் தராத காரியங்களில் ஈடுபட வேண்டும். லோகோபகாரமாகவும், நமக்கேஆத்மார்த்தமாகப் பலன் தருவதாகவும் இருக்கப்பட்ட காரியங்களில் இறங்கவேண்டும். இப்படிப்பட்ட காரியங்களில் ருசியை உண்டாக்கிக் கொண்டு மேலும் மேலும் ஈடுபடுகிறபோது, ஆசைகளும் குறைந்து கொண்டே வருகின்றன. பாபம் குறைகிறது. புண்ணியம் ஏறுகிறது. அதாவது இப்போது நாம் செய்ய வேண்டியது என்னவென்றால் லோகார்த்தமாக காரியம் செய்யப் பழகவேண்டும். ஆசையில்லாமல் செய்வதுதான் புண்ணிய காரியம்.

நாம் இப்போது நான்கு விதங்களில் பாபம் செய்கிறோம். உடம்பால் பல கெட்ட காரியம்,. வாயால் புரளி பேசும் அசத்தியமும், மனத்தினால் கெட்ட நினைவுகள், பணத்தினால் செய்கிற பாபத்தைப் சொல்லவே வேண்டாம். எந்த நான்கால் பாபம் செய்தோமோ, அந்த நான்காலுமே புண்ணியம் செய்யப் பழகிக்கொள்ள வேண்டும். உடம்பைப் பரோபகாரம், பகவானைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரிப்பது இவற்றில் ஈடுபடுத்திப் புண்ணியம் செய்ய வேண்டும். வாயால் பகவந் நாமாவைத் சொல்லிப் புண்ணியம் செய்ய வேண்டும். சம்பாதிப்பதாலேயே பொழுதெல்லாம் போய் விடுகிறது. இதற்கு அவகாசம் இல்லையே என்பீர்கள். சம்பாதிப்பது கிருஹஸ்தர்களுக்கு அவசியம்தான். ஆனால் யோசித்துப் பார்த்தால் அதற்கே பொழுது முழுதும் போய்விடவில்லை என்று தெரியும். வீண் பேச்சு, பரிகாசம், வேடிக்கை பார்ப்பது, நியூஸ் பேப்பர், விமர்சனம் இவற்றில் எவ்வளவு பொழுது வீணாகிறது.அதையெல்லாம் பகவத் நாமஸ்மரணையில் செலவிடலாமே. இதற்கென்றுதனியே பொழுது ஏற்படுத்திக் கொள்ள முடியாவிட்டாலும் பரவாயில்லை.காரியாலயத்திற்கு பஸ்ஸிலோ, ரயிலிலோ போகும்போது பகவத் நாமாவை ஜபித்துக் கொண்டே போகலாமே. ஓடி ஓடி சம்பாதிப்பதில் ஒரு பைசா கூட பிற்பாடு உடன் வராதே. மறு உலகத்தில் செலாவணி பகவத் நாமா ஒன்றுதானே.

மனசு பகவானின் இடம். அதைக் குப்பைத் தொட்டியாக்கி இருக்கிறோம்.

அதைச் சுத்தப்படுத்தி மெழுகி, பகவானை அமரவைத்து, நாமும் அமைதியாக அமைந்துவிட வேண்டும். தினமும் ஐந்து நிமிடங்களாவது இப்படி தியானம் செய்ய வேண்டும். லோகமே மூழ்கிப்போனாலும் நிற்காமல் நடக்க வேண்டியகாரியம் இது. ஏனெனில் லோகம் மூழ்கும் போது நமக்குக் கைக்கொடுப்பது இதுதான்.

பணத்தைக் கொண்டு பகவானுக்காகவும் ஏழைகளுக்காகவும் பலவிதங்களில் தர்மம் செய்து புண்ணியம் சேர்க்க வேண்டும். பாபத்துக்கு இரண்டு சக்திகள். ஒன்று இன்று இப்போது நம்மைத் தவறில் ஈடுபடுத்துவது. இரண்டாவது, நாளைக்கும் நாம் இந்த தவற்றைச் செய்ய தூண்டுவது. உதாரணமாக, பொடி போடுவது அன்றைக்குக் கெடுதல் செய்கிறது. அதோடு நில்லாமல் நாளைக்கும் பொடி போடுமாறு தூண்டுவது,



இதுதான் பழக்க வாசனை என்பது. இந்த வாசனையை மங்கவைத்து, புண்ணியங்களைச் செய்து செய்து புண்ணிய வாசனையை ஏற்ற வேண்டும். வாசனைதான் மீண்டும் மீண்டும் பாவத்தில் நம்மை இழுக்கிறது. அதற்காகப் பயம் வேண்டாம். நம்மைப் போல் இருந்தவர்கள் நம்மைப் போல் பாபிகளானவர்கள் கூட பக்தர்களாகவும், ஞானிகளாகவும் ஆகியிருக்கிறார்கள். பாபிகளை ரட்சிக்காவிட்டால் ஈஸ்வரனுக்குத் தான் என்ன பெருமை. நாம் பாவியாக இருப்பதாலேதான்அவனுக்குப் பதிதபாவனன் என்ற விருது கிடைக்கிறது. அவனுக்கு அந்த பெருமையை நாம் தான் கொடுக்கிறோம்.

"என்னை மட்டும் சரணடைந்து விடு. நான் உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச." பயப்படாதே" என்று தீர்மானமாக அபய வாக்குத் தருகிறார் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா.

நாம் தைரியமாக இருப்போம். எத்தனை சுற்றுச் சுற்றினாலும்அத்தனையையும் திருப்பிச் சுற்றினால் தான் கட்டு கழலும். பாப வாசனை அவ்வளவும் தீர அத்தனை புண்ணிய வாசனை உண்டாக வேண்டும். அப்படிச் செய்தால் சுற்று முடிச்சு அவிழ்ந்து விடும். பொறுமையாக பகவானை நம்பி நம் தர்மத்தைச் செய்தால் நிச்சயம் கை கொடுப்பான்.

மனோ வாக்குக் காயங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக இந்திரிய வியவகாரதிலிருந்து திருப்பி, பகவானிடம் வைத்துப் பழகுவதற்காகத்தான் இத்தனை மதங்களும் தோன்றியிருக்கின்றன. ஜீவனாகப்பட்டவன் இந்திரிய சுகங்களுக்காகச் செய்கிற பாபங்களிலிருந்து அவனை மீட்பதற்காகத்தான் ஒவ்வொரு பெரியவரும் தோன்றி ஒரு மதத்தைக் கொடுத்து விட்டுப்போயிருக்கிறார். பாபத்தால், இந்திரிய சுகத்தினால் கிடைக்கிற ஆனந்தம் ரொம்பவும் தற்காலிகமானதுதான். பரமாத்மாவோடு சேர்த்திருப்பது தானப்பா நிரந்தரமான ஆனந்தம் என்று சொல்லி, சம்ஸாரத்திலிருந்து அதனை விடுவித்து பகவானிடத்தில் சேர்ப்பதுதான் ஒவ்வொரு மதத்துக்கும் லட்சியமாகும்.



# 44. சகுனம் வேறு, நிமித்தம் வேறு

நிமித்தம் என்பது வரப்போவதை ஏதோ ஒரு தினுஸில் அடையாளம் காட்டுவதற்குப் பொதுப் பெயர். அதில் ஒரு வகையே சகுனம்.

சகுனம் என்பதற்கு 'பக்ஷி'என்பது அர்த்தம். பக்ஷிகளால் ஏற்படும்

நிமித்தங்களுக்குத் தான் சகுனம் என்று பெயர். உலகத்தில் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாத வஸ்து எதுவுமே இல்லை. நடக்கும் காரியங்களும் அப்படியே. ஸரியான கணக்குத் தெரிந்தால் எல்லாம் தெரிந்து கொள்ளலாம்.

உலகத்தில் நடப்பவை எல்லாம் ஒரே ஒருவருடைய ஆக்ஞையால் தான் நடக்கின்றன;ஒரே கணக்காகவும் நடக்கின்றன. அதனால் ஒரு காரியத்தைக்கொண்டு மற்ற எல்லாவற்றையும் கண்டு பிடிக்க வழி உண்டு.

கை ரேகை, ஆரூடம், க்ரஹநிலை முதலிய எல்லாம் ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் உடையனவாகவே இருக்கின்றன. எல்லாம் நிஜம்தான். இவற்றில் ஒன்று தான் நிமித்தம் என்பது. அதில் ஒரு அங்கமே சகுனம்.

ஒரு பக்ஷி வலமிருந்து இடம்போனால் இன்ன பலன்;இன்ன பக்ஷி கத்தினால்இன்ன விளைவு ஏற்படும் என்று சகுன சாஸ்திரம் கூறும்

'நிமித்தம்' என்பதிலேயே, நாம் 'சகுனம் பார்ப்பது' என்று சொல்வதிலுள்ள மற்ற எல்லாம் வரும். Omen என்று ஆங்கிலத்தில் பொதுவாகச் சொல்வது கூட இந்த நிமித்தம் தான்.

(கீதை ஆரம்பத்தில்) "நிமித்தானி ச பச்யாமி விபரீதானி கேசவ" என்று யுத்தம் ஆரம்பிக்குமுன் அர்ஜுனன் பகவானிடம் சொல்கிறான். 'கெட்ட சகுனங்களைப் பார்க்கிறேன்'என்று நாம் சொல்வதைத்தான், அர்ஜுனன் கிருஷ்ணன் கிட்டே 'விபரீதமான நிமித்தங்களைப் பார்க்கிறேன்' என்கிறான். அவன் நிமித்தம் என்பதுதான் சரி.

நாம் சகுனம் என்பதே நல்லது அல்லது கெட்டதற்குச் சூசகமான பொதுப்பெயர் என்று வழக்கமாக நினைப்பது தப்பு. இந்த சூசகங்களில் பக்ஷிகளால் விளைவது மட்டுமே சகுனம்.

ஒரு பூனை குறுக்கே போனால் அது நிமித்தம். கருடன் குறுக்கே போனால் அது சகுனம்.

பிற்பாடு பகவானும் அர்ஜுனனிடம் 'நிமித்த'த்தைப் பற்றிச் சொல்கிறார். "நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசின்" (ஜ்1.33)

"சத்ருக்களை வதைப்பதாவது, அதனால் பாவம் வருமே!" என்று அழுத அர்ஜுனனிடம், "இந்த யுத்தத்தில் இவர்களை வதைப்பதாக நான் ஏற்கெனவே ஸங்கல்பம் பண்ணியாகிவிட்டது. அதனால் இவர்கள் இப்போது ஏற்கனவே செத்துப் போனவர்கள்தான். இவர்களைக் கொல்பவன் நான் தான் அப்பா. நீ வெறும் கருவி மாத்திரமாக இரு" என்று அர்ஜுனனிடம் பகவான் சொல்கிறபோது, 'நிமித்த மாத்ரம் பவ' என்கிறார். ஆகவே நிமித்தம் என்பது அதுவே பலனை உண்டாக்குவதில்லை; ஏதோ ஒரு இன்னொன்று நிச்சயம் பண்ணிவிட்ட பலனை இது வெளிப்படத் தெரிவிக்கிறது என்றே ஆகிறது. இதே போல, நம்முடைய பூர்வ கர்ம பலனைத்தான் நிமித்தங்கள் யாவும் தெரிவிக்கின்றன.

சுருக்கமாகச் சொன்னால், மூன்று ஸ்கந்தங்களில் பொதுவாக கணிதத்தையும் கிரஹதிகளை சொல்லுவது 'ஸித்தாந்தம்'. தனித்தனியாக மனிதனுடைய ஸுக துக்க பலனைச் சொல்லுவது 'ஹோரை' அல்லது ஜாதகம் 'ஹோரா' என்கிற வார்த்தையிலிருந்து தான் ஆங்கிலத்தில் ஜாதகமே 'ஹாரஸ்கோப்' எனப்படுகிறது. மிச்சம் உள்ளவை எல்லாம் 'ஸம்ஹிதை' வெள்ளைக்காரன் நம்மைவிட நமது சாஸ்திரங்களை நன்றாக தெரிந்து கொண்டு நம் கண்ணெதிரே நமது செல்வங்களை எடுத்துச் சென்று அனுபவித்து பேரும் புகழும் பெற்றான். நாம் கோட்டை விட்ட நமது ரிஷிகளின் அற்புத படைப்புகளை முழுதும் பயன் படுத்திக்கொண்டான். நாம் அவனைப்போலவே கோட்டு, சூட்டு, சுருட்டு, அவன் பாஷை மட்டும் கற்றுக் கொண்டு விட்டோம். இப்படி ஒரு கூட்டம் உலகில் எங்காவது பார்க்க முடியுமா? என்றார் தாத்தா.

இன்னொரு வேடிக்கை சொல்லி முடிக்கட்டுமா? நாகு செட்டியார் சகுனம் பார்ப்பவர். ஒரு கடன் வசூலிக்க கிளம்பினார். அந்த பயல் பாலு ரெட்டி மட்டும் இன்று கடனை திருப்பிக் கொடுக்கலேன்னா அவன் காலை வெட்டிட போறேன் என்று கருவிக்கொண்டு குடையை எடுத்துக்கொண்டு வாசலுக்கு சென்றார். அங்குமிங்கும் ஏதாவது பக்ஷி தென்படுகிறதா என்று சகுனம் பார்த்தார்.

ஒரு பெரிய வால் நீளமான கருங்குருவி சர்ரென்று பறந்து இடது பக்கத்திலேருந்து வலது பக்கமாக சென்றது. செட்டியார் மகிழ்ந்தார். ஒரு பழைய வாக்கியம் நினைவுக்கு வந்தது.

"வால் நீண்ட கருங்குருவி இடமிருந்து வலம் போனால் கால் நடையாய்ப் போனவரும் கனக தண்டி ஏறுவரே. ஓஹோ இன்னிக்கு நமக்கு ஏதோ நல்ல வாஹனப் ப்ராப்தி இருக்கு போல இருக்கே."

பாவா சாஹிப் தெரு முனையில் அவர் திரும்பவும் எதிரே கன வேகமாக ஒரு முட்டை பெட்டிகளை ஏற்றிக்கொண்டு ஒரு மூன்று சக்கர வண்டி வரவும் சரியா இருந்தது. இதை எதிர் பார்க்காத செட்டியார் ஒரு தாவு தாவ, அதே நேரம் இவரை தவிர்க்க சற்று வண்டியை சற்று இடது பக்கம் ஒடித்த டிரைவரின் பாதையில் அவர் தொப்பென்று விழுந்து அவர் இடது கால் விரல் மீது வண்டி ஏறி விரல்கள் நசுங்கின. அப்புறம் என்ன? அவரை நாலு பேர் தூக்கிக்கொண்டு கவர்மென்ட் ஆஸ்பத்திரியே சேர்த்து, ஊசி மருந்து, மாவு கட்டு எல்லாம் போட்டு கால் புசு புசு வென்று வீங்கி நடக்க முடியவில்லை. ஒரு மஞ்சள் பெயிண்ட் அடித்த சைக்கிள் ரிக்ஷாவிலே ஏற்றி அனுப்பப்பட்டு வீடு வந்தார்.

இது தான் பக்ஷி சகுனம் சொன்ன கனக தண்டி (பொன்னாலான பல்லக்கு) வாஹனப் ப்ராப்தியோ? பாலு ரெட்டி கால் வெட்டப்படாமல் தப்பி நாகு செட்டியார் கால் கட்டப்பட்டு வீடு சேர்ந்தார்.





# 45. பிராயச்சித்தம்

இது நான் ஏற்கனவே மூன்று தடவை நண்பர்களுக்கு அனுப்பியும் இதை பிரத்யேகமாக குறிப்பிட்டு அதை மற்றொரு முறையும் எழுதுங்கள் என்று சில நண்பர்கள் சொல்லும்போது இதை எத்தனை முறை வேண்டுமானாலும் திரும்ப திரும்ப பகிர்ந்து கொள்ளவேண்டும் என்று தான் தோன்றுகிறது. ஒரு தடவை பால் பாயசம் சாப்பிட்டதால் இனி வேண்டாம் என்றா சொல்கிறோம். சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் இன்னொரு தொன்னை கேட்டு தானே வாங்கி அனுபவிக்கிறோம்?

என் மனசை ரொம்பவே பிழிந்தது இந்த சம்பவம்.

மகாபெரியவாளின் ஆதங்கம், தீர்க்கதர்சனம் துல்லியமாக விளங்கும் ஒரு உருக்கமான நிகழ்ச்சி. இதை மீண்டும் சுருக்கமாக சொல்ல முன் வருகிறேன். முதலில் என்னை இது ஆங்கிலத்தில் வந்தடைந்து உலுக்கியது. அன்று தூக்கத்தில் பெரியவாளையே நினைத்து கண் மூடிக்கொண்டு புரண்டு புரண்டு படுத்தேன். அவருக்கு சாஷ்டாங்க நமஸ்காரத்தை படுக்கையிலே சமர்ப்பித்தேன்.

எனவே எல்லோருக்கும் புரிகிற மாதிரி நாமே நமக்கு தெரிந்த சாதாரண அன்றாட தமிழில் எழுதலாமே என்று தோன்றியது. பலரை இது சென்றடைந்தால் அதுவே என் முயற்சிக்கு கிடைத்த அருள் பிரசாதம்.

''அன்று சித்திரா பவுர்ணமி. திருவிடைமருதூர் மகாலிங்கசுவாமி கோயிலில் ருத்ரஅபிஷேகம். பதினொரு ரிக்வித்துக்களோடு ருத்ராபிஷேகம். ஜபம் காலை 8 முதல் பிற்பகல் 2மணி வரை பிரமாதமாக ஏற்பாடு செய்தவர் மிராசுதார் நாராயணசுவாமி அய்யர். பெரியவா பக்தர். மறுநாள் ருத்ர பிரசாதத்தோடு காஞ்சியில் பெரியவாளுக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி நின்றார். புருவத்தை உயர்த்தி பெரியவா "என்ன விஷயம்?"என்றார். மிராசுதார் பவ்யமாக தேங்காய் , பழம், வில்வம் , விபுதி குங்குமம், சந்தனம் எல்லாம் தட்டில் வைத்தார்.

"எந்த கோயில் பிரசாதம்?"

"திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமி கோயில்லே மகாருத்ரம் ஜபம் அபிஷேகம் ஏற்பாடு பண்ணினேன். அந்த பிரசாதம்."

பெரியவா தட்டை பார்த்தா. "நாராயணசாமி நீ பணக்காரன். தனியாவே பண்ணினியா யாரோடையாவது சேர்ந்தா?"

"இல்லை பெரியவா. நானே தான் பண்ணினேன்!" ("நானே" கொஞ்சம் அழுத்தமாகவே இருந்தது)

"லோக க்ஷேமத்துக்கு தானே?"

மென்று விழுங்கினார் மிராசுதார். "அப்படின்னு இல்லை பெரியவா. ரெண்டு மூணு வருஷமாகவே வயல்லே சரியா வெள்ளாமை போறலே. அறுவடை திருப்தி இல்லே. கவலையோட முத்து ஜோசியரை கேட்டதில் சித்ரா பவுர்ணமியிலே ருத்ர அபிஷேகம் பண்ணு என்று சொன்னார். நல்ல விளைச்சல் வரணும் என்று வேண்டிக்கொண்டு செய்தேன். பெரியவாளுக்கு அபிஷேக பிரசாதம் கொடுத்துட்டு பெரியவா அனுக்ரகத்துக்கும்." நாராயணசாமி மென்று விழுங்கிக்கொண்டே தட்டு தடுமாறி பேசியவர் நிறுத்தினார்.




" ஓ! அப்படின்னா நீ ஆத்மார்த்தமாகவோ லோக க்ஷேமத்துக்காகவோ பண்ணலை"

பெரியவா கண்ணை மூடிக்கொண்டார். கால் மணிநேரம் நழுவியது. குண்டூசி கீழே விழுந்தாலும் கணீர் என்று கேட்கும் அளவுக்கு நிசப்தம் எல்லோரும் பெரியவாளையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவரால் பிரசாதம் தொடப்படவில்லை.

"எத்தனை ரித்விக்குகள் வந்ததா சொன்னே? "

"பதினோன்று பேர் பெரியவா"

"யாராரு, எங்கேருந்தேல்லாம் வந்தா?" -

பெரியவாளுக்கும் மிராசுதாருக்கும் நடக்கும் சம்பாஷணையை அருகில் நின்று கொண்டிருந்த அனைத்து பக்தர்களும் சிலையாக நின்று கவனித்தனர்.

தன்னுடைய பையிலிருந்து ஒரு நோட்டுப் புத்தகம் எடுத்து மிராசுதார் படித்தார் "திருவிடைமருதூர் வெங்கிட்டு சாஸ்திரிகள், ஸ்ரீனிவாச கனபாடிகள், ராஜகோபால ஸ்ரௌதிகள், மாயவரம் கோபாலக்ருஷ்ண தீட்சிதர், தப்பளாம்புலியூர் தண்டு." பெரியவா இடைமறித்து:

"ஓ! எல்லோருமே பெரிய வேத விற்பன்னர்களஆச்சே. உன் லிஸ்ட்லே தேப்பெருமாநல்லூர் வெங்கடேச கனபாடிகள் பேர் இருக்கா பாரு?""

மிராச்தார் சந்தோஷத்தோடு " இருக்கு இருக்கு பெரியவா, நேத்திக்கு அவரும் வந்தார்.

"பேஷ், பேஷ். வெங்கடேச கனபாடிகள் ரொம்ப படிச்சவா. வேதத்திலே அதாரிட்டி. வயசு அதிகமிருக்குமே இப்போ. கஷ்டப்பட்டுண்டு தான் ருத்ர ஜபம் சொல்லமுடியறதாமே"

துப்பாக்கியில் இருந்து குண்டு புறப்படும் வேகத்தில் மிராசுதார் பதிலளித்தார் :

"ரொம்ப சரியா சொன்னேள் பெரியவா: அவராலே மந்திரமே சொல்ல முடியலே அவராலே மொத்தத்தில் சொல்லவேண்டிய ருத்ர ஜபம் எண்ணிக்கை அளவு கொஞ்சம் குறைஞ்சிருக்கும் என்று எனக்கு ரொம்ப வருத்தம். பாதி பாதி முழுங்கிடறார். ஏன் அவரை கூப்பிட்டோம் என்று கூட தோணித்து"

"உன் கிட்ட பணம் இருக்குங்கிறதுக்காக எதை வேணுமானாலும் சொல்லாதே. தேப்பெருமாநல்லூர் வெங்கடேச கனபாடிகள் பத்தி அவருடைய வேத சாஸ்திர அனுபவம் பத்தி உனக்கு என்ன தெரியும்? அவர் கால் தூசு சமானம் ஆவியா நீ? பெரியவா கண் மூடிக்கொண்டது:

சிறிது மௌனத்திற்கு பிறகு பெரியவா தொடர்ந்தார்.

"நேத்திக்கு என்ன நடந்தது என்று எனக்கு புரியறது. நான் கேக்கறதுக்கு மட்டும் பதில் சொல்லு? கனபாடிகள் கண்ணை மூடிக்கொண்டு மனசாலே ஜபம் பண்ணிண்டிருக்கும்போது " வாங்கின பணத்துக்கு மந்திரம் சொல்லாமே ஏன் வாய் மூடிண்டிருக்கேள் என்று நீ அவரிடம் போய் கேட்டாயா?"

அங்கிருந்த அனைவரும் வெல வெலத்து நடுங்கிக்கொண்டு இதையெல்லாம் கேட்டுகொண்டிருக்க மிராசுதார் தொப்பென்று கீழே விழுந்து கையால் வாய் மூடி, கண்களில் பிரவாகத்தோடு

"தப்பு பண்ணிட்டேன் பெரியவா மன்னிச்சுடுங்கோ. நடந்ததை தத்ரூபமாக சொல்றேள் "

"அது மட்டும் இல்லையே. எல்லா ரித்விக்குகளுக்கும் தட்சணை எவ்வளவு கொடுத்தே?

"எலெக்ட்ரிக் ஷாக் வாங்கியவன் போல தட்டு தடுமாறிக்கொண்டு நாராயணசுவாமி

" தலா பத்து ரூபா கொடுத்தேன்"

"தெரியும். எல்லாருக்குமேவா? "

மென்று முழுங்கிக்கொண்டு விதிர் விதிர்த்துப்போய் நடுங்கிகொண்டிருந்த மிராஸ்தாரிடம் பெரியவா

"எங்கிட்ட சொல்ல அவமானமா இருக்கோ? நானே சொல்றேன். எல்லாருக்கும் பத்து பத்து ரூபா கொடுத்துண்டே வந்து கனபாடிகள் கிட்ட வந்து சம்பாவனை ஏழு ரூபா மட்டும் தான் கொடுத்தே. குறைச்சு மந்திரம் சொன்னதாக நினைச்சு ஏழு ரூபா கனபாடிகளுக்கு தகுந்த நியாயமான சம்பாவனையா குடுத்ததில் உனக்கு சந்தோஷம். கனபாடிகள் ஒண்ணும் சொல்லாமே சந்தோஷத்தோடு அதை வாங்கிண்டா அப்படி தானே?"

நாராயணசாமி அய்யர் ஈட்டி பாய்ந்ததுபோல் துடித்தார்.

"பெரியவா நான் மகா தப்பு பண்ணிட்டேன். என்னை மன்னிச்சுடுங்கோ" என்று மிராசுதார் வாய் புலம்பிக்கொண்டே இருந்தது. மடத்துலே இருந்த எல்லா பக்தர்களுக்கும் அதிர்ச்சி. பெரியவாளுக்கு இருக்கும் தீர்க்க தரிசனம் பிரமிக்க வைத்தது. பெரியவா வீசிய மற்றொரு பிரம்மாஸ்திரம் அனைவரையும் தாக்கியது. எல்லோரையும் குண்டு கட்டாக கட்டிப் போட்டது.

"அதோடு போச்சுன்னா பரவாயில்லையே. ராமச்சந்திர அய்யர் ஆத்தில் அனைவருக்கும் போஜனம் நடந்ததே. நீ தானே சக்கரைபொங்கல் பரிமாறினே. நெய், திராட்சை, முந்திரி எல்லாம் கமகமக்க அம்ருதமாயிருக்குன்னு எல்லாரும் திருப்தியா சாப்பிடணும்னு பாரபட்சம் இல்லாம போட்டியா."

நாராயணசாமி நடுங்கினார் துடித்தார். பதில் வரவில்லை. மஹா பெரியவாளே தொடர்ந்தார்:

"நானே சொல்றேன். நன்னா இருக்கு இன்னும் கொஞ்சம்" என்று கேட்டவாளுக்கெல்லாம் மேலே மேலே பரிமாறினே. கனபாடிகள் "இன்னும் கொஞ்சம் போடுங்கோ" என்று நாலு அஞ்சு தடவை கேட்டும் கூட அவர் இலைக்கு மட்டும் போடலை. காதிலே விழாதது மாதிரி நகந்துட்டே. சரியா? இது பந்தி தர்மமா? அவர் மனசு நோகடிச்சு நீ சந்தோஷபட்டே.

இதைச் சொல்லும்போது பெரியவாளுக்கு ரொம்ப துக்கம் மேலிட்டது. நா தழுதழுத்தது. நாராயணசாமி கூனி குறுகி தலை குனிந்து கை கட்டி மண்டியிட்டு கண்களில் கங்கை வடித்தார்.

அமைதி பதினைந்து நிமிடம் போல நிலவியது. பெரியவா கண்மூடி மெதுவாக திறந்தார்.

"தேப்பெருமாநல்லூர் வெங்கடேச கனபாடிகள் பதினாறு வயசிலேருந்து ருத்ர ஜபம் சொல்றவர். இப்போ எண்பத்தோறு வயதிலும் அவர் ருத்ர ஜபம் சொல்லாத

கோவில் தமிழ்நாட்டில் இல்லை. அவர் நாடி நரம்பு மூச்செல்லாம் பரமேஸ்வரன் வாசம் பண்றான். அவர் உடம்பு ரத்தம் பூரா ருத்ர ஜபம் ஓடறது. அவர் சிவ ஸ்வரூபம். மகா புருஷன். அவருக்கு நீ பண்ணினது மஹா பாவம்."

மகா பெரியவாள் மேலே பேச முடியாமல் நிறுத்தினார். மிராசுதார் சிலையாகி வெகுநேரமாகி விட்டதே.

" நீ பண்ணின அவமானத்துக்கு அப்புறம் என்ன பண்ணினார் அவர் என்று உனக்கு தெரியுமா? வீட்டுக்கே திரும்பலை. நேரா திருவிடைமருதூர் கோவில்லே மூணு பிரதக்ஷணம் பண்ணிட்டு மகாலிங்கம் முன்னாலே போய் நின்றார். கண்லே தாரை தாரையா நீர் வடிய "அப்பா ஜோதி மகாலிங்கம், நான் உன்னுடைய பக்தன். உன் சந்நிதிலே எவ்வளவோ காலமா நான் ருத்ர ஜபம் பண்ணி நீ கேட்டிருக்கே. இப்போ எனக்கு 81 ஆயிடுத்து. மனசிலே தெம்பு இருக்கே தவிர உடம்பிலே இல்லே. குரல் போய்டுத்து. சக்கரை பொங்கல் ரொம்ப நன்னா இருந்ததே என்று வெட்கத்தை விட்டு அடிக்கடி இன்னும் கொஞ்சம் போடுங்கோ என்று மிராஸ்தார் கிட்ட கேட்டுட்டேன். முதல்லே அவர் காதிலே விழலை என்று நினைச்சேன். அப்பறம் தான் புரிஞ்சுது அவருக்கு எனக்கு போட இஷ்டமில்லை என்று. இவ்வளவு வயசாகியும் தான் நாக்கை அடக்கலை. அல்ப விஷயத்துக்கு அடிமையாகிட்டேன். அதுக்கு நீ எனக்கு தண்டனை தரத்தான் உன்கிட்ட நிக்கறேன் இப்போ. அவா அவா காசிக்கு போய் பிடிச்சதை விட்டுடுவா. நா இனிமே எங்கே போறது? நீ தானே காசிலேயும் லிங்கம். அதனாலே இதையே காசியா நினைச்சுண்டு உன் எதிர்க்க பிரதிஞை பண்றேன். இனிமே இந்த ஜன்மத்திலே எனக்கு சக்கரை பொங்கல் மட்டு மில்லை. சக்கரை சேர்த்த எந்த பண்டமும் இந்த க்ஷணத்திலேருந்து என் கை தொடாது."

கண்ணை தொடச்சுண்டு கனபாடிகள் அப்புறம் வீட்டுக்கு போனார். "நாராயணசாமி, நீ இப்போ சொல்லு மகாலிங்கம் நீ பண்ணின ருத்ரத்தை ஏத்துப் பாரா?" மௌனம். அனைவரும் கற்சிலையாக அதிர்ந்து நின்றபோது என்ன பதில் எங்கிருந்து வரும்.

மணி மூணு ஆயிடுத்து. அன்றைக்கு பெரியவா பிக்ஷை ஏற்றுக்கொள்ளவில்லை. தனக்கு தண்டனை கொடுத்துக் கொண்டார். எல்லார் கண்களிலும் அனைத்து இந்திய நதிகள். பித்து பிடித்ததுபோல் மிராஸ்தார் அனைவரிடமும் திரும்பி "எல்லாரும் என்னை மன்னிச்சுடுங்கோ. பெரியவா நீங்க தான் என்னை காப்பாத்தணும்" என்று பெரியவா காலடியில் விழுந்தார். அவர் கொண்டு வந்த பிரசாதம் தொடப்படவே யில்லை.

பெரியவா "எல்லாரும் இருங்கோ மகாலிங்க சுவாமியே அனுக்ரகம் பண்ணுவார்" என்றார். எதோ பெரியவா சொல்றதுக்கு காத்திருந்த மாதிரி 65 வயது மதிக்க தக்க ஒரு சிவாச்சாரியார் விபுதி உத்ராக்ஷ மாலைகளோடு அப்போதுதான் ஒரு தட்டுடன் வந்தார்.

“என் பேரு மகாலிங்கம். திருவிடைமருதூர் கோவில் அர்ச்சகன். நேத்திக்கு கோவில்லே ருத்ராபிஷேகம் நடந்தது. பெரியவாளுக்கு பிரசாதம் சமர்ப்பிச்சு ஆசீர்வாதம் வாங்கிண்டு போக வந்தேன்” என்று சொல்லி கோவில் பிரசாதத்தை பெரியவா முன்னால் வைத்து வணங்கினார்.

அவரை தடுத்து பெரியவா “ சிவ தீக்ஷை வாங்கிண்டவா எனக்கு நமஸ்காரம் எல்லாம் பண்ணகூடாது” என்று சொல்லிவிட்டு பிரசாதம் வாங்கிண்டார். அனைவரும் பெற்றனர். மடத்திலிருந்து அர்ச்சகருக்கு காமாட்சி சந்திரமௌலீஸ்வரர் பூஜை பிரசாதம் தரப்பட்டது. அப்போது தான் அங்கு மிராசுதார் நாராயணசாமி நிற்பதை அர்ச்சகர் பார்த்தார். “ பெரியவா இவர் தான் எங்கவூர் மிராசுதார் நாராயணசாமி அய்யர். இவா தான் நேத்திக்கு ருத்ர அபிஷேகம் ஏற்பாடு பண்ணினா” என்று அவரையும் வணங்கிவிட்டு அர்ச்சகர் நகர்ந்தார். நாராயணசாமி அய்யர் வாய் ஓயாமல் பெரியவாளிடம் “ என் பாபத்தை எப்படி கரைப்பேன். என்ன பிராயச்சித்தம் சொல்லுங்கோ” என்று கதறினார்.

பெரியவா எழுந்து ஒரு நிமிஷம் கண்மூடினார். “நான் என்ன பிராயச்சித்தம் சொல்ல முடியும். தேப்பெருமாநல்லூர் வெங்கடேச கனபாடிகள் மட்டுமே உனக்கு பிராயச்சித்தம் என்ன என்று சொல்லணும்.”

பெரியவா, நான் இப்பவே ஓடறேன். “அவர் என்னை மன்னிச்சேன் என்று சொல்வாரா, என்ன பிராயச்சித்தம் பண்ணனும் என்று சொல்வாரா?” நீங்கதான் அருள் செய்யணும்“

பெரியவா ஒரு பெருமூச்சு விட்டார்.

“ உனக்கு ப்ராப்தம் இருந்தா அது நடக்கும்“ என்று கூறிவிட்டு உள்ளே சென்று விட்டார். வெகு நேரமாகியும் பெரியவா பிறகு வெளியே வரவில்லை. மிராசுதார் ஓடினார். அடுத்த பஸ் பிடித்து நேராக தேப்பெருமாநல்லூர் சென்றார். கனபாடிகள் காலில் விழுந்து புரண்டு அழுது மன்னிப்பு கேட்க சென்ற போது கனபாடிகள் வீட்டு வாசலில் ஒரு சின்ன கூட்டம். அன்று காலையில் கனபாடிகள் மகாலிங்கத்தை அடைந்துவிட்டார் என்று கூடியிருந்தவர்கள் சொன்னார்கள். மிராசுதார் ஐயோ என்று அலறினார். கனபாடிகள் உடல் இன்னும் அகற்றப்படவில்லை. நல்லவேளை. கனபாடிகளின் காலை பிடித்து என்னை மன்னிச்சுடுங்கோ நான் மகாபாவி. என்று கதறினார். சுரீர் என்று அப்போது தான் உரைத்தது

அதனால் தான் பெரியவா “ ப்ராப்தம்“ இருந்தால் என்று சொன்னாரா?

** தன் பாபம் தீர நாராயணசுவாமி எண்ணற்ற மடங்களுக்கும் கோயிலுக்கும் தான தர்மங்கள் எல்லாம் செய்து கடைசியில் காசியில் முக்தியடைந்தார் என்று கேள்வி ****



# 46. பரோபகாரம்

எச்சரிக்கை

இது கொஞ்சம் நிதானமாக படித்து சிந்திக்க மட்டுமே. செயல் படுவது உங்கள் சௌகர்யம்.

கீழே கண்டவைகளில் மகா பெரியவா சொன்ன சில வாக்குகளையும் மறக்கக்கூடாது என்பதற்காக சுருக்கி தருகிறேன்.

"பாப சிந்தைனகளைப் போக்குகிற புண்ய சிந்தனைக்கு பேர் ---- பரோபகாரம். சேவை மனப்பான்மை, தியாகம் எல்லாம். மொத்தத்தில் " அன்பு"

"தனக்கு" என்கிற நினைப்பு, அசூயை , வஞ்சனை எதுவும் இல்லாமல் ஒரு காரியம் செய்கிறபோது தான் அதில் முழு ஈடுபாடு உண்டாகிறது.

நாம் செய்கிற கருமம் எப்படிப் பாபமாகிறது? " நமக்காக" என்று ஆசையோடு இதை அடைந்தே விடவேண்டுமென்று ஒரு வெறியோடு அலைகிற போதுதான், அதை அடைய எவ்வித தவறையும் செய்யத் தூண்டுகிறது. அதால், சித்தத்தில் வெறுப்பு மனப்பான்மை, துக்கம், பயம், போன்ற அழுக்குகள் வண்டி வண்டியாக சுமக்கிறோம். இது தேவையா?

மேலை நாட்டில் சக்தியும் ஜடப்போருளும் ஒன்றே என்ற தவறான முடிவை நம்பி விஞ்ஞானிகள் அந்த அறிவில் தான் அணுகுண்டு தயாரித்தார்கள் என்பது வருத்தமாக இருக்கிறது. இதனால் விளைந்த நாசம் என்ன நஷ்டம் என்ன ? ரெண்டாம் உலக யுத்த அனுபவம் மறந்து விட்டதா? விஞ்ஞானம், புத்தி அளவில் நின்றதன் விபரீதம் இது.

நாம் கண்ணால் மட்டும் பார்த்தா ரோஜா, மல்லி, வில்வம், ஊமத்தை என்று ரகம் பிரிக்கிறோம்? கண்ணுக்கு அந்த சேதியைச் சொல்வது புத்தியில் விளையும் ஞானம் அல்லவா? புத்தி முழுதும் ஞானம் வியாபித்ததால் ரோஜா ஊமத்தை ரெண்டையுமே ஒன்றாக ஞானி அறிகிறான். அபேத ஞானம் இது. நமக்கு ஞானம் இல்லாதபடியால், ஒவ்வொன்றையும் வேறு வேறாக பார்க்கிறோம். வித்யாசங்கள் வாழ்வில் பங்கு பெறுகின்றன. உண்மை ஏன் விளங்கவில்லை?காரணம் நமது சித்தம் பூரா நிரம்பி இருக்கும்" பேதம், வித்யாசம், பாரபட்சம் என்கிற அழுக்கு.

அகண்டமாக இருப்பவன் ஒருவன் தான் சாஸ்வதம். உண்மை. மற்றது நினைவு, கனவு, அநித்யமாக தோன்றி தோன்றி மறைவது. அழிவுற்றது.அழிவற்றது அல்ல.

ஒருவருக்கு சொந்தமாக ஊரில் கொஞ்சம் நிலம் இருக்கிறது. அதில் வருஷா வருஷம் விளைச்சல் அதிகமாகிறது. "இந்த வயல் என்னுடையது" என்பதால் விளைச்சல் அதிகமாகும் போது அவருக்கு மனம் குளிர்கிறது. ஆனந்தம் உண்டாகிறது. பிறகு விளைச்சல் குறைகிறது. உடனே அதை விற்றுவிடுகிறார். மறுபடியும் அதே நிலத்தில் விளைச்சல் கூடுகிறது. இப்பொதெல்லாம் அதை பார்க்கிறபோது அவரது மனம் குளிருமா? "அடடா, போன வருஷம் நம்மிடம் இருந்தபோது தரிசாக வெறும் பொட்டலாக இருந்தது, இப்போது பார் அவன் அதிர்ஷடத்தை" என்று வயிற்றெரிச்சல் உண்டாகிறது. "எனது" என்ற சம்பந்தம் இருந்த போது மட்டும்தான், அமோக விளைச்சலால் குஷி ஏற்பட்டது. மற்றவனது என்கிற வித்யாசம் வந்தவுடன் அதே நிலம் அதன் விளைச்சல் விஷயம் அடியோடு மாறிவிட்டது.

பைத்தியக்காரன் ஒருவனிடம் கொம்பைக் கொடுத்து "இந்தா இதைப்பிடித்துக்கொண்டு அரைமணி நேரம் நில்லு'' என்றால் அவனால் முடியாது. வேறு ஒருவனிடம் சொன்னால் அவனால் முடியும். ஆனால்"இதை ப்பற்றியே மட்டும் அரைமணி நேரம் நினைத்துக்கொண்டு இரு'' என்றால் எவனாலும் முடியவில்லையே ஏன்? சித்தம் சொன்ன மறுகணமே, ஆயிரக் கணக்கான எண்ணங்களை சினிமாப்படமாக ஓட்டுகிறதே.

கொம்பு விஷயத்தில் நாம் பைத்தியத்தை பற்றி சொன்னோமல்லவா. அதேபோல் ஞானிகளுக்கு ''நினைப்பு'' விஷயத்தில் நாம் பைத்தியமாகத் தெரிவோம். குதிரை தான் நிறுத்தமுடியாதபடி ஓடுகிறதே!

வேத அத்யயனம், தியானம், பூஜை ஆகியவற்றை கஷ்டப்பட்டு அப்பியாசம் செய்வதால் கிடைக்கும் ஈசுவரானுபவத்தை தெய்வீக சங்கீதத்தின் மூலம்,நல்ல ராக, தாள ஞானத்தின் மூலம் சுலபமாகப் பெறலாம். இப்படி , தர்ம சாஸ்திரம் என்னும் ஸ்மிருதியைத் தந்திருக்கும் யாக்ஞவல்க்ய மகரிஷியே சொல்லியிருக்கிறார். கடுமையான பிரயாசை இல்லாமல்

சங்கீதத்தால் மோக்ஷ மார்க்கத்தில் போகலாம் என்கிறார்.

தியாகராஜ சுவாமிகளின் ''சங்கீத ஞானமு. '' ஞாபகமிருக்கிறதா?

தேக பலமோடு, அஹிம்சை, தைர்யம், இதோடு சுய கஷ்ட நஷ்டம் பாராமல் பிறரைக் காப்பவன் க்ஷத்ரியன். தீமையிலிருந்து பிறரைக் காப்பதே ''க்ஷத்ரம்'' இதை செய்வது க்ஷத்ரிய தர்மம். ஒவ்வொருவரும் முடிந்தவரை பிறர்க்கு உதவலாமே. தோளில் தூக்கிக்கொண்டு ஆஸ்பத்ரிக்கு ஓடினால் தான் க்ஷத்ர தர்மம் இல்லை. பண உதவி, வார்த்தையால் உதவி, சிறிய உடல் உதவி, கூட போதுமே.

பேசும்போது எப்போதும் அளவாகக் கணக்காகப் பேசவேண்டும். வளவள வென்று பேசாமல் சுருக்கமாக இனிமையாக பேசக் கற்றுக் கொண்டால், புத்தியில்

ஒரு தாக்ஷண்யம் , வாக்கில் ஒரு பிரகாசமும் உண்டாகும். சக்தியும் வீணாகாது. சண்டை வராது. தெரிந்து தான் வள்ளுவர் "நா காக்க'' என்கிறார்.

சுற்றுமுற்றும் பாருங்கள். இப்போது யாராவது சந்தோஷமாக இருக்கிறார்களா? ஒருவரை ஒருவர் நேசிக்கிறார்களா? ஒரு சுவருக்கு அப்பால் இருப்பவனே யாரென்று தெரியவில்லை. தெரிந்தால் அது எதாவது ஒரு சண்டையின் போதாக இருக்கும். பரஸ்பர சௌஜன்யம் போய் விட்டது. போட்டி, பொறாமை, அதன் இடத்தை பிடுங்கிக் கொண்டுவிட்டது.

ஒருத்தன் ஆடம்பரமாக இருந்தால் மற்றவர்களுக்கும் அதில் ஆசை உண்டாகுமே! எலலாருக்கும் எல்லா ஆசையும் நிறைவேறுமா? ஏமாற்றம் உண்டாகிறது. அதால் விரோதம் முளைக்கிறது.

அரசாங்கம் ஒழுங்காக நன்றாக நடந்தால் தானே, மக்களுக்கு மானம், உயிர் இரண்டும் காப்பாற்றப்படும். தினமும் பேப்பர் விற்பதே இது இல்லாததால் வரும் விஷயங்களை நம்பித்தானே. பிறர்க்குச் சேவை செய்து பாருங்கள். அதில் கிடைக்கும் சுகம் தனி.

(என்னால் முடிந்தது ராவும் பகலும் எழுதுவது இது ஒன்றே என் 78 வயதில் சேவை. நல்லவற்றைச் சொல்லவேண்டும். முடிந்தால் செய்யவும் வேண்டும் என்பதே. இதில் காசு குறுக்கே வரவே கூடாது.)

உண்மை பேசு. முடிந்தவரையில் பேசு. அதால் விளையும் நன்மையை நீயே உணர்வாய். ஒருவன் உண்மையே பேசி பழகிவிட்டால் முடிவில் அவன் எது சொன்னாலும் அது சத்தியமாகிவிடும். இப்படிப்பட்டவன் மனமறிந்து பொய் சொல்லமாட்டான்.

சத்தியம் எது? மனமும், வாக்கும் ஒன்றுபட்டிருப்பது. மனம் சுத்தமாக இருப்பது. வாக்கு மிருதுவாக சாந்தமாக இருப்பது. இதால் தனக்கும் சித்தசுத்தி. பிறருக்கும் க்ஷேமம்.

(சிறு பிராயத்திலிருந்தே ஆஸ்திக புத்தியை வளர்க்க வேண்டும் என்பதற்காகவே நிறைய குழந்தைகளுக்கு நல்ல விஷயங்களை குட்டி குட்டி கதைகளாக புத்தம் எழுதி ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் சேவை சங்கம் மூலம் இலவசமாக கொடுக்கிறேன்.)

குழந்தைகள் நமது மத அநுஷ்டானங்களை விடாமல் பற்றி ஒழுகி, உத்தமமாக வாழ பெரியோர்கள் பழக்க வேண்டும். நமது ஆத்ம க்ஷேமத்துக்காகவே எண்ணற்ற ரிஷிகள், எத்தனையோ சாஸ்த்ரங்களை நமக்கு கொடுத்திருக்கிறார்கள்.

மஹா பெரியவா சொன்னது நினைவுக்கு வருகிறதா?

"எனக்கு கனகாபிஷேகத்துக்கு செலவழிக் கிறதை வேத சம்ரக்ஷணத்துக்கு செலவு பண்ணுங்கள். தினம் ஒரு மணியாவது 8- 10 வயது குழந்தைகளுக்கு வேதம் பரிச்சயம் பண்ணுங்கள். பேட்டைக்கு பேட்டை இதில் ஈடுபடுங்கள் இது தான் எனக்கு உண்மையான கனகாபிஷேகம் உற்சவம் எல்லாம்"

ரிஷிகள் என்பவர்கள் கொம்பு முளைத்தவர்கள் அல்ல. மனித அறிவின் எல்லையை மீறி அகண்டமாக தன்னை பரிமளித்துக்

கொள்பவனே ரிஷி. அவனால் வேத மந்த்ரங்கள் உலகிற்கு வந்திருக்கின்றன. லோகக்ஷேமத்துக்காக தன்னை வருத்திக்கொள்பவன். எனவே ரிஷிகள் மந்திரங்களைக் கண்டவர்கள். ('மந்திர த்ருஷ்டா') என்று பேர் பெற்றவர்கள்.

இந்து மதம் ஒன்றிலே தான் யார் எந்த சமய மார்க்கத்தில் பிரயாணித்தாலும் முடிவில் ஒரே பரமாத்மாவிடம் ஐக்கியமாவார்கள் என்று ஒப்புக் கொள்ளும் பரந்த விசால மனப்பான்மை கொண்டது. எல்லா சமயங்களுமே பரமனை வழிபட சாதனமாகும்.

நாம் வாழும் உலகே காரணம் - விளைவு - செயல், - அதால் விளையும் பிரதி செயல் என்ற எல்லைக்குள் தான் கட்டுண்டிருக்கிறது. பௌதிகசாஸ்திரம் [Physics] முழுவதும் இந்த உண்மையைத்தான் விளக்குகிறது. ஜடப் பிரபஞ்சம், ஜீவ பிரபஞ்சம் இரண்டும் ஒன்றே. இந்த விதிப்படி பார்த்தால் நம் செயல்கள் அனைத்துக்கும் நிச்சயமாகப் பிரதி பலன் உண்டு. இன்று நாம் அனுபவிக்கிற சுகங்களுக்கும், துக்கங்களுக்கும் காரணம் இதுவே.



# 47. கல்யாணத்துக்கு என்ன வழி?

சில குடும்பங்களில் பெண்களும் ஏதாவது வேண்டுதல் இருந்தால் தலையை மழித்துக் கொள்ளும் வழக்கம் உண்டென்பதால் கமலா டீச்சர் உள்ளே நுழையும்போது அடையாளம் தெரியவில்லை.

எந்த வூர் போயிருந்தே கமலா?

காஞ்சிபுரம் தான்?

உங்கள் குலதெய்வம் எது? காஞ்சியிலேயோ?

எல்லாருக்கும் ஆன குல தெய்வம் தான் தாத்தா சார்?

யாரை சொல்றேம்மா?

மஹா பெரியவா.

"அவாளை வேண்டிண்டிருந்தேன். காணிக்கை செலுத்தினேன். என் அண்ணா பெண்ணுக்கு கல்யாணம் தட்டிண்டே வந்தது. ஒரு வரன் பார்த்துக் கொடுத்தேன். அது நிச்சயமாகுமா என்று சந்தேகம் இருந்தது. பெரியவாளை வேண்டினேன். நீங்க தான் அனுக்ரஹம் பண்ணனும்னு. அப்போ மனசிலே தோணித்து. கல்யாணம் நிச்சயமாயிடுத்து. இன்னும் 3 மாசத்திலே தேதி வச்சாச்சு. ஏற்பாடு எல்லாம் ஜரூரா நடக்கிறது. அதனாலே நேரே காஞ்சி போனேன். நமஸ்காரம் பண்ணேன். பிரார்த்தனை அங்கேயே ஒரு கோவில் கிட்டே செலுத்தினேன்."

"அடடா நான் இதுவரை கேள்விப்படாததா இருக்கே. உனக்கு பெரியவா ஒரு கல்யாணத்துக்கு வழி சொன்ன அதிசயம் சொல்றேன் கேள்."

மஹா தபஸ்வி பெரியவாளுடைய அனுக்ரகம் அவரை அணுகிய அனைவருக்கும் என்றும் உண்டே! எத்தனையோ பேர் எத்த னையோ அனுபவங்களை பரிமாறிக்கொள்கிறார்கள். அத்தனையும் தேவாம்ருதம் அல்லவா. இதோ ஒரு முத்தான சம்பவம்.

ரொம்ப நாளுக்கு முன்னர் என் நண்பர் மோகன் மூலம் தான் முதலில் தெரிந்து கொண்டேன். சுருக்கமாகவே சொல்றேன்.

ரொம்ப வருடங்களுக்கு முன். கரூரைப் பூர்விகமாகக் கொண்ட ராமநாத கனபாடிகள், வேதவித்வான். ஸ்ரீரங்கத்தில்வசித்து வந்தார். மனைவி தர்மாம்பாள்; ஒரே மகள் காமாட்சி.

வேதங்களைக் கரைத்துக் குடித்திருந்தாலும் வைதீகத்தை வயிற்றுப் பிழைப்பாகக் கொள்ளவில்லை. உபன்யாசம் பண்ணுவதில் கெட்டிக்காரர். அதில், கிடைக்கும் சொற்ப சன்மானத் தொகையை மட்டும் மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொள்வார். ஸ்ரீகாஞ்சி மகா ஸ்வாமிகளிடம் மிகுந்த விசுவாசமும் பக்தியும் உள்ள குடும்பம்.

இருபத்திரண்டு வயது காமாட்சிக்குத் திடீரெனத் திருமணம் நிச்சயமானது. ஒரு மாதத்தில் திருமணம். மணமகன் ஒரு கிராமத்தில் பள்ளி ஆசிரியர்.தர்மாம்பாள் தன் கணவரிடம் கேட்டாள்,

"பொண்ணுக்குக் கல்யாணம் நிச்சியமாயிடுத்தே , கையிலே எவ்வளவு சேர்த்து வெச்சிண்டிருக்கேள்?"

"தர்மு, ஒனக்குத் தெரியாதா என்ன? இதுவரைக்கும் அப்படி இப்படின்னு ஐயாயிரம் ரூவா சேத்து வெச்சிருக்கேன். சிக்கனமா கல்யாணத்தை நடத்தினா இது போதுமே". தர்மாம்பாளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

"அஞ்சாயிரத்த வெச்சுண்டு என்னத்தப் பண்ண முடியும்? நகைநட்டு, சீர்செனத்தி,பொடவை, துணிமணி வாங்கி, சாப்பாடுபோட்டு எப்படி கல்யாணத்தை நடத்த முடியும்? குறைஞ்சது இன்னும் பதினையாயிரம் ரூவா கண்டிப்பா வேணும். ஏற்பாடுபண்ணுங்கோ!"

இடிந்து போய் நின்றார் ராமநாத கனபாடிகள்.

தர்மாம்பாள் தொடர்ந்தாள்.

"ஒரு வழி இருக்கு, சொல்றேன், கேளுங்கோ,கல்யாணப் பத்திரிகையைக் கையிலே எடுத்துக்குங்கோ, கொஞ்சம் பழங்களை வாங்கிண்டு நேரா காஞ்சிபுரம் போங்கோ, அங்கே ஸ்ரீமடத்துக்குப் போய் ஒரு தட்டிலே பழங்களை வெச்சு, கல்யாணப் பத்திரிகையையும் வெச்சு மகா பெரியவாளை நமஸ்காரம் பண்ணி விஷயத்தைச் சொல்லுங்கோ. பதினைந்தாயிரம் பண ஒத்தாசை கேளுங்கோ.ஒங்களுக்கு 'இல்லே'னு சொல்லமாட்டா பெரியவா" என்றாள் நம்பிக்கையுடன்.

அவ்வளவுதான்.ராமநாத கனபாடிகளுக்குக் கட்டுக்கடங்காத கோபம் வந்துவிட்டது.

"என்னடி சொன்னே.என்ன சொன்னே நீ! பெரியவாளைப் பார்த்துப் பணம் கேக்கறதாவது. என்ன வார்த்தை பேசறே நீ"

"ஏன்? என்ன தப்பு? பெரியவா நமக்கெல்லாம் குருதானே? குருவிடம் யாசகம் கேட்டால் என்ன தப்பு?"

"என்ன பேசறே தர்மு? அவர் ஜகத்குரு. குருவிடம் நாம "ஞான"த்தைத் தான் யாசிக்கலாமே தவிர, "தான"த்தை [பணத்தை)யாசிக்கப்படாது"

கனபாடிகள் சொல் தர்முவின் கோப மழைக்கும் இடிக்கும் முன் பயன் இல்லாமல் போகவே அடுத்த நாள் "மடிசஞ்சி"யில் தன் வஸ்த்ரங்களோடு காஞ்சிபுரத்துக்குப் புறப்பட்டுவிட்டார் கனபாடிகள்.

ஸ்ரீமடத்தில் அன்று மகா பெரியவாளைத் தரிசனம் பண்ண ஏகக் கூட்டம். ஒரு மூங்கில் தட்டில் பழம், பத்திரிகையோடு வரிசையில் நின்றுகொண்டிருந்தார் கனபாடிகள். நின்றிருந்த அனைவரின் கைகளிலும் பழத்துடன் கூடிய மூங்கில் தட்டுகள்.

பெரியவா அமர்ந்திருந்த இடத்தைக் கனபாடிகள் அடைந்ததும் அவர் கையிலிருந்த பழத்தட்டை ஒருவர் வலுக்கட்டாயமாக வாங்கி, பத்தோடு பதினொன்றாகத் தள்ளி வைத்துவிட்டார். இதைச் சற்றும் எதிர்பார்க்காத கனபாடிகள்,

"ஐயா,ஐயா, அந்ததட்டிலே கல்யாணப் பத்திரிகை வெச்சிருக்கேன். பெரியவாளிடம் சமர்ப்பிச்சு ஆசி வாங்கணும். அதை இப்படி எடுங்கோ" என்று சொல்லிப் பார்த்தார். யார் காதிலும் விழவில்லை.

அதற்குள் மகா ஸ்வாமிகள், கனபாடிகளைப் பார்த்துவிட்டார்

ஸ்வாமிகள் பரம சந்தோஷத்துடன், "அடடே! நம்ம கரூர் ராமநாத கனபாடிகளா? வரணும் வரணும். ஸ்ரீரங்கத்தில் எல்லோரும் க்ஷேமமா? உபன்யாசமெல்லாம் நன்னா போயிண்டிருக்கா?"என்று விசாரித்துக் கொண்டே போனார்.

"எல்லாம் பெரியவா அனுக்கிரகத்துலே நன்னா நடக்கிறது" என்று சொல்லிய படியே சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் பண்ணி எழுந்தார். உடனே ஸ்வாமிகள் சிரித்துக் கொண்டே, ஆத்திலே. பேரு என்ன தர்மாம்பாள்தானே? சௌக்யமா? ஒன் மாமனார் வைத்ய பரமேஸ்வர கனபாடிகள். அவரோட அப்பா சுப்ரமண்ய கனபாடிகள். என்ன நான் சொல்ற பேரெல்லாம் சரிதானே?" என்று கேட்டு முடிப்பதற்குள், ராமநாத கனபாடிகள்" சரிதான் பெரியவா, என் ஆம்படையா தர்முதான் பெரியவாளைப் பார்த்துட்டு வரச் சொன்னா," என்று குழறினார்.

"அப்போ, நீயா வரல்லே?"

பெரியவா. "அப்படி இல்லே பெரியவா. பொண்ணுக்குக் கல்யாணம் வெச்சுருக்கு, தாமுதான் பெரியவாளை தரிசனம் பண்ணிட்டு பத்திரிகையை சமர்ப்பிச்சு." என்று கனபாடிகள் முடிப்பதற்குள்,

"ஆசீர்வாதம் வாங்கிண்டு வரச் சொல்லியிருப்பா" என்று பூர்த்தி பண்ணிவிட்டார் ஸ்வாமிகள்.

பதினையாயிரம் ரூபாய் விஷயத்தை எப்படி ஆரம்பிப்பது என்று புரியாமல் குழம்பினார் கனபாடிகள். இந்நிலையில் பெரியவா, "உனக்கு ஒரு அஸைன்மெண்ட் வெச்சிருக்கேன். நடத்திக் கொடுப்பியா?" என்று கேட்டார்.

"அஸைன்மெண்டுன்னா. என்ன பெரியவா?" இது கனபாடிகள்.

"செய்து முடிக்கவேண்டிய ஒரு விஷயம்னு அர்த்தம். எனக்காகப் பண்ணுவியா?"

பெரியவா திடீரென்று இப்படிக் கேட்டவுடன், வந்த விஷயத்தை விட்டுவிட்டார் கனபாடிகள். குதூகலத்தோடு," சொல்லுங்கோ பெரியவா, காத்துண்டிருக்கேன்"என்றார்.

உடனே பெரியவா, "ஒனக்கு வேற என்ன அஸைன்மெண்ட் கொடுக்கப் போறேன்? உபன்யாசம் பண்றதுதான். திருநெல்வேலி கடையநல்லூர் பக்கத்துல ஒரு அக்ரஹாரம் ரொம்ப மோசமான நிலையில் இருக்காம். பசு மாடெல்லாம் ஊர்ல காரணமில்லாம செத்துப் போய்டறதாம். கேரள நம்பூதிரி கிட்டே ப்ரஸ்னம் பார்த்ததுல பெருமாள் கோயில்ல "பாகவத உபன்யாசம்" பண்ணச் சொன்னாளாம். ரெண்டு நாள் முன்னாடி அந்த ஊர் பெருமாள் கோயில் பட்டாச்சாரியார் இங்கே வந்தார்.

விஷயத்தைச் சொல்லிட்டு, "நீங்கதான் ஸ்வாமி "பாகவத உபன்யாசம்" பண்ண ஒருத்தரை அனுப்பி உதவிபண்ணணும்"னு பொறுப்பை என் தலைல கட்டிட்டுப் போயிட்டார். நீ எனக்காக அங்கே போய் அதைப் பூர்த்தி பண்ணிட்டு வரணும். விவர மெல்லாம் மடத்து மானேஜருக்குத் தெரியும் கேட்டுக்கோ, செலவுக்கு மடத்துல பணம் வாங்கிக்கோ. இன்னிக்கு ராத்திரியே விழுப்புரத்தில் ரயில் ஏறிடு. சம்பாவனை [வெகுமானம்] அவா பார்த்துப் பண்ணுவா. போ.போ. போய் சாப்டுட்டு ரெஸ்ட் எடுத்துக்கோ" என்று சொல்லிவிட்டு, வேறு ஒரு பக்தரிடம் பேச ஆரம்பித்துவிட்டார் ஸ்வாமிகள்.

அன்றிரவு விழுப்புரத்தில் ரயிலேறிய கனபாடிகள் அடுத்த நாள் மதியம் திருநெல்வேலி ஜங்ஷனில் இறங்கினார். பெருமாள் கோயில்பட்டர் ஸ்டேஷனுக்கே வந்து கனபாடிகளை அழைத்துச் சென்றார்.

ஊருக்குச் சற்று தொலைவில் இருந்தது அந்த வரதராஜப் பெருமாள்கோயில். கோயில். பட்டர் வீட்டிலேயே தங்க ஏற்பாடு. ஊர் அக்ரஹாரத்திலிருந்து ஓர் ஈ காக்காகூட கனபாடிகளை வந்து பார்க்கவிலை. "உபன்யாசத்தின் போது எல்லோரும் வருவா" எனஅவரே தன்னைச் சமாதானப் படுத்திக்கொண்டார்.

மாலை வேளை, வரதராஜப் பெருமாள் சந்நிதி முன் அமர்ந்து ஸ்ரீமத் பாகவத உபன்யாசத்தைக் காஞ்சி ஆச்சார்யாளை நினைத்துக்கொண்டு ஆரம்பித்தார் கனபாடிகள். எதிரே ஸ்ரீவரதராஜப் பெருமாள், கோயில் பட்டர்,கோயில் மெய்க்காவல்காரர்.இவ்வளவு பேர்தான்.

உபன்யாசம் முடிந்ததும், "ஏன் ஊரைச் சேர்ந்த ஒத்தருமே வரல்லே?" என்று பட்டரிடம் கவலையோடு கேட்டார் கனபாடிகள்.

அதற்கு பட்டர், "ஒரு வாரமா இந்த ஊர் ரெண்டு பட்டுக்கிடக்கு! இந்தக் கோயிலுக்கு யார் தர்மகர்த்தாவாக வருவது என்பதிலே ரெண்டு பங்காளிகளுக்குள்ளே சண்டை, அதை முடிவு கட்டிண்டு தான் "கோயிலுக்குள்ளே நுழைவோம்"னு சொல்லிட்டா. உபன்யாசத்துக்கு நீங்க வந்திருக்கிற சமயத்துல ஊர் இப்படி ஆயிருக்கேனு ரொம்ப வருத்தப்படறேன்" என்று கனபாடிகளின் கைகளைப் பிடித்துக்கொண்டு கண் கலங்கினார்.

பட்டரும், மெய்க்காவலரும்,பெருமாளும் மாத்திரம் கேட்க ஸ்ரீமத் பாகவத உபன்யாசத்தை ஏழாவது நாள் பூர்த்தி பண்ணினார், ராமநாத கனபாடிகள். பட்டாச்சார்யார் பெருமாளுக்கு அர்ச்சனை பண்ணி பிரசாதத் தட்டில் பழங்களுடன் முப்பது ரூபாயை வைத்தார். மெய்க் காவல்காரர் தன் மடியிலிருந்து கொஞ்சம் சில்லரையை எடுத்து அந்தத் தட்டில் போட்டார். பட்டர் ஸ்வாமிகள் ஒரு மந்திரத்தைச் சொல்லி சம்பாவனைத் தட்டைக் கனபாடிகளிடம் அளித்து , "ஏதோ இந்த சந்தர்ப்பம் இப்படி ஆயிடுத்து. மன்னிக்கணும்.ரொம்ப நன்னா ஏழு நாளும் கதை சொன்னேள். எத்தனை ரூவா வேணும்னாலும் சம்பாவனை பண்ணலாம். பொறுத்துக்கணும். டிக்கெட் வாங்கி ரயிலேத்தி விட்டுடறேன்" என கண்களில் நீர் மல்க உருகினார்!

திருநெல்வேலி ஜங்ஷனில் பட்டரும் மெய்க்காவலரும் வந்து வழியனுப்பினர். விழுப்புரத்துக்கு ரயிலேறி, காஞ்சிபுரம்வந்து சேர்ந்தார் கனபாடிகள்.

அன்றும் மடத்தில் ஆச்சார்யாளைத் தரிசிக்க ஏகக் கூட்டம்.அனைவரும் நகரும் வரை காத்திருந்தார் கனபாடிகள்.

"வா ராமநாதா! உபன்யாசம் முடிச்சுட்டு இப்பதான் வரயா? பேஷ்.பேஷ்! உபன்யாசத்துக்கு நல்ல கூட்டமோ? சுத்து வட்டாரமே திரண்டு வந்ததோ?" என்று உற்சாகமாகக்கேட்டார் ஸ்வாமிகள்.

கனபாடிகள் கண்களில் நீர் முட்டியது. தழுதழுக்கும் குரலில் பெரியவாளிடம், "இல்லே பெரியவா, அப்படி எல்லாம் கூட்டம்வரல்லே. அந்த ஊர்லே ரெண்டு கோஷ்டிக்குள்ளே ஏதோ பிரச்னையாம் பெரியவா, அதனாலே கோயில் பக்கம் ஏழு நாளும் யாருமே வல்லே" என்று ஆதங்கப்பட்டார் கனபாடிகள்.

"சரி பின்னே எத்தனை பேர்தான் கதையைக் கேக்க வந்தா?"

"ரெண்டே.ரெண்டு பேர்தான் பெரியவா. அதுதான் ரொம்ப வருத்தமா இருக்கு" இது கனபாடிகள்.

உடனே பெரியவா, “இதுக்காகக் கண் கலங்கப்படாது. யார் அந்த ரெண்டு பாக்யசாலிகள்? சொல்லேன், கேட்போம்” என்றார்.

“வெளி மனுஷா யாரும் இல்லே பெரியவா. ஒண்ணு, அந்தக் கோயில் பட்டர். இன்னொண்ணு கோயில் மெய்க்காவலர்” என்று சொல்லி முடிப்பதற்குள், ஸ்வாமிகள் இடி இடியென்று வாய்விட்டுச் சிரிக்க ஆரம்பித்து விட்டார்.

“ராமநாதா. நீ பெரிய பாக்யசாலிடா! தேர்ல ஒக்காந்து கிருஷ்ணன் சொன்ன கீதோபதேசத்தை அர்ஜுனன் ஒருத்தன் தான் கேட்டான். ஒனக்கு பாரு. ரெண்டு பேர்வழிகள் கேட்டிருக்கா. கிருஷ்ணனை விட நீ பரம பாக்கியசாலி” என்று பெரியவா சொன்னவுடன் கனபாடிகளுக்கும் சிரிப்பு வந்துவிட்டது.



“அப்படின்னா பெரிய சம்பாவனை கெடச்சிருக்க வாய்ப்பில்லை என்ன?” என்றார் பெரியவா.

“அந்த பட்டர் ஒரு முப்பது ரூவாயும், மெய்க்காவல்காரர் ரெண்டேகால் ரூவாயும் சேர்த்து முப்பத்திரண்டே கால் ரூவா கெடச்சுது பெரியவா!” ;கனபாடிகள் தெரிவித்தார்.

“ராமநாதா, நான் சொன்னதுக்காக நீ அங்கே போயிட்டு வந்தே. உன்னோட வேதப் புலமைக்கு நெறயப் பண்ணனும். இந்தச் சந்தர்ப்பம் இப்படி ஆயிருக்கு” என்று கூறி, காரியஸ்தரைக் கூப்பிட்டார் ஸ்வாமிகள். அவரிடம், கனபாடிகளுக்குச் சால்வை போர்த்தி ஆயிரம் ரூபாய் பழத்தட்டில் வைத்துத் தரச் சொன்னார்.

“இதை சந்தோஷமா ஏத்துண்டு பொறப்படு. நீயும் ஒன் குடும்பமும் பரம சௌக்கியமா இருப்பேள்” என்று உத்தரவும் கொடுத்தார் ஸ்வாமிகள்.

கண்களில் நீர் மல்க பெரியவாளை நமஸ்கரித்து எழுந்த கனபாடிகளுக்கு, தான் ஸ்வாமிகளைப் பார்க்க எதற்காக வந்தோம் என்ற விஷயம் அப்போதுதான் ஞாபகத்துக்கு வந்தது. பெரியவா கிட்டே ஒரு பிரார்த்தனை. பெண் கல்யாணம் நன்னா நடக்கணும். “அதுக்கு.அதுக்கு.” என்று அவர் தயங்கவும்,”என்னுடைய ஆசீர்வாதம் பூர்ணமாக உண்டு. விவாகத்தை சந்திர மௌலீஸ்வரர் ஜாம்ஜாம்னு

நடத்தி வைப்பார். ஜாக்ரதையா ஊருக்குப் போய்ட்டு வா." என்று விடை கொடுத்தார் ஆச்சார்யாள்.

ரூபாய் பதினையாயிரம் இல்லாமல் வெறுங்கையோடு வீட்டு வாசலை அடையும் தனக்கு, மனைவியின் வரவேற்பு எப்படி இருக்குமோ என்ற பயத்துடன் வீட்டு வாசற்படியை மிதித்தார் ராமநாத கனபாடிகள்.

"இருங்கோ. இருங்கோ. வந்துட்டேன்." உள்ளே இருந்து மனைவி தர்மாம்பாளின் சந்தோஷக் குரல்.

வாசலுக்கு வந்து, கனபாடிகள் கால் அலம்ப சொம்பில் தண்ணீர் கொடுத்தாள். ஆரத்தி எடுத்து உள்ளே அழைத்துப் போனாள். காபி கொடுத்து ராஜ உபசாரம் பண்ணிவிட்டு, "இங்கே பூஜை ரூமுக்கு வந்து பாருங்கோ" என்று கனபாடிகளை அழைத்துப்போனாள்,

பூஜை அறைக்குச் சென்றார் கனபாடிகள்.

அங்கே ஸ்வாமிக்குமுன் ஒரு பெரிய மூங்கில் தட்டில், பழ வகைகளுடன் புடவை, வேஷ்டி இரண்டு திருமாங்கல்யம் மஞ்சள், குங்குமம், புஷ்பம் இவற்றுடன் ரூபாய் நோட்டுக்கட்டுகள் சுற்றிய பொட்டலம் ஒன்றும் இருந்தது.

"தர்மு. இதெல்லாம்." என்று அவர் முடிப்பதற்குள் "காஞ்சிபுரத்துலேர்ந்து பெரியவா கொடுத்துட்டு வரச் சொன்னதா இன்னிக்குக்காத்தால மடத்தைச் சேர்ந்தவா கொண்டு வந்து வெச்சுட்டுப் போறா. "எதுக்கு?"னு கேட்டேன். "ஒங்காத்து பொண் கல்யாணத்துக்காகத்தான் பெரியவா சேர்ப்பிச்சுட்டு வரச் சொன்னா"னு சொன்னா" என்று முடித்தாள் அவர் மனைவி.

கனபாடிகளின் கண்களில் இப்போதும் நீர் வடிந்தது.

"தர்மு, பெரியவாளோட கருணையே கருணை. நான் வாயத் திறந்து ஒண்ணுமே கேட்கலே. அப்படி இருந்தும் அந்தத் தெய்வம் இதையெல்லாம் அனுப்பியிருக்கு பாரு" என்று நா தழுதழுத்தவர்".

"கட்டிலே ரூவா எவ்வளவு இருக்குன்னு எண்ணினியோ" என்று கேட்டார்.

"நான் எண்ணிப் பார்க்கலே"

கீழே அமர்ந்து எண்ணி முடித்தார் கனபாடிகள்.

பதினைந்தாயிரம் ரூபாய்!

அந்த தீர்க்கதரிசியின் கருணையை எண்ணி வியந்து "ஹோ"வென்று கதறி அழுதார் ராமநாத கனபாடிகள்.



# 48. புரட்டல்

தாத்தா பெஞ்சின் மீது அமர்ந்து காலை ஆட்டிக் கொண்டிருந்தார். காலுக்கு ரத்த ஓட்டம் தந்து கொண்டிருந்தார்.

எதிரே மார்க்கபந்து அமர்ந்து "சந்திர சேகர" ஹிந்தோள ராக அருமையான பாடலை பாடிக்கொண்டிருந்தார். சுகமாக அந்த ஆனந்த அனுபவத்திற்கு பிறகு என்னன்னவோ பற்றியெல்லாம் பேசியவர் திடீரென்று

"சார் நீங்க நிறைய எழுதறீங்க. மனதுக்கு ரொம்ப திருப்தியாக இருக்கு பக்கத்தை புரட்டினா கீழேயே வைக்க தோணலை"

"மார்க்க பந்து எங்க ஊர் பக்கம் அடிக்கடி ஒரு வார்த்தை உபயோகிப்போம்'' என்ன அவன் பெரிசா புரட்டிட்டான்" என்று அந்த வார்த்தையை பெரியவா கூட யூஸ் பண்ணியிருக்கா தெரியுமோ?

''அப்படியா சொல்லுங்க'

'' அவன் என்ன புரட்டிவிட்டானா? என்று சாதாரணமாக ஒரு வழக்கு இருக்கிறது. புரட்டுவதற்கு என்ன இவ்வளவு முக்கியத்துவம்?யோசித்துப் பார்த்தால், முறைப்படி புரட்டுவது ரொம்பவும் பெரிய, அர்த்தமுள்ள விஷயம் என்று தெரிகிறது. அநேக கலைகள் புரட்டுவதினாலேதான் பிறந்திருக்கின்றன.

இத்தனை புஸ்தகங்கள் நம்மிடம் இருக்கின்றன. ஒரு சில எழுத்துக்களைப் புரட்டி வைத்து வார்த்தைகளாக்கியதால்தானே இத்தனை புஸ்தகங்களும் வந்திருக்கின்றன. நம்மைவிட இங்கிலீஷ்காரர்களுக்கு எழுத்து இன்னும் குறைவு. இருபத்தாறே எழுத்துககளைப் புரட்டிவிட்டு ஏராளமாக எழுதிவிட்டார்கள். அந்தப் புரட்டலில் ஒரு முறை, ஓர் அழகு இருந்துவிட்டால் கலையாகிறது. நமக்கும் வார்த்தைகள் தெரிகின்றன. கவியும் அதே வார்த்தைகள் தான் புரட்டி வைக்கிறான். உடனே அதில் ரஸம் பிறக்கிறது. கவியைக் கொண்டாடுகிறார்கள். நாம் வார்த்தையைப் புரட்டி எழுதினால் அதை யார் மதிக்கிறார்? தாகூர் மாதிரி ஒருவர் புரட்டுகிற புரட்டினால் ஏக மதிப்பு உண்டாகிறது. அக்ஷர லக்ஷம் என்கிறார்கள்.

சித்திரக் கலையும் இப்படியேதான். வர்ண பாட்டிலையும் பிரஷ்ஷையும் வைத்துக்கொண்டு நாம் புரட்டுவது ரஞ்சகமாக இல்லை. ஆனால் சைத்திரிகன் அதே வர்ணங்களைப் புரட்டினால் அது ஆனந்தம் தருகிறது.

சங்கீதமும் புரட்டல்தான். நாம் எல்லோரும் சத்தம் போடுகிறோம். அந்தச் சப்தத்தை ஸ்வரங்களைகப் பாகுபடுத்தி, இதற்கப்புறம் இது என்று அழகாகப் புரட்டி வைத்தால் இன்பம் உண்டாகிறது. நன்றாகப் புரட்டினால் நிறைய இன்பம்.

புரட்டலில் நிபுணனாக இருப்பவனுக்கு ஒரு மணிக்கு இருநூறு முந்நூறு ரூபாய் தருகிறோம். நாம் சத்தம் செய்தால் ஓய வைப்பதற்கு பணம் கொடுக்கலாம். புரட்டல் இன்பம் இப்படிப்பட்டது.

நமது தொண்டை என்கிற மாமிச வாத்தியத்தில் காற்றைப் புரட்டுகிறோம். தவிர சங்கீத வாத்தியங்கள் பல இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் இந்த புரட்டல் மாத்திரம் பொது. தவில், மிருதங்கம், கஞ்சிரா போன்ற சர்ம வாத்தியங்கள் தோலில் புரட்டுகிறார்கள். வீணை, தம்பூர், பிடில் போன்ற தந்தி வாத்தியங்களில் தந்தியில் புரட்டுகிறார்கள். இந்த வாத்தியங்களில் புரட்டுவதற்கு நடுவே இழைந்து வரும் அநுரணனம் என்ற இழைப்பு ஒலி நயமான இன்பம் தருகிறது. ஒருதரம் மீட்டினால் உண்டான ஒலி நீடித்து, இரண்டாவது மீட்டில் எழுப்பும் ஒலியோடு கவ்வி நிற்கிறது. இதுவே, அநுரணனம், புல்லாங்குழல், நாயணம் போன்ற துவாரமுள்ள ரந்திர வாத்தியந்தான். அதில் வாய்க்குப் பதில் துருத்தி இருக்கிறது. புல்லாங்குழலிலும் நாயனத்திலும் துவாரங்களை விரலால் மாற்றி மாற்றி அடைத்துத் திறக்கிறார்கள் என்றால், ஹார்மோனியத்தில் பில்லைகளை மாற்றி மாற்றி அழுத்தி எடுக்கிறார்கள். தத்துவம் ஒன்றுதான்.

சப்தத்தைப் புரட்டுவதோடு, அங்கங்களைப் புரட்டி விட்டால் நாட்டியக் கலை உண்டாகிறது. சங்கீதத்தால் காதால் கேட்டு அர்த்த ஆனந்தமும், ஸ்வர ஆனந்தமும், பெறுகிறோம். நாட்டியத்தில் இவற்றோடு கண்களால் பார்த்து, அங்கசர்ய ஆனந்தமும் (அங்கங்களைப் முறைப்படி அசைப்பதால், புரட்டுவதால் ஏற்படுகிற இன்பமும்) பெறுகிறோம்.

நவரஸ உணர்ச்சிகளை விளக்குகிற அங்க அசைவான அபிநயம் மட்டும் இல்லாமல், நவரஸமில்லாத வெறும் அங்கசரியை (அங்கப் புரட்டு) மட்டுமே ஆனந்தம் தருவது உண்டு என்பதால் தான் நிருத்தம் என்ற கலை ஏற்பட்டிருக்கிறது. ஈஸ்வரனுக்குச் செய்கிற அறுபத்துநாலு உபச்சாரங்களில் சங்கீதத்தோடுகூட, நிருத்தமும் உபச்சாரமாக சொல்லப்படுகிறது. கீர்த்தனத்தில் சப்தமம், அர்த்தம், லயம் யாவும் சேர்த்து இன்பம் தருகின்றன. ராக ஆலாபனத்தில் வெறும் சப்தம் மாத்திரம் ஆனந்தம் தருகிறது அல்லவா? நிருத்தத்தில் வெறும் அங்கசரியை மட்டும் லயத்தோடு சேர்த்து ஆனந்தம் தருகிறது.

இந்தக் கலைகள்யாவும் கந்தர்வ வேதம் எனப்படும். கந்தர்வர்கள் உற்சாகப் பிறவிகள், அவர்கள் எப்பொழுதும் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் இருப்பார்கள். மனதுக்கு உற்சாகம் தரும் கலைகளுக்கு இதனாலேயே காந்தர்வ வேதம் எனப் பெயர் ஏற்பட்டிருக்கிறது.



# 49. நாத்தனார் கலகம்

*1988-ல் காஞ்சியை அடுத்த ஓரிக்கையில் மகா பெரியவா முகாம். நாடகாசிரியர், பத்திரிகையாளர், கார்ட்டூன் ஓவியர் பரணீதரன் தரிசனத்து சுவாமிகள் தரிசனத்துக்கு வந்தார். எஙனன நடந்தது என்பதை அவரே சொல்லட்டும்:*

“கூட்டமே இல்லை, கைங்கர்யம் பண்ணும் நாலைந்து இளைஞர்கள் மட்டுமே அருகில் இருந்தனர். நமஸ்காரம் செய்தேன்.”

அருகில் வரும்படி அழைத்து உட்காரச் சொன்னார்.

“இப்ப என்ன நாடகம் போட்டுண்டிருக்கே?” என்று பெரியவா கேட்டதும் ஒரு கணம் திகைத்துப் போனேன்.

அதுவரை என் நாடகங்களைப் பற்றி சுவாமிகள் நேரடியாக என்னிடம் விசாரித்ததில்லையாதலால், சற்றும் எதிபாராத வகையில் திடீரென்று பெரியவா அப்படிக் கேட்டத்துதான் எனது ஒரு கணநேரத் திகைப்புக்குக் காரணம்.

“நாத்தனார் கலகம்” என்றேன் நான்.

“என்ன கதை? அதில என்ன சொல்லியிருக்கே?”

இக்கட்டான நிலைமை. “கதையை விரிவாகச் சொல்வதா-சுருக்கமாகக் கூறுவதா? எப்படித் தொடங்குவது, எங்கே தொடங்குவது? எதைச் சொல்வது, எதை விடுவது? இதற்கு முன் பெரியாவாவிடம் கதை சொல்லிப் பழக்கமில்லையே!”

இவ்வாறு சிந்தித்தப்படியே, கதையை விட்டுவிட்டு நாடகத்தின் மையக் கருத்தைக் கூறிவிடலாம் என்ற முடிவுக்கு வந்தேன்.

“இப்பெல்லாம் பிள்ளைகள் அப்பா அம்மாவைச் சரியா கவனிச்சுக்க மாட்டேங்கறா, நிறைய சம்பாதிக்கறா. அப்பாவோட பணமும் வேண்டியிருக்கு. ஆனா அன்பா இருக்கமாட்டேங்கிறா. பெத்தவா வீட்டை விட்டுவிட்டு, விருத்தாச்ரமங்களைத் தேடிண்டு போகவேண்டியிருக்கு,” இதை வெச்சுண்டு கதை எழுதியிருக்கேன்!' என்று கூறினேன்.

“வாஸ்தவம்தான். என்கிட்டே கூட அப்பப்போ சிலபேர் வந்து “பையன் வெளிநாட்டிலே, உத்தியோகம் பார்க்கறான். ஆயிரம் ஆயிரமா சம்பாதிக்கிறான். நாங்க இங்கே தனியா திண்டாடறோம்; சாப்பாட்டுக்கே வழியில்லை, மடத்துக்கு வந்து கைங்கரியம் பண்ணிண்டு இங்கேயே இருந்திடறோம்”னு சொல்றா. பாவமாயிருக்கு” என்று கூறிவிட்டு, “இதுக்கு நாடகத்திலே என்ன ஸொல்யூஷன் சொல்லியிருக்கே?” - பெரியவா.



"நான் பரிகாரம் ஒண்ணும் சொல்லலே, பொதுவா இந்தக் காலத்துப் பசங்களோட மனோபாவம் எப்படியிருக்குன்னு காண்பிச்சிருக்கேன். இந்த நாடகத்தில் பணத்தாசை பிடிச்ச பொண்ணு ஒருத்தி, தம்பிகளை அப்பாவுக்கு எதிராத் தூண்டிவிட்டு கலகம் பண்றா" என்று கதையை இரண்டு வரிகளில் கூறினேன். அப்போது நாடகத்தில் இறுதிப் பகுதியில் வலியுறுத்தியுள்ள கருத்தையும் பெரியவாளிடம் சொல்ல வேண்டும் என்று தோன்றியது.

"அப்பாக்களும் எல்லாப் பணத்தையும் தூக்கி பையன்கள் கிட்டே குடுத்துட்டு கடைசிக் காலத்துல திண்டாடாமே, சம்பாதிச்ச பணத்துல தங்களுக்குன்னு கொஞ்சம் சேர்த்து வைச்சுக்கணம்னு சொல்லியிருக்கேன். எல்லாத்துக்கும் பசங்க கையையே எதிர் பார்க்காம, அவாளுக்கு தொந்தரவா இல்லாம, குடும்பப் பொறுப்புகளெல்லாம் முடிச்சப்புறம் பந்த பாசங்கள்லேருந்தும், இதர வசதிகள்லேருந் தும் கொஞ்சம் கொஞ் சமாக விலகி வாழ கத்துக்கணும். முன்காலத்துலே வானப்ரஸ்தம்னு இருந்ததே அது மாதிரி!"

"இவாளையும் காட்டுலே போய் வாசம் பண்ணச் சொல்றயா?" இப்போது காடு எங்கே இருக்கு? அதான் இருக்கிற காடெல்லாத்தையும் அழிச்சிண்டிருக்காளே" என்று கூறி பெரியவாளுக்கு உரிய சிரிப்பொன்றைச் சிரித்தார்.

தாறுமாறான சமூகப் போக்குகளைக் கண்டு மனம் வெதும்பி, ஆற்றாமையால் விமரிசனம் செய்யும்போது பெரியவா சிரிக்கும் சிரிப்பு ஆயிரம் செய்திகளைக் கூறும்.

'நான் காட்டுக்குப் போகச் சொல்லலே. வீட்டுலேயே, எல்லாத்திலேருந்தும் மனத்தாலே ஒதுங்கி வாழப் பழகிண்டா நல்லதுன்னுதான் எழுதியிருக்கேன்.

"சரி சரி " என்று அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தார் பெரியவா.

திரும்பி வரும்போது, பெரியவா கூறிய கருத்து என் மனத்தில் எதிரொலித்துக் கொண்டேயிருந்தது. "அதான், இருக்கிற காடெல்லாத்தையும் அழிச்சிண்டிருக்காளே."

மனிதன் தன் சுயநலத்துக்காக அசுரனாகி மாறி, தன்னைப் பெற்று வளர்க்கும் இயற்கை அன்னையையே கொடுமைப்படுத்தி சின்னா பின்னமாக்கிய பாவத்துக்கான துன்பத்தையல்லவா தற்போது அனுபவித்துக் கொண்டிருக்கிறான்.! சுற்றுப்புறச் சூழலின் தூய்மை கெடுவதற்கும் அதன் தொடர்பான பிற இன்னல்களுக்கும்,இருக்கும் தாவரச் செல்வங்களை அழித்து வருவதுதான் காரணம் என்று தற்போது உலகெங்கும் எதிரொலிக்கும் கூக்குரலை அன்றே,அந்த ஒரு வரியில் பெரியவா வெளிப்படுத்தியதன் தாக்கம் என்னை வெகுவாகப் பாதித்தது. அந்த 'வசனம்' நாடகத்தில் இடம் பெற்றேயாக வேண்டும் என்று தீர்மானித்தேன்.

அதுவரை 'நாத்தனார் கலகம்' இரண்டு மூன்று முறைதான் மேடையேறியிருந்தது. இந்த 'வசனம்' பொருத்தமான இடத்தில் சேர்க்கப்படுவதற்காக இறுதிக் காட்சியை சற்று மாற்றியமைத்து, மீண்டும் ஒத்திகை பார்த்து, அடுத்த நிகழ்ச்சியின்போது பெரியவர்களின் கருத்து ஒலிக்கும்படி செய்தேன்

அன்று நாடகத்தில் சங்கரராமன் என்ற பாத்திரம் "அதான் இருக்கிற காடெல்லாத்தையும் அழிச்சிண்டிருக்காளே" என்று கூறியதும் கொட்டகையில் பலத்த கைதட்டல் கேட்டது. அத்தனை பேர் உள்ளங்களிலும் பெரியவாவின் 'வசனம்' எதிரொலித்ததைக் கேட்க முடிந்தது.அன்று மட்டுமல்ல அதன்பின் எங்கெல்லாம் இந்த நாடகம் நடைபெற்றதோ,அங்கெல்லாம் இந்த ;வசனத்'துக்குப் பார்வையாளரின் கரவொலி வானை முட்டியது.

என்னைப் பொறுத்தவரையில்,"நாத்தனார் கலகத்தில்" இந்த "மெஸேஜே" மணிமகுடச் சிகரம்"



# 50. கண்ணன் காட்டிய வழி

*எண்ணற்ற பாபங்களை தொடர்ந்து செய்துவருகிறோமே கதிமோட்சமுண்டா? எப்படி மீள்வது?*

ஆபத் பாந்தவராக மஹா பெரியவா சுலபமான வழியை சொல்லித்தருகிறார். படியுங்கள். தெரிந்தவர்களுக்கெல்லாம் அனுப்புங்கள். இதுவும் ஒரு லோகார்த்தமான செயல் அல்லவா?

இந்த உலகில் நாம் எவருமே பாபியாக இருக்க விரும்பவில்லை. ஆனால் பாபகாரியமே அதிகம் செய்கிறோம். நாம் எல்லோருமே புண்ணிய பயன் பெறத்தான் விரும்புகிறோம். ஆனால் புண்ணிய காரியங்களைச் செய்வதில்லை. இதே தான் அர்ஜுனனுக்கு தோன்றியது.

"பாபம் செய்ய யாருமே விரும்பவில்லை. ஆனாலும், கிருஷ்ணா! அவனை எதுவோ பாபத்திலேயே பலாத் காரமாகத் தூண்டிக் கொண்டிருக்கிறதே. அது என்ன?" அர்ஜுனன் பகவானைக் கேட்டான்.

"அதுதாண்டா அப்பா! , ஆசை ஆசை என்பது"

ஆசையினால் ஒன்றை எப்படியாவது அடைய முயன்று, தெரிந்தும் தர்ம அதர்மங்களைப் புறக்கணித்து விடுகிறோம். சரி அந்த ஆசை நிறைவேறிவிட்டால் அதோடு திருப்தி உண்டாகிறதா? இல்லை. அக்னியில் நெய்யை விட்டால் அது அணைந்தா போகிறது? மேலும் பெரிதாக கொழுந்து விட்டு வளர்கிறது. அப்படியே ஒர் ஆசை பூர்த்தியான மனஸில் இன்னோர் ஆசை பெரிதாக மூளுகிறது.

சரி, அப்படியானால் ஆசை நிறைவேறாவிட்டாலே நல்லது என்று சொல்லவா? அப்படியும் இல்லை. ஆசை நிறைவேறா விட்டால் நமக்கு ஆத்திரம் உண்டாகிறது. சுவரில் எறிந்த ரப்பர் பந்து திரும்புவது போல் நிறைவேறாத ஆசையானது கோபமாகத் திருப்பி வந்து நம்மைப் பாபத்தில் மேலும் தள்ளுகிறது. ஆசைக்கு அடுத்தபடி இந்தக் குரோதத்தைத் தான் பகவான்கீதையில் சொன்னார். இதுவும் ஆசையின் விளைவுதான்.

அப்படியானால் பாபம் செய்யாதிருப்பதற்கு ஒரே வழி ஆசைகளை அழிப்பதுதான். எப்படி?

நாம் காரியம் செய்யாமல் இருக்கமுடியாது. உடம்பு காரியம் பண்ணாதபோதுகூட நம் மனசு ஏதோ ஒரு காரியம்பண்ணிக்கொண்டேதான் இருக்கிறது. எதையாவது எண்ணிக் கொண்டேயிருப்பது தான் மனஸின் காரியம். உடம்பு, மனசு ஆகியவற்றால் இந்த இரு வகையிலும் நாம் செய்கிற அத்தனை காரியங்களும் இப்போது நம்முடைய சொந்த ஆசை அபிலாஷைகளையே சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருக்கின்றன.

இதனாலேயே அவை நம்மை மேலும் மேலும் பாபத்திலே கொண்டு போய்த் தள்ளிக் கொண்டிருக்கின்றன. அப்படியானால் இனி காரியமே இல்லாமல் சும்மாயிருந்து விடலாமா? என்று பார்த்தால், மநுஷ்ய ஸ்வாபாவம் நம்மை அப்படியிருக்க விடமாட்டேன் என்கிறது.

சிந்தையை அடக்கி சும்மாயிருக்கின்ற திறம் அரிது என்று தாயுமாநஸ்வாமிகள் சொன்னார். உடம்பின் காரியத்தைக் கொஞ்சம் நிறுத்தினால் கூட சித்தத்தின் காரியம் நிற்கமாட்டேன் என்கிறது. அது, தான் காரியம் செய்வதோடு உடம்பையும் காரியத்தில் ஏவி விடுகிறது.

ஆசையை நேராக நிறுத்த முடியவில்லை. காரியத்தையும் நிறுத்தமுடியவில்லை என்றால் நமக்கு கதிமோக்ஷமே இல்லையா? இந்தப் பிரச்சனைக்கு (Problem) தீர்வே (Solution) இல்லையா? இருக்கிறது. அதாவது இப்போது நாம் இருக்கிற நிலைமையில் காரியத்தை அடியோடு நிறுத்திவிடவேண்டுமென்பதில்லை. ஆனால் நாம் சொந்த ஆக்ஞைக்காகவே காரியம் செய்து கொள்கிறோம் என்ற நிலைமையை மாற்றி, நமக்கு லௌகிகமாக லாபம் தராத காரியங்களில் ஈடுபட வேண்டும். லோகோபகாரமாகவும், நமக்கே ஆத்மார்த்தமாகப் பலன் தருவதாகவும் இருக்கப்பட்ட காரியங்களில் இறங்கவேண்டும். இப்படிப் பட்ட காரியங்களில் ருசியை உண்டாக்கிக் கொண்டு மேலும் மேலும் ஈடுபடுகிறபோது, ஆசைகளும் குறைந்து கொண்டே வருகின்றன. பாபம் குறைகிறது. புண்ணியம் ஏறுகிறது. அதாவது இப்போது நாம் செய்ய வேண்டியது என்னவென்றால் லோகார்த்தமாக காரியம் செய்யப் பழக வேண்டும். ஆசையில்லாமல் செய்வது தான் புண்ணிய காரியம்.

நாம் இப்போது நான்கு விதங்களில் பாபம் செய்கிறோம். உடம்பால் பல கெட்ட காரியம்,. வாயால் புரளி பேசும் அசத்தியமும், மனத்தினால் கெட்ட நினைவுகள், பணத்தினால் செய்கிற பாபத்தைப் சொல்லவே வேண்டாம். எந்த நான்கால் பாபம் செய்தோமோ, அந்த நான்காலுமே புண்ணியம் செய்யப் பழகிக்கொள்ள வேண்டும். உடம்பைப் பரோபகாரம், பகவானைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரிப்பது இவற்றில் ஈடுபடுத்திப் புண்ணியம் செய்ய வேண்டும். வாயால் பகவத் நாமாவைத் சொல்லிப் புண்ணியம் செய்ய வேண்டும். சம்பாதிப்பதாலேயே பொழுதெல்லாம் போய்விடுகிறது. இதற்கு அவகாசம் இல்லையே என்பீர்கள். சம்பாதிப்பது கிருஹஸ்தர்களுக்கு அவசியம் தான். ஆனால் யோசித்துப் பார்த்தால் அதற்கே பொழுது முழுதும் போய்விடவில்லை என்று தெரியும். வீண் பேச்சு, பரிகாசம், வேடிக்கை பார்ப்பது, நியூஸ் பேப்பர் விமர்சனம் இவற்றில் எவ்வளவு பொழுது வீணாகிறது. அதையெல்லாம் பகவத் நாம ஸ்மரணையில் செலவிடலாமே. இதற்கென்று தனியே பொழுது ஏற்படுத்திக் கொள்ள முடியாவிட்டாலும் பரவாயில்லை. காரியாலயத்திற்கு பஸ்ஸிலோ, ரயிலிலோ போகும்போது பகவத் நாமாவை ஜபித்துக் கொண்டே போகலாமே. ஆடி ஓடி சம்பாதிப்பதில் ஒரு பைசாகூடபிற்பாடு உடன்வராதே. மறு உலகத்தில் செலாவணி பகவத் நாமா ஒன்றுதானே.

மனசு பகவானின் இடம். அதைக் குப்பைத் தொட்டியாக்கி இருக்கிறோம்.

அதைச் சுத்தப்படுத்தி மெழுகி, பகவானை அமரவைத்து, நாமும் அமைதியாக அமைந்துவிட வேண்டும். தினமும் ஐந்து நிமிடங்களாவது இப்படி தியானம்செய்ய வேண்டும். லோகமே மூழ்கிப் போனாலும் நிற்காமல் நடக்க வேண்டிய காரியம் இது. ஏனெனில் லோகம் மூழ்கும்போது நமக்குக் கை கொடுப்பது இதுதான்.

பணத்தைக் கொண்டு பகவானுக்காகவும் ஏழைகளுக்காகவும் பலவிதங்களில் தர்மம் செய்து புண்ணியம் சேர்க்க வேண்டும். பாபத்துக்கு இரண்டு சக்திகள்.ஒன்று இன்று இப்போது நம்மைத் தவறில் ஈடுபடுத்துவது. இரண்டாவது, நாளைக்கும் நாம் இந்த தவற்றைச் செய்ய தூண்டுவது. உதாரணமாக, பொடி போடுவது அன்றைக்குக் கெடுதல் செய்கிறது. அதோடு நில்லாமல் நாளைக்கும் பொடி போடுமாறு தூண்டுவது, இதுதான் பழக்க வாசனை என்பது. இந்த வாசனையை மங்க வைத்து, புண்ணியங்களைச் செய்து செய்து புண்ணிய வாசனையை ஏற்ற வேண்டும். வாசனைதான் மீண்டும் மீண்டும் பாவத்தில் நம்மை இழுக்கிறது. அதற்காகப் பயம் வேண்டாம். நம்மைப் போல்இருந்தவர்கள் நம்மைப் போல் பாபிகளானவர்கள் கூட பக்தர்களாகவும், ஞானிகளாகவும் ஆகியிருக்கிறார்கள். பாபிகளை ரட்சிக்காவிட்டால் ஈஸ்வரனுக்குத் தான் என்ன பெருமை? நாம் பாவியாக இருப்பதாலே தான்அவனுக்குப் 'பதித பாவனன்' என்ற விருது கிடைக்கிறது. அவனுக்கு அந்த பெருமையை நாம் தான் கொடுக்கிறோம்.

"என்னை மட்டும் சரணடைந்து விடு. நான் உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். 'ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமிமாசுச்'. பயப்படாதே" என்று தீர்மானமாக அபய வாக்குத் தருகிறார் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா.

நாம் தைரியமாக இருப்போம். எத்தனை சுற்றுச் சுற்றினாலும் அத்தனையையும் திருப்பிச் சுற்றினால் தான் கட்டு கழலும். பாப வாசனை அவ்வளவும் தீர அத்தனை புண்ணிய வாசனை உண்டாக வேண்டும். அப்படிச் செய்தால் சுற்று முடிச்சு அவிழ்ந்து விடும். பொறுமையாக பகவானை நம்பி நம் தர்மத்தைச் செய்தால் நிச்சயம் கை கொடுப்பான்.

மனோ வாக்குக் காயங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக இந்திரிய வியவகாரத்தி லிருந்து திருப்பி, பகவானிடம் வைத்துப் பழகுவதற்காகத்தான்இத்தனை மதங்களும் தோன்றியிருக்கின்றன. ஜீவனாகப் பட்டவன் இந்திரிய சுகங்களுக்காகச் செய்கிற பாபங்களிலிருந்து அவனை மீட்பதற்காகத்தான் ஒவ்வொரு பெரியவரும் தோன்றி ஒரு மதத்தைக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறார். பாபத்தால், இந்திரிய சுகத்தினால் கிடைக்கிற ஆனந்தம் ரொம்பவும் தற்காலிகமானதுதான். பரமாத்மாவோடு சேர்த்திருப்பது தானப்பா நிரந்தரமான ஆனந்தம் என்று சொல்லி, சம்ஸாரத்திலிருந்து அதனை விடுவித்து பகவானிடத்தில் சேர்ப்பதுதான் ஒவ்வொரு மதத்துக்கும் லட்சியமாகும்.



# 51. மௌன சம்பாஷணை

தாத்தா உங்களை அடிக்கடி கேட்கறனும்னு நினைச்சிப்பேன். நீங்கள் இங்கே வர நிறைய பேர் கிட்ட மௌனம் தான் சிறந்த சம்பாஷணை என்று சொல்வீர்களே. அது எப்படி தாத்தா சரியாகும்? பேசினாதானே ஒத்தர் சொல்றது இன்னொருத்தருக்கு தெரியும், புரியும்?

பரவாயில்லையே. யோசிக்கிறியே. சொல்றேன் கேள் கோபு:

அறிவில் குறைந்தவை என்று நாம் கூறும் மிருகங்களும், பட்சிகளும், பேசாமல் தானே தத்தம் உணர்ச்சிகளை பரிமாறிக் கொள்கின்றன. பகவான் ரமணரிடம் நிறைய கேள்விகளைக் கேட்க பால் பிரண்டன் ஒரு நோட்டு பூரா எழுதிக்கொண்டு வந்தார். அவர் எதிரில் அமர்ந்து அவர் பார்வையில் மௌனமாக சில மணி நேரங்கள் அமர்ந்து விட்டு பிறகு எழுந்து போகும்போது அருகில் இருந்தவர் என்ன சார் பகவானை எதோ கேள்விகள் கேட்க வேண்டும் என்றீர்களே. பேசாமல் எழுந்து போகிறீர்களே. அவர் இன்னும் கொஞ்சம் நேரத்தில் சென்று விடுவாரே அதற்குள் கேட்டுவிடுங்கள்" என்றபோது பால் பிரண்டன்.

'தேவையில்லை சார். நான் கேட்க வந்த கேள்விகளுக்கு எல்லாம் விடை விட்டது. கேட்க இனி ஒன்றுமில்லை" என்றார். மனம் பேசி விட்டால் வாய்க்கு வேலை இல்லை.

இங்கிருந்தே எங்கோ இருப்பவரிடம் பேச முடியும். டெலிபோனிலோ, sms இலோ, chat டிலோ, கடிதத்திலோ ஸ்கைப்பிலோ இல்லை. வாய் திறக்காமல் மனத்தால். பேச்சினால் மற்றவரை வெற்றி கொள்ளலாம். மௌனத்தால் தன்னையே கூட வெற்றி கொள்ள முடியும்.

கல்லால மரத்தினடியில் பரமேஸ்வரன் தக்ஷிணா மூர்த்தியாக சனகாதி முனிவர்களுக்கு ஞானம் உபதேசித்தது மௌனத்தாலே தான்.

பேச்சு மானுடம், மௌனம் தெய்வீகம்.

வாய் மூலம் பேசும்போது மற்ற ஜீவராசிகள் கேட்கின்றன. மௌனத்தில் பேசும்போது பகவானே கேட்டு பதில் சொல்கிறான். மௌனத்தில் தான் மனம் ஆனந்திக்கிறது.

புரிகிறதா கோபு , இப்போது மஹா பெரியவாளின் மௌனம் பற்றி சொல்கிறேன். கேள்.

ஒரு நாள் பூஜை முடிந்து பிக்ஷாவந்தனமும் ஆயிற்று. வந்தவர்களுக்கு பிரசாதமும். நிறைய பேர் பெரியவாளின் தரிசனத்துக்கு காத்திருந்தார்கள். நினைவு கூறும் சம்பவம் ஏறக்குறைய 40 வருஷங்களுக்கு முன்பு நடந்தது.

அருகில் இருக்கும் ஒருவரை திடீரென்று பெரியவா அழைத்து, " எனக்கு திருவண்ணாமலை விசிறி சுவாமிகளை பார்க்கணும். நீ என்ன பண்றே, உடனே கிளம்பி பகவான் ஸ்ரீ யோகி ராம்சுரத்குமாரை தெரியுமோல்லியோ, அவர்கிட்டே போ. நான் அவரைப் பாக்கணும்னு அழைச்சேன்னு தெரிவி. முடிஞ்சா கையோடு அழைச்சுண்டு வா ".

அம்பு மாதிரி பறந்தார் அந்த அணுக்க தொண்டர். அவர் நின்றது திருவண்ணா மலையில் யோகிஜியின் முன்பு தான். அவ்வளவு வேகம்.

பெரியவா சொல்லி அனுப்பிய சேதி போனது, யோகி பரம சந்தோஷம் அடைந்தார். "உடனே வரேன். கிளம்பு காஞ்சிபுரம் போகலாம்."

பெரியவா உட்கார்ந்திருந்தார் யோகி வரும்போது. யோகியும் அவர் எதிரே அமர்ந்தார். ரெண்டு பெரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். ஒரு வார்த்தை பேச வில்லை. நேரம் நழுவியது. சில மணிகள் ஓடின. திடீரென்று பெரியவா சிரித்துக்கொண்டே "இந்தா இங்கே வா" என்று அணுக்க தொண்டரை அழைத்து "நீ எதுக்கு இவரை அழைச்சுண்டு வந்தியோ அந்த காரியம் முடிஞ்சுது. அவரை ஜாக்ரதையா வண்டிலே அழைச்சிண்டு போய் திருவண்ணாமலையிலே கொண்டு விட்டுட்டு வா."

அருகிலே நின்று இதையெல்லாம் பார்த்துக்கொண்டு இருந்த பக்தர்களுக்கு ஆச்சர்யம். என்னது இது? இவர்கள் இரண்டு பேரும் ஒருவரையொருவர் பார்ப்பதற்கா வந்தார்கள்? ஒரு வார்த்தை கூட பேசிக்கொள்ளவில்லையே.

சில காலம் கழித்து இப்படி அதிசயித்தவர்களில் ஒருவர் யோகியை திருவண்ணாமலையில் தரிசனம் செய்த போது " சுவாமி அன்று என்ன நடந்தது. தாங்கள் ஒன்றுமே பெரியவாளுடன் பேசவில்லையே. அவரும் வாயைத் திறக்கவில்லையே. இருந்த போதிலும் பெரியவா"காரியம் முடிஞ்சுது" என்றாரே!

சிரித்துக்கொண்டே யோகி என்ன சொன்னார்?

பேசவில்லை என்று யார் நினைத்தது. நாங்கள் இருவருமே மனதால் விஷயங்களை பரிமாறிக் கொண்டோம்.

பெரியவா என்னிடம் போதேந்திரா தனது வாழ்நாள் முழுதும் ராம நாமம் ஜபிச்சவர். பீடாதிபதியா இருந்தாலும் எங்கும் சென்று ராம நாமாவை எல்லோருக்கும் உபதேசம் பண்ணினார். அவரு கிட்டே ஜாதி வித்யாசம் எல்லாம் என்னிக்குமே

இருந்ததில்லே. ராம நாமா ஒண்ணு தான் இந்த கலியுகத்தில் நமக்கு ஒரே விடி மோக்ஷ கதி. இப்படியே ராம நாம ஜபத்தாலே அவர் உடம்பு தானாகவே ஒரு "சித்த சரீரமாக'' ஆயிடுத்து. காவேரிக்கரையிலே கோவிந்த் புரத்திலே முன்னூறு வருஷமா இன்னும்"ஜீவ சமாதிலே இருக்கார். எப்பவும் ராம நாம ஜெபத்திலே தான் இருக்கார். நீங்க கோவிந்தபுரம் போகணும். போதேந்திராளுடன் இருக்கணும். '

இதுக்கு நான் அவர் கிட்டே , ''இல்லை இல்லை, இந்த பிச்சைக்காரன் திருவண்ணாமலையே கதி, அதுவே போதும் என்று இருக்கிறவன்' என்று சொன்னேன்.

பெரியவா யோசிச்சார் அப்பறம் "அப்படின்னா சரி'' என்றார்.

இது தான் நாங்க ரெண்டு பெரும் பேசியது என்றார் யோகி.



# 52. பெண்ணின் பெருமை

“வாங்கோ கமலா டீச்சர் எங்கே ரொம்பநாளா காணோம்”

என்ன சார் பழைய சினிமா பாட்டு கேட்டுக்கிட்டு இருக்கீங்க “பழகத் தெரிய வேணும் பெண்கள்.”

“ஆமாம்மா, அருமையான பாட்டு, நல்ல கருத்து, மோகனம் இழைகிறது A.M. ராஜா குரலில். என்ன நளினம்.” பெண்கள் உயர்ந்தவர்கள் அம்மா.

தாத்தா சார், ரொம்ப மகிழ்ச்சி. பெண்களை உயர்த்தி பேசறீங்க.

நான் மட்டும் இல்லேம்மா. மஹா பெரியவாளும் பெண்ணின் பெருமையை கோடி காட்டியிருக்கிறார் ஒரு இடத்தில். எல்லோரும் அவசியம் தெரிஞ்சுக்க வேண்டிய விஷயம்.

பெண் சாதாரணமானவள் இல்லை. இதைப்படி பெரியவாளின் அசாத்ய சிந்தனை வெளிப்படும் என்று ஒரு புத்தகத்தின் ஒரு பக்கத்தைக் காட்டினார் தாத்தா. அதில் என்ன எழுதியிருந்தது என்று உங்களுக்கும் தெரியவேண்டாமா:? கொஞ்சம் சுருக்கி தருகிறேன்.அவ்வளவு தான்:

ஆணும் பெண்ணும் ஒண்ணு. எல்லா விதத்திலும் “சரி-நிகர் சமம்”. ஆனால் இது எல்லா விதத்திலும் எப்போதும் பொருந்தாது. ஒவ்வொன்றும் ஒரு வித தனித்வத்தோடு இருக்கவேண்டும் என்பது சிருஷ்டி ரகசியம். பிரபஞ்சம் அப்படித்தான் உருவாகியுள்ளது. எல்லாம் ஒரே விதமாக சரி சமமாக என்ற வாதமே அடியோடு தப்பு. அப்படி ஆக்கினால் இயற்கையான வாழ்க்கை முறையே பாழாகிவிடும். ஒன்றொன்றும் இயற்கைப்படி, ஸமூஹத்தின் மொத்த வாழ்வுக்கு அநுகூலமாக எப்படியிருக்க வேண்டுமோ அப்படியிருப்பது தான் அதற்கு நிறைவு. அதிலேதான் அதற்கு நிஜமான ஸௌக்கியம் உண்டு. இந்த நிறைவை விட்டு விட்டு, செயற்கையாக ஸமத்வம் என்று ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு அதற்காக ஓடுவதில் தனி நபரளவிலும் நிஜமான நிறைவு அவரவர்க்கு எவருக்குமே உண்டாவதில்லை; குடும்பமும், ஸமூஹம் இவற்றின் வாழ்க்கையும் இதனால் கெட்டே போகிறது.

இயற்கைப் படி பெண்கள்தானே பிள்ளை பெற வேண்டும்? ஆணா பெற முடியும்? இயற்கை விதி இது. மாற்ற முடியாதல்லவா? பிள்ளையைப் பெற்றவளே அதை சவரக்ஷணை பண்ணுவது, அதற்காக கிருஹலக்ஷ்மியாக இருப்பது என்பதுதான் பெண்களுக்கு ஸ்வாபாவிக (natural) தர்மம். அதைப் பண்ணுவதால் அவர்களுக்கு

ஒரு குறைவும் இல்லை. அதை விட்டதால் உயர்வும் இல்லை. அதனால் ஆணும் பெண்ணும் சமம் என்கிற பேச்சுக்கு இங்கே அர்த்தமேயில்லை.

சீர்திருத்தக்காரர்கள் என்ன சொல்கிறார்கள்? ஸ்திரீகள் காலேஜில் படித்து உத்தியோகம் பண்ணுவது பெரிய முன்னேற்றம்; இதனால் முன்னே பண்ணின அநீதி போய்விட்டது என்கிறார்கள். முன்னே ஸ்திரீகளுக்கு அநீதி பண்ணவேயில்லை என்பது என் கட்சி. அப்படிப் பண்ணியிருந்தால், புருஷனுக்குத்தான் பண்ணியிருந்தது என்றுகூட வேடிக்கையாகச் சொல்வேன். ஏன்?

கல்யாணமும் ஆகாமல் வெறுமே வீட்டில் உட்கார்ந்து கொண்டிருக்கிற பெண், படித்து வேலைக்குப் போய் இரண்டு காசு தான் கொண்டு வரட்டுமே, கல்யாணச் செலவுக்கும் அது உதவுமே என்கிற எண்ணத்தில் பெண்களை உத்யோகத்துக்கு அனுப்புகிற வழக்கம் ஆரம்பித்தது. முதலில் வெட்கப்பட்டுக் கொண்டு, அவளே சம்பாதித்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ளும்படியாக விடுவது தகப்பனாருக்கு ரொம்ப அவமானம் என்ற உணர்ச்சியோடு வேலைக்கு அனுப்பினார்கள்.

நல்ல யௌவனத்தில் சித்த விகாரங்களைத் தூண்டி விடுகிற சூழ்நிலையில் இப்படிப் பெண்களை விடுகிறோமே என்று அப்போது கொஞ்சம் பயம், கவலை எல்லாமும் இருந்தது. ஆனாலும் போகப் போக என்ன ஆகியிருக்கிறது என்றால் 'குளிர்' விட்டு விட்டது.

ஜனகர் மாதிரியான ராஜ ரிஷிகளே கன்யாப் பெண்ணைக் கல்யாணமாகாமல் வீட்டில் வைத்துக் கொண்டிருப்பது வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருக்கிற மாதிரி என்று பயந்ததாகப் புராணங்களில் பார்க்கிறோம். அந்த விவஸ்தை இப்போது கெட்டுவிட்டது; கட்டுவிட்டுப் போச்சு! அவமானமாக முதலில் நினைத்ததே இப்போது நாகரிக முன்னேற்றத்துக்கு அடையாளமாக ஆகிவிட்டிருக்கிறது.

பெண்ணைப் பெற்றவர்கள் தங்கள் பொறுப்பு உறைக்காமல், கூச்சம், கவலை, பயம் எல்லாவற்றையும் விட்டு விட்டுத் தங்கள் பெண் பெரிய உத்தியோகம் பார்க்கிறாள் என்று பெருமைப்படுகிற அளவுக்கு நம் தர்மம் ஹீன ஸ்திதி அடைந்திருக்கிறது.

ஒரு புருஷப் பிரஜையானவன் பிரம்மச்சரிய ஆசிரமம் முடித்ததிலிருந்தே கிருஹஸ்தாச்ரம தர்மங்களை மேற்கொண்டு ஔபாஸனாதி ஸம்ஸ்காரங்களைப் பண்ணினால்தான் அவனுடைய ஜன்மா கடைத்தேறும். ஸ்திரீப் ப்ரஜைக்கோ புருஷன் பண்ணுகிற ஸம்ஸ்காரங்களுக்கெல்லாம் மேலாக அவனிடம் இவள் மனஸை அர்ப்பணம் பண்ணி பதிவிரதையாயிருப்பதே ஜன்மாவைக் கடைத்தேறச் செய்கிறது.

இது பெண்களுக்கு இழைத்த அநீதி என்று சீர்திருத்தக்காரர்கள் சொன்னாலும், எனக்கோ புருஷனைவிட பெண்ணுக்குத் தான் ரொம்பவும் ஸாதகமாக நம் சாஸ்திரத்தில்

பண்ணியிருக்கிறது என்று தோன்றுகிறது. ஏனென்றால் அநேக ஸம்ஸ்காரங்களையும், அப்புறம் சிரவண, மனன, நிதித்யாஸனாதிகளையும் பண்ணித்தான் ஒரு புருஷனுக்கு மனோநாசம் உண்டாகி ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஸித்திக்கிறது. அந்த ஸாதனையின் முடிவான மனோநாசம் ஒரு பதிவிரதைக்குப் பதியிடம் சரணாகதி பண்ணுவதாலேயே ரொம்ப சீக்கிரத்தில் ஈஸியாக ஏற்பட்டு விடுகிறது. பதியின் இஷ்டத்தை அநுஸரிப்பதால் இவளுக்குத் தன்னிஷ்டம், மானாவமானம் எல்லாம் போய் அஹங்காரம் கரைந்து, மனோநாசத்துக்கு ரொம்பவும் கிட்டே போய் விடுகிறாள். மனஸை எங்கேயோ பூர்ணமாக அர்ப்பணம் பண்ணி, சரணாகதி என்று இருந்துவிட்டால் அப்புறம் மனோநாசம் பக்கத்திலேயே தானே?

இன்றைக்கு உத்தியோகம் பார்க்கிற பெண்கள் பெறுகிற ப்ரமோஷனுக்கெல்லாம் மேலான ப்ரமோஷன் இப்படி அவளை ஆத்ம பரிசுத்தி பண்ணி உச்சத்துக்குத் தூக்குவதுதான். இப்படி பதியிடம் மனஸை அர்ப்பணம் பண்ணியே தான் மஹா பெரிய ரிஷிகளை விட அதிகமான சக்திகளை நம் தேசத்து பதிவிரதா ஸ்திரீகள் பெற்றிருக்கிறார்கள். அவள் பெய் என்றால் மழை பெய்கிறது என்று திருவள்ளுவர் சொல்கிறார்.

ஸூரியனை உதிக்காதே என்று அவள் சொன்னால் உதிப்பதில்லை! செத்த புருஷனை யமதர்ம ராஜாவிடமிருந்து அவளால் திரும்பவும் வாங்கிக் கொண்டு வர முடிகிறது. எந்த ரிஷிக்கும், தெய்வத்துக்குமே கூட கொடுக்காத உசந்த ஸ்தானத்தை இப்பேர்ப்பட்ட பதிவிரதைகளுக்குத்தான் நம் சாஸ்திரமும் சம்பிரதாயமும் தருகிறது. அவள் தெய்வங்களின் மேலேயே தண்ணியைத் தெளித்து தன் குழந்தைகளாக்கிக் கொண்டு விடுகிறாள் என்று புராணத்தில் பார்க்கிறோம். ஆகையால் பெண் எப்படியிருந்தால் நிஜமான உயர்வைப் பெறுவாளோ, அதைச் சொல்லி அப்படிப்பட்டவளைக் கோவில் எடுத்துக் கும்பிடுகிற நம் சாஸ்திரம் ஒரு நாளும் ஸ்திரீயை மட்டம் தட்டவில்லை.

சீர்திருத்தவாதிகள் தான் அவளை அப்படி வளர முடியாதபடி மட்டப்படுத்துகிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆக விவாஹம் என்பது புருஷனை சுத்தப்படுத்துகிற அநேக ஸம்ஸ்காரங்களில் ஒன்று என்றால், ஸ்திரீயையோ அத்தனை ஸம்ஸ்காரங்களும் இல்லாமலே அவற்றின் முடிந்த பயனான பூர்ணத்துவத்தைப் பெறப் பண்ணுவதாகும்.

இப்பேர்ப்பட்ட ஸம்ஸ்காரத்தின் ஸாரத்தை விட்டு, சக்கையாக ஒப்புக்கு ஏதோ இப்போது நடக்கிறது. விவாஹம் என்ற ஸம்ஸ்காரமும் கிருஹஸ்தாஸ்ரமும் லாவண்யம், வீர்யம், இந்திரிய ஸௌக்யம் இவற்றை மட்டும் குறித்த விஷயமல்ல என்பதையும், ஜன்மா கடைத்தேற வழியாகவே அது வகுக்கப்பட்டிருக்கிறது என்பதையும் புரிந்து கொண்டால் சாஸ்திரம் சொல்லியிருப்பதே சரி என்ற அறிவு உண்டாகும்.

வேதத்தில் சொன்ன கர்மாக்களை, யஜ்ஞங்களைப் பண்ணவேண்டும். அதற்கு தன்னோடு பிரிக்க முடியாத சொத்தாக ஒரு துணையைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். இவனுடைய வீட்டில் சமையல் முதலான காரியங்கள் நடப்பதற்கும், இவனுடைய இந்திரிய சுகத்தைப் பூர்த்தி பண்ணுவதற்காகவும் மட்டும் ஏற்பட்டவள் அல்ல பத்தினி என்பவள். தர்ம பத்தினி, யஜ்ஞ பத்தினி என்று அவளுக்குப் பெயர். இவன் செய்யும் தர்மத்தைக் கூட இருந்து உத்ஸாஹப் படுத்தி நடத்த வேண்டியவள் அவள், யஜ்ஞத்தில் இவன் கூட நிற்க வேண்டியவள். இப்படியாக தேவ சக்திகளை லோகத்துக்கு அநுகூலம் பண்ணித் தருகிற கர்மாக்களுக்கு அவள் பக்கபலமாயிருக்கிறாள்.

இவனுக்கு சமையல்காரியாக, இவனுக்கு சரீர ஸௌக்கியம் கொடுக்கிறவளாக இருக்கிறபோதுங்கூட அதிலேயே லோக க்ஷேமத்தைச் செய்கிறவள் அவள். எப்படியென்றால்: இவன் வீட்டுச் சமையல் இவனுக்கு மட்டுமில்லை. 'ஆதித்யம்', 'வைச்வதேவம்' என்பதாக தினமும் அதிதிக்கும், தீனர்களுக்கும், பிராணிகளுக்கும் கிருஹஸ்தன் அன்னம் போட வேண்டும். அதற்கும் தான் அவள் சமைப்பது. இவளுக்குப் பிரஜை உண்டாவதும் தம்பதியுடைய ஸௌக்கியத்தினால் ஏற்பட்டதென்பதோடு முடிந்து விடுவதில்லை. வேத தர்மம் என்றைக்கும் லோகத்தில் இருக்க வேண்டும் என்பதற்காக, வேத தர்மத்தை அநுஷ்டிப்பதற்கே இவள் பிரஜைகளைப் பெற்றுத் தர வேண்டும்.

புத்ரோத்பத்தியைக் கூட இப்படி எதிர்கால தர்ம வாழ்வை உத்தேசித்த ஸம்ஸ்காரமாகப் பண்ணுவதை வேறெந்த மதத்திலும் பார்க்க முடியாது. இப்படியாக ஐதிக (இஹலோக) சம்பந்தம் மட்டுமின்றி ஆத்ம சம்பந்தமும், லோக க்ஷேம உத்தேசமும் கொண்டதாக இருக்கிறது நம் மதத்தில் பதி-பத்னி உறவு. மற்ற மதங்களிலும் சர்ச் மாதிரியான இடத்தில் தெய்வ ஸாக்ஷியாகத்தான் விவாஹம் நடக்கிறதென்றாலும் அதற்கு இத்தனை உயர்ந்த லட்சியங்கள் கொடுக்கப்படவில்லை. புருஷனை மேலும் ஸம்ஸ்காரங்களில் செலுத்தி சுத்தப் படுத்தவோ, ஸ்திரீயைப் பதிவிரதத்தினால் பூர்ணத்வமே அடையப் பண்ணவோ அந்த விவாஹங்களில் இடமில்லை. மற்ற தேச விவாஹங்களில் இடமில்லை. மற்ற தேச விவாஹங்கள் ஒரு குடும்ப அல்லது சமூக ஒப்பந்தம் (contract) மாதிரித்தான். இங்கே அது ஆத்ம பந்தம். பந்தப்பட்டிருக்கிற ஆத்மாவை விடுவிப்பதற்காகவே ஏற்பட்ட பந்தம். அதனால்தான் இங்கே அது ஆத்ம பந்தம்.

அதனால்தான் இங்கே divorce (விவாஹரத்து) என்பதற்கு இடமேயில்லாமலிருக்கிறது. அந்த எண்ணம் வந்துவிட்டாலே நமக்குப் பாபம்.



# 53. குருவின் வேலை

எத்தனை படித்தாலும் புரியாதது என்று சில விஷயங்களை ஓரம் கட்டிவிடுகிறோம். அதில் ஒன்றை எடுத்து உதறி, தூசி தட்டி என்ன என்று பார்த்தால், அப்பவும் புரியாமலே தான் இருக்கிறது. எப்படி புரிந்து கொள்வது. சுலபமான வழி இருக்கிறதே. மகா பெரியவாளை படிக்க வேண்டியது தானே. தானே எந்த விஷயமும் எள் என்பதற்கு முன் எண்ணையாக புரிந்து விடுமே. அப்படிப்பட்ட ஒரு 'சுலபமாக்கப் பட்ட '' விஷயத்தை இங்கே படியுங்கள்.



பெரியவாளைப் படித்ததில் சுருக்கி புரிய வைக்கப் பார்க்கிறேன்:

சாந்தோக்ய உபநிஷத்தில்தான் "தத்-த்வமஸி" என்ற மஹாவாக்கியம் வருகிறது. நீயே தானப்பா அந்த பிரம்மமாயிருக்கிறாய் என்று ஸ்வேதகேதுவுக்கு அவனுடைய பிதா உத்தாலக ஆருணி திரும்ப திரும்ப ஒன்பது தடவை செய்த உபதேசம் அது.

தத் - த்வம் - அஸி= "தத்" என்பது பரமாத்மாவான பிரம்மம்; "த்வம்" என்பது ஜீவாத்மா; "அஸி" என்றால் இருக்கிறாய். பிரம்மமாக இருக்கிறாய் -என்றைக்கோ ஒருநாள் அல்ல! எதிர்காலத்தில்

இல்லை; இப்போதும் எப்போதும் எல்லோரும் எல்லாமும் பிரம்மம்தான். இனி மேலே தான் பிரம்மமாக வேண்டும் என்பதில்லை.

அப்படியானால் ஸாதனை எதற்கு? பிரம்மமாக இருந்தாலும் அதை நாம் தெரிந்து கொள்ளவில்லையே! தெரிந்தால் இத்தனை அழுகை, இத்தனை காமம், கோபம், இத்தனை பயம் நமக்கு இருக்கவே இருக்காதே! அலையே எழும்ப முடியாமல் ஆகாசம் வரை முட்டிக் கொண்டு நிற்கிற ஆனந்த சமுத்திரமாக அல்லவா இருப்போம்? எனவே “நீ எப்போதும் பிரம்மம் தானப்பா” என்றால் எப்படி? அதைப் புரிய வைக்க ஒரு கதை: நமது வாழ்க்கையே எதாவது ஒரு கதையை நம்பி தானே நடக்கிறது.

ப்ருஹதாரண்யக உபநிஷத் பாஷ்யத்தின் நடுவிலே (II-1-20) சங்கர பகவத்பாதாள், சிலந்தி தன்னிலிருந்தே நூலை இழுத்து வலை பின்னுகிறமாதிரியும், அக்னி தன்னிலிருந்தே பொறிகளை உதிர்க்கிற மாதிரியும், ஆத்மாவிலிருந்தே அத்தனை பிரபஞ்சமும் தோன்றியிருக்கிறது என்ற மந்திரத்துக்கு ரொம்ப விஸ்தாரமாக அர்த்தம் பண்ணிக்கொண்டு போகிறபோது, இந்தக் கதை வருகிறது.

ஒரு ராஜகுமாரன் அவனது அப்பா அம்மா எதிரி ராஜாவின் படையெடுப்பில் கொல்லப்பட்டதால், உயிர் தப்பி மந்திரியால் காட்டில் வேடர்கள் பகுதியில் குழந்தையாக விடப்பட்டு இளம் வயதில் வேடர்களோடு வளர்கிறான். பெரியவனாகி, பின்னால் அவன் தான் ஒரு ராஜகுமாரன் என்று அவனை தப்பிக்க விட்ட மந்திரி மூலமே உணர்கிறான். இத்தனை காலமும் வேடப் பையனாகவே தன்னை நினைத்துக் கொண்டிருந்த காலத்திலும் அவன் ராஜா பிள்ளைதானே? இது முதலில் தெரியாததால் வேடன் மாதிரி வாழ்க்கை நடத்தினான். உண்மை புரிந்தவுடன், ராஜகுமாரனாகவே எப்போதும் இருந்தவன் ராஜகுமாரனாகவே அநுபவத்தில் வாழ்ந்து காட்டினான். வேடப்பையனும் ராஜகுமாரனும் இரண்டுபேர் இல்லை. ஒருத்தன் இன்னொருத்தனாக மாறவில்லை. ஒரே பேர்வழிதான். முதலில் தன்னை தெரிந்து கொள்ளவில்லை. புரியவில்லை. அப்புறம் புரிந்துகொண்டு விட்டான். புரியாத நிலையில் வேடனாக எங்கேயோ கீழ்நிலையில் வேடப்பையனாக்கி கிடந்தவன் புரிந்து கொண்டவுடன் ராஜகுமாரனாகினான். அப்புறம் சண்டை போட்டு ஸாம்ராஜ்யாதிபதியாகவே ஆகிவிட்டான்.

நாமெல்லாருமே இந்த மாதிரி வேட வேஷத்தில் தான் உள்ளோம். ஜீவாத்மா என்ற வேஷத்தில் ஸம்ஸாரிகளாகவே நம்மை நினைத்துக்கொண்டிருந்தாலும் வாஸ்தவத்தில் நாமும் பரமாத்மாவேதான். வேஷம் எப்படியிருந்தாலும் உள்ளே இருக்கிற வஸ்து எப்போதும் பரமாத்மாதான். ஐம்புலன்களின் வசியத்தில் இழுக்கிற வழியில் ஓடி வேட்டையாடிக் கொண்டிருக்கிறோம். நாம் உண்மையில் பிரம்மம் என்று தெரிந்து

கொள்ளலாமா? தெரிந்தால் மட்டும் என்ன? அநுபவத்தில் கொண்டுவர முடியாதபடி இந்திரியங்கள் (ஐம்புலன்கள்) இழுத்துக்கொண்டே இருக்கும். ராஜகுமாரனாகவே இருந்தாலும் வாஸ்தவத்தில் அரசத் தன்மையை அடைவதற்காக அவன் அஸ்திர சஸ்திர அப்பியாஸம்பண்ணி எதிரிகளை ஜயித்து ஸாம்ராஜ்யாதிபதியான மாதிரி, நாமும் பிரம்மமாகவே எப்போதும் இருந்தாலும் அதை உணராமலிருப்பதால் கர்மத்தில் ஆரம்பித்து பக்தி வழியாக, ஞான சாதனைகளைச் செய்து, உட்பகைகளை யெல்லாம் ஜயித்து, ஆத்ம ஸாம்ராஜ்யத்தில் ராஜாவாக ஆகவேண்டும். 'ஸாம்ராட்'- அதாவது ராஜா - என்றே உபநிஷத்தில் ஆத்ம ஞானியைச் சொல்லியிருக்கிறது.

ஐஸ் கட்டியும் ஸ்படிகமும் ஒரே மாதிரித்தான் வெளிப் பார்வைக்கு இருக்கின்றன. ஆனால் ஐஸ்தான் உருகி ஜலமாகுமே தவிர, ஸ்படிகம் ஜலமாகாது.ஏனென்றால் எது ஜலமாகவே இருந்து அப்புறம் உறைந்து வேறே வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறதோ அதுதான் உருகி மறுபடியும் தன் ஸ்வயமான பூர்வ ரூபத்தை அடைய முடியும். பிரம்மமே ஜீவனாக உறைந்து போயிருப்பதால் தான், இந்த ஜீவாத்மாவும் உருகிப் போனால் மறுபடியும் பிரம்மமாகவே அநுபவத்தில் ஆக முடிகிறது. ஐஸ் தானாக கரைகிறது. நாம் கரைய மா ட்டோம் என்கிறோம்.

'கல்லேனும் ஐயா ஒரு காலத்தில் உருகும், என் கல்நெஞ்சம் உருகவில்லையே! -- தாயுமான ஸ்வாமிகள் நமக்காகத்தான் பாடியிருக்கிறார்.நம்மை உருக வைக்க ஒன்று தேவைப்படுகிறது. கதையில் ராஜகுமாரனை Practical-ஆக ராஜகுமாரனாக்குவதற்காக ஒரு மந்திரி வந்த மாதிரி, நம்மை உருக்கி நிஜ நாமாகப் பண்ண ஒருத்தர் வேண்டும். அவன் வரமாட்டேன் என்று முரண்டு செய்தாலும் வலிய இழுத்த மந்திரி மாதிரி, பாரமார்த்திகத்தின் பக்கமே போகமாட்டேன் என்ற அடம் பிடிக்கிற நம்மைக் கட்டி இழுக்க ஒருத்தர் வேண்டும். அப்படி ஒருத்தர் இருக்கிறாரா? நம்மை நம்முடைய நிஜ நாமாக ஆக்கக்கூடிய ஒருத்தர் இருக்கிறாரா?

இருக்கத்தான் செய்கிறார். வேடப்பையனுக்கு நீதானப்பா ராஜகுமாரன் என்று சொல்லிப் புரியவைத்து, அவனுக்கு அஸ்திரப் பயிற்சி தொடுத்து, அவனை ராஜாவாக்குவதற்காக அவனை விட ஜாஸ்தி உழைத்த மந்திரி இந்த ஒருத்தருக்குத்தான் ரூபகம். (உருவகம்). நமக்கு நம் பரமாத்மத்வத்தை எடுத்துச் சொல்லி, அதை நாம் அநுபவமாக்கி கொள்வதற்கான ஸாதனைகளைச் செய்ய வைத்து, நம் கர்மா பாக்கி தீருவதற்காக தாமே தபஸைச் செலவு செய்து உபகாரம் பண்ணும் அந்த ஒருத்தர் தான் குரு என்பவர்.



# 54. அப்பாலும் அடி சார்ந்தார்

மஹா பெரியவாளுக்கு நம் போன்ற ஹிந்துக்கள் தான் பக்தர்கள் என்று இல்லை. உலகம் முழுதும் பல ஜீவன்கள் அவரால் ஈர்க்கப் பட்டவர்கள்.

பிரான்ஸ் நாட்டில் பாரிசில் ஒரு பாங்க் தலைவர், டைரக்டர், அந்த வெள்ளைக்காரரர். அவர் பூர்வ புண்ய கர்மாவினால் எப்படியோ அவருக்கு மஹா பெரியவா பத்தி விஷயங்கள் தெரிந்திருக்கிறது. மனதில் இனம் புரியாத ஒரு பக்தி ஆர்வம் வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. ஒரு தரம் இந்தியா வந்த போது பாம்பேயில் இருந்தவர் எப்படியாவது சென்னை போக வேண்டும். அங்கிருந்து விசாரித்துக் கொண்டு பெரியவாளை பார்க்க ஆவல். அவருக்கு ஒரு நண்பர் சென்னையில் டாக்டர் ராகவன். பாம்பேயில் வந்து சேர்ந்ததும்

“ஹல்லோ ராகவன் ஹவ் ஆர் யு? நான் இந்தியா வந்திருக்கேன். பாம்பேலே.”

“ஓ, அப்படியா, சென்னை வருவீங்களா?”

“அதுக்கு தானே போன் லே பேசறேன். எனக்கு உங்க சங்கர் சாரி பாக்கணும் ரெண்டே நாள் தான் இருக்கு. அதுக்குள்ளே கண்டிப்பா பாத்துடனும்னு ஒரு ஆசை. அரேஞ்ஜ் பண்ண முடியுமா? நா காலம்பர ப்ளைட்லே வந்துடறேன்.”

“ஆஹா. எனக்கும் ஒரு நல்ல சான்ஸ். மார்னிங் வந்துடுங்க. ஏர் போர்ட்லே காத்திண்டிருப்பேன்.”

“ஒரு வெளிநாட்டவர், மதராஸ் வந்து உங்களை சந்திக்கிறேன். பெரியவரை தரிசனம் பண்ணியே ஆகவேண்டும். ஏற்பாடு பண்ணுங்கள்” என்று சொன்னதால் ராகவன் பறந்தார். பெரியவா அப்போது மைலாப்பூர் சம்ஸ்க்ருத கல்லூரியில் முகாம். பெரியவாளை தரிசனம் பண்ணினார். விஷயம் சொன்னார்.

பெரியவா முகத்தில் ஒரு க்ஷண காலத்துக்கு புன்னகை. “சரி, இரவு பூஜை முடிந்ததும் வெள்ளைக்காரனுக்கு கீழ உக்கார முடியாது. ஒரு நாற்காலி போடு. உபன்யாசம் முடிஞ்சதும் வந்து பாக்கறேன்” என்றார். எல்லாம் முடிந்ததும்

“யாராவது வந்தாளா?” என்றார்.

“இல்லை பெரியவா”.

அப்போது வேஷ்டி துண்டுடன் ஒருத்தர் வந்து பெரியவாளுக்கு நாலு நமஸ்காரம் பண்ணினார். (சன்யாசிகளுக்கு எப்போதும் நாலு நமஸ்காரம் பண்ணுவதுதான் சம்ப்ரதாயம்).



அவருக்குப் பின்னால், டாக்டர் ராகவன்! ஆம். அந்த வெள்ளைக்காரர்தான் வேஷ்டியில் கச்சிதமாக வந்து நாலு நமஸ்காரம் பண்ணியது!

"நாலு நமஸ்காரம் பண்ணனும்னு எப்பிடி தெரிஞ்சதுன்னு கேளு!"

"எல்லாரும் பண்ணறதைப் பார்த்து பண்ணினேன்"

பக்கத்திலிருந்த பாணாம்பட்டு கண்ணனிடம் "அந்த வெள்ளைக்காரனை மட்டும் அழைச்சிண்டு உள்ளே வா"

"அவர் பேசற இங்க்லீஷ் எனக்கு புரியாது. வேணா. டாக்டர் ராகவனை கூப்பிடட்டுமா?"

"எல்லாம் ஒனக்கு தெரிஞ்ச இங்க்லீஷ் போறும். வா"

அந்த பிரெஞ்சுக்காரர் சொன்னார்:

" நான் கொஞ்ச காலமா வேதாந்தம் படித்துக் கொண்டிருக்கிறேன். திடீரென்று ஒருநாள் என் உடல் முழுதும் மரத்து விட்டது போலவும், நான் உடலை விட்டு வெளியே இருப்பது போலவும், என் உருவம் ஆகாசத்துக்கும் பூமிக்குமாக இருப்பது போலவும் தெரிந்தது. என் உடல் முழுக்க அண்டங்கள் தொங்குவது போலவும் தெரிந்தது. அந்த சமயம் எனக்கு மிகவும் ஆனந்தமாக இருந்தது. துக்கக் கலப்பே இல்லாத ஆனந்தம்! இந்த சம்பவத்துக்கு அப்புறம் என் வாழ்க்கையில் எந்த நிகழ்ச்சியும் என் மனஸில் பாதிப்பை ஏற்படுத்தவில்லை. என் மனைவி, மகன் இறந்தபோது கூட என் மனஸில் எந்தவித சலனமும் இல்லை. எப்போதும் ஆனந்தமாகவே இருக்கிறேன்.''.

ஆபீசில் என்னுடைய இந்த வினோதமான மனநிலையை பார்ப்பவர்கள் என்னை பைத்தியம் என்கிறார்கள். அதனால், என்னை ஆஸ்பத்திரியில் கம்பி அறைக்குள் அடைத்துவிடுவார்களோ? என்ற பயம் மட்டும் உள்ளூர இருக்கிறது" என்றார்.

நடமாடும் தெய்வம் மெதுவாக பேச ஆரம்பித்தது.

"உள்ளேன்னா என்ன? வெளியேன்னா என்ன? எல்லாமே நாலு சுவருக்குள்ளதானே? ஆபீசும் நாலு சுவருக்குள்ளதானே?"

இந்த கேள்வி அந்த வெள்ளைக்காரரின் மனஸில் பெரிய மாற்றத்தை உண்டுபண்ணியது.

"தாங்கள் எப்போதும் என் கூடவே இருக்க வேண்டும்" என்று வேண்டினார். தனக்கு ஏதாவது உபதேசம் பண்ணவேண்டும் என்று கெஞ்சினார்.

"நீ இப்போ பண்ணிண்டு இருக்கற த்யானத்தையே விடாமப் பண்ணிண்டு வா! ஒன்னோட attainment [சித்தி] வரைக்கும் ஒங்கூடவே இருக்கேன்" [என்ன ஒரு பாதுகாப்பு!} என்று சொல்லிவிட்டு, தான் கட்டிக்கொண்டிருந்த காவி வஸ்த்ரத்திலிருந்து ஒரு மூலையை கிழித்து அவரிடம் கொடுத்தார்

"இதை எப்பவும் ஒன் கூடவே வெச்சுக்கோ!"

[என்ன ஒரு அனுக்கிரகம்! யாருக்குக் கிடைக்கும் இப்பேர்ப்பட்ட பாக்கியம்?].

வெள்ளைக்காரரின் ஆனந்தம் பன்மடங்கு பெருகியது. நமஸ்காரம் பண்ணிவிட்டு வெளியே வந்து டாக்டர் ராகவனிடம் "உங்களால்தான் எனக்கு இவ்வளவு பெரிய பாக்கியம் " என்றார்.

பாணாம்பட்டு கண்ணனின் மனஸில் ஆயிரம் கேள்விகள்! மறுநாள் காலை ஒருமணி நேர ஜபம் ஆரம்பிக்கும் முன் மஹா பெரியவா கண்ணனைக் கூப்பிட்டு

"ஒனக்கு நாயன்மார்கள் எத்தனைன்னு தெரியுமோ?" என்றார்.

"அறுபத்து மூவர். கபாலீஸ்வரர் கோவில்ல உத்சவம் கூட நடக்கறதே!"

"கபாலி கோவில்ல போய் எண்ணிண்டு வா".

போய் எண்ணினால் அறுபத்தேழு!

"ஜாஸ்தியா இருந்த நாலு பேர் யார்? யார்? சொல்லு பாப்போம்"

போய் விஜாரித்துக் கொண்டு வந்தார்.

"அதுல ஒருத்தர் அப்பாலும் அடி சார்ந்தாருக்கடியார்"

"அதேதான். 'அப்பால்'ன்னா தேசத்தால, காலத்தால அப்பாற்பட்டவா. காலத்தாலன்னா, இனிமேலும் பொறக்கப் போற அடியார்களுக்குன்னு அர்த்தம்.

நேத்திக்கி வந்த வெள்ளைக்காரன் தேசத்தால அப்பாற்பட்ட வந்தான். இவனுக்கு இன்னும் நாலு ஜன்மாதான் பாக்கி" என்றார்.



# 55. ஸ்வாமி?

கொளுத்தும் வெய்யில். ஏப்ரல் நடுவில். வாசலில் ஒரு கிழவி சாமி தர்மம் என்று செருப்பில்லாமல் கத்திக்கொண்டே நின்றாள். சிலர் விரட்டினார்கள். யாரோ ஒரு சிலர் காசு பழைய சோறு எல்லாம் கொடுத்தார்கள்.

ப்ரபந்தம் வேதா மாமி தாத்தாவோடு பேசிக்கொண்டிருந்தவள் அந்த கிழவியின் குரலைக் கேட்டு திரும்பினாள். தாத்தா அதற்குள் உள்ளே சென்று சில திராக்ஷை பழங்களையும் ஒரு பாதி ரொட்டியும் கொண்டு வந்து கொடுத்தார். பத்து ரூபாய் காசும் சேர்த்து மாமி கொடுத்து அவளை அனுப்பினாள். அதற்குள் குறைந்தது பத்து பனிரெண்டு முறையாவது சாமி சாமி என்று கிழவியின் குரல் மிஷின் மாதிரி கத்திக்கொண்டே தான் இருந்தது.

"மாமா சாமி சாமி என்று ஏன் அந்த கிழவி சொல்கிறாள். அதற்கு என்று ஒரு தனி அர்த்தம் இருக்கிறது அல்லவா?" என்று வேதா மாமி கேட்க தாத்தா தலையாட்டினார்.

ஒரு முடக்கு ப்ளாஸ்கிலிருந்து வெந்நீர் தொண்டையில் இறங்கியதும் தாத்தா தொடர்ந்தார்.

சாமி என்பது சுவாமி என்பதன் திரிபு. சுவாமி என்ற வார்த்தை உன்னதமான பொருள் கொண்டது. நான் சொல்வானேன். மகா பெரியவாளே இதை சிந்தித்து அருமையாக சொன்னதை உனக்கு சொல்கிறேன் கேள்.

" ஸ்வாமி என்றால் என்ன? 'ஸ்வம்' என்கிற வார்த்தைக்கு 'உடைமை', 'சொத்து' என்று அர்த்தம். 'ஸ்வம்' என்பதே தெலுங்கில் 'ஸொம்மு' என்றாகியிருக்கிறது. 'ஸொம்மு' என்றால் 'சொத்து'. ஸ்வந்தம் - தமிழில் 'சொந்த" மானது - அதுவே நம் சொத்து. கோயிலைச் சேர்ந்த சொத்தைக் கேரளத்தில் 'தேவஸ்வம்' என்கிறார்கள் அல்லவா? உடைமைக்கு சொந்தக்காரரர் யாரோ அந்த உடையவர்தான் 'ஸ்வாமி'. ஸ்வாமி என்பதற்கு நேர் தமிழ் வார்த்தை 'உடையார்' என்பது. முன் காலத்தில் கோயில் சுவர்களில் வெட்டப்பட்ட கல்வெட்டுக்களிலெல்லாம் 'திருச்சிற்றம்பலமுடையார்', 'திருவேங்கடமுடையார்', 'திருநாகேச்சுரமுடையார்', 'கபாலீஸ்வரமுடையார்', என்பது போலவே 'உடையார்' என்ற பெயரில்தான் தெய்வங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

குருவும் ஸ்வாமியும் ஒன்று என்பதால்தான் வைஷ்ணவர்கள் ஸ்ரீ ராமானுஜரை 'உடையவர்' என்றே சொல்கிறார்கள்.

'ஸ்வாமி' என்றால் சொத்துக்கு உரிமைக்காரரர் என்றேன். எந்தச் சொத்து? சகலப் பிரபஞ்ஜமும்தான். அதிலுள்ள நாமும் அவன் சொத்துத்தான். உள்ளதனைத்தும் அவன் ஒருவனுக்கே உடமையாகும். 'எல்லாம் என் உடமையே' என்று

தாயுமானவரும் பாடினார். நம் சொத்து, பிறர் சொத்து என்றெல்லாம் பாத்தியதை கொண்டாடுகிறோமே, உண்மையில் இந்தச் சொத்தெல்லாம்- அவற்றுக்குப் பாத்தியதை கோரும் நாம், பிறர் எல்லோருமே - அவனுடைய சொத்துதான். அவன் இல்லாவிட்டால் இந்தப் பிரபஞ்சமும் இல்லை, நாமும் இல்லை. நாம் பாத்தியதை கோருகிற சொத்துக்களும் இல்லை.

நாம் வீடு, வண்டி போன்ற சில சொத்துக்களைப் புதிதாக உண்டாக்கினதாக நினைக்கிறோம். விஞ்ஞானிகள் புதிது புதிதாக இயந்திரங்கள் செய்கிறார்கள். ஆனால் இதற்கெல்லாம் அடிப்படையில் எந்த மூலப்பொருள்களை வைத்துக் கொண்டு செய்கிறோமோ, அவை ஸ்வாமி செய்ததுதான். நாம் அவர் சொத்தை எடுத்து வேறு ஒரு ரூபத்தில் மாற்றுகிறோமே தவிர புதிதாக எதுவும் செய்யவில்லை. 'மூலப்பொருளை (element) செய்'. 'அணுவை (atom) உண்டாக்கு' என்றால் எந்த விஞ்ஞான நிபுணராலும் அது முடியாத காரியம். இத்தனை மெஷின்கள், குண்டுகள் செய்கிற விஞ்ஞானியால் ஒரு சின்னஞ்சிறிய இலையைச் செய்ய முடியுமா?

எல்லாவற்றையும் செய்கிற ஒரே ஒருத்தருக்குத்தான் அவையெல்லாம் சொந்தம். அதனால்தான் அவர் 'உடையவர்' , ஸ்வாமி என்று அழைக்கப்படுகிறார். நாமும் அவரது உடமைகள்தான். நம் சொத்து என்று நாம் நினைத்துக் கொண்டிருப்பதை நம் இஷ்டப்படி விநியோகிக்க உரிமை பெற்றிருக்கிறோம் அல்லவா? அப்படியே ஸ்வாமியின் சொத்தாகிய நாமும், நம்மை அவன் இஷ்டப்படி நடத்தட்டும் என்று விட்டுவிட்டால் நமக்கு எந்த பாரமும் இல்லை. ஒரே ஆனந்தம்தான்.

இப்போது, 'நான், நான்' என்று எதையோ சொல்லிக்கொண்டு அலைகிறோமே, உண்மையில் இது அவனுக்குதான் சொந்தம் என்று புரிந்து கொண்டுவிட்டால் அப்புறம் நாமாகக் கிடந்து அலையமாட்டோம். நமக்கென்று சொந்தமாக ஒரு ஆசையும் ஒரு துவேஷமும் பாராட்டுவதற்கு உரிமை இல்லை என்று தெரிந்து கொண்டு விட்டால், அப்புறம் ஒரு அலைச்சலும் இல்லை. ஒரே நிம்மதிதான்! 'ஸ்வாமி' என்கிற வார்த்தையே, நமக்கு நம்மிடமே எந்த சொந்தமும் இல்லை. நாம் அவன் தன்னிஷ்டப்படி விநியோகிக்க உரிமை பெற்றிருக்கிற அவனுடைய சொத்துத்தான் என்பதை உணர்த்துவதாக அமைந்திருக்கிறது. இப்படி உணர்வதுதான் பக்தியின் பரம லக்ஷியமான சரணாகதி என்பது.

இன்று காலை பேப்பர் படித்து கண்ணீர் விட்டேன். ஒரு கோவில் அதிகாரி H.R.E. BOARD (E.O.) கோவில் சுவாமியின் வைர தங்க நகைகளை திருடியது ஊர்ஜிதமாகி அவனை காவலில் வைத்து விசாரித்ததில் குற்றத்தை ஒப்புக்கொண்டான் என்று படித்தேன். மாட்டிக் கொண்டவன் அங்கோ இங்கோ ஒரு சிலர். மாட்டாதவர்கள்? எத்தனையோ காலம் காலமாக பக்தர்கள் மனமுவந்து வேண்டிக் கொண்டு ராஜாக்கள் பிரபுக்கள் மானியமாக கொடுத்த சொத்தெல்லாம் பறி போர்கிறதே. வேலியே பயிரை மேய்கிறதே. இப்படியும் அறங்காவலர்கள் தேவையா? கோவிலை நிர்வாகிக்க பக்தர்களே தமக்குள்ளே யோக்யதாம்சம் கொண்ட பரம்பரை தர்ம கர்த்தாக்களை கொண்ட தேசம் அல்லவா இது.)

# 56. சைக்கிள் பெடல்

கோபு பத்து வயது சிறுவன். துருதுரு வென்று ஓடி ஆடுபவன். எதையும் இயற்கையிலேயே கேட்டு தெரிந்து கொள்ளும் ஆர்வம் கொண்டவன். என்னைச் சுற்றிக் கொண்டே இருப்பான். என்னுடன் யார் வந்து பேசினாலும் நாங்க பேசுவதை புரிந்து கொள்ள முயற்சிப்பவன்.

“தாத்தா நீ அடிக்கடி சொல்றியே மஹா பெரியவா என்று அவரை நீ பார்த்திருக்கிறியா?”

“அடடா அந்த பாக்கியம் எனக்கு நிறையவே கிட்டியிருக்கிறதடா பையா. பார்த்தது மட்டுமல்ல அவர் பேசியும் கேட்ட எண்ணற்ற பாக்யவான்களில் நானும் ஒருவன். இந்த நேரம் பார்த்து கோபுவின் நண்பன் பாலாஜி மெதுவாக உள்ளே தலையை நீட்டினான்.

என்னடா?

“சைக்கிள் செயின் அறுந்துட்டுது. பெடல் பண்ண முடியலை. அதான் கோபுவை தேடிண்டு வந்தேன்.”

சரி உட்காரு. பாலாஜியும் கதை பிரியன்.

“கோபு நீ பெரியவா பத்தி கேட்டியே. அவா தத்தாத்ரேயர் மாதிரி. புல் புழு கூட குரு என்று எடுத்துக்கொள்பவர். இவன் சொல்ற சைக்கிள் பெடல் பத்தி கூட ஒரு தடவை அழகா ஒரு உதாரணமா சொல்லி ஒரு மா பெரும் உண்மையை விளக்கி இருக்கிறார். உங்களுக்கு புரியாட்டாலும் சொல்றேன். கேட்க கேட்க கொஞ்சநாள் கழித்து கூட புரியலாம்.

‘‘ஒருத்தன் சைக்கிளை விட்டுகொண்டு போகிறான். கால்களால் பெடலை அழுத்துகிறான். சைக்கிள் வேகமா ஓடறது. நன்றாக பழக்கப்பட்டவன் பெடலை விடாமல் மிதித்து சுற்ற சைக்கிள் வேகமாக செல்கிறது. சட்டென்று பெடலை மிதித்து சுற்றுவதை நிறுத்துகிறான். கைகள் மட்டும் சைக்கிள் கைப் பிடியை பிடித்துக் கொண்டிருக்கிறது. கால் சும்மாவே இருந்தாலும் முன்பு வேகமாக சுழற்றியதால் சைக்கிள் சுகமாக தானாகவே ஓடிக் கொண்டிருக்கிறது.

அரசாங்கத்தில் அநேக பரிக்ஷைகள். அந்த பரிக்ஷைகளில் அனேகமாக பிராமண குடும்ப பிள்ளைகள் அனேகமாக முதன்மையாக தேறுகிறார்கள். யோக்யதையை அனுசரித்து (Merit) சிலரை கலாசாலைகளில் அந்த யோக்யதாம்சத்தில் அவர்களுக்கு படிப்பு வசதியாகியது.

யோக்யதாம்சத்திற்கு குறைந்தது எவ்வளவு மார்க்கு வேண்டுமோ அதை விட பன்மடங்கு அதிகமாக மார்க் வாங்கி யோக்யதாம்சத்தில் முன் வந்து நிற்பார்கள். இதெற்கெல்லாம் ஒரு காரணம், அது இப்பொழுது ஒன்றும் தெரியவில்லை.

ஆசார அனுஷ்டான விஷயத்தில் பிராமண மாணவர்களுக்கும் மற்ற மாணவர்களுக்கும் ஒரு வித்யாசமும் காணப்படவில்லை. சில விஷயங்களில் இவர்களை விட மற்றவர்கள் மேல் என்றும் கூட சொல்லலாம், அப்படி இருக்க இவர்கள் விசேஷமாக பாஸ் செய்யும் யோக்யதைக்கு மூல காரணம் என்ன? அதையும் கண்டுபிடிக்க வேண்டும்

பகவான் பக்ஷபாதம் செய்யமாட்டார். இன்று அந்தணரும் மற்றவரும் அனுஷ்டானத்தில் ஒரே விதமாக இருந்தாலும் மற்றவரை விட சில விஷயங்களில் அந்தணர் இன்னும் மோசமாக இருந்தாலும் அந்தணருக்கு மாத்திரம் இவ்விதம் அதிக மேதையை பகவான் அருளியிருப்பது ஏன்?



இன்றைக்கு மூன்று தலைமுறைக்கு முன்னிருந்த அந்தணப் பெரியோர்கள் தாங்கள் க்ருதார்தர்களாக வேண்டியதற்கு எவ்வளவு ப்ரும்மதேஜஸ் வேண்டுமோ அதைவிட அதிகமாகவே தம் புண்ணிய வாழ்க்கை என்னும் "சைக்கிளை தீவிரமாக பெடல்" செய்து விட்டார்கள்.

இன்று நாம் ஒரு அனுஷ்டானமும் செய்யாமல் அவர்கள் பெயரென்னும் கைப்பிடியை மாத்திரம் பிடித்துகொண்டிருப்பதால் "பாஸ்" செய்கிறோம்.

அவர்கள் நான்கு மணிக்கு ப்ரும்ம முகூர்த்தத்தில் எழுந்தார்கள்; நாம் அனேகமாக சூர்யன் எழுந்த பின்னரே தான் எழுந்திருக்கிறோம்

அவர்கள் காலத்தில் சந்த்யாவந்தனம் செய்யாதவனை தேடி கண்டுபிடிக்கவேண்டும், நம் காலத்தில் செய்தவனை தேடி கண்டுபிடிக்கவேண்டும்.

அவர்கள் காலத்தில் காலையிலும் மாலையிலும் சந்த்யாவந்தன படித்துறையில் கூட்டம் சேரும். நம் காலத்தில் காலை வேளைகளில் ஒருவிதமான "கிளப்"களிலும் மாலை நேரத்தில் வேறு விதமான "கிளப்"களிலும் கூட்டம் நிரம்பி வழிகின்றன

ஆத்மாவுக்கு உணவு ஊட்டவேண்டிய நேரத்தில் அனாத்மாவுக்கு உணவு ஊட்டுகிறோம்.

நம் நாட்டிலுள்ள இதர மதஸ்தர்கள் எதோ ஒரு முறைப்படியாவது மாலை நேரத்திலும் இதர சில குறிப்பிட்ட சில சமயங்களிலும் ஈசனை நினைக்கும் பலத்தினால் உலக சம்பந்தம் ஒன்றுமில்லாமல் ஒரு ராஜ்யத்தையே பிடுங்கிக்கொண்டு போய்விட்டார்கள்.

புக்கராயனின் குருவான வித்யாரண்ய சுவாமிகளும், சிவாஜியின் குருவான சமர்த்த ராமதாஸ் சுவாமிகளும் ஆசார சீலர்கள் அனுஷ்டனத்பர்கள், அனுபூதி நிஷ்டர்கள் நம் தர்மத்தை பாழ் செய்த பிற நாட்டவரின் பேயாட்டத்தை ஒழித்து தர்ம சாம்ராஜ்ய ஸ்தாபனம் செய்தவர்கள்.

மூன்று தலைமுறைக்கு முன்னிருந்த பெரியோர்கள் சரீரத்திலேற்படும் ஜல மல சுத்தி செய்யாதவர்கள் கிடையாது. மண்ணும் ஜலபாத்திரமும் அவர்களுடன் எப்பவும் சித்தமாக இருக்கும். நாம் நாகரீகம் அடைந்துவிட்டோம் ஜல மல சுத்தியை கூட காகிதத்தில் விட்டுவிட்டோம், மிருகங்களாய் விட்டோம் , இதுவே நம் நாகரீகம்.

சௌசம் என்னும் முதல் ஆசாரத்தை விட்டவன் செய்யும் எந்த கர்மானுஷ்டானமும் வெறும் சாம்பலில் செய்யும் ஹோமமே.

மூன்று தலை முறைகளுக்கு முன்பு இருந்தவர்கள் செய்த பெடல் இன்னும் எத்தனை நாளைக்கு ஓடும்?, பெடல் செய்யப்படாத சைக்கிள் எவ்வளவு தூரம் ஓடும்? இப்பொழுதே மங்கி விட்டது.

நமது பால்யத்தில் பிராமணச் சிறுவர்கள் முகத்தில் பார்த்த ப்ரும்ஹதேஜஸ் கூட இத் தலைமுறைகளிலுள்ள குழந்தைகளின் முகத்தில் காணோம் , படிப்புத் திறமையும் அப்படியேதான்.

ஆதலால் இனி நம் பின் தலைமுறைகள் ஈச்வர அனுக்ரகத்திலும் ப்ரும்ஹதேஜஸிலும், உத்தம மேதையிலும் குறையாமலிருக்க வேண்டுமானால் இனி நம் வாழ்வில் வர வர இவ்விஷயங்களில் க்ஷீனமடையாமல் இருக்க வேண்டுமானால் நாமும் தர்ம சாஸ்திரம் என்னும் "சைக்கிளின்" கர்மானுஷ்டானம் என்னும் "சக்கரத்தை" ஆசாரத்தால் "பெடல்" செய்யவேண்டும். விடாமல் மிதிக்க மிதிக்க சக்கரம் சுழலும்.



# 57. மனசும் சுத்தமும்

சமீபத்தில் ரிஷி வந்தியம் க்ஷேத்ரத்தில் ஒரு பெரிய பழைய சிவன் கோவில் சென்றபோது அந்த காலை வேளையில் ஒருவர் இயந்திரமாக குடம் குடமாக தண்ணீரை ஏதோ கடனே என்று விக்ரஹங்களின் மேல் வீசிக்கொண்டிருந்தார். எங்கும் துர்கந்தம். பால் அபிஷேகம் செய்து அந்த ஜலம் சீராக ஓடாமல் எங்கோ தேங்கி, புளிப்பு நாற்றம் மூச்சை அடைத்தது. இருட்டு. கோவில்களில் வயதானவர்கள் நடக்கவே பயமாக இருக்கிறது. பழைய கால உயரமான கருங்கல் படிகள் எங்கு ஆரம்பிக்கும் எங்கே திடீரென்று கீழே இறங்கும் என்று தெரியாத நிலையில் அரை இருட்டில் ஆபத்தான நிலை. அங்கே ஜலம் தேங்கி எண்ணெய் பிசுக்குடன் பலநாள் தேங்கினால்? வழுக்குகிறது. வெளிச்சமே போதாது. இன்னும் எத்தனையோ குறைகள். கவனிக்க பொறுப்பில், இருப்பவர்கள் தவறுகிறார்கள். மனசே சுத்தமில்லாதவர்கள் கையில் அதிகாரம் கொடுத்தால் கோயில்கள் எவ்வாறு சுத்தமாக இருக்கும் என்று எதிர் பார்க்க முடியும்?

மஹா பெரியவாளே ஒரு தரம் மனம் திறந்து சில குறைகள் சொல்லியிருக்கிறார்:

திருப்பதியில் "ரவை ஸல்லாக் கட்டளை" என்று பழைய கால ராஜாக்கள் ஒரு திட்டம் வைத்திருந்தார்கள். தற்காலத்தில் அத்தனை அசுத்தத்துக்கும் கோயில்தான் இடம் என்று ஆக்கியிருக்கிறோம்! ப்ராகாரத்தின் பக்கம் போவதென்றாலே மூக்கைப் பிடித்துக்கொள்ள வேண்டியிருக்கிறதென்று சொல்கிறார்கள். நான் வருகிறேன், மந்த்ரி, கமிஷனர் வருகிறதென்றால் அப்போது நடப்பது வேறே. மற்ற நாளில் எப்படியிருக்கிறதென்று பக்தர்கள் துக்கப்பட்டுக்கொண்டு என்னிடம் சொல்கிறார்கள். ப்ராகாரத்துக்கு வெளியிலே மட்டுமில்லை, ஸந்நிதிகளிலேயே கொஞ்சங்கூட சுத்தமில்லை, ஸ்வாமி மேலே சார்த்துகிற வஸ்த்ரமே பிடித்துணிக்கும் கேவலமாக அழுக்கேறியிருக்கிறது என்று துக்கப்பட்டுக் கொண்டு சொல்கிறார்கள்.

இதே தேசத்தில் நம் முன்னோர்கள் மனஸுக்குப் பரிசுத்தி தரவேண்டிய ஆலயம், புறத்திலும் பரம சுத்தியாயிருக்க வேண்டுமென்பதில் கண்ணும் கருத்துமாயிருந்து அப்படியே நடத்திக் கொடுத்திருக்கிறார்கள்.

'ரவை ஸல்லா என்றால் 'டாக்கா மஸ்லின்' மாதிரி நல்ல வெள்ளை வெளேரென்றும், ரொம்ப மெல்லிசாகவும் இருக்கிற துணி, மேலே போட்டுக்கொண்டால் போட்டுக் கொண்டிருக்கிறமோ என்றே தெரியாது, உடம்பெல்லாம் தெரியும். நல்ல நைஸாக, மெல்லிசாக நெசவு பண்ணியிருந்ததால் உடம்போ, தரையோ எதிலே போட்டாலும் நன்றாகப் படிந்துவிடும். துளி ஈரக்கசிவு (உடம்பிலா தரையிலோ) இருந்தால்கூட அப்படியே ஒட்டிக்கொண்டுவிடும். இப்படி அதன் texture இருந்ததால் எதிலே அது கொஞ்சம்பட்டுவிட்டாலும் அந்த அழுக்கு இதில் ஒட்டிக்கொண்டுவிடும்.

அதோடு மல்லிகைப் பூ மாதிரி வெள்ளை வெளேர் என்றுவேறே இருந்ததால் அழுக்கு லவலேசம் இருந்தால்கூட அதைத் தூக்கிக் காட்டிவிடும்.

திருப்பதியில் பெருமாள் ஸந்நிதானத்தில் கீழே கொஞ்சங்கூட அழுக்கில்லாமல் பரம சுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டும் என்று ரொம்பவும் கவனமாக இருந்தார்கள். அபிஷேகமான இடமென்றால் அபிஷேக வஸ்துக்கள் தரையில் படிந்து அழுக்கு ஆகத்தானே செய்யும்? அதோடு தீபத்தின் எண்ணெய் சொட்டுவது முதலானவற்றால் பிசுக்காகி, அர்ச்சகர்கள் அதிலேயே நடக்கிறபோது சொத சொத என்றாகித் தரை அழுக்காக்தானே ஆகும்? அப்படிப்பட்ட மூலஸ்தானத் தரையை நன்றாகத் தேய்த்து அலம்பிவிட்டு, துணிகளைப் போட்டுப் போட்டுத் துடைப்பார்கள். முதலில் அப்படித் துடைக்கிற துணிகளே கொஞ்சம் அழுக்காகத்தான் இருக்கும்.

நம் வீடுகளில் கூட அப்படித்தான் - துடைக்கிற துணியைப் "பழசு", "சுருணை" என்று சொல்வோம். அது அழுக்காகத்தான் இருக்கும் நாம் சுத்தமாயிருக்கும் போது அது மேலே பட்டாலே பிடிக்காது - அப்படியிருக்கும் ஒரே அழுக்காய் உள்ள இடத்தை நல்ல துணியால் துடைத்தால் நல்ல துணியும் அழுக்காகி வீணாய்விடும் என்பதால் அதற்கென்றே ஒரு அழுக்குத் துணி வைத்துக் கொண்டிருப்போம். நாம் காலை வைத்து நடக்கும் தரை போன்றவற்றை இப்படி அழுக்குத் துணியால் துடைப்பதோடு நிறுத்திக்கொண்டாலும், நாம் உட்காருகிற மணைப் பலகை முதலானவற்றைத் தேய்த்து அலம்புகிற போது இப்படி ரொம்ப அழுக்காயிருக்கும். துணியால் துடைக்காமல், கொஞ்சம் சுத்தமாயுள்ள துணியால்தான் துடைப்போம். ஸ்வாமி விக்ரஹத்துக்கு அபிஷேகம் செய்து துடைப்பதென்றால் நிச்சயமாகச் சுருணையால் செய்ய மாட்டோம். முதலில் ஓரளவு சுத்த வஸ்த்ரத்தால் துடைத்துவிட்டு, அப்புறம் நன்றாகக் காய்ந்த இன்னொரு சுத்த வஸ்த்ரத்தாலும துடைப்போம்.

திருப்பதியில் விக்ரஹத்தை மட்டுமில்லாமல் ஸந்நிதித் தரையையே எவ்வளவு சுத்தமாக வைத்துக்கொண்டிருந்தார்கள் என்றால், பெருமாள் ஸந்நிதானத்தில் முதலில் தடிமனான பழைய வஸ்தரங்களில் ஆரம்பித்து, அதைவிட மேலும் மேலும் சுத்தமான மெலிசான துணிகளால் துடைத்துக்கொண்டே போவார்கள். கடைசியில் ரவை ஸல்லாவைப் போட்டுத் துடைப்பார்கள். துளியூண்டு அழுக்கோ பிசுக்கோ இருந்தால் கூட அந்த வஸ்த்ரம் காட்டிக் கொடுத்துவிடும். இன்னொரு ரவை ஸல்லா, அப்புறம் ஒன்று என்று அந்த வஸ்த்ரத்திலும் கொஞ்சம்கூட அழுக்குப் படியாதவரை துடைத்துக்கொண்டே போக வேண்டும் என்று ராஜாக்கள் கட்டளை வைத்திருந்தார்க்ள. அதில் துளிக்கூட அழுக்குப் படியாமலிருக்கிறதா என்று பரீக்ஷித்துப் பார்ப்பதற்கென்றே ஒரு மணியக்காரன் போட்டிருந்தார்கள். அவ்வளவு சுத்தமாக, மூலவர் பிம்பத்தை வைத்துக்கொள்கிற மாதிரியே அவர் இருக்கிற கர்ப்ப ப்ருஹத்தை வைத்துக்கொண்டிருந்தார்கள்.

முதலிலேயே ரவை ஸல்லாவைப் போட்டுத் துடைத்தால் அதுவே கிழிந்துபோய்விடும். ஜலத்தை எல்லாம் பெரும்பாலும் தடிமனான சுருணைகளால்

துடைத்துவிட்டு, குப்பை கோதுகளையும் அவற்றால் முக்காலே மூணுவாசி துடைத்துவிட்டுத்தான் ரவை ஸல்லாவுக்குப் போகவேண்டும்.

அத்வைதமாக ஆத்ம தத்வத்தை நினைத்து த்யான விசாரம் பண்ணிக்கொண்டிருப்பது வெள்ளை வெளேரென்று மெல்லிசு ரவை ஸல்லா போட்டு மனஸைத் துடைத்து விடுகிற மாதிரி தற்போது ஒரே மலினமாகவும், ஆசைப்பசை இக்குப் பிசுக்கு என்று ஒட்டிக்கொண்டும், கோபம் லோபம் முதலியவற்றால் கரடு முரடான கல்தரை மாதிரியும் உள்ள நம்முடைய மனஸிலே அந்த த்யான ஸல்லாவைப் போட்டுத் துடைத்தால் இதுவும் சுத்தமாகாது. அதுவும் கிழிந்துபோய்விடும். தடிமனான சுருணையில்தான் ஆரம்பிக்க வேண்டும். அதனால்தான் இந்த்ரியங்களை வைத்துக்கொண்டு அவற்றைக் கொண்டே பெறுவதான க்ருஹஸ்தாச்ரம அநுபோகங்களில் ஆரம்பித்திருக்கிறது. ஆனாலும் பழைய அழுக்கை இந்தச் சுரணையும் துடைத்தெடுககிற மாதிரி, பழைய கர்மாவைப் போக்கிக் கொள்ளும் ரீதியிலே சாஸ்த்ர விதிகளின்படி இதிலும் கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. மத ஸம்பந்தமான அநேக சடங்குகளான கர்மாகளையும் கொடுத்திருக்கிறது. இப்படி அநேக கர்மாக்களைப் பண்ணிப்பண்ணி ஜன்மாந்தர அழுக்குகளைத் துடைத்துக் கொண்ட பின்தான் த்யான விசாரத்துக்குப் போகமுடியும். ஆரம்பத்திலேயே அப்படிப் பண்ணுவது நம்மையே ஏமாற்றிக் கொள்வதாகத்தான் ஆகும்.



ஆனாலும் ஆரம்பத்தில் கெட்டிச் சுருணையைப் போட்டுத் துடைக்கும்போதே, அப்படித் துடைக்கிறவன், "கடைசியிலே மணியக்காரன் ரவை ஸல்லாப் பரீக்ஷை நடத்துவான். அதில் ஜயிக்க வேண்டும" என்பதை மறக்காமல், அந்த நினைவுடனேயேதான் அழுந்த அழுந்தத் துடைப்பான். அதுபோல, கர்ம அழுக்குக் கழிவதற்காகவே சாஸ்த்ரங்கள் வர்ணம், ஆச்ரமம் என்று வகுத்து ஒவ்வொரு ஸ்டேஜில் என்னென்ன செய்யவேண்டுமென்று சொல்கிறதோ அவற்றையெல்லாம் நாம் மனோ வாக், காயங்களைக் கொண்டு பண்ணிக் கொண்டிருக்கும்போதும், 'இதற்கெல்லாம் முடிவு மனோதீதமான, வாக்குக்கு அப்பாற்பட்டதான, கார்ய ப்ரபஞ்சத்துக்கு அப்பாற்பட்ட ஆத்ம ஸாக்ஷாத் காரம்தான், அதை ஞானவிசாரத்தால் அடையும் நிலைக்குக் கொண்டு விடுவதற்குத்தான் இப்போது, நாம் செய்யும்படியான எல்லாமும்' என்கின்ற ஒரு நினைப்பை வைத்துக்கொண்டே இருக்கவேண்டும்.

ஒரு பாத்ரத்தை அலம்பும்போது கடைசியிலே சுத்த ஜலத்தை மட்டும்விட்டு, முதலிலே சுத்திக்குப் பிரயோஜனமான புளி, மண் முதலானவற்றின் கோது, தூள் முதலிலே மண்ணையும் புளியையும் போட்டுத் தேய்க்கிறபோதுகூட அவற்றோடு சுத்த ஜலத்தைக் கொஞ்சம் சேர்த்துக் கெட்டியாகக் கரைத்துக்கொண்டுதானே தேய்க்கிறோம்? அந்த மாதிரி ஆரம்பக் காலத்தில் மனோ இந்த்ரியாதிகளால் கர்மாக்களைச் செய்கிற காலத்திலுங்கூட ஆத்ம சிந்தனைத் தீர்த்த்தைக் கொஞ்சம் இவற்றில் தெளித்துக் கொள்ளத்தான் வேண்டும். ஆரம்பத்திலிருந்தே அநேக கர்மாக்களுக்கிடையிலும் த்யானத்துக்கென்று, ஆத்ம விசாரத்துக்கென்று கொஞ்ச காலம் ஒதுக்கத்தான் வேண்டும்.

எது ஒன்றையோ நாம் தேய்த்து சுத்தம் செய்கிறோம் என்றாலும், இத்தனை கஷ்டப்பட்டு நாம் தேய்த்து அலம்பி கடைசியிலே சுத்தமாக ஆகிற அந்த ஒன்று - சொம்போ, தரையோ, விக்ரஹமோ எதுவோ ஒன்று - இருக்கிறதே அந்த ஒன்றை நாம் புதிதாகப் பண்ணவில்லை. அதை நாம் எதுவாகவோ மாற்றிவிடவும் இல்லை. அது இருக்கிறபடி தான் இருக்கிறது. அதன் மேலே சேர்ந்த, ஆனால் அதோடு சேரக்கூடாததான வஸ்துக்களை நாம் போக்கினோமென்பது தான் நாம் பண்ணின தெல்லாம். இப்படித்தான் ஸ்வயம் ஸித்தமாக எப்போதும் இருந்துகொண்டிருக்கிற ஆத்மா அதன் ஸ்வபாவமான ஸ்திதியில் ப்ரகாசிக்கும்படிச் செய்வதற்கே தான் செய்கிற ஸாதனையெல்லாம். அதன்மேல் படிந்து அதை மறைத்துக்கொண்டிருக்கிற மாயா ஸ்ருஷ்டியான மனஸைப் போக்குவதற்குத்தான் அநேக கார்யங்களைச் செய்ய வேண்டியதாயிருக்கிறது. மனஸ் என்கிறபோது அந்தஃகரணம், வாக், காயம் எல்லாவற்றையுந்தான் அதில் சேர்த்துவிடுகிறேன். அதே மாதிரி, கார்யம் என்னும்போது மனஸின் கார்யமான எண்ணங்களையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்.



# 58. துக்கத்தின் காரணம்

மார்க்க பந்துவிற்கு பரம ஆச்சர்யம். "எப்படி சார் மஹா பெரியவாளை ஒரு "நடமாடும் என்சைக்ளோபீடியா" என்று சொல்கிறார்கள்?" என்று கேட்டார்.

'வாஸ்தவம். மஹா பெரியவாளுக்கு தெரியாத புரியாத விஷயமே உலகத்திலே இல்லே. எப்போதும் எதையாவது ஆழ்ந்து, அலசி, ஆராய்ந்து சிந்திச்சு அதுக்குன்னு புதுசா தனியா ஒருஅர்த்தம் கண்டுபிடிச்சு ஆதாரத்தோடு சொல்வா. ஆஹா இப்படி ஒரு அதீதமான அர்த்தமா? இதுவரைக்கும் தோணலியே, என்று நமக்கு படும்.

நாம் படுகிற துக்கங்களைப் பற்றி அவர் யோசித்திருக்கிறார். ஜகத் குரு அல்லவா? ஜகத்தில் எவர் துன்பமும் தன் துன்பமாக ஏற்று பரிகாரம் வழங்குகிறவர் அல்லவா? நாம் என்ன பீஸ் கொடுத்தோம், கொடுக்கிறோம், கொடுக்கப் போகிறோம் அவருக்கு?

உலகத்தில் சுக துக்கங்கள் மாறி மாறி வரும். யாருமே இதற்கு விதி விலக்கல்ல. ஆனால் நாம் ஒவ்வொரு இன்ப துன்பத்துக்கும் ஏதோ ஒன்றை அல்லது யாராவது ஒருத்தரை தான் காரணமாக காட்டுகிறோம் அல்லது நினைக்கிறோம். இதை எப்படி பார்க்கவேண்டும். இன்று இதோ மகா பெரியவரே விளக்குவதை கேட்போம்: கூர்ந்து கவனியுங்கள்:

"ஒருவனுக்கு வியாதி வந்தால், அதற்குப் பலர் பல்வேறு காரணங்களைக் கூறுகின்றனர். தாது வித்தியாசத்தால் நோய் வந்தது என்பார் ஆயுர்வேத வைத்தியர்.

இங்கிலீஷ் டாக்டர் வேறு காரணம் சொல்வார்.

மாறாக இன்னொரு ஸைகலாஜிகல் காரணத்தை ஒரு பிரபல மனோதத்வ நிபுணர் கூறுவார்.

மந்திர சாஸ்திரக்காரரர், சும்மா இருப்பாரா? குறிப்பிட்ட தெய்வக் கோளாற்றால் இந்த வியாதி உண்டாயிற்று என்று அடித்து சொல்வார்.

டயம் வேஸ்ட் பண்ணாதேங்கோ. இன்ன கிரகம் இன்ன இடத்தில் இருப்பதே நோய்க்குக் காரணம் என்று ஏதோ கூட்டி கழித்து சோழி வீசி உருட்டி, விளைக்கை முறைத்துப் பார்த்தோ பல ஜோதிடர்கள் சொல்வார்கள்.

"ஹூம், என்ன செய்வது. பூர்வ கர்ம பலன் சுவாமி, அது தான் வியாதி படுத்துறது" என்பார் தர்ம சாஸ்திர வாதி.

வியாதிக்கு மட்டுமின்றி நம் வாழ்வின் எல்லா விதமான சுக துக்கங்களுக்கும் இவ்வாறு பலவித காரணங்கள் சொல்லப்படுகிற து. ஒரே விஷயத்துக்கு இப்படிப்

பல காரணங்கள் சொன்னால் குழப்பம் தானே விளையும். நம் சுக துக்கங்களுக்கு கிரகங்கள் தான் காரணமா? ஜோதிஷர் சொல்கிறபடி கிரகப்ரீதி செய்வதா அல்லது வேறு தெய்வத்துக்கோ கிராம தேவதைக்கோ செய்த அபச்சாரம் காரணமா?அந்தத் தெய்வத்துக்கு சாந்தி பரிகாரம் செய்வதா? நோய்நொடி என்றால் கர்ம பலன் என்றால், அது தீருகிற போது தானே தீரும் என்று வெறுமே இருந்துவிட வேண்டியதுதானா? இத்தனை காரணங்களில் எது சத்தியம்? எல்லாமே சத்தியமாக இருக்குமோ?

ஆதி காரணம் நம் கர்மம்தான் என்பது நிச்சயம். அந்தக் கர்மம் ஒன்றே பலவிதமான விளைவுகளை உண்டாக்குகிறது. மழை ஒன்றுதான். ஆனால் அதிலிருந்தே எத்தனை விளைவுகள் உண்டாகின்றன. பூமி முழுவதும் ஈரம் உண்டாகிறது. ஈசல் உண்டாகிறது. தவளை கத்துகிறது. சில செடிகள் பச்சென்று தழைக்கின்றன. வேறு சில அழுகுகின்றன. இத்தனையும் ஒரே மழைக்கு அடையாளங்கள். அதே மாதிரி மாந்திரீகமாகவும் ஜ்யோதிஷ ரீதியிலும் வைத்திய சாஸ்திரப்படியும் நாம் குணம் பெற வேண்டிய வியாதிக்கும் ஒரு கர்மாவே காரணம். இன்னும் வாழ்க்கையில் வியாதியைத் தவிர, பல விதமான பிரச்சனைகள். பணத்தால், உத்தியோகத்தால், தேக பலத்தால், அறிவு சக்தியால் கவனிக்க வேண்டியபிரச்சனைகள் (Problems) எல்லையில்லாமல் இருக்கின்றன. இந்தப் பிரச்சனைகள், கஷ்டங்கள் எல்லாவற்றுக்கும் காரணம் கர்மம்தான்.

ஸயன்ஸ்படி விளைவு (Effect) இருந்தால் காரணம் (Cause) இருந்தேயாக வேண்டும்.

ஜகத் முழுதும் காரணம் - விளைவு, செயல் - பிரதிச் செயல் (Action and Reaction) என்றது வந்ததுக்குள்தான் கட்டுண்டிருக்கிறது. பௌதிக சாஸ்திரம் (Physics) முழுதிலும் இந்த உண்மைதான் விளங்குகிறது. ஜடப் பிரபஞ்சம் இரண்டும் ஒரே மூலத்திலிருந்தே வந்ததால் ஜகத்துக்கு உள்ள இந்த விதி மனித வாழ்விலும் உண்டு. நம் செயலுக்கெல்லாம் நிச்சயமாகப் பிரதி உண்டு. இன்று நாம் அநுபவிக்கின்ற சுகங்களுக்கும் கஷ்டங்களுக்கும் காரணம் நாம் முன்பே இந்த ஜன்மாவிலோ, பூர்வ ஜன்மாவிலோ செய்த நல்லது கெட்டதுகள்தான். சில சமயங்களில் நாம் செய்த பாப புண்ணிய விளைவோடு, குறிப்பிட்ட வேறு சிலரது பாப புண்ணிய பலனும் நம்மைச் சேரலாம். உதாரணமாக, குழந்தைக்கு வியாதி வந்தால், மாதா பிதாவின் பாப பலன் என்பார்கள். அவர்கள் குழந்தைக்கு ஸதா சிசுருஷை செய்வதையும், மனத்தால் அந்தக் குழந்தைக்காக அவர்கள் வேதனைப்படுவதையும் பார்க்கும்போது இதுவும் நியாயம் என்றே தெரியும். எனக்கு இன்னொன்று கூடத் தோன்றுகிறது. அதாவது, நமக்கு ஒரு கெடுதல் வந்தால் அது நம் சத்துருவின் புண்ணிய பலன் என்றும் சொல்லலாம்!

பிரபஞ்சத்தின் சகல ஆட்டத்துக்குள்ளும் காரணம் ஒரே ஒரு பராசக்திதான். அந்த ஒரே ஈசுவரனுடைய ஆக்ஞைப்படி தான் உலக இயக்கம் முழுதும் நடக்கிறது. அவன் பல விஷயங்களைச் சம்மந்தப் படுத்தி விடுகிறான். இந்த உலகத்தில்



எதுவுமே தொடர்பில்லாமல் நடக்கவில்லை. நமக்குச் சம்மந்தமில்லாதவையாகத் தோன்றுவதை எல்லாம் உள்ளூறச் சம்பந்தப்படுத்தி வேடிக்கை பார்க்கிறான் சர்வேஸ்வரன்.

ஒருவர் செய்கிற கர்மம். அதன் பலன், இவையே மனித வாழ்வின் சுக துக்கங்களுக்கு முதற் காரணம். இதற்கே துணைக்காரணமாக - அல்லது அடையாளமாக - கிரகசாரம். தெய்வ குற்றம். ஆரோக்கியக்குறைவு முதலியன அமைகின்றன.

ஜாதக ரீதியில், வைத்திய ரீதியில், மாந்திரீக ரீதியில் எப்படி வேண்டுமானாலும் பரிகாரம் தேடிக்கொள்ளலாம். நம் கர்மா தீருகிறபோது அவை பலன் தரும். பகவான் விட்டவழி என்று பக்தியோடு நம் வாழ்க்கையை ஈஸ்வரார்ப்பணம் செய்துவிட்டுப் பேசாமல் கிடக்கிற பக்குவம் இருந்தால், எல்லாவற்றையும் விட அது சிலாக்கியம். அதுவே பெரிய பரிகாரம், உண்மையான பரிகாரம்.

பூர்வ கர்ம சமாச்சாரம் எப்படிப் போனாலும் இனிமேலாவது கர்ம பாரம் ஏறாமல் பார்த்துக் கொள்வதே முக்கியம். பழையதற்குப் பரிகாரம் தேடுவதைவிட, புதிய சுமை சேராமல், பாபம் பண்ணாமல் வாழ்வதற்கு ஈசுவரத் துணை கொள்வதே முக்கியம்.

பூர்வ கர்மத்தால் இப்போது ஏற்பட்டுள்ள துக்கத்துக்கும் உண்மைப் பரிகாரம் ஈசுவர தியானம்தான். இனிமேல் துக்கத்துக்கு விதை போட்டுக் கொள்ளாமல் இருக்கிற உபாயமும் ஈசுவர தியானம்தான்.துக்கம் தருவதாக இன்னொரு வஸ்துவே இல்லை என்ற அத்வைத அநுபவம் சித்திப்பதே இதன் முடிந்த முடிவாக துக்க பரிகார நிலை. அங்கே துக்கமும் இல்லை. சுகமும் இல்லை. இரண்டுக்கும் ஆதாரமான சத்தியம் மட்டும் ஸ்வயம் பிரகாசமாக இருக்கும்.



# 59. எப்படி கண் ஆபரேஷன்?

எத்தனை எத்தனையோ ஆச்சரியங்கள். நம்பமுடியாத அதிசயங்கள். ஆனால் இந்த அபூர்வ நிகழ்ச்சிகள் அனுபவிக்கப் பட்டவை. அது தான் மகா பெரியவா என்ற பேசும் தெய்வத்தின் பெருமை.

ஒரு சம்பவம் சொல்றேன் கேளுங்கோ கமலா அம்மா.

பார்வை வராதுன்னு நிறைய பெரிய டாக்டர்கள் எல்லாம் கை விட்டுட்டா. எங்கே நம்ம மெட்ராஸ் லே தான். ஆனால் அந்த பார்வை இழந்தவரோ ஒரு பெரிய மகா பெரியவா பக்தர். விட்டுடுவாரா? நேரா தெய்வத்துக்கிட்டேயே போறேன் னுட்டு காஞ்சிபுரம் போனார். அப்பறம்?

பெரியவா காஞ்சிபுரத்திலேயே ஒரு கண் டாக்டர் கிட்டே அனுப்பினார். அந்த கண் டாக்டரும் பெரியவா பக்தர். கேட்கணுமா. அவரை கூப்பிட்டனுப்பி "இந்த மனுஷனுக்கு கண் பார்வைக்கு ஆபரேஷன் பண்ணு"ன்னுட்டார்.

இதோ அதை தான் உங்களுக்கு சொல்றேன்:

கண்பார்வை இல்லாத சீனிவாச ஐயர் மற்றும் அவரது மனைவி கிரிஜா, மகன்கள் கோபி, ஜெயராஜ் ஆகியோரை அழைத்துக் கொண்டு காஞ்சி ஸ்ரீமடத்தில் இருந்து தன் கிளினிக்கை நோக்கி நடந்தார் டாக்டர் பாலசுப்ரமணியன். அவர் தான் மேலே சொன்ன காஞ்சிபுரத்தில் ஒரு கண் டாக்டர்.

பெரியவாளின் அருட் கடாட்சப் பார்வை டாக்டர் மீது பட்ட பின் அவரது நடவடிக்கையிலேயே ஒரு மாற்றம் தெரிந்தது. இருக்காதா பின்னே. சென்னையின் பிரபல கண் மருத்துவமனைகள் 'இவருக்குப் பார்வை வர வாய்ப்பே இல்லை' என்று ஒதுக்கி விட்ட சீனிவாச ஐயருக்கு அல்லவா ஆபரேஷன் செய்யப் போகிறார். அதுவும் பெரிவாளின் அருளோடு! இது நிகழ்ந்தது **1969**-ஆம் வருடம் நவம்பர் மாதம்.

சாலையில் இறங்கி டாக்டர் நடக்கும்போது அவரிடம் ஒரு புது வேகமும் தெம்பும் தோன்றியது. நோயாளிகள் என்றால், டாக்டரைத் தேடி மருத்துவமனைக்கு வருவார்கள்! ஆனால், இந்த டாக்டர் என்னடாவென்றால், நோயாளியைக் கைப்பிடித்துத் தன் மருத்துவமனைக்குக் கூட்டிக் கொண்டு போகிறார்.

மஹா பெரியவா உத்தரவாயிற்றே! யாரால் மீற முடியும்? அதுவும் இந்த டாக்டர் பாலசுப்ரமணியன் உள்ளூர்க்காரரர் வேறு. காஞ்சி மஹானின் அருட் கடாட்சத்தைப் பற்றி முக்காலும் உணர்ந்தவர். அப்படி இருக்கும்போது அவரது கட்டளையை உதாசீனப்படுத்த முடியுமா? தெய்வத்தின் வாக்கு அல்லவா?

இரண்டு மூன்று தெருக்கள் தள்ளி இருந்த தன் கிளினிக்கை அடைந்தார் டாக்டர். ரொம்ப சாதாரணம் அந்த கிளினிக். கீழே தரைத் தளத்தில் கன்ஸல்டேஷன் ரூம். ஒரு ஹாலில் சில படுக்கைகள். மாடியில் சுமாரான வசதியோடு ஒரு ஆபரேஷன் தியேட்டர்.

தனது கிளினிக்குக்குள் நுழைந்த டாக்டர் பாலசுப்ரமணியன் கன்ஸல்டேஷன் அறைக்குள் சீனிவாச ஐயரை அமர வைத்தார். அவருடைய மனைவி மற்றும் மகன்களை வெளியே காத்திருக்கச் சொன்னார். பரிசோதனைகளை முடித்துவிட்டு தரைத் தளத்தில் உள்ள ஓர் அறைக்குள் சீனிவாச ஐயரை அட்மிட் பண்ணிக் கொண்டார். கிரிஜாவும் மகன்களுடன் உதவிக்கு வந்து, சீனிவாச ஐயரை அழைத்துச் சென்றனர்.

"நாளையே சீனிவாச ஐயரின் வலக் கண்ணில் ஆபரேஷன் செய்து விடலாம்" என்றார் டாக்டர்.

மெட்ராஸ்லே வீட்டை அப்படியே போட்டு விட்டுக் பெண்களால் காஞ்சி புரத்திலே இருக்க முடியுமா? மனைவி கிரிஜாவும் அவருக்குத் துணையாக மகன் ஜெயராஜும் சென்னைக்குத் திரும்ப கோபியை மட்டும் துணைக்கு இருக்கச் சொல்லி விட்டு, இரவு உணவுக்கு என்ன வேண்டுமோ, அதை வாங்கிக் கொடுத்து விட்டுப் புறப்பட்டனர்.

மறுநாள் காலை டாக்டர் வலக் கண்ணுக்கு முதலில் ஆபரேஷன் பண்ணினார். சுமார் மூன்று மணி நேரம் நடந்தது. துணைக்கு இருந்த கோபி "நல்லபடியாக ஆபரேஷன் முடிந்து அப்பாவுக்குக் கண்பார்வை திரும்ப வேண்டும்" என்று மஹாபெரியவாளை மானசீகமாக வேண்டிக் கொண்டார்.

ஆபரேஷன் முடிந்ததும் "கவலை வேண்டாம். பெரியவா ஆசியுடன் ஆபரேஷன் நல்லபடியா முடிஞ்சிடுச்சு. மூன்று நாட்கள் அவரோட கண் கட்டைப் பிரிக்கக் கூடாது. அதற்கப்புறம் பிரிச்சா, அவர் இந்த உலகத்தை ரசிக்க முடியும். இன்னும் மூன்று நாட்களும் அவரை ஜாக்கிரதையாகப் பாத்துக் கொள்ள வேண்டியது உங்கள் பொறுப்பு" என்று சொல்லி விட்டுப் போனார்.

சீனிவாச ஐயரின் உறவினர்கள் வந்து பார்த்தார்கள். 'சென்னையிலே முடியாத ஒரு டிரீட்மெண்ட் காஞ்சிபுரத்தில் எப்படி சாத்தியமாகும்?" என்று சிகிச்சையின் மேல் நம்பிக்கை இல்லாமல் ஒரு சிலர் சீனிவாச ஐயரையும் பரிதாபமாகப் பார்த்தவர்கள் தான். ஆனாலும், சீனிவாச ஐயர் குடும்பம் மஹா பெரியவாளின் அருட் கருணை மேல் அபரிமிதமான நம்பிக்கைக் கொண்டிருந்தது.

கண் கட்டைப் பிரிக்க வேண்டிய மூன்றாவது நாள் வந்தது. பகல் வேளையில் டாக்டர் பாலசுப்ரமணியனே வந்து கட்டைப் பிரிகிறேன் என்றார். டாக்டர் கட்டைப்

பிரிக்கப் போகிற நேரம் பார்த்துத் வெள்ளியே திடீரென வாத்திய சத்தம், 'ஜய ஜய சங்கர' கோஷம்.

'என்னது இந்த வேளையில் பெரியவா இங்கே வந்து கொண்டிருக்கிறாரா? அவர் வருகிற வேளையில்தானே இப்படி இருக்கும்?" ஆர்வமுடன் கோபி வெளியே வந்து பார்த்தார். ஆம்! உலகமே கொண்டாடும் அந்த தெய்வம் சாலையில் நடந்து வந்து கொண்டிருந்தது. கலவைக்குச் சென்றிருந்த பெரியவா, அன்றைய தினம் காஞ்சி ஸ்ரீமடத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். வேக வேகமாகத் தன் தந்தையார் அறைக்கு வந்து விஷயத்தைச் சொன்னார் கோபி. சீனிவாச ஐயருக்கு பரம ஆனந்தம்.

கோபி டாக்டர் வந்துட்டாரா பாரு?

'வந்துட்டார்பா. இன்னும் கொஞ்ச நேரத்துல உங்க கட்டைப் பிரிச்சுடுவார்'

"டேய் கோபி ஒண்ணு பண்ணுடா எப்படியும் கட்டை இன்னிக்கு பிரிக்கப் போறா. என் கட்டைப் பிரிச்ச உடனே நான் முதல்ல இப்பவே என் தெய்வத்தைப் பாக்கணும்டா? டாக்டர்கிட்ட சொல்லி பெர்மிஷன் வாங்கறியா? போ, உடனே"

சீனிவாச ஐயருக்கு மஹா பெரியவாளின் பரிபூரண அருளால் ஒரு கண் பார்வை வரப் போகிறது. எத்தனை வருடங்களாகப் பார்வை இல்லாமல் அவதிப்பட்டவர் பல வருடங்கள் கழித்து ஒரு கண்ணுக்குப் புத்துயிர் பெரியவா ஆசியுடன் கிடைக்கிறதென்றால் எப்பேர்ப்பட்ட பாக்கியம்! கட்டைப் பிரித்ததும், முதன்முதலாக மஹா பெரியவாளையே தரிசிப்பது என்பது எத்தனை சுகம்! கிடைக்கக் கூடியதா?

'சரிப்பா இதோ, டாக்டர் கிட்டயே கேட்டுட்டு வர்றேன்'

பெரியவா யாத்திரை கிளினிக்கின் அருகே நெருங்கி விட்டது. வாத்திய, வேத கோஷம். கணீரென்று ' ஜெய ஜெய சங்கர' கோஷம் அதிர வைத்தது. தன் வழக்கமான வேக நடை. விறுவிறுவென்று நடந்த பெரியவா, கிளினிக்கைக் கடக்கப் போகும் முன் ஒரு கணம் பொசுக்கென்று நின்றார். கிளினிக்கைத் திரும்பிப் பார்த்தார். ஒரு சிஷ்யனிடம்.

'ஏண்டா, திருவள்ளூர் ராமசந்திர ஐயர் குடும்பம் சீனிவாச ஐயருக்கு இங்கே தானே கண் ஆபரேஷன். எப்படி இருக்கான் அவன்?"

கிளினிக்கில் இருந்து டாக்டர் பாலசுப்ரமணியன் மஹா பெரியவாளை நோக்கி வேகமாக நடந்து வந்தார். சாலை என்றும் பாராமல், அந்த ஜகத்குருவுக்கு சாஷ்டாங்கமாக ஒரு நமஸ்காரம் செய்தார். இதற்குள் கோபியும், கிளினிக் ஊழியர் ஒருவருமாகச் சேர்ந்து சீனிவாச ஐயரைக் கைத்தாங்கலாகக் கூட்டிக் கொண்டு வந்தனர்.

"என்ன, திருவள்ளூர் ராமசந்திர ஐயர் ஆத்து மாப்பிள்ளை, எப்படி இருக்கேள்?" என்று மஹா பெரியவா கணீரென்று கேட்டதும் தான் தாமதம் தன் இரு கைகளையும்

உயரே குவித்து, அந்த மஹானை ஆத்மார்த்தமாக வணங்கினார் சீனிவாச ஐயர்.

'என்ன டாக்டர்வாள் எப்படி இருக்கார்? பார்வை வந்துடுத்தோ?' என்று பெரியவா கேட்க

, 'அதான் பெரியவா உங்களுக்கு முன்னாடிதான் கண் கட்டை அவிழ்க்கணும்னு பிடிவாதமா இருக்கார். அவரோட கண்கட்டை அவிழ்த்த உடனே உங்களைத்தான் முதல்ல பார்க்கணுமாம்' என்று டாக்டர் சொல்ல சீனிவாச ஐயர் தலையாட்டி ஆமோதித்தார். பெரியவாளும் புன்னகையுடன் தலை அசைக்க கட்டைப் பிரித்தார் டாக்டர்.

வேத கோஷம் அவரது செவிகளை நிறைத்த வண்ணம் இருந்தது. எத்தனையோ வருடங்களுக்குப் பிறகு அந்தத் தெய்வத்தைத் தன் ஒரு கண்ணால் தரிசிக்கப் போகிறார். வலக் கண்ணில் கட்டு பிரிக்கப்பட்ட பிறகு சீனிவாச ஐயரைப் பார்த்து டாக்டர், " ஸ்ரீனிவாச அய்யர் , கண்ணை ரொம்பவும் ஸ்ட்ரெயின் பண்ணாம நேரா பாருங்க. எந்த தரிசனம் வேணும்னு தவிச்சீங்களோ, அந்த தரிசனம் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கு" என்றார்.

மிகவும் இயல்பாக வலக் கண்ணால் சீனிவாச ஐயர் நேர் பார்வை பார்க்கவும் அங்கே புன்னகையோடு அந்தப் பரப்ரம்மம்! முதல் பார்வை. முதல் தரிசனம் தர வேண்டும் என்பதற்காகவோ என்னவோ கலவையில் இருந்து இன்று புறப்பட்டு வந்திருக்கிறது! தன்னைத் தேடி வந்து இத்தகைய தரிசனம் தரும் மஹா பெரியவாளைக் கண்ணாரக் கண்ட மாத்திரத்தில் நெக்குருகிப் போனார் சீனிவாச ஐயர். 'குருதேவா. குருதேவா.' குரல் தழுதழுத்தார். இரண்டு கைகளையும் விரித்துக் காட்டிக் கதறுகிறார். கைகள் நடுங்குகின்றன. புன்னகைக்கிறார் பெரியவா.

''டாக்டர் அடுத்த கண்ணுக்கும் உடனே ஆபரேஷனை ஆரம்பிச்சுடுங்கோ" என்று சொல்லி விட்டு, மஹா பெரியவா வேகமாக நடந்தார். வேத கோஷத்துடன் அந்த கிளினிக்கையும் தெருவையும் கடந்து ஸ்ரீமடத்தை நோக்கிப் போனது பக்தர்கள் கூட்டம்.

அடுத்து சில வாரங்களில் சீனிவாச ஐயரது இடக் கண்ணுக்கும் ஆபரேஷன். சுமார் ஆறு மாதங்கள் சீனிவாச ஐயர் காஞ்சியிலேயே சிகிச்சையை எடுத்துக் கொண்டார். அவர் நண்பர் ஸ்ரீனிவாச அய்யங்கார் கூடவே இருந்து உதவினார்.

ஆரம்பத்தில் 'இந்த சின்ன டாக்டரால் ஆபரேஷன் செய்ய முடியுமா, பெரிய டாக்டர்களாலேயே முடியவில்லையே' என்று சந்தேகம். ஆனால், மஹா பெரியவாளின் கருணையாலும் பரிபூரண ஆசியாலும் அந்த சின்ன டாக்டர் செய்தது மகா சாதனை. இந்த ஆபரேஷனுக்கும் சிகிச்சைக்கும் ஒரு நயா பைசாகூட சீனிவாச ஐயரது குடும்பத்தினரிடம் இருந்து டாக்டர் வாங்கவில்லை. மஹா ஸ்வாமிகள் அனுப்பி வைத்த பேஷண்ட் ஆயிற்றே!

காஞ்சியில் தினமும் ஸ்ரீமடத்துச் சாப்பாடுதான். சீனிவாச ஐயரையும் சீனிவாச ஐயங்காரையும் சேர்த்துப் பார்க்கும்போது, "ஹரியும் சிவனும் சேர்ந்து வந்துட்டாப்ல இருக்கே" என்று நகைச்சுவையாகப் பேசுவாராம் பெரியவா.

இரண்டாவது கண் ஆபரேஷன் முடிந்து பார்வை வந்தது. பெரியவா ஸ்ரீகாமாட்சி அம்மன் கோயிலுக்கு அருகே இருக்கும் பழைய வீடு ஒன்றில் தங்கி இருந்தார். அங்கே மின்சார வசதி எல்லாம் கிடையாது. மாலையில் ஒரு ஹரிக்கேன் விளக்கு மட்டும். பெரியவா தரிசனத்துக்காக சீனிவாச ஐயர் வந்திருந்தார்.



''வா ஸ்ரீனிவாசா, இந்தா''. ஒரு சின்ன புத்தகத்தைக் கையில் கொடுத்தார் பெரியவா. '

'' எதுக்கு விஷ்ணு சஹஸ்ரநாம புத்தகத்தை என்கிட்டே கொடுத்திருக்கேள் பெரியவா?' பவ்யமாகக் கேட்டார் சீனிவாச ஐயர்.

'இந்த சந்நிதில இதைப் படியேன். நான் கேக்கறேன்' என்றார் பெரியவா.

சீனிவாச ஐயருக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை.

'விஷ்ணு சஹஸ்ரநாமம் சொல்றதே பாக்கியம். அதுவும் பெரியவா கேட்டு நான் சொல்லணும்னா அது எப்பேர்ப்பட்ட பாக்கியம்' என்று புளகாங்கிதம் அய்யருக்கு.

புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு பார்த்துப் பார்த்துப் படித்தார். ஏற்ற இறக்கத்துடன் அழகாக சீனிவாச ஐயர் சொல்வதை - பெரியவா உட்பட ஒட்டுமொத்த பக்தர்கள் கூட்டமே கேட்டு பரவசம் அடைந்தது.

சீனிவாச ஐயரின் விஷ்ணு சஹஸ்ரநாம பாராயணம் வெகு சிரத்தையாக முடிந்தது. நமஸ்கரித்த அவருக்குப் பிரசாதம் தந்து ஆசீர்வதித்தார் பெரியவா.

அருகில் இருப்பவர்களை பார்த்து 'இப்ப எதுக்கு அவனை விஷ்ணு சஹஸ்ரநாமம் இங்கே படிக்கச் சொன்னேன்னு தெரியுமோ?' என்று கேட்டார் பெரியவா.

"சீனிவாச ஐயரோட ரெண்டு கண்ணும் பூரணமா குணமாயிட்டதானு நான் தெரிஞ்சுக்க வேண்டாமா? அதுக்குத்தான் பொடிசா எழுத்து இருக்கிற விஷ்ணு சஹஸ்ரநாம பொஸ்தகத்தை அவன் கையில கொடுத்துப் படிக்கச் சொல்லிக் கேட்டேன். ஜமாய்ச்சுட்டான்" என்று சிரித்தாராம் மஹா பெரியவா.



# 60. சிவன் கோவில் எங்கே?

இந்துக்கள் முஸ்லிம்கள் எலியும் பூனையுமா? ஆமாம் என்றால் எப்போதுமா? எல்லோருமா? இல்லை என்று தான் பதில் வரும்.

ஒரு அருமையான முஸ்லிம் மகா பெரியவாளுடன் சம்பந்தப் பட்ட ஒரு சம்பவம் இது. சில வருஷங்களுக்கு முன்னால் கமலா இந்த்ரஜித் என்பவர் தினமணியில் எழுதிய ஒரு கட்டுரையை அடிப்படையாக கொண்ட பின்னல் இது. இதை தெரிந்து கொள்ள ஒரு நாள் விடிகாலை மாசி மாத குளிருக்குள் நாம் நுழைவோம். ஊதக் காற்று உடலை துளைத்தது. ஊசி மாதிரி உடம்பை துளைத்தது. சில்லென்று உதடு நடுங்கும் குளிர்.

அந்த சிறிய கிராமப் பாதையில் ஊர்வலம். யானை குதிரை, ஒட்டகம் நிறைய பக்தர்கள் நடுவே ஒரு ஆள் அமரும் சிறு பல்லக்கு (மேனா என்றும் சொல்வதுண்டு) அதற்குள் மஹா பெரியவா. ஜெய ஜெய சங்கர கோஷம் தான் அறிவிப்பு. பெரியவா உத்தரவுப் படி இந்த ஊர்வலம் எங்கே போகவேண்டுமோ அங்கே போய்க் கொண்டே இருக்கும். நிறுத்தினால் நிற்கும்.

ஆச்சு நிறைய ஊர்கள் தாண்டிஆச்சு. நாகங்குடி, சாத்தனூர், பழையனூர், கிளியனூர் என்று வெண்ணாற்று வடகரையில் மெதுவாக அந்த மேனா ஊர்வலம் தொடர்ந்தது. அடுத்து மாயனூர், ஹரிச்சந்திரபுரம், திட்டச்சேரி, தாண்டி, நத்தம் வந்த பொழுது பிள்ளையார் கோவில் முக்கில் அந்த ஊரின் பாதை Y மாதிரி பிளந்தது. எந்த பக்கம் போவது என்று ஒரு கன யோசனை, தயக்கம். மேனாவின் உள்ளே இருந்து 'டொக் டொக்' என்று தண்டத்தால் மேனாவின் பக்கப் பலகையைத் தட்டும் ஓசையால் பிரயானம் நின்றது.

''வலது பக்கம் பாதையில் போ'' --- பெரியவாளின் கை திசை காட்டியது. அவர்கள் பயணத் திட்டப்படி, இடது பக்கப் பாதையில் நெடுங்கரை வழியாக ஆத்தூரைக் கடந்து நாட்டியத்தான் குடிதானே செல்ல வேண்டும். என்ன இது திடீர் மாறுதல்? உத்தரவு வேறு விதமாக வருகிறதே? பக்தர் குழாம் ஒன்றும் புரியாமல் திகைத்தது.

“ஏன் நிப்பாட்டியாச்சு?' என்றார் வைத்தா.”

“இல்லே; பிளான்படி அந்தப்பக்கம்னா போகணும்” என்று இழுத்தார் மகாலிங்கம்.

“நீரும் நானும் யாருங்காணும் பிளான் பண்றத்துக்கு? இந்தப் பக்கம் போகச்சொல்லி உத்தரவாச்சுன்னா, கண்ண மூடிண்டு, போய்த்தான் ஆகணும். பெரியவாளுடைய ஒரு சின்ன அசைவுலையும் ஆயிரம் அர்த்தம் இருக்கும். காரண,

காரியத்தை கேட்டுக் கொண்டிருக்கப்படாது. உமக்கும் எனக்கும் என்ன தெரியும்? பின்னாடி தான் புரியும் எல்லாம்' என்றார் வைத்தா.

"இது எந்த ஊர் போற பாதை"?

"மண மங்கலம்!"

"உடனே உத்தரவு முன்னாலே போகும் கூட்டத்துக்கு சென்றது." இதோ பாருங்கோ, யானை, ஒட்டகம், குதிரை எல்லாத்தையும் வலது பக்கம் திருப்புங்கோ, பிரயாணம் இந்த மார்க்கமா போப்போறது!' வைத்தா குரல் கொடுத்ததும், இடது பக்கம் திரும்ப எத்தனித்த கூட்டம், வலது பக்கப் பாதையில் திரும்பிற்று.

சின்ன ஊர். நிசப்தமாக. ஒரு கோழிக்குஞ்சு கூட தலை காட்டலே அந்த அதிகாலைக் குளிரிலே. பலமாக யாரோ கட்டிப்போட்டமாதிரி வெட வெட வென்று நடுங்கிக்கொண்டு சகல உயிரினங்களும் சுகமாய் நித்ரையில். கொஞ்சம் நேரம் நழுவியது.

வழக்கம்போல விடியற்காலை எழுந்த வேம்பு அகல் விளக்குகள் இரண்டை ஏற்றி வாசல் பிறையில் ஒன்றையும், பக்கவாட்டில் இருந்த பெருமாள் கோவிலில் ஒன்றையும் வைத்தாள். வாளிக்குள் ஜலத்தில் கை வைத்து சாணம் கரைக்க முடியவில்லை. ஐஸ் கட்டி உருகினால் போல ஜில்லிப்பு; மார்கழி, தை, எல்லாம் முடிந்து மாசியும் பிறந்து விட்டது. ஆனால் பனியின் உக்கிரம் இன்னும் குறையவில்லை. கை வளையலை மேலே ஏற்றிவிட்டுக் கொண்டு, சாணத்தை நீரில் கரைத்து, வீட்டு வாசலில் 'ப்ளக்' ப்ளக்'என்று நாலு கை தெளித்தாள். பெருமாள் கோவில் வாசலில் ஜலம் தெளித்து, கட்டை விளக்கு மாற்றினால் மண்ணைக் கூட்டும் பொழுது தூரத்தில் என்ன சப்தம் புதுசா?

"என்ன என்று கூர்ந்து கவனித்தாள் இருட்டில் ஒன்றும் தெரியவில்லை." சரி விடு என்று பரக்கப் பரக்க நாலு இழை வீட்டு வாசலில் இழுத்து விட்டு ஒரு புள்ளிக் கோலம் டைமன் டைமனாக பெருமாள் பலிபீடத்தின் முன் கோலம் போட்டு, காவி எழுதி நிமிரும் போது தான் குதிரை, யானை, ஒட்டகம் ஜனங்கள் காலடி ஓசை எல்லாம் துல்லியமாய் கேட்டது.

"என்னவாய் இருக்கும்?"

கோல மாவு சம்புடத்தை மூடித் திண்ணைக் குறட்டில் வைத்துவிட்டு நிமிர்ந்த பொது கண்ணில் பட்டது. ஓஹோ யானை, ஒட்டகம், குதிரைகள், பல்லக்கு, என்று ஒவ்வொன்றாய் வர. விக்கித்துப் போய் திகைத்தாள் வேம்பு. பல்லக்கின் உள்ளிருந்து

தண்டத்தால் மீண்டும் 'டொக் டொக் 'தட்டல். மேனா நின்றது. இன்னொரு தரம் 'டொக் டொக்' அதன் அர்த்தமாக பல்லக்கு தரை இறங்கிற்று. மெல்லிய இரண்டு பாத கமலங்கள் வெளியே தெரிந்தது. வலது பாதத்தை முதலில் எடுத்த அழுந்த பூமியில் ஊன்றி, அடுத்து இடது பாதத்தைத் தூக்கி வைத்து காவி முக்காட்டை சரிபண்ணியபடி தண்டம் ஊன்றி அந்தத் மெல்லிய தெய்வம் எழுந்து நிற்கவும் வேம்புவிற்கு பாதாதிகேசம் சிலிர்ப்பு ஓடியது. உடம்பே கிடுகிடுத்து, கால்கள் துவண்டும் இற்று தொபு கடீர் என்று விழுந்துடுவேனோ? சிரமப்பட்டு ஒட்டு வீட்டின் வாசல் தூண் பிடித்து கீழிறங்கி "சர்வேசா' என்று கதறியபடி நமஸ்கரித்தாள்

கமல விரல்கள் "ஹஸ்தம்' போல் காட்டி ஆசி வழங்கியது. எழுந்து பின்னாலேயே நாலு தப்படி நடந்து வீட்டு வாயிற்கதவு தள்ளி, உள்ளே கூடம்தாண்டி, காமிரா உள்ளினுள் ஓடி, கணவனை எழுப்பினாள். கலவரத்துடன் அவன் எழுந்து

"என்னடி வேம்பு , என்ன என்ன?'

"யானை, குதிரை, தெய்வம்; பெரியவா.' என்று சொல்ல முடியாமல் தந்தி பாஷை பேசினாள் வேம்பு.

ஜன்னல் வழி வாசலில் எட்டிப் பார்த்த கணவன் மண்டைக்குள் அதிர்ச்சி. உடம்பு சிலிர்க்க ஓடிப்போய் கொல்லைக் கிணற்றில் நாலு வாளி இழுத்து தலையில் கொட்டிக் கொண்டு புதிது உடுத்தி, விபூதி தரித்து வருவதற்குள் வேம்பு நிறைகுடமும் பூரண கும்பமும், ஆரத்திதட்டும் தயார் செய்ய பாதபூஜை செய்து, கற்பூரம் ஏற்றி, ஆரத்தி எடுத்து நமஸ்காரம் பண்ணி பெரியவாளை உள்ளுக்கழைக்கவும், பொழுது லேசாய் விடியவும் சரியாய் இருந்தது.

அதற்குள் யானையின் பிளிறலும், குதிரைகளின் கனைப்பொலியும் தெருவையும், அந்த சின்ன கிராமத்தையும் எழுப்பிவிட்டு விட்டது. தீப்பிடித்தது போன்ற பரபரப்பு எங்கும். பெரியவா "திக் விஜயம்' செய்த செய்தி பரவ, ஜனங்கள் சாரி சாரியாய் வந்தனர்.

சுத்தமாய் அலம்பி விடப்பட்டு கோலத்துடன் காய்ந்திருந்த பெரிய திண்ணையில் நட்ட நடுநாயகமாக வெறுந்தரையில் அமர்ந்துவிட்டது வந்த "பரப்பிரம்மம்'.

பக்கத்துத் தூணில் தண்டம் சார்த்தப்பட்டிருந்தது. குளித்து, முழுகி ஈரத்தலையுடன் தெருமக்கள் பழத்தட்டு, பூக்குடலை ஏந்தி ஜோடி ஜோடியாய் வந்து தெண்டனிட்டார்கள். அப்போதெல்லாம் அவ்வளவு பக்தி பரவசம்.

யானை, ஒட்டகம், குதிரையெல்லாம் வெண்ணாற்றுப் பக்கம் ஓட்டிச் செல்லப் பட்டன. மடத்து குழாமிற்குத் தெரிந்து விட்டது. உடனடியாக இந்த இடத்தை

விட்டுப் புறப்படப் போவதில்லை என்று, அடுத்தடுத்த திண்ணைகளில் மறைவாய் அமர்ந்து சிரமப் பரிகாரம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்.

“என்ன, ஸ்ரீமடம் இந்தப் பாதையில் வரப்போறதா தகவலே சொல்லவில்லையே எப்படி?' என்றார் ஊர் முக்கியஸ்த்தர் வைத்தாவிடம்.

“நெடுங்கரை பக்கமா இடக் கையா திரும்பறதாத்தான் பிளான். பெரியவா திடீர்னு என்னவோ கையைக்காட்டி இந்தப் பக்கம் உள்ள வரச்சொல்லி உத்தரவு போட்டா. வந்துட்டோம். ஏதோ முக்கியமான காரணமிருக்கும்' என்றார் வைத்தி.

“ஏன் பெரியவா வாயத் தொறக்கவே மாட்டேங்கறா?'

“ரெண்டு நாளா “காஷ்ட்டிக மௌனம்” இப்போ உபவாசமோ, விரதமோ கிடையாது. நம்ம பேச்சுக்கு ஓர் அர்த்தம்னா, அவா மௌனம்கறது ஆழ்கடல் போல ஆயிரம் அர்த்தம் இருக்கும் அதுக்கு; எப்போவேணா திருவாய் மலரலாம்.”

“ஒரு வார்த்தை சொல்லி இருந்தா, ஊர் எல்லையிருந்தே மேளதாளம், பூரண கும்ப மரியாதையோட அழைச்சுட்டு வந்திருப்பமே!'

“அதான் சொன்னேனே, ஒன்னும் தெரியாதுன்னுட்டு. நாம என்ன செய்ய முடியும்? அவா திருவுளம் அப்படி, திடும்னு திரும்பியாச்சு, இப்படி!”

வைத்தாவும், மாலியும், சேஷூவும் அலுக்காமல் கிராமத்தார் சந்தேகத்திற்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தனர்; ஸ்னானம், பூஜை, சாப்பாடு என்று எல்லாம் நியமமாய் நடந்தேறியது. “பரப்பிரம்மம்' பசும்பாலும், உலர்திராட்சையும் மட்டும் ஏற்றுக் கொண்டது;

மற்றவர்களுக்கு அடுத்தடுத்த வீடுகளில் தலை வாழை இலையில் சாம்பார், ரசம், பொரியல், கூட்டு, பொரித்த அப்பளம், வடை, பாயசம் என்று அமர்க்களப்பட்டது. செய்தி கேள்விப்பட்டு உள்ளூரிலிருந்தும், பக்கத்து கிராமங்களிலிருந்தும் சாரிசாரியாக மக்கள் வந்த வண்ணமிருந்தனர். மாசி மாத அறுவடை மும்முரமாய் நடந்து கொண்டிருந்த நேரம். களத்திலிருந்தபடியே மிராசுகளும், விவசாயிகளும், தொழிலாளர்களும் வந்தனர். ஒரு பாட்டி மடியில் கட்டி வந்த தின கூலி நெல்லை சுவாமியின் முன் சமர்ப்பித்து தெண்டனிட்டாள். இளநீரும், வாழைத்தாரும், வெள்ளரிப் பிஞ்சும், நார்த்தங்காயும், எலுமிச்சம் பழங்களும், தாமரைப் பூவுமாய் மக்கள் கொண்டு வந்த காணிக்கைகளால் திண்ணை நிறைந்துவிட்டதா, மறைந்து விட்டதா?

“பெரியவா எங்க வீட்டு பாகப்பிரிவினைல சிக்கல், சரி பண்ணணும்?

பொண்ணுக்கு கல்யாணம் திகையலை; அனுக்கிரகம் பண்ணணும்!'

புது வீடு கட்ட ஆரம்பிச்சு மனைபோட்டதோட அப்படியே நிக்கறது. மேக்கொண்டு ஒரு செங்கல் வைச்சு கட்டலை, கட்டிமுடிக்க பெரியவா அனுக்கிரஹிக்கனும்.

வடக்கே இந்து முஸ்லிம் கலவரம் சதா நடந்திண்டிருக்கு; ஓயரதே இல்லை; ரத்த வெள்ளம்தான்; அமைதியே இல்லை. அமைதி உண்டாக பெரயவா தான் மனசு வைக்கணும்.

நம்ம ஊர்லயே மதமாற்றம் நிறைய நடக்க ஆரம்பிச்சாச்சு. சிலுவைக்கு பாதி, மசூதிக்கு பாதின்னு நிறைய மனுஷா மாறிண்டிருக்கா, தடுத்து நிப்பாட்டணும் ஏதாவது வழி உண்டா?

ஊர் மக்கள் பல ரக பல வித பிரச்னைகளை அவர் முன் கொட்டித் தீர்த்தார்கள்.

வீட்டு பிரச்சனையிலிருந்து, ஊர் பிரச்சனை, சமூகப் பிரச்னை, தேசப் பிரச்னை வரை வகை வகையாக ஆதங்கம் புழுக்கத்தாலும், வேண்டுதலாலும், பேராசையாலும், தியாகத்தாலும், பல வித உணர்ச்சி கூட்டத்தில் திண்ணையே இறுக்கமாய் இருந்தது.

சாது பிரம்மம் வாய் பேசாமல் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டது மௌனமாய். விருப்பப்பட்டால் ஒரு பூவோ, ஒரு துளசி விள்ளலோ, ஒரு எலுமிச்சை பழத்தையோ எடுத்துக் கொடுத்தது. சிலருக்கு அதுவும் கிடையாது. ஆனால் யாருக்கும் ஒரு வார்த்தை பதில் இல்லை. சைகை செய்து மாலியை கூப்பிட்டார். லிங்க வடிவில் அபினயம் செய்து கோபுர வடிவில் கைகளை உயர்த்தி எங்கே? என்று வலது கை மடித்துக் கேட்டார்.

மற்றவர்கள் ஒன்றும் புரியாமல் மௌனமாய் நின்றனர். மாலி கற்பூரமாய் புரிந்து கொண்டு கூட்டத்தைப் பார்த்து கேட்டார்.

“இந்த ஊரில் சிவன் கோவில் எங்க இருக்கு?'

கூட்டம் விழித்தது;

ஒருவருக்கும் தெரியவில்லை, “இந்தூர்ல ஒரு அய்யனார் கோயில், ஒரு மாரியம்மன் கோயில், ஒரு பெருமாள் கோயில், நத்தம் எல்லையில் ஒரு பிள்ளையார் கோயில் அவ்வளவு தான். சிவன் கோயில் இல்லையே?' என்றார் தொண்ணூறு வயது ரெங்கண்ணா. அவருக்கே தெரியவில்லை என்றால் இங்கே வேறு யாருக்கும் தெரியாது.

பரப்பிரம்மம் மீண்டும் ஏதோ சைகை செய்தது. "இல்லையே' சிவன் கோயில் இருந்திருக்கு நிச்சயமா. தெருவின் மேல் கோடீல பெருமாள் கோவில் இருந்தா கீழ்க்கோடீல கண்டிப்பா சிவன் கோவில் இருந்திருக்கணுமே! இருந்தது! கண்டிப்பா இருந்திருக்கு?

பதில் சொல்லத் தெரியாமல் கூட்டம் விழித்தது. குழப்பமான மௌனம் நிலவியது அங்கே. சிவன் கோவில் எங்கே, எப்பொழுது இருந்தது இப்பொழுது எங்கே எப்படி? என்று யோசித்துக் கொண்டிருக்கும்பொழுதுதான். லத்திப் பாயும், அவர் மனைவி மெகருன்னிசாவும் வந்தனர்.

கொண்டு வந்திருந்த பேயன் பழம் இரண்டு சீப்பையும், கொழுந்து வெற்றிலை ஒரு கவுளியையும் அப்பொழுது தான் பறித்த இரண்டு ரோஜாப் பூக்களையும் சுவாமி முன் வைத்து வந்தனம் செய்தனர்.

தாமரைக் கண்கள், அவர்கள் இருவரையும் பாதாதி கேசம் உற்றுப் பார்த்தது; ஊடுருவிப் பார்த்தது. ஆசிர்வதித்தது; குளிரப் பண்ணிற்று.

லத்திப்பும் அவர் மனைவியும் மெய்மறந்து நின்றனர். பின்னர் ஒருவாறு சுதாரித்து, திக்கித்திணறி அந்த முஸ்லிம் பாய் கோர்வையற்று சொல்லிய விஷயத்தின் சாராம்சம் இதுதான்.

"நேற்று கொல்லைப்புறம் செத்தை குப்பையெல்லாம் அகற்றி தரையைக் கொத்திய பொழுது மண்வெட்டியில் ஏதோ தட்டுப்படடது.

கடப்பாறையைக் கொண்டு ஆழத்தோண்டி பார்த்தபொழுது பெரிய சிவலிங்கம் ஒன்று தட்டுப்பட்டது.

அடுத்தடுத்து தளவரிசை, படிந்து போன கருங்கற் தூண்கள், பின்னால் பாழடைந்த கிணறு என்று ஒவ்வொன்றாய்த் தட்டுப்பட்டது;

எனக்கு இரவு முழுவதும் தூக்கம் வரவில்லை, ஒரே கலக்கமாகவும், கலவரமாகவும் இருந்தது. என்ன செய்றது அல்லாவே!ன்னு ராத்திரி முழுக்க விசனப்பட்டு உட்கார்ந்திருந்த போதுதான் பெரியவர் நம்ம ஊருக்கு வந்திருக்கும் செய்தி கிடைச்சுது. இதற்குமேல் கொண்டு என்ன செய்ய வேண்டும்'' தாங்கள் தான் கூற வேண்டும்.'

லத்திஃப் சொல்லச் சொல்லக் கூட்டம் மெய்மறந்து உட்கார்ந்திருந்தது.

பல நூற்றாண்டுகளுக்கு முன் சிவன் கோயில் அங்கு இருந்திருக்கிறது. காலப்போக்கில் கவனிப்பாரில்லாது சிதிலமாகி மண்ணுக்குள் புதைந்து மறைந்து விட்டது.



நில ஆக்கிரமிப்பால் அடைக்கப்பட்டு, பல கைகள் மாறி, கடைசியில் லத்திப் பாய் கைக்கு வந்து இன்று சிவலிங்கம் வெளிச்சத்திற்கு வந்திருக்கிறது.

“எங்க வாப்பா பள்ளிவாசல் நிலங்களை சாகுபடி செய்யும்பொழுது கூடவே கோவில் நிலங்களையும் குத்தகைக்கு எடுத்து சாகுபடி செய்தாக; நெல் அளக்கும் போது ஒரு மரக்கால் கூட குறையாம அளப்பாக. சிவ சொத்து குல நாசம்ன்னு சொல்லி அல்லா சாட்சியா அத்தனை நேர்மையா அளப்பாக. எனக்கும் அதே தர்ம புத்தி நியாய புத்தி உண்டு; அப்படியும் பொறந்த ஒத்த பொம்பள புள்ளையும் மனவளர்ச்சி இல்லாம இருந்து பத்து வருஷத்துக்கு முன்ன செத்து போச்சி. அறியாம செய்த பாவத்துக்கே அந்த கூலி; தெரிஞ்சும் பாவம் செய்ய மனம் ஒப்பலை. மனசார பத்திரம் எழுதித் தர்ரேன் எனக்கு பதிலுக்கு ஒரு பைசா வேண்டாம். சுயநினைவோட, சுத்த மனசோட தர்ரேன்; பழையபடி அங்க சிவன் கோவில் கட்டிக்குங்க. ஊர் ஜனத்துக்கு பயன்பட்டா அதவே அல்லாவை சந்தோஷப்படுத்தும். இந்தாங்க கோவில் கட்ட எங்களால் ஆன பணம் 101. இதை முதல் வரவா வச்சிகிங்க!' என்று வெற்றிலை பாக்கு தட்டில் வைத்து அவர் கொடுத்த பொழுது கூட்டத்தில் எல்லோருக்கும் உடம்பு சிலிர்த்தது.

இரு உதடுகளையும் அழுந்த மூடிக் கொண்டிருந்த ஞானி, அடுத்து சைகையால் கேட்டதை அவரது அணுக்க தொண்டராலும் விளக்கிக் கொள்ள இயலவில்லை. படிக்கும் பையன்களிடமிருந்து ஸ்லேட்டும், குச்சியும் தருவிக்கப்பட்டு பெரியவாளிடம் கொடுக்கப்பட்டது.

"மார்க்கக் கடமையை முடித்துவிட்டீர்களா?' என்று எழுதிக் கொடுத்ததை கூட்டத்திடம் காட்டினார் வைத்தா. அவர்கள் மலங்க விழித்தனர். பின்பு ஸ்லேட் லத்தீஃப் தம்பதியை நோக்கித் திரும்பியது.

"இன்னும் இல்லை; பாவியாகத்தான் இருக்கோம். அதுக்குண்டான வசதியை இன்னும் அல்லா எங்களுக்குக் கொடுக்கலை. பல வருஷமா எத்தனையோ முயற்சி பண்ணியும், மெக்காமதீனா போறதுக்கு காசு இல்லே. இன்னைக்கு வரைக்கும் கனவாத்தான் இருக்கு!' இதைச் சொல்லும் போது லத்தீஃப்பாய் மனைவியின் குரல் தழுதழுத்தது. பெரியவா வைத்தாவைப் பார்த்தார். பார்வையின் பொருள் புரிந்த வைத்தா கூட்டத்தைப் பார்த்து,

"இந்த உயர்ந்த மனிதர்களிடமிருந்து கோயில் கட்ட இடத்தை இனாமா வாங்கிக்கறேளே? பிறதியா, நாம ஒண்ணும் செய்யவாண்டாமா அவாளுக்கு?'

பரபரவென்று ஊர் ஜனங்கள் யோசித்து, சடாரென்று முடிவு செய்து, "அவங்க மெக்கா மதீனா புனிதப் பயணம் போய் வர்ர செலவு அத்தனையும் எங்களோடுது?'

ஏகமனதாய் கூட்டம் சொல்ல திண்ணையில் அமிர்தம் நிறைந்து வழிந்தோடியது,

லத்தீஃப் தம்பதி நெஞ்சில் கைவைத்து சிரம் தாழ்த்தி நன்றி நவின்றனர். கண்களில் நீர் வழிந்தது.

ஞானி தாமரைக்கண்களால் எல்லோரையும் ஆசிர்வதித்தார். கூட்டம் மெய் மறந்து விழுந்து வணங்கிற்று. அபயஹஸ்தம் காட்டி ஆசிர்வதித்த மகான் எழுந்தார். தண்டத்தை எடுத்துக் கொண்டார். பல்லக்கு அருகில் வர ஏறிக் கொண்டார். யானை, ஒட்டகமெல்லாம் தொடர்ந்து வர பயணம் மீண்டும் ஒரிஜினல் ப்ளான் படி திருநாட்டியத்தான்குடி நோக்கிப் புறப்பட்டது.

"என்னங்காணும், புரிஞ்சுதா உமக்கு ஏன் இந்தப் பக்கம் பிரயாணம் திரும்பித்துன்னு?' என்று வைத்தா பார்வையால் கேட்க,

"உணர்ந்தேன்! தெரிந்தேன்!' என்று மகாலிங்கம் கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

"ஜெய ஜெய சங்கரா, ஹர ஹர சங்கரா.' என்று ஜெய கோஷத்தடன் பயணம் புனிதமாய் தொடர ஆரம்பித்தது.



# 61. பெரியவாளுக்கு காணிக்கை

பெரியவா பற்றி எங்கிருந்தோ யார் யாரோ அருமையாக செய்தி அளித்திருக்கிறார்கள் என்று சொன்னேனே. கார்த்திகேயன் ராமச்சந்திரன் என்பவர் தனக்கு கிடைத்த ஒரு செய்தியை அளித்தது எனக்கு மகிழ்சியை அளித்ததால் அதை என் வழியில் சொல்லி உங்களையும் அந்த மகிழ்ச்சியில் பங்கு கொள்ள இந்த முயற்சி:

துரதிர்ஷ்ட வசமாக நமது தேசத்தில் வெகு காலம் நம்மில் பலரை தீண்டத்தகாதவன், தாழ்ந்த வகுப்பு என்று பிரித்து கேவலப் படுத்தி அவர்களுக்கு சம உரிமை அளிக்காமல் பல நூறு ஆண்டுகள் அவர்கள் சொல்லொணா துயரில் வாழ்ந்த காலம் தொடர்ந்து வந்த சமயத்தில் இது நடந்தது.

அந்த ஏழைப் பையன் ஊருக்கு ஒதுக்குப் புற பகுதியில் வாழ்ந்த பல குடும்பங்களில் ஒருவன். தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்த அவன் அங்கே ஏதோ ஒரு ஆரம்ப பள்ளியில் ஐந்தாவது படித்துவந்தான். அவன் இருந்த இடம் தான் உயர்ந்தது. காஞ்சிபுரம். மகாபெரியவா வாழ்ந்த காலம். அடிக்கடி 'அந்த பக்கமாக போகும்போதெல்லாம் ஸ்ரீ மடத்தை அண்ணாந்து பார்ப்பான். மஹா பெரியவா பற்றி நிறைய விஷயம் கேட்டிருந்தான். வயது பன்னிரண்டு அல்லது பதின்மூன்று இருக்கலாம்.

மார்ச் மாதம் பரிக்ஷைக் காலம் அல்லவா. அவன் உள்ளூர பயத்தில் இருந்தான். பரிக்ஷை நாள் வந்தது. மனதில் ஒரு எண்ணம். நாமும் பெரியவாளைப் பார்த்து பரிக்ஷை எழுதுவதற்கு முன்னாள் ஆசீர்வாதம் வாங்கி கொண்டால்? குளித்தான். உலர்ந்த சட்டை காகி நிஜார் போட்டுக்கொண்டு நெற்றியில் பட்டையாக விபூதி பூசிக் கொண்டான். மடத்துக்கு நடந்தான்.

'சாமிய வெறுங்கையோட பாக்க மாட்டாங்களே, நாம என்னத்தை கொண்டு போறது? '' இந்த கேள்வி அவனை வாட்டியது. யோசித்தான். கையிலோ காசில்லை. நிறைய பழம் எதுவும் வாங்க வழியில்லை. கடைசியில், 'இதுதான்' என்று தீர்மானித்தான்.

பையன் மாநிறம். எண்ணெய் அதிகம் கண்டிராத தலை. தடிமனான அரை டிராயர்; கசங்கிப் போன மேல்சட்டை. மேல் சட்டை சோப்பு பார்க்காமல் நிறமே மாறி இருந்தது. நெற்றி நிறைய முறையே இல்லாமல் ஏனோதானோ என்று விபூதி அப்பிக்கொண்டிருந்தான். ஒருவேளை இங்கு கிளம்பி வருகிற அவசரத்தில் அவன் அம்மா இட்டு விட்டாளோ?

அந்த கிராமத்தில் தெருக்கோடி அரசமர பிள்ளையாருக்கு பரிக்ஷை காலத்தில் எப்பவுமே டிமாண்ட் ஜாஸ்தி. தேங்காய் பழம் பூ வெத்திலை உண்டியலில்

சில்லறை அடிக்கடி கிடைத்தது. கற்பூரம் சதா எரிந்து கொண்டே இருந்தது. விளக்கிலும் எண்ணெய் நிரம்பி இருந்தது. எல்லா மாணவர்களுமே பேனா பென்சில் அந்த குட்டி பிள்ளையார் பாதத்தில் வைத்து "பிள்ளையாரப்பா, நான் நன்றாக பரிக்ஷை எழுதி நிறைய மார்க் வாங்கவேண்டும், பாஸ் ஆகவேண்டும்" என்று மனதார வேண்டி அவரையும் அரசமரத்தையும் சுற்றி விட்டு தோப்புக்கரணம் போட்டுவிட்டுத்தான் பரீட்சை எழுத பள்ளிக்குப் போவார்கள். இது ஒரு விதமான நம்பிக்கை. அதாவது, இறைவன் அருளோடு தேர்வு எழுதப் போகிறோம் என்கிற ஒரு தைரியம் மாணவர்களுக்கு வரும். அதுபோல் இந்தச் சிறுவன் காஞ்சிபுரத்தில் வசிப்பவன் என்பதாலும், மகா பெரியவாளின் சாந்நித்தியம் பற்றி யாரோ சொல்ல அவன் தகுதிக்கு ஏதோ கேள்விப்பட்டிருந்ததாலும், இன்று தேர்வு எழுதப் போகும் முன் ஸ்ரீமடத்துக்கே வந்துவிட்டான்.

காஞ்சி மடத்தில் அன்று விடிகாலை நேரத்தில் விஸ்வரூப தரிசனம் காண வந்திருந்த பக்தர்கள் பலரும், இன்னமும் நகராமல் அங்கேயே நின்றிருந்தபடி பெரியவா தரிசனத்தில் திளைத்திருந்தார்கள். எங்கிருந்தோ எல்லாம் வந்திருந்த ஏராளமான பக்தர்கள் வேறு ஸ்ரீமடத்தில் குவிந்திருந்தார்கள். நாம பஜனைகளும் சங்கர கோஷமுமாக ஸ்ரீமடமே பக்தி மணத்தில் மிதந்தது.

இவ்வளவு கூட்டம் பெரியவா தரிசனத்துக்காகக் காத்து நின்றாலும், நமது சிறுவன், வரிசையில் நின்று கொண்டிருக்கும் எந்த ஒரு பக்தரைப் பற்றியும் கவலைப்படாமல், ராஜபாட்டைபோல் விறுவிறுவென்று நடந்து மகா பெரியவாளின் சந்நிதியை நெருங்கினான்.

முகத்தில் உற்சாகம் கொப்பளிக்க, பெரியவாளைப் பார்த்தபடியே நின்றான். ஆச்சர்யமாக பார்த்த எவரும் அவனைத் தடுக்கவில்லை. ஏதும் கேள்வி கேட்கவில்லை. காரணம், அந்தச் சிறுவனின் ஆர்வத்தையும் பரபரப்பையும் பார்த்த பின், இயல்பான அந்த பக்திக்குத் தடை போட எவருக்கும் விருப்பமில்லை.

'மடத்துக்குப் போய் சாமியைக் கும்பிடணும்னா அவருக்குத் தோதா எதாவது எடுத்துட்டுப் போகணும்' என்று தோன்றியதால் யார் சொல்லிக் கொடுத்தார்களோ. தெரியவில்லை. தன் கையில் தொடுத்த ஒரு மாலையை வைத்திருந்தான். அந்த மாலையைப் பார்த்த பல பக்தர்களுக்கு வெவ்வேறு விதமான உணர்ச்சிகள். சிலர் வியக்க, சிலர் கேலியாக ரசிக்க, சிலருக்கு வெறுப்பு, கோபமும் கூட. காரணம்?

அது துளசி மாலை!

அடர்த்தியாக, கொத்துக் கொத்தாக வைத்துக் கட்டப்பட்ட மாலை அல்ல. தனித் தனி துளசி இலைகளைக் கோணாமானா என்று, ஒரு முறை இல்லாமல் கோர்த்துத் தொடுக்கப்பட்டிருந்த மாலை. துளசி இலைகளை நெருக்கமாக வைத்துத் தொடுத்திருந்தால், அதில் இடைவெளி என்பதே தெரியாமல் போயிருக்கும். ஆனால்,

இந்தச் சிறுவன் தொடுத்துக் கொண்டு வந்திருந்த துளசி மாலையில் இடைவெளி அதிகம். பார்த்தவுடன் 'மாலை' என்றே சொல்வதற்கு வாய் வராது. இன்னொரு அலங்கோலம். வழிபாட்டுக்குக் கொண்டுசெல்கிற துளசியைப் பெரும்பாலும் வாழைநாரில்தான் கட்டுவார்கள். ஆனால், இந்தச் சிறுவன் ஒரு சணலில் இந்த 'மாலை'யைக் கட்டி எடுத்து வந்திருந்தான் (வீட்டில் ஏதாவது பொருளைக் கட்டி வைத்திருந்த மூட்டையில் இருந்த சணலை மட்டும் பிரித்து எடுத்திருப்பானோ?) இதனால் மற்றவர்களின் வித வித உணர்ச்சிகள்.

ஆனால், பக்குவப்பட்ட சிலர், 'இந்த வயதில் இந்த பயலுக்கு இவ்வளவு பெரியவாளிடம் ஒரு பக்தி இருக்கிறதே. வெறுங்கையோடு வரக் கூடாது என்கிற நாசூக்கு தெரிந்திருக்கிறதே' என்று நெகிழ்ந்தார்கள்.

பெரியவாளின் திருப்பார்வை அவன் மேல் விழுந்தது. ஒரு புன்னகை உதட்டோரம் தவழ்ந்தது. 'அருகில் வா' என்று அவனுக்கு ஜாடை காட்டினார்.

விறுவிறுவென்று நடந்து முன்னுக்கு வந்தான்.

'என்ன?' --ஆச்சரியமான முகத்துடன் தலையை மேலும் கீழும் அசைத்து ரசனையாகக் கேட்டது அந்தப் பரப்பிரம்மம்.

சிறுவன் சந்தோஷமானான். தனக்கு உரிய அங்கீகாரம் இந்த சந்நிதானத்தில் கிடைத்துவிட்டது என்பதாக மகிழ்ந்தான். கையில் துளசி மாலையோடு பெரியவாளை இன்னும் நெருங்கி, அவரின் திருவடி அருகே அதைச் சமர்ப்பித்தான். பெரியவாளின் கைங்கர்யப் பணிக்காக அங்கே இருந்த சீடர் ஒருவர் அந்தத் துளசி மாலையை அங்கிருந்து எடுத்து, வேறு இடத்தில் சேர்ப்பிப்பதற்காகக் குனிந்தார்.

சற்றே நிமிர்ந்து அந்த சீடரைப் பார்த்த பெரியவா, 'வேண்டாம்' என்பதுபோல் வலது ஆட்காட்டி விரலை இடப் புறமும் வலப் புறமும் அசைத்து சமிக்ஞை செய்தார். சீடனையும் தள்ளி நிற்கச் சொன்னார். அந்தத் துளசி மாலை அங்கிருந்து எடுக்கப்படுவதைப் பெரியவா விரும்பவில்லை என்பதைப் புரிந்துகொண்ட சீடன், நின்ற வாக்கிலேயே அப்படியே ரிவர்ஸில் நகர்ந்துகொண்டான்.

"எக்ஸாம் இன்னிக்கு இருக்கோ?" _ சிறுவனைப் பார்த்து பெரியவா கேட்டார்.

இவ்வளவு பேர் கூடி இருக்கும் இடத்தில் தன்னைப் பார்த்து, பெரியவா ஒரு கேள்வி கேட்கிறார் என்பது அந்தச் சிறுவனின் முகத்தில் ஏராளமான சந்தோஷத்தைக் கொடுத்திருந்தது. தவிர, தனக்குத் தேர்வு இருப்பதைப் பெரியவா எப்படிக் கண்டுபிடித்தார் என்கிற ஆச்சரியமும் அவன் முகத்தில். பிரகாசமானவன்,

"ஆமா சாமீ. இன்னிக்கு சயின்ஸ்" என்று கூடுதல் தகவலையும் சொன்னான்.

"தொளசி மாலையை எனக்காகக் கொண்டுவந்தியோ?"




அந்த மாலையைக் கையில் எடுத்தார். இப்படியும் அப்படியும் அதை ஆராய்ந்தார். தான் காணிக்கையாக எடுத்து வந்திருந்த மாலையைப் பெரியவா தன் கையால் எடுத்துவிட்டார் என்பதைப் பார்த்த மாத்திரத்திலேயே அவனுக்குப் பெருமிதம் பிடிபடவில்லை.

“ஆமா சாமீ. எங்க வீட்டுலயே துளசிச் செடி இருக்கு. அதுலேர்ந்து நானே பறிச்சுக் கட்டினேன்.”

அந்தப் பரப்பிரம்மம் அவனைப் பார்த்துச் சிரித்தது. கூடி இருந்த திரளான பக்தர்களும் பெரியவாளின் இந்தச் செயல்களால் நெகிழ்ந்து போனார்கள். அடுத்து பெரியவா என்ன செய்யப் போகிறார் என்பதைக் கவனிப்பதில் ஆர்வமானார்கள். ஒரு க்ஷண நேரத்தில் இந்தச் சிறுவன், பெரியவாளின் கவனத்தை இப்படிக் கவர்ந்துவிடுவான் என்று அங்கிருந்த எவரும் எதிர்பார்க்கவில்லை. சிறுவன் மேல் பெரியவா செலுத்துகிற கரிசனத்தைக் கண்டு, சீடர்களும் மடத்துச் சிப்பந்திகளும்கூட அதிசயப்பட்டுப் போனார்கள்.

அந்தத் துளசி மாலையைத் தன் கையில் எடுத்துக்கொண்டார். வலக் கரத்தால் அந்த மாலையை எடுத்துத் தன் தலைக்கு மேல் வைத்தார். என்ன புண்ணியம் செய்ததோ அந்தத் துளசி மாலை! பெரியவாளின் தலையில் வாகாக அமர்ந்துகொண்டது. துளசி மாலை பெரியவா சிரசில் அப்படியே நின்றது. சுற்றிலும் நின்றிருந்த தன் பக்தர்களை இப்படியும் அப்படியும் திரும்பிப் பார்த்தார் பெரியவா. எல்லாப் பக்கமும் திரும்பிப் பார்க்கிற வேளையில் அவர் முகத்தில் ஒரு புன்னகை ததும்பியது. ‘இந்தக் கோலத்தில நான் எப்படி இருக்கேன்? இந்த மாலை நன்னா இருக்கா?’ என்று பெரியவா கேட்பதாக எல்லோருக்கும் பட்டது.

பெரியவாளுக்கு சமர்ப்பிக்க வேண்டி பக்தர்கள் வாங்கி வந்திருந்த எத்தனையோ மலர் மாலைகள் அவருக்கு முன்னால் சற்றும் மணம் குறையாமல் _ மலைபோல் குவிந்திருந்தன. ரோஜா, மல்லிகை, சம்பங்கி என விதம் விதமான மலர்களைக் கொண்டு மிகவும் நேர்த்தியாகத் தொடுக்கப்பட்டிருந்த மாலைகள் அவை. ஆனால், அனைத்தையும் விட்டுவிட்டு, ஒரு ஒழுங்குமுறையே இல்லாத ஒரு மாலைக்கு உண்டான எந்த விதமான இலக்கணமும் இல்லாத சாதாரண சிறுவன் கொண்டு வந்த துளசி மாலை ஏனோ பெரியவாளுக்குப் பிடித்துவிட்டது. அதில் இருந்த அன்புதான் காரணம் போலிருக்கிறது. தானே அதை சுவீகரித்துக்கொண்டார்.

எத்தனையோ மலர்மாலைகள் இருந்தாலும் அன்பின் மிகுதியால், ஆர்வத்தின் வெளிப்பாட்டால் தொடுத்துக் கொண்டுவரப்பட்ட இந்தத் துளசி மாலை என் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டது'' - என்பதை உணர்த்துகிறாரோ?

பக்தி என்றால் என்ன என்பதைப் பற்றிப் பெரிதும் அறிந்திராத அந்தச் சிறுவன் இந்த சந்நிதானத்தில் நான் அன்புடன் எடுத்து வந்திருக்கும் ஒரு துளசி மாலைக்கு இவ்வளவு மரியாதையா என்று ஆச்சர்யபட்டான்.

அவன் விழிகளில் லேசாக ஈரம். சரேலென்று தரையில் விழுந்து பெரியவாளை நமஸ்கரித்தான். எழுந்து நின்றான். சுமார் பத்து நிமிடங்கள் கழித்துதான் அந்தத் துளசி மாலையைத் தன் தலையில் இருந்து எடுத்துக் கீழே வைத்தார் பெரியவா. புன்னகை அரும்ப அந்தச் சிறுவனை ஆசிர்வதித்தார். கல்கண்டும் குங்குமமும் கொடுத்தார்.

தன் தலையில் வைத்திருந்த மாலையை அருட் பிரசாதமாக அவனிடமே கொடுத்தார். அதன் அருமை தெரிந்தோ, தெரியாமலோ பயபக்தியுடன் வாங்கிக்கொண்டான். எந்த ஒரு மாலையைப் பார்த்துப் பரிகசித்துத் தங்களுக்குள் விமர்சித்துக் கொண்டார்களோ, அந்த பக்தர்கள் இப்போது நெகிழ்ந்து போனார்கள். அவர்களின் பரிகசிப்புக்கு உள்ளான மாலை, இப்போது புனிதம் பெற்றுவிட்டது.

மாலையைப் பெற்றுக்கொண்டு வெளியேறும் அந்தச் சிறுவனிடம் இருந்து,

“குழந்தே. அதில் இருந்து ரெண்டு தொளசி தளங்களைப் பிய்ச்சு எங்கிட்ட தாயேன். அது பெரியவா பிரசாதம்” என்று கெஞ்சும் குரலில் கேட்டனர்.

அப்படிக் கேட்டவர்களுக்கெல்லாம் துளசி இலைகளைப் பிய்த்துக் கொடுத்துவிட்டு, “எக்ஸாமுக்கு டயமாச்சு. ஸ்கூல்ல பெல் அடிச்சுடுவாங்க” என்று சொல்லி, மிச்சம் மீதி துளசியுடன் விட்டான் ஒரே ஓட்டம்.! இன்று சயின்ஸ் தேர்வு. அவன் பெரியவாளின் தேர்வில் நிறையவே புண்ணிய மார்க் வாங்கிவிட்டானே.



# 62. மத்யம அவதி

மஹா பெரியவா என்று சொல்லும்போதே மனதில் அதை தொடர்ந்து எழும் மற்றொரு பிரிக்க முடியாத பெயர் ஸ்ரீ ரா. கணபதி. அவரது தெய்வத்தின் குரல் படிக்காதவர்கள் தெரியாதவர்கள் பெரியவாளைத் தெரியாத தமிழர்கள் என்று மட்டும் சொல்ல முடியாது. ஏனென்றால் அவர் எழுதியதை பல மொழிகளிலும் கொண்டு வந்திருக்கிறார்கள், வருகிறார்கள்.

இந்த அனுபவம் அவற்றில் ஒன்று. ரா. கணபதி தான் பார்த்த ஒரு நிகழ்ச்சியை எழுதியதை என் வழியில் சுருக்கி தருகிறேன் - வழக்கம்போலவே.

' ஸ்ரீ பெரியவா, காட்டுப்பள்ளியில் 1965 ம் வருஷத்துக்கு முன், சந்தவேளூர் என்ற ஊரை, சிவலோகமாக்கினார். அந்த ஊரில் தான் பெரியவா காலடி பட்டு விட்டதே பிறகு அது சிவலோகம் தானே. அவ்வருஷ சிவராத்ரி அங்கேயே. நான் அங்கே இருந்தேன்,.

பிற்பகல் நாலு மணி போல. பொக்கையும் போரையுமான படிக்கட்டுகளும், பாசியும் பசலையுமான தண்ணீரும் கொண்ட அந்த ஊர் குளக்கரையில் மஹா பெரியவா அமர்ந்திருந்தார். விந்தையாக கழுத்தில் மலர் மாலை அணிந்திருந்தார்.சன்யாசிகள் மாலை அணியலாமா அன்று ஒரு வாதமே எழுந்ததுண்டு. ஆனால் பெரியவா மாலை அணியும் முறையை புரிந்து கொண்டு பார்த்தால் அதை தனக்கு அலங்காரமாக அவர் தரிக்கவேயில்லை என்று தெரியும். மாலையை அவர் கழுத்தில் போட்டுக் கொள்ளாமல் சிரசிலேயே வைத்து கொள்வது வழக்கம். சிரசில் குருமூர்த்தியான அம்பிகையின் பாதம் இருப்பதாக சாஸ்திரம். பெரியவாளுக்கோ அந்தசாஸ்திரம் அனுபவமே! அதனால் குரு அஞ்சலியாக அம்பாள் சரணத்திற்கு அலங்காரமாகத்தான் அவர் "அலங்கல் அணிந்தருள்வது" அப்புறம் அது நழுவி கழுத்தில் விழும்போது அவளது பிரசாதமேயன்றி சுய அலங்காரமல்ல. அப்படி கழுத்தில் சரிந்ததை உடனே களைந்து விடுவதே அவரது பொது வழக்கம்.

வழக்கத்திற்கு மாறாக மாலையும் கழுத்துமாகவே மனோஹர தரிசனம் அளித்தார். இளைஞரொருவர் அவரது முன்பாக பாடிக்கொண்டிருந்தார். நான் செய்த பாக்கியம் பெரியவாளை தரிசித்தது மட்டுமல்ல; நான் போகும்போது பாடகர் பாட்டை பாடி முடிக்கும் சமயம். சரணத்தின் பின்னிரு வரிகளுக்கு வந்து ஓரிரு நிமிஷத்திலேயே அதை முடித்தது என் பாக்கியமே! அப்பேர்ப்பட்ட"தேவ கானம்"!

“கராஜுனி ஹ்ருதய சரோஜவாசினி முராரி சோதரி பராசக்தி நினு” என்று அவர் திருப்பியபோது, நல்ல வேளை, என் கோபம் சிரிப்பாக மாறியது! முந்தைய பாத இறுதியில் வரும் “த்யா” என்பதோடு இணைத்து “த்யாகராஜுனி ஹ்ருதய சரோஜ” என்று பாட வேண்டியதைத்தான் “கராஜுனி” என்று அமர்க்களமாக தாளம் தட்டி சிதைத்து பாடினார் அந்த சிறிய பாடகர்.

பெரியவாளின் பெருமைகள் அனந்தம் என்றால் உபசார வாக்கல்ல. சத்தியமாகவே அனந்தம்தான்! அந்த பெருமைக்கு இரு கண்மணிகள்அல்லது இரு சுவாச கோசங்கள் போல பொறுமையும், எளிமையும். மற்ற விஷயங்களை பொறுத்து கொண்டாலும் பொறுத்து கொள்ளலாம்; ஒரு தேர்ந்த ரசிகனால், ரசக்குறைவானதை பொறுத்து கொள்வது மாத்திரம் ரொம்ப ரொம்ப ஸ்ரமமானது! அந்த ஸ்ரம சாத்தியத்தைதான் நம் பெரியவா அனாயாசமாக சாதித்திருக்கிறார்! ஏனென்றால், இன்று ‘பாட்டு பாடுதல்” என்ற அந்த ‘பாடு படுதலுக்கு’ ராகம் மட்டுமின்றி, சாஹித்யமும் ஆளாயிற்று. இசைக் கொலை பிளஸ் மொழிக் கொலை!

“வினாயகுநிவெல்லன்னு ப்ரோவவேனினு வினா வேல்புலேவரம்மா”

என்ற பல்லவியை எடுத்து, அதில் எத்தனை அக்ஷர பிழை, ஸ்வர பிழை செய்யலாமோ அவ்வளவும் செய்து, ஒரு வழியாக பாடகர் தலை கட்டினார். பொறுமையின் அவதாரமான பெரியவா இனித்த முகமாகவே பாட்டை கேட்டு கொண்டிருந்தார்.

பாடி முடித்தவர், “பாட்டு சரியா இருந்துதா?” என்று வேறு கேட்டார்.

“என்ன தைரியம்?” இவ்வளவையும் பண்ணிவிட்டு இப்படி ஒரு கேள்வியா! பெரியவா என்ன சொல்ல போகிறார் என்று ஆர்வமாக கேட்டேன். அவர் சொன்ன பதில் மேலும் ஆச்சரியமாக இருந்தது.

“எனக்கு சரியா இருந்தது. ஒனக்கு வேண்டியது அதானே?” என்றார்.

“ஆமாம் பெரிவா, எனக்கு வேற ஒண்ணும் வேணாம்“ என்று பாட்டுக்காரர் தண்டமாக விழுந்து கும்பிட்டார்.

அவரிடம் வேடிக்கையாக பேச ஆரம்பித்தார் பெரியவா.

“இது என்ன ராகம்?”

“மத்யமாவதி”

“மத்யமாவதியா? அபூர்வ ராகம்னே சிலதை சொல்றதுண்டோன்னோ, அப்படி அபூர்வமா பாடினே”

"பெரியவா அனுக்ரகம்"

நன்கு பரிச்சயமான ராகத்தையே உருமாற்றி ஏதோ அபூர்வ ராகம் போல அவர் பாடினார், என்பதையே அந்த பொல்லாத கிழவனார் குறும்பாக சொல்கிறார்.

இம்மாதிரி அப்பாவிகளிடம் பெரியவாளின் கருணை இரு மடங்காக பெருகும். பின் ஏன் குறும்பு என்றால் அவர்கள் பெரும்கருணையில் பாதியளவே பெறுகின்ற "புத்திசாலி" களான நம்முடைய புத்திக்கும் வேடிக்கை வினோதம் காட்டத்தான்! குழந்தையிடம் நாம், அம்மா குத்து, திம்மா குத்து" விளையாடும்போது, பிறருக்குத்தான் மிகவும் பலமாக குத்துவது போல தெரியுமே யொழிய குழந்தையின் கையில் குத்து மெத்தாகத்தானே விழும்! பரிஹசிப்பதாக நமக்கு காட்டும்போதே, "இவரை விட அழகாக சாதுர்யமாக உரையாட நவகண்டத்தில் ஒருவர் உண்டா? என தோன்றுமே."

"மத்யமாவதின்னா என்ன?" அப்பாவியை விடவும் அப்பாவி போல் கேட்டார்.

"ராகத்தின் பேரு" பாட்டுகாரரிடமிருந்து அப்பாவி பதில் வந்தது.

"அதுதான், நான் என்ன ராகம்னு கேட்டப்பவே மத்யமாவதின்னுட்டியே! அதையேதானே மறுபடியும் சொல்றே? மத்யமாவதின்னா என்னஅர்த்தம்?" "மத்யமம்னா "நடு" இல்லியா? நடு பாகம் அவதியா இருந்த மத்யமாவதியா?"

"பெரிவா எப்படி சொல்றேளோ அப்படி"

"எழுத்தாளன்"ன்னு என்னை கூப்பிட்டு,"மத்யமாவதிக்கு நான் குடுத்த definition கேட்டியோ?"

"பாட தெரியாதவா பாடினா. மத்யமாவதி மத்யமத்துலே மட்டுமில்லாம ஆரம்பம் - மத்யமம் அந்தம் எல்லாமே அவதியாத்தான் இருக்கும்" என்றேன்.

சட்டென ஏதோ நினைத்து கொண்டார்ப்போல், பாட்டுக்காரரை பார்த்து, "நீ இந்த பாட்டு பாடினதுக்கு என்ன காரணம்?"

"அனாத ரக்ஷகி ஸ்ரீ காமாக்ஷி -ன்னு வரதுதான்"

"அதனால."

"பெரிவாளுக்கு காமக்ஷிதான் எல்லாம்; பெரிவாளே காமக்ஷிதான்-கிறதால"

'ஓ' காமக்ஷிதான் எனக்கு எல்லாம், நானே காமக்ஷிதான் [இப்படி அவர் இயல்பாக கூற கேட்டபோது உள்ளங்கால் முதல்உச்சந்தலை வரை ஜிவ்வென்று சிலிர்த்தது!]. ங்கறையே. நீ என்ன கண்டு பிடிச்சியோ? எதை வெச்சு கண்டுபிடிச்சே?"

"பெரிவா" பாடகர் தேம்ப ஆரம்பித்தார்,"கண்டு பிடிக்க எல்லாம் எனக்கு ஒண்ணும் தெரியாது, பெரிவா! ரொம்ப பேர் அப்படித்தான் சொல்லியிருக்கா.

எனக்கும் பெரிவாளை பாத்தா அப்பிடித்தான் தோணித்து" என்று தேம்பலுக்கிடையே குழறி முடித்தார்.

பூலோகம் காணாத புஷ்பமா பெரியவா உட்க்கார்ந்திருந்தார். தேம்பல் தேய்ந்தது..

"சரி. அனுபல்லவிலே "காமாக்ஷி"ன்னுனா இருக்கு? ஒரு வேளை பாட்டு பிள்ளையார் பேர்ல இருக்குமோ என்னமோ! நீ பாட்டுக்கு காமாக்ஷிபாட்டுன்னு பாடிட்டியே?"

"என்ன தப்பா இருந்தாலும் பெரிவா மன்னிச்சுக்கணும்" என்று அழ இருந்தார் பாட்டுக்காரர்

"அழாதேப்பா! அழாதேப்பா! "தப்பு ஒண்ணும் சொல்லலேப்பா! "விநாயக"ன்னு ஆரம்பிச்சுட்டு "காமாக்ஷி"ன்னு போறதேன்னு கேட்டேன். அவ்வளவு தான். போகட்டும், பாட்டு என்ன பாஷை?"

'தெலுங்கு" என்றார் பாட்டுக்காரர்.

"அப்படியா!" என்ற பெரியவா! அபூர்வ ராகம்பாடினாப்ல, அபூர்வ பாஷையும் பாடரயோன்னுனா ஆச்சர்ரியப்பட்டேன்!"

"பெரிவா அனுக்ரகம்!".

பாட்டுக்காரருக்கு வேலூர் தாண்டி ஏதோ கிராமமாம். "ஸ்வல்ப பூஸ்திதி. அதுதான் ஜீவனோபாயம். படிப்பு பண்ற க்ருத்ரிமம் தெரியாம இருந்துண்டிருக்கான் [படிப்பு ஏறாததை இத்தனை அழகாக). விதந்து தாயாரும் ஒரே பிள்ளையான இவனுமா இருந்துண்டிருக்கா.

கல்யாணத்தை பத்தி யோஜனை போகலையாம். அவா பாட்டுக்கு ஒரு கஞ்சியை, கூழை குடிச்சுண்டு ஒருத்தருக்கு ஒரு ஹானி செய்யாம நிம்மதியா இருந்திண்டுருக்கா.

பாட்டுன்னா இவனுக்கு கொழந்தை நாள்லேர்ந்து ஒரு ஆசையாம். சிக்ஷை சொல்லிக்க வசதி கெடயாது. யார் ஆத்திலயாவது,ஹோட்டல்லயாவது ரேடியோ, ரெகார்ட் வெச்சா ஓடி ஓடி போய் கேக்கறதாம். தனக்கு இருக்கற க்ரஹ்ய சக்தியிலே எவ்வளவு பிடிச்சுக்க முடியறதோ பிடிச்சுக்கறதாம். லட்சியமும், மனோபாவமும்தான் முக்யமே தவிர, கார்யத்ல என்ன சாதிக்க முடியுங்கறதா முக்கியம்! அப்படி,அங்க இங்க ஓடி தன்னால முடிஞ்ச மட்டும் பாட்டு கத்துண்டு இருக்கான். என்ன பத்தி கேள்விபட்டதிலேந்து.[பாட்டுக்காரரை பார்த்து]எப்போப்பா கேள்விப்பட்டே?"

"சதாபிஷேகம் நடந்துதே அப்போ"

"அதாவது, ஏழெட்டு வருஷமா, அம்பாள், கிம்பாள்" ன்னு என்னை பத்தி யாரோ சொல்லி கேட்டதுலேர்ந்து என்கிட்டே ஒரே பக்தி வந்துடுத்தாம். எனக்கு

பாடி காட்டணும் காட்டணும்ன்னு ஆசையாம். "அதெல்லாம் நம்மை அல்லௌ பண்ணுவாளோன்னும் பயமாம். அதோட, காஞ்சிவரம் வந்துட்டு போறதுன்னா வண்டி சத்தம் (கூலி) ரெண்டு, மூணு ஆகுமே, அதுக்குகூட வசதி இல்லாத ஸ்ரமமாம்".

பாட்டுக்காரரின் தேம்பல் பெரியவாளை இழுத்தது. அருள்மயமாக அவர் பக்கம் திரும்பி, "அழாதேப்பா! பணம் காசு வரும் போகும். நீஅதுக்காக பறக்காம இருக்கியே, இந்த மனசு யாருக்கும் வல்லே; வரது துர்லபம். ஐநூறு ஆயிரம் சம்பாதிக்கற இளம் பசங்ககூட [சொன்னது 50 வருஷங்கள் முன்னால்] அமெரிக்காவுக்கு ஓடலாமான்னு பாக்கற நாள்ல, பசங்களை சொல்வானேன்? ஆயிரம், ரெண்டாயிரம் சம்பாதிச்சுரிடையர் ஆனவாகூட extension க்காக இல்லாத தில்லு முல்லு பண்ற இந்த நாள்ல, போறும்கிற எண்ணம் வரதே இல்லே.ஏதோ வர மாதிரி க்ஷணம் வந்தாலும் ஓடி போய்டறது. ஒனக்கு அது தன்னால வந்திருக்கு. அது போகவும் படாது. என்னை பாக்கறதுக்காக கூட பணம் காசு வந்தா தேவலையேன்னு நெனைக்காதே. நா. ஒன் கூடவேதான் இருக்கேன்னு வெச்சுக்கோ."

யாருக்கு கிடைக்கும் அந்த சர்வகால சஹவாச வாக்குறுதி!

பாக்கியம் செய்த அந்த பாடகர் நெடுஞ்சாண்கிடையாக நமஸ்கரித்தார்.

"என்னை பத்தி கேட்டதுலேர்ந்து பாக்கணும், பாடணும்னு தவிக்கஆரம்பிச்சுட்டான். ஏழெட்டு வருஷமா எனக்காக தவிச்சிருக்கான். தபஸ் இருக்காப்லே.இப்பத்தான் வாழ்நாள்ல மொதல் தரமா savings ன்னு ஒரு பத்து பதினஞ்சு கையிலே சேந்துதாம். அது அப்படியே பெரியவாளுக்குன்னு [பெரியவா அடக்கிகொண்ட போதிலும் அவரதுஉள்ளுருக்கம் அந்த வார்த்தைகளில் ஜாடை காட்டியது] பஸ் சார்ஜ் போக, மீதிக்கு எனக்கு புஷ்பம், பழம், இதோ மாலை போட்டுண்டிருக்கேனே, இது எல்லாம் வாங்கிண்டு ஓடி வந்துட்டான் [ஓஹோ! மாமுனிவர் கழற்றாமல் அணிந்திருந்த மாலையின் ரகசியம்இதுதானா?] திரும்பி போறதுக்கு சரியா என்ன பஸ் சார்ஜோ அவ்வளவுதான் கையிலே வேச்சுண்டிருக்கான்"

அந்த பாகியசாலிக்கு ஏதேனும் பணிபுரிய வேண்டுமென எனக்கு உந்துதல் ஏற்ப்பட்டதால், "ராத்திரி பூஜை பாத்துட்டு போறமாதிரி தான் வந்திருக்கேன். அதனால, அவரை எங்க வண்டியிலே கிராமத்துக்கு கொண்டு விட்டுட்டு வர சொல்லவா?"

உடனே பெரியவா பளிச்சென்று சொன்னார் "அந்த சவுகர்யத்துக் கெல்லாம் அவனை காட்டி கொடுக்காதே! [காட்டிகொடுக்காதே.என்ன அர்த்தபுஷ்ட்டியான பதப்ரயோகம்!] பெரியவா அந்த சின்ன வயசு பாடகனைப் பார்த்து



"பாத்தியா. இந்த பெரிய எழுத்தாளர் ஒன்கிட்ட எவ்வளவு பிரியமா இருக்கார்? அதுக்காக அவர் எழுதறது, எதையாவது படிச்சுட்டு திண்டாடாதே!அவர் பணம், காசு கொடுத்தா தொடாதே! கார் சவாரி பண்ணி வெக்கறேன்னாலும் ஒத்துக்காதே!"

பையன் சொன்னார் "நான் படிக்க மாட்டேன் பெரிவா! எனக்கு அதெல்லாம் புரியாது; காசும் யார்கிட்டேயும் வாங்கறதில்லே, பெரிவா; கார் சவாரிக்கேல்லாம் ஆசைப்படலை பெரிவா! பெரிவா ஆசிர்வாதந்தான் வேணும்"

"வேண்டியமட்டும் தரேன் " என்று வாரிவிட்ட வள்ளல் பாகியசாலியிடம்

"ஒனக்கு நாழியாச்சு. சட்னு போய் சந்திர மௌலீஸ்வரருக்கு நமஸ் காரம் பண்ணிட்டு வா, பிரசாதம் தரேன்"

"சந்திர மௌலீஸ் வரர்னா எந்த சுவாமி? எங்கே கோவில் இருக்கு?" என்று பெரியவாளையே கேட்டார், அந்த அறி யாமைக் களஞ்சிய பாடகர்.

"சந்திர மௌலீஸ் வரர்தான் இந்த மடத் துக்கு சுவாமி. அதோ அங்கேதான் நாங்க அவரை வெச்சுண்டு தங்கி இருக்கோம். போய் ஒடனே நமஸ் காரம்பண்ணிட்டு ஓடி வா"

"மடத்து சுவாமி காமாக்ஷி அம்மன் இல்லியா?" -- அறியாமை பாடகர் கேட்டார்!

"அவளுந்தான். அவ மடத்துக்கு மட்டும் இல்லாம ஊர் உலகத்துக் கெல்லாம் கூட பொதுவா காஞ்சிபுரத்ல பொது கோவில்ல இருக்கா.அவளேதான் இந்த மடத்தை

பாத்துக்கறதுக்காக, இந்த மடத்து சாமியார்கள் மட்டும் பூஜை பண்ணறதுக்காக - ஆனா மடத்துக்காக மட்டும் இல்லாம, லோகம் பூராவுக்குமாக பூஜை பண்றதுக்காக - சந்திர மௌலீஸ்வரர்ன்னு அவளோட ஆத்துக்காரர் [அறியாமைக்கு புரிய வைக்க] அவரை ஸ்படிக லிங்க ரூபத்திலே இங்கே அனுப்பிச்சு வெச்சு, அவர் பக்கத்திலே தானும் வேறே ஒரு மாதிரி ரூபத்திலே [ஸ்ரீசக்ரம், மேரு என்றெல்லாம் சொல்லி அறியாமையை கன்ப்யூஸ் பண்ணாமல்] இருக்கா. கவசமும் அலங்காரமும், புஷ்பமுமா போட்டிருக்கறதாலே ஒனக்கு லிங்கம், அம்பாள்ன்னு எல்லாம் ஒண்ணும் ஸ்பஷ்ட்டமா தெரியாது. அதுக்காக தேடிண்டு இருக்காதே! இங்கேசுவாமி இருக்கார்ன்னு "நெனச்சுண்டு ஒரு நமஸ்காரத்தை பண்ணிட்டு ஓடி வா".

அவர் போனதும் என்னிடம் "நீ அவனை கார்ல அனுப்பி வெச்சு கார், மோர்ன்னு போய் கிராமத்தல எறங்கறான்னு வெச்சுக்கோ, அப்போ ஒரு மெதப்பு எண்ணம் வந்தாலும் வந்துடலாம். அவனுக்கு எதுக்கு அதெல்லாம்? அவனுக்கு வசதி வேண்டாம், சவுகர்யம் வேண்டாம், தோரணை ஒண்ணும் வேண்டாம். அறிவு, வித்வத்கூட வேண்டாம். ஆமாம், வேண்டாந்தான்! சொல்றேன் கேளு"

"சமீப காலமா வேலூர்லேர்ந்து ஒரு பாட்டு வாத்யார் என்கிட்டே வந்துண்டு இருக்கார். ஓரளவு விஷயம் தெரிஞ்சவர்; அதைவிட பொறுமைசாலி என்பேன். நான் சொன்னேன்னா. இவனுக்கு ப்ரீயாவே கத்துக்கொடுப்பார். அப்படி பண்ண அவருக்கு அபிப்ராயமில்லேன்னு தெரிஞ்சாலும், நான் யார் தலையிலாவது கை வெச்சு அவனுக்காக சம்பளம் கட்டறதுக்கு ஈஸியா ஏற்பாடுபண்ணிடலாம். ஆனா அந்த மாதிரி எதுக்கும் அவனை நான் காட்டிக் கொடுக்க நெனைக்கலே. சரியா பாடறதுங்கர சாமர்த்தியம் கூட அவனுக்கு வேண்டாம். அவன் பாட்டுக்கு இருக்கறபடி இருக்கட்டும். இப்ப பாடறபடியே பாடிண்டு போகட்டும். தற்கால புத்திசாலி உலகத்திலேயும் தப்பி தவறி, இந்த மாதிரி அசடா இருக்கறவா, நித்திய அசடாவே இருக்கட்டும். அவாளை கெடுக்க வேண்டாம்னே எனக்கு இருக்கு"

சந்திர மௌலீஸ்வரர் யாரென்று தெரியாமலே, நடமாடும் சந்திர மௌலீஸ்வரியால் விரும்பப் பட்ட அந்த அறியாமை பாடக பாகியசாலி, அவர் சொன்னபடியே நமஸ்கரித்து விட்டு வந்தார்.

"நமஸ்காரம் பண்ணிக்கோ நாழியாச்சு!"

பிரிய மனமின்றி, கண்ணீரும் கம்பலையுமாக அந்த பாக்கியசாலி பையன் நமஸ்கரித்தார். நீ பாடினியே, அந்த விநாயகனை ரக்ஷிக்கராப்ல ஒன்ன அம்பாள் எப்பவும் ரக்ஷிசுண்டு இருக்கட்டும்" என்று ஆசிர்வதிக்கவே ஏற்பட்டதிருக்கரத்தை தூக்கினார் மஹா பெரியவா.



# 63. பம்பாய்க்கு போ

மகா பெரியவாளைப் பற்றி வரும் செய்திகள் புருடா இல்லை. கற்பனையோ பிறர் மகிழ இட்டுக் கட்டி எழுதப் படும் கதைகள் அல்ல. எந்த பக்தருக்கோ எப்போதோ சம்பவங்கள். இதை அவர் சொல்லியோ, அவர் சொல்லிக் கேட்டோ, அதை எங்கோ பகிர்ந்தோ, எதிலோ வெளிவந்ததோ, அப்படி பல விதங்களில் நம்மை சேர்ந்தவை. அதில் என் கையில் அகப்பட்டதை அப்படியே அன்போடு, அந்த மகான் மீதுள்ள பரம பக்தியோடு சிறிது தட்டி கொட்டி, சுருக்கி விஷயக் கருவில் இருந்து மாறு படாமல் அளிக்கிறேன்.

பல வருஷங்களுக்கு முன்பு ராஜூ என்பவர் குடும்பத்தில் நடந்த சம்பவம் இது. இதை வெளிப்படுத்தியவர் பம்பாயில் இருந்தார். ஒரு பெண் சங்கீதா தன்னுடைய பெண் குழந்தை ரத்னாவுடன் அவர் வீட்டில் தங்கி இருந்தார். மிகவும் புத்திசாலி குழந்தை அவள். சங்கீதாவின் கணவர் பம்பாயில் ஒரு ஆஸ்பத்திரியில் தீவிர சிகிச்சைபிரிவில் கடும் சுரம் காரணமாக அனுமதிக்கப்பட்டு இருந்தார்.

அதே ஆஸ்பத்திரியில் அந்த வார்டு ஜுர வார்டு. ஜுர நோயாளிகள் பலர் இருந்தனர். பக்கத்து படுக்கையில் கிருஷ்ணமுர்த்தி என்னும் அன்பர் கடும் ஜுரம் அவதியால் அங்கு அனுமதிக்கப்பட்டு சிறிது நாளில் உடல் தேறி விட்டார்.

குழந்தை ரத்னாவால் அப்பாவை பார்க்காமல் இருக்க முடியாது என்பதால் தினமும் வீட்டிலிருந்து ஆஸ்பத்திரிக்கு கொண்டு வந்து இருந்தார்.

ஒரு நாள் ரத்னாவின் அப்பாவுக்கு உடல் நிலை மோசமாகி வந்தது அதனால் கிருஷ்ணமுர்த்தி ரத்னாவை பார்த்துக்கொண்டு இருந்து ரத்னாவுக்கும் கிருஷ்ணமுர்த்திக்கும் நல்ல பரிச்சயம் ஏற்பட்டது.

சிறிது நாளில் கிருஷ்ணமுர்த்தி உடம்பு சரியானதும் ஆஸ்பத்திரியில் இருந்து டிஸ்சார்ஜ் செய்யப்பட்டு வீடு திரும்பினார்.

பத்து நாள் கழிந்து ரத்னாவின் அப்பா தீவிர சிகிச்சை செய்தும் பயன் அளிக்காமல் சிவலோகம் அடைந்தார்

ஊருக்கு சென்று கர்ம காரியங்கள் செய்தபின் சங்கீதா பம்பாயிலேயே தங்கி வேலைக்கு போக துவங்கினார். குழந்தையும் பள்ளியில் சேர்ந்தது.

ஆஸ்பத்திரியில் நண்பரான கிருஷ்ணமுர்த்தி பம்பாயில் ஏர்போர்ட்டில் நல்ல வேலையில் இருக்கிறார். ஆனால் தனிக்கட்டை. சிலகாலம் அப்பா அம்மா மனைவி குழந்தையுடன் பெங்களூரில் வாழ்ந்தார். அடுக்கடுக்கான சோதனைகள் அவரை புடம் போட்டு மனத்தில் மஹா பெரியவாளிடம் ஈடுபாடு வளர்ந்தது.



கிருஷ்ணமுர்த்தியின் அப்பாவுக்கு பெங்களூரில் சொந்தமாக சின்னதாக ஒரு கெமிகல் கம்பெனி இருந்தது. கிருஷ்ணமூர்த்தி அப்பாவுக்கு உதவியாக கம்பனியின் நிர்வாகத்தை பார்த்துக்கொண்டார்.

அப்பா க்ரிஷ்ண மூர்த்திக்கு சொந்தத்திலேயே ஒரு குணவதியான பெண்ணை பார்த்து நிச்சயம் செய்தார்.

ஒருநாள் கிருஷ்ணமுர்த்தி ஒரு பேங்க் வேலையாகவெளியே சென்று இருக்கும் போது பெங்களூர் கெமிகல் கம்பனியில் தீவிபத்து. துரதிர்ஷ்ட வசமாக அவர் அப்பா, மாமா இன்னும் பல தொழிலாளர்கள் அந்த இடத்திலேயே இறந்து போனார்கள்.

கிருஷ்ணமுர்த்தியும், அவன் அம்மாவும் துடித்தார்கள். இதற்குள் அப்பா நிச்சயம் செய்த பெண்ணின் தகப்பனார் வந்து அதே முகூர்த்தத்தில் கிருஷ்ணமுர்த்திக்கு தனது பெண்ணை கலியாணம் செய்யும்படி கேட்டார். கல்யாணம் நடந்தது. ஒரு பெரிய கம்பெனியில் வேலைக்கு சேர்ந்து மேனேஜர் ஆனார். ஒரு பெண் குழந்தை பிறந்தாள். பழைய துக்கங்கள் கொஞ்சம் கொஞ்சமாக மறந்து போக ஆரம்பித்தது. அம்மா, மனைவி, அன்பு குழந்தை என்று வாழ்க்கை சக்கரம் சுழன்றது. ஒரு கார் வாங்கினார்.

ஒருநாள் பெங்களூரில் இருந்து சென்னைக்கு காரில் டிரைவரோடு கிளம்பினார்கள்.

வண்டி திருவண்ணாமலை கடக்கும்போது எதிரே வந்த லாரி பிரேக் பிடிக்காமல் கார் மேல் மோதி டிரைவர், கனகா, கிருஷ்ணமுர்த்தியின் அம்மா, குழந்தை எல்லோரும் கண்ணெதிரில் ஸ்தலத்திலேயே மரணம்.

கிருஷ்ணமுர்த்திக்கு சின்ன காயங்கள் மட்டும்.

துக்கம் தாங்கமுடியவில்லை. ஏன் என்னை இப்படி சோதனை வாட்டுகிறது? என்ன பாவம் செய்தேன்? கிருஷ்ணமூர்த்தி நரக வேதனைப் பட்டார். அப்போது தான் அப்பா அடிக்கடி காஞ்சியில் பரமாச்சாரியார் பற்றி சொல்வாரே, அவரைப் போய் தரிசனம் செய்யலாமா?

பெங்களூரில் வீடு, மனைவி அம்மாவின் நகைகள் எல்லாவற்றையும் விற்று பணமாக்கினார்.

ஒரு வெள்ளிகிழமை. தேனம்பாக்கத்தில் மகா பெரியவா "சாமா, பெங்களூரில் இருந்து கிருஷ்ணமுர்த்தி என்று ஒருவர் சாயங்காலம் வருவார். வந்தா என்கிட்ட சொல்லு'' என்ன தீர்க்க தரிசனம்!

சாயந்திரம் கிருஷ்ணமுர்த்தி தேனம்பாக்கம் விசாரித்துக்கொண்டு போய் பெரியவா தரிசனத்துக்கு காத்திருந்தார். ஒருவர் அவரிடம் வந்து

''நீங்க தான் கிருஷ்ணமுர்த்தியா? பெங்களூரா?''

கிருஷ்ணமுர்த்திக்கு தூக்கி வாரி போட்டது.

நான் இங்க வரப்போறது எனக்கு மட்டும் தானே தெரியும். இவர் யார், இவருக்கு எப்படி தெரிந்தது? அதிசயித்தார்.

"ஆமாம் நான் பெங்களூர் கிருஷ்ணமூர்த்தி. பெரியவா தரிசனத்துக்கு வந்தேன்"

"உங்களை வரச்சொன்னா"

முதல் முதலாக ஸ்ரீ சரணரை பார்த்ததும் க்ரிஷ்ணமுர்த்திக்கு வெடவெட வென்று கை கால் நடுக்கம். உடல் வியர்த்தது. இனம் புரியாத பய பக்தி. ஆனால் உள்ளே இன்று முதல் உன் வேதனைகள் தீர்ந்து போனது'' என்று யாரோ சொல்வது போல் உணர்ந்தார்.

"என்ன?" என்று தலை அசைத்தார் பெரியவா.

கடகட வென்று கடல் மட திறந்தாற்போல் ஆரம்பமுதல் தன் குடும்ப சோதனைகளை விடாமல் சொல்ல ஆரம்பித்தார் கிருஷ்ணமூர்த்தி.

பெரியவா இடை மறித்து

'நீ இங்கே உங்கப்பா, உங்கம்மா, மனைவி, குழந்தை எல்லாம் பறி கொடுத்து ஓரியா வந்து இருக்கே அப்படித்தானே?''

'நான் ஒண்ணுமே சொல்லலியே எல்லாம் பக்கத்திலே இருந்து பாத்தா மாதிரி பெரியவா சொல்றாரே''. கிருஷ்ணமுர்த்தி மலைத்தார். கண்களில் கண்ணீர் ப்ரவாஹம். பேச்சு வரவில்லை.

''சரி இப்போ என்ன செய்யலாம்னு இருக்கே?'

''சுவாமி என்னுடைய எல்லா சொத்துக்களையும் வித்து கொண்டு வந்து இருக்கேன். இங்கேயே இருந்துடறேனே'' என்று கெஞ்சினார் கிருஷ்ணமூர்த்தி.

''இத பாரு, உனக்கு சின்ன வயசு, இன்னும் வாழ வேண்டிய வாழ்க்கை நிறைய இருக்கு''

சிப்பந்தியை கூப்பிட்டு அவர் காதில் ஏதோ சொன்னார். அவர் ஒரு விலாசத்தை பேப்பரில் எழுதி வந்தார்.

'இந்த விலாசத்துக்கு போ. அவா அநாதை ஆஸ்ரமம் நடத்தறா. அங்கே கூடிய சீக்கிரம் உன் அம்மா,அப்பா, மனைவி மூணு பேரும் மறுபடி பிறப்பெடுத்து குழந்தைகளா வந்து சேருவா. நீ கொண்டு வந்த சொத்து எல்லாம் அவாளுக்கே போய் சேரட்டும். கொடுத்துட்டு நீ கௌம்பி பாம்பேக்கு போ. வேலை தேடு அங்கே உன் மகள் ஏற்கனவே ஒரு பொண்ணு வயத்திலே பிறந்தாச்சு. நீ மறுபடியும் அவளுக்கு அப்பாவாக போறே. எல்லாம் ஆனப்பறம் நீ உன் பொண்டாட்டி கொழந்தையோட என்னை வந்து பாரு. பிரசாதம் கொடுத்து அனுப்பினார்.

கிருஷ்ணமூர்த்திக்கு தலை சுற்றியது. தன்னை ஒரு தரம் கிள்ளிப் பார்த்துக் கொண்டார். பரப்ப்ரம்மம் சொன்னமாதிரி சென்னையில் ஆசிரமத்தில் பணத்தை விட்டு கொடுத்து பம்பாய் கிளம்பினார்.

சொல்லி வைத்தாற்போல் நல்ல வேலை கிடைத்து ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்து தங்கினார். திடீரென்று ஒருநாள் ஜுரம் வந்து ஆஸ்பத்ரியில் இருந்தபோது தான் சங்கீதாவையும் குழந்தை ரத்னாவையும் ஆஸ்பத்திரியில் சந்தித்தார்.

சங்கீதாவின் சித்தப்பா அதாவது என் நண்பர் சங்கீதாவுக்கு மறுமணம் செய்ய நினைத்து செய்தித்தாளில் விளம்பரம் கொடுத்தார். ஒரு நாளில் அந்த விளம்பரம் நம் கிருஷ்ணமுர்த்தி கண்ணில் பட்டது. போன் செய்து ஒரு ஞாயிற்று கிழமை நேரில் சங்கீதா வீட்டுக்கு வந்தார். வெளியே விளையாடிக்கொண்டு இருந்த ரத்னா கிருஷ்ணமுர்த்தியை பார்த்து அருகில் போய் விளையாட ஆரம்பித்தது.

ஆஸ்பத்திரியில் ஏற்கெனவே பார்த்து விளையாடினவர் என்று ஞாபகம் இருந்தது. அவர் மடியில் ஏறி உட்கார்ந்து கொண்டது. அப்போது தான் உள்ளே வந்த சங்கீதா கிருஷ்ணமுர்த்தியை பார்த்து

'அட நீங்களா?' என்றாள். முழு விவரம் சொன்னார். வாரா வாரம் வந்து குழந்தையை வெளியே எடுத்து செல்ல ஆரம்பித்தார். ரத்னா தான் தன் பூர்வ மகள் என்று புரிந்துகொண்டார். ரத்னாவும் கிருஷ்ணமுர்த்தியை அப்பா அப்பா என்றே அழைக்க ஆரம்பித்தாள்.

ஒரு நாள் கிருஷ்ணமுர்த்திக்கும் சங்கீதாவுக்கும் பதிவு திருமணம் நடந்தது. பிறிதொரு நாள் தேனம்பக்கத்தில் தம்பதிகளும் குழந்தையும் பெரியவாளைப் பார்த்து ஆசி பெற்றார்கள்

கிருஷ்ணமுர்த்தி குடும்பம் பம்பாயில் பெரியவா அனுக்ரஹத்துடன் நன்றாக வாழ்கிறது.

தன்னை அண்டி வந்தவர்களை சத்குரு மகா பெரியவா என்றும் கைவிட்டதில்லை என்பது நிதர்சனம் அல்லவா?



# 64. ராம யோகி

இன்றைக்கு இதை விட பொருத்தமாக ஒரு கட்டுரை இருக்க முடியுமா. ராமனைப் பற்றி யாரோவெல்லாம் நிறைய சொல்கிறார்கள். மகிழ்ச்சியாக இருக்கிறது. ஆனாலும் அதென்னவோ, மகா பெரியவா சொன்னது அதிகமாகே தித்திக்கிறதே. அதென்ன இந்த தேன் ரகசியம்?

''ராமன்' என்றாலே ஆனந்தமாக இருப்பவன் என்று அர்த்தம். மற்றவர்களுக்கு ஆனந்தத்தைத் தருகிறவன் என்றும் அர்த்தம். எத்தனை விதமான துக்கங்கள் வந்தாலும் அதனால் மனம் சலனம் அடையாமல், ஆனந்தமாக தர்மத்தையே அநுசரித்துக்கொண்டு ஒருத்தன் இருந்தான் என்றால், அது ஸ்ரீ ராமன்தான். வெளிப்பார்வைக்கு அவன் துக்கப்பட்டதாகத் தெரிந்தாலும், உள்ளுக்குள்ளேயே ஆனந்தமாகவே இருந்தான்.

சுக துக்கங்களில் சலனமடையாமல், தான் ஆனந்தமாக இருந்துகொண்டு, மற்றவர்களுக்கும் ஆனந்தத்தை ஊட்டுவது தான் யோகம். அப்படியிருப்பவனே யோகி. இவ்வாறு மனசு அலையாமல் கட்டிப்போடுவதற்குச் சாமானிய மனிதர்களுக்கான வழி வேத சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற தர்மங்களை ஒழுக்கத்தோடு, கட்டுப்பாட்டோடு பின்பற்றி வாழ்வதுதான்.

சொந்த விருப்பு வெறுப்புக்கு இலக்காகாமல் வேதம் விதிக்கிற தர்மப்படி வாழ ஆரம்பித்துவிட்டால், தானாகவே மனசின் சஞ்சலம் குறைந்து, அது தெளிய ஆரம்பிக்கும். இந்தத் தெளிவால் மனசு எப்போதும் ஆனந்தமாக, லேசாக இருக்கும். இந்த சித்த சுத்தி மோட்சத்திலேயே கொண்டு சேர்த்துவிடும்.

ஜனங்களுக்கெல்லாம் ஒரு பெரிய உதாரணமாக வேத தர்மங்களை அப்படியே அநுசரித்து ஆனந்தமாக வாழ்ந்து காட்டுவதற்காக ஸ்ரீமந் நாராயணனே ராமனாக வந்தார். ராம வாக்கியத்தை எங்கே பார்த்தாலும், 'இது என் அபிப்பிராயம்' என்று சொல்லவே மாட்டார்.

'ரிஷிகள் இப்படிச் சொல்கிறார்கள். சாஸ்திரம் இப்படிச் சொல்கிறது' என்றே அடக்கமாகச் சொல்வார். சகல வேதங்களின் பயனாக அறியப்படவேண்டிய பரமபுருஷன் எவனோ, அவனே அந்த வேத தர்மத்துக்கு முழுக்க முழுக்க கட்டுப்பட்டு, அப்படிக் கட்டுப்பட்டு இருப்பதிலேயே ஆனந்தம் இருக்கிறது என்று காட்டிக்கொண்டு, ராமனாக வேடம் போட்டுக் கொண்டு வாழ்ந்தான்.

"ராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போனபோது, ஒரே மைல் தூரத்திலிருந்த ராமனுக்கு சீதை போட்ட கூச்சல் காதில் விழவில்லையாம். அப்படிப்பட்டவனை



இப்போது பக்தர்கள் கூப்பிட்டால் என்ன பிரயோஜனம்?" என்று கேலி செய்து கேட்டவர்கள், எழுதியவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் ராமனாக இந்த லோகத்தில் வாழ்ந்தபோது மனுஷ்ய வேடத்தில் இருந்தான். மனுஷ்யர்களைப் போலவே வாழ்ந்தான் என்பதை மறந்து பேசுகிறார்கள்.

ஒரு நாடகம் நடக்கிறது. ராமாயண நாடகம்தான். அதில் லவ குசர்களை வால்மீகி ராமனிடம் அழைத்து வருகிறார். ராஜபார்ட் ராமசுவாமி அய்யங்கார் ராமராக வேடம் போட்டுக் கொண்டிருக்கிறார். அவருடைய சொந்தப் பிள்ளைகளே நாடகத்தில் லவ, குசர்களாக நடிக்கிறார்கள்.

நாடக ராமன் வால்மீகியைப் பார்த்து 'இந்தக் குழந்தைகள் யார்?' என்று கேட்கிறார். ராமசுவாமி அய்யங்காருக்குத் தம்முடைய பிள்ளைகளையே அடையாளம் தெரியவில்லை என்று நாடகம் பார்க்கிறவர்கள் கேலி செய்யலாமா?

நாடக வால்மீகி, 'இவர்கள் ராஜபார்ட் ராமசுவாமி அய்யங்காரின் பிள்ளைகள். நீங்கள்தானே அந்த ராமசுவாமி அய்யங்கார்!' என்று பதில் சொன்னால் எத்தனை ரசாபாசமாக இருக்கும்? வாஸ்தவத்தில் இருப்பதை, வாஸ்தவத்தில் தெரிந்ததை, நாடகத்தில் இல்லாததாக, தெரியாததாகத்தான் நடிக்க வேண்டும்.

ஸ்ரீ ராமன் பூலோகத்தில் வாழ்ந்தபோது, இப்படித்தான் மனுஷ்ய வேடம் போட்டுக் கொண்டு தம் வாஸ்தவமான சக்தியையும் ஞானத்தையும் மறைத்துக் கொண்டு வாழ்ந்தார்.

வேதப் பொருளான பரமாத்மா தசரதனின் குழந்தையாக வேடம் போட்டுக்கொண்டவுடன், வேதமும் வால்மீகியின் குழந்தையாக, ராமாயணமாக வந்துவிட்டது. அந்த ராமாயணம் முழுக்க எங்கே பார்த்தாலும் தர்மத்தைத்தான் சொல்லியிருக்கிறது.

ஊருக்குப் போகிற குழந்தைக்குத் தாயார் பட்சணம் செய்து தருகிற வழக்கப்படி கௌசல்யா தேவி காட்டுக்குப் போகிற ராமனுக்குப் பதினாலு வருஷங்களும் கெட்டுப்போகாத பட்சணமாக இந்தத் தர்மத்தைதான் கட்டிக் கொடுத்தாள்.

'ராகவா, நீ எந்த தர்மத்தை த்ருதியோடு, அதாவது தைரியத்தோடு, நியமத்தோடு அநுசரிக்கிறாயோ, அந்தத் தர்மம் உன்னை ரக்ஷிக்கும்' என ஆசீர்வாத பட்சணம் கொடுத்தாள்.

நியமம், அதாவது தனது என்ற வெறுப்பு விருப்பு இல்லாமல் சாஸ்திரத்துக்குக் கட்டுப்படுவது முக்கியம். அதே போல் தைரியம் முக்கியம். ஒருத்தர் பரிகாசம் பண்ணுகிறார் என்று தர்மத்தை விடக்கூடாது. ராமனை சாத்க்ஷாத் லக்ஷ்மணனே பரிகசித்தான்.

'அண்ணா! நீ தர்மம், தர்மம் என்று எதையோ கட்டிக் கொண்டு அழுவதால்தான் இத்தனை கஷ்டங்களும் வந்திருக்கின்றன. அதை விட்டுத் தள்ளு. தசரதன் மேல் யுத்தம் செய்து ராஜ்யத்தை உனக்கு நான் சுவீகரித்துத் தர அனுமதி தா' என்று அன்பு மிகுதியால் சொன்னான்.

ஆனால் ராமன், யார் எது சொன்னாலும் பொருட்படுத்தாமல் தர்மத்தையே காத்தான். கடைசியில் அது அவனைக் காத்தது. தர்மம் தலை காத்தது. ராவணனுக்குப் பத்து தலை இருந்தும் அதர்மத்தால் கடைசியில் அத்தனை தலைகளும் உருண்டு விழுந்தன.

ஸ்ரீராமன் இன்றும், 'ராமோ விக்ரஹவான் தர்ம:' என்றபடி தர்மத்தில் தலைசிறந்து தர்ம ஸ்வரூபமாக அநுக்கிரகம் செய்து வருகிறான்.

சாக்ஷாத் ஸ்ரீ ராமனை லட்சியமாகக் கொண்டு "ராம ராம" என்று மனசார சொல்லிக்கொண்டே இருக்கிறவர்களுக்குச் சித்த மலங்கள் எல்லாம் விலகும். தர்மத்தை விட்டு எந்நாளும் விலகாமல் அவர்கள் ஆனந்தமாக வாழ்வார்கள்.

# 65. தேஹத்தின் சிறப்பு

நம்மில் சில பேருக்கு மரணம், இறப்பு என்ற வார்த்தைகள் கட்டோடு பிடிக்காது. சீ என்ன அப சகுனம். போய் வாயை அலம்பு. என்று சொல்வார்கள். ஐயா, மரணம் எல்லோருக்கும் ஒருநாள் கிட்டுவது தான். அதை எதற்காக நினைக்க வேண்டும், அது பற்றி பேசவேண்டும் என்போரும் உண்டு.

இல்லை, இறந்தவுடன் மனிதன் யார்? அவனுக்கு செய்ய வேண்டிய கடமைகள் என்ன? -- ஒரு கணம் சிந்தித்து பார்க்க வேண்டாமா? இதை நமக்காக பெரியவாளே சிந்தித்து தெளிவாக சொல்லி இருப்பதை தான் இன்று தெரிந்து கொள்ளப் போகிறோம்.

'இறந்த உடலுக்கு ஏன் காரியம் செய்ய வேண்டும்? இப்படி ஒரு கேள்வி தோன்றும், உடம்பை விட்டுப் போன ஜீவனின் த்ருப்திக்காக ச்ராத்தம் முதலானவை செய்வது பரோபகாரம் என்றால் ஸரிதான். ஆனால் ஜீவன் (உயிர்) போன இந்த வெறும் உடம்புக்கு எதற்கு ஸம்ஸ்காரம்?

"உயிரோடு இருக்கிறவர்களுக்கே உபகாரம் பண்ணமுடியாமலிருக்கிறது. செத்துப்போனபின் பிணத்துக்கு என்ன ஸேவை வேண்டிக் கிடக்கிறது?

ஏதோ ஸம்பிரதாயம் என்று வந்தவிட்டதால், அதை விடுவதற்கு பயமாயிருப்பதால் அவாளவாள் வீட்டில் மரணம் நடந்தால் ப்ரேதஸம்ஸ்காரம் பண்ணத்தான் வேண்டியிருக்கிறது. இது போதாதென்று, யாரோ அநாதை போய்விட்டானென்றால், அவன் உடம்பை முனிஸிபாலிடிக்காரர்கள் அடக்கம் செய்யப் போகும்போது, நாமெதற்கு வலுவிலே தடுத்து, 'ஸம்ஸ்காரம்' பண்ணுகிறேன் என்று இழுத்துவிட்டுக் கொள்ள வேண்டும்?



பிரேதமென்றாலே ஒரு பயம், கூச்சம் இருக்கிறது. இதில் ஸம்பந்தமில்லாததை எதற்காக நாமாக எடுத்துப்போட்டுக் கொள்ளவேண்டும்?

உயிர்போன வெறும் கட்டையான உடம்புக்கு என்ன பரோபகாரம் வேண்டியிருக்கிறது?"

சாஸ்திரங்களைக் கூர்ந்து பார்த்தால் ஒரு ஜீவன் சரீரத்தை விட்டுப் போய்விட்டாலும், அதன் அங்கங்களில்

கண்ணில் ஸூர்யன்,

வாயில் அக்னி,

கையில் இந்திரன்

என்றெல்லா மிருக்கும் தேவாம்சங்கள் உடனே அதனதன் மூலஸ்தானத்துக்குப் போய்விடவில்லை என்றுதெரிகிறது. பிரேத ஸம்ஸ்காரத்தின் மூலம்தான் அவற்றை அதனதன் ஸ்தானத்துக்கு அனுப்பி வைக்கிறோம். அபர மந்த்ரங்களைப் பார்த்தால் இது புரியும். தெரியும்.

ஜீவாத்மா என்கிற புருஷன் பதினாறு கலை உள்ளவன் என்பார்கள். இதில் பதினைந்து கலைகள் மட்டுமே உயிராக இருப்பது என்றும், உடம்பும் ஒரு கலை என்றும், எனவே உயிர் போன பின்னும் ஒரு கலை உள்ள அந்த உடலை ஈஸ்வரார்ப்பண மாக்கவே பிரேத ஸம்ஸ்காரம் தேவைப்படுகிறது என்றும் ஒரு அபிப்ராயம் உண்டு.

சாஸ்த்ரங்களில் தஹனம் பண்ணுவதை 'அந்த்யேஷ்டி'- அந்திய இஷ்டி - அதாவது 'இறுதியான வேள்வி' என்றே ரொம்பவும் உயர்த்திச் சொல்லியிருக்கிறது. கர்ப்பம் தரிப்பிலிருந்து ஒரு ஜீவனை ஒவ்வொரு பருவத்திலும் எப்படி சுத்தி பண்ண வேண்டும் என்பதற்காக சாஸ்த்ரங்களில் நாற்பது ஸம்ஸ்காரங்களைச் சொல்லியிருக்கிறது.

'ஸம்ஸ்காரம்' என்றால் 'நன்றாக ஆக்குவது' என்று அர்த்தம். ('நன்றாக ஆக்கப்பட்ட'பாஷைதான் 'ஸம்ஸ்க்ருதம்'.) உபநயனம், விவாஹம் ஆகியஎல்லாமே ஜீவனை அந்தந்த நிலையில் பக்குவப் படுத்துவதற்காக ஏற்பட்ட ஸம்ஸ்காரங்கள்தான். வாழ்நாள் கர்மா முழுவதையும் வேள்வியாக ஈஸ்வரனிடம் ஆஹூதி செய்துகொண்டே இருக்கிற ரீதியில் இந்த நாற்பது ஸம்ஸ்காரங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

இப்படி வாழ்க்கையையே யாகமாகச் செய்த ஒருத்தனுக்கு, வாழ்க்கை முடிந்தபிறகு கடைசியில் மற்றவர்கள் செய்கிற யாகம்தான் - அதாவது அந்திய இஷ்டியே ப்ரேத ஸம்ஸ்காரமாகும். எந்த உடம்பை வைத்துக் கொண்டு பாக்கி யஜ்ஞங்களை ஒருத்தன் பண்ணினானோ, அந்த உடம்பையே சிதாக்னி (சிதை) யில் ஹோமம் பண்ணி விடுவதுதான் இது. ப்ரேத ஸம்ஸ்கார மந்த்ரங்களில் அப்படித்தான் சொல்லியிருக்கிறது. ஹோமத்துக்குரிய மற்ற வஸ்துக்களை நெய்யினால் சுத்தி செய்து அக்னியில் போடுகிற மாதிரி தான் ப்ரேதத்தையும் சுத்தம் பண்ணி, தஹனம் செய்யச் சொல்லியிருக்கிறது. உடம்பு ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்யப்படுகிறது. மண்ணில் அடக்கம் பண்ணுவதானாலும் ஈஸ்வரார்ப்பணமே ஆகிறது.

இதைப்பற்றி இன்னும் கொஞ்சம் சொல்கிறேன்.

'தேஹம் ரொம்ப இழிவானது. இதிலிருந்து விடுபடவேண்டும்' என்று பெரியவர்கள் பாடி வைத்திருப்பதெல்லாம் உண்மைதான். ஆனால் இன்னொரு நிலையில் பார்த்தால் இந்த தேஹம் என்பது ஒரு மஹா அத்புதமான மெஷின். ஒரே மெஷினில் ஒவ்வொரு பாகம் ஒவ்வொரு தினுஸான கார்யத்தைச் செய்கிறது. கண் என்று ஒன்று வெளிச்சத்தையும், வர்ணங்களையும் பார்க்கிறது. காது என்று ஒன்று சப்தங்களைக் கேட்கிறது. இருக்கிறதெல்லாம் ஒரே ஆத்மா- இத்தனை அவயவங்களுக்குள்ளேயும் ஒரே ஜீவன்தான் இருக்கிறது என்றாலும்,கண்ணும், காதும் கிட்டக்கிட்ட இருந்துங் கூட கண்ணால் கேட்க முடிவதில்லை; காதால் பார்க்க முடிவதில்லை! பக்கத்திலேயே வாய் என்று ஒன்று அதற்குத்தான் ருசி தெரிகிறது. பேசுகிற சக்தியும் அதற்கே இருக்கிறது. தொண்டையில் பல தினுஸாகக் காற்றைப் புரட்டி அழகாக கானம் செய்ய முடிகிறது.

பல வஸ்துக்களைப் பிடிப்பதற்கு ஏற்றமாதிரி கையும் விரல்களும் அமைந்திருக்கின்றன. இந்த அமைப்பு கொஞ்சம் வேறுவிதமாக இருந்தாலும் இப்போது நாம் பண்ணுகிற கார்யங்களைப் பண்ண முடியாது. அடி எடுத்து வைத்து மேலே போவதற்கு வசதியாகக் காலின் அமைப்பு இருக்கிறது. நடக்கிறபோது கூடியமட்டும் ஜீவராசிகள் நசுங்காதபடி, பூரான் மாதிரியானவற்றின் மேலேயே நாம் பாதத்தை வைத்தால்கூட அவை நெளிந்துகொண்டு ஓட வசதியாக உள்ளங்கால்களில் குழித்தாற்போன்ற ஏற்பாடு, சப்பணம் கூட்டி உட்கார வசதியாக முழங்காலில் எலும்பு நரம்புகளின் அமைப்பு - என்று இப்படி ஒவ்வொன்றைப் பார்த்தாலும் பராசக்தி எத்தனை ஸூக்ஷ்மமான கல்பனையோடுஒரு சரீரத்தைப் பண்ணியிருக்கிறாள் என்று ஆச்சரியமாக இருக்கிறது!

ஆஹாரத்தை ஜெரிக்க ஒரு அங்கம், ஜெரித்ததை ரத்தமாக்க ஒரு அங்கம். மூச்சுவிட ஒன்று, ரத்தத்தை 'பம்ப்' பண்ண ஒன்று- எல்லாவற்றுக்கும் மேலே ஸகல கார்யங்களையும் டைரக்ட் பண்ணி கன்ட்ரோல் பண்ணும் மூளை - என்றெல்லாம் விசித்ர விசித்ரமாக பகவான் சரீரத்தைக் கல்பித்திருக்கிறான். சதை, ரத்தம், மஸில்ஸ், நரம்பு, எலும்பு என்ற ஒவ்வொன்றுக்கும் ஒரு 'பர்பஸ்' இருக்கிறது. எலும்புக்குள்ளேகூட மஜ்ஜை என்ற ஜீவஸத்து ஓடுவது ஒரு அதிசயம். மனித சரீரத்தில் இருக்கும் கோடிக்கணக்கான ஸெல்களில் ஒவ்வொன்றும் ஒரு அத்புத லோகம்.

இப்படித் தனித்தனியாக ஒவ்வொரு பாகமும் ஒரு அத்புதமான மெஷினாக இருப்பதோடு மட்டுமல்லாமல், எல்லாமாக ஒன்றுக்கொன்று இசைவாக ஸஹாயம் செய்து போஷித்துக் கொள்வதும் மஹா அதிசயமாக இருக்கிறது. ஆனபடியால், எவனோ லக்ஷத்தில் ஒருவன் தேஹம் பொய், மனஸ் பொய் என்று புரிந்துகொள்ளும் ஞானியாக ஆனாலும், பாக்கி எல்லாரும் பகவான் தந்திருக்கிற இந்த அத்புதமான மெஷினை வைத்துக் கொண்டு தர்மமாக வாழத்தான் முயற்சி பண்ண வேண்டியவர்களாக இருக்கிறோம். இந்த தர்ம வாழ்க்கையிலிருந்துதான் அப்புறம் ஞானத்துக்குப் போக வேண்டியவர்களாயிருக்கிறோம்.

யோசித்துப்பார்த்தால், சரீரத்தை ஏன் மட்டம் என்று திட்டவேண்டும்? அது என்ன பண்ணுகிறது? அது மனஸின் கருவி மட்டும்தானே? கையையும் காலையும் கண்ணையும் வாயையும் மனஸ் நல்லபடி ஏவினால் சரீரம் நல்லதே செய்யும். கை பரோபகாரம் பண்ணும்; அல்லது அர்ச்சனை பண்ணும். கால் கோயிலுக்குப் போகும். கண் ஸ்வாமி தர்சனம் பண்ணும், வாய் ஸ்தோத்ரம் சொல்லும், அல்லது எல்லோருக்கும் ப்ரிய வசனம் சொல்லும். ஆனதால் 'நிஷித்தம்' என்று சரீரத்தைக் திட்டுவதுகூட தப்புத்தான். "தர்மத்தைச் செய்ய சரீரம்தானே ஸாதனமாயிருக்கிறது?"- சரீரம் ஆத்யம் கலு தர்ம ஸாதனம் - என்று வசனமே இருக்கிறது. " தேஹோ தேவாலய : ப்ரோக்தா " - உள்ளே இருக்கிற பரமாத்மாவுக்கு இந்த உடம்பே ஆலயம் என்கிறோம். 'காயமே கோயிலாக' என்று அப்பரும் சொன்னார். திருமூலரும் இப்படியே, "முன்னே உடம்பு ரொம்ப நிஷித்தம் என்று மட்டமாக நினைத்தேன். அப்புறம் அதற்குள்தான் ஈஸ்வரன் குடிகொண்டிருக்கிறான் என்று தெரிந்து கொண்டதும், உடம்பை ஓம்பலானேன்" என்று திருமந்திரத்தில் சொல்கிறார்.

இப்படிப்பட்ட அத்பதமான, பகவான் கொடுத்த மெஷினை விட்டு உயிர் போனதும் அதைக் கன்னாபின்னா என்று 'டிஸ்போஸ்' பண்ணக் கூடாதுதான். மஹா ஸ்மஸான வாஸியான பரமேஸ்வரனுக்குத் தான் அதை ஆஹூதி பண்ண வேண்டும். எவன் இந்த உடம்பைக் கொடுத்தானோ அவனுக்கே அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். உலகத்தில் எந்த தேசத்திலுமுள்ள காட்டுக்குடிகள் உள்பட எல்லோரும் ஏதோ ஒரு தினுஸில் இதைத் தெரிந்து கொண்டிருப்பதால்தான் எங்கே பார்த்தாலும் ப்ரேத ஸம்ஸ்காரம் என்பது ஒரு பெரிய ஸமயச் சடங்காகஇருக்கிறது.

செத்துப்போனபின் ஒரு உடம்புக்குள் தேவதாம்சங்கள் ஒட்டிக்கொண்டிருப்பதாக நம்பாவிட்டாலுங்கூட ஒன்றை நினைத்துப் பார்க்க வேண்டும். இத்தனை நாள் அதற்குள் இருந்த ஜீவன் ஈஸ்வர சைதன்யத்தின் ஒரு திவலையல்லவா? எப்போதோ ஸ்வாமி விக்ரஹம் வைத்த புறை என்றால்கூட, இப்போதும் அதில் கண்ட கண்டதுகளை வைக்காமல் ஒரு அகலை ஏற்றிவைக்க வேண்டும் என்று தானே தோன்றுகிறது? அப்படியிருக்க ஈஸ்வர சைதன்யத்தின் அம்சம் இருந்த body-ஐ மரியாதை தந்து மந்த்ர பூர்வமாகதானே dispose செய்ய வேண்டும்?

ஒருத்தன் தன்னுடைய சரீரத்தால் அநேக நன்மைகளைச் செய்தானென்றால், உயிர்போன பின்னும் அந்த சரீரத்துக்கு மரியாதை பண்ணத்தான்வேண்டும். நாஸ்திகர்கள் கூடத் தங்கள் தலைவர்களின் ம்ருத சரீரத்துக்கு மலர்வளையம் வைக்கிறார்களே! ஒருவன் சரீரத்தைக் கெட்டத்திற்கே பயன்படுத்தினான் என்றாலும்கூட, அவனுக்கு அந்த சரீரத்தை இயக்கியது ஈஸ்வர சக்தி என்று தெரியாவிட்டாலும் நமக்குத் தெரிவதால் அதற்குரிய ஸம்ஸ்கார மரியாதையைப் பண்ணத்தான் வேண்டும். "அவனாக இந்த சரீரத்தைக் கொண்டு ஈஸ்வரார்ப்பணமாக எந்த நல்லதும் செய்யாமல் போய் விட்டாலும், அதற்கும் ஈடாக, ப்ராயச்சித்தமாக இப்போது நாமாவது இதையே ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்வோம்



# 66. மனிதனின் எட்டு குணங்கள்

பல வருஷங்களுக்கு முன் ஒரு படம் வீட்டிலே தான் பார்த்தேன். எஸ்.வி. சேகர் தமாஷ் படம். கிட்டுமணி தனது கல்யாணத்துக்கு எட்டு கண்டிஷன் போடுவான். அவன் அக்கா மனோரமாவும் அத்திம்பேர் கிஷ்முவும் எப்படியெல்லாமோ முனைந்து நாரத நாய்டு (விசு) வின் க்ரிஷ்ணத்தனத்தால் கல்யாணம் நடைபெற்றும் அந்த எட்டு கண்டிஷன்களும் மணல் கயிறாகவே இருந்து நிறைவேறாமலேயே அவன் ஒரு பெண்ணை மனைவியாக அடைவான்.

மனிதன் கண்டிஷன் போடுகிறானோ இல்லையோ அவனை கண்டிஷன் படுத்துவது எட்டு குணங்கள். அந்த குணங்களை பற்றி ஒரு சொல்ப சிந்தனை.

ஒருவனை மற்றவன் அவன் ஒரு குணம் கெட்டவன் என்கிறோம். உண்மையிலேயே அவன் குணம் நமக்கு தெரியுமா?

அவனை விடுங்கள். நமக்கே நமது குணம் என்ன என்று தெரியுமா? ஒரு நாள் இருப்பது போல், ஏன் ஒரு நிமிஷத்துக்கு முன்னால் இருந்ததுபோல் அடுத்த நிமிஷம் நாம் இல்லையே. அதற்குள் எத்தனை எண்ணங்களில் சிக்கி மனது மாறி விடுகிறது.

அது சரி. இந்த குணங்கள் என்பது யாவை? அவற்றை எட்டாக பிரித்து வைத்திருக்கிறது நமது சாஸ்த்ரங்கள். இதைப் பற்றி மஹா பெரியவா சொன்னதை கொஞ்சம் சுருக்கி என்னால் முடிந்தவரை புரியும்படியாக கொடுத்திருக்கிறேன். புரிகிறதா என்று பாருங்கள்.

தயை, க்ஷாந்தி, அநஸூயை, சௌசம், அநாயாசம், மங்களம், அகார்ப்பண்யம், அஸ்ப்ருஹா என்பவை அஷ்ட (எட்டு) குணங்கள்.

(1) 'தயை' என்பது ஸர்வபூதங்களிடமும் அன்பு, அருளுடைமை.

நமது வாழ்க்கையில் நாம் பெரும் நிறைந்த பலன், பெரிய ஆனந்தம் எல்லாமே பிற உயிரிடம் அன்பு செலுத்துவது தான். அதுதான் அஸ்திவாரம், (முதுகெலும்பு).

(2) 'க்ஷாந்தி' என்றால் பொறுத்துக் கொள்வது. நமக்கு வியாதி, விபத்து, தாரித்ரியம் முதலானவற்றால் உண்டாகிற கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்வது ஒன்று. கஷ்டத்துக்கு நமக்கு என்ன பஞ்சம். மேலே மேலே தான் வந்து கொண்டே இருக்கிறதே. நமக்கு ஒருத்தர் கஷ்டத்தைக் கொடுக்கிறபோது அவரையும் மன்னித்து அன்பைக் காட்டுவது இன்னொருவிதப் பொறுமை. இது உண்மையில் நாம் செய்ய முயற்சிக்காத ஒரு காரியம். இதை முதலில் பழக்கம் பண்ணிக்கொள்ள வேண்டும்.



(3) 'அநஸூயா என்பது அத்ரி மஹரிஷியின் பத்னியான மஹாபதிவிரதையின் பேர். உங்களுக்கு தெரிந்திருக்கலாம். இல்லையென்றால் இப்போது தெரிந்து கொள்ளவும். அஸூயை (பொறாமை) இல்லாதவள் அநஸூயை. (அநுஸூயை என்றால் வேறு அர்த்தமாகிவிடும்.) நம்மைவிட ஒருத்தன் நல்ல நிலையில் இருந்தால் வயிற்றெரிச்சல் படக்கூடாது. இருந்தால் பொறாமைக்குப் பதிலாக பெருமைப் படுவோமே."அவன் நம்ம பையன். நன்னா இருக்கான்" இப்படி சில பேர் சொல்லிக் கேட்டதில்லையா. பொறாமையின்மைதான் அநஸூயை. முதலில் சொன்ன அன்பு எல்லாரிடமும் காட்ட , இருக்க வேண்டியது.

இரண்டாவதாகச் சொன்ன பொறுமை நமக்கு இடைஞ்சல்,தப்புப் பண்ணுகிறவனிடம் இருக்க வேண்டிய குணம்.

பொறாமையின்மை நம்மைவிட மேல் ஸ்தானத்திலிருக்கிறவனிடம், உயர்ந்திருக்கிறவனிடம், (நம்மைக் காட்டிலும் யோக்யதையில் குறைந்தவனாக இருந்தாலும்கூட) நமக்குமேல் ஸ்தானத்துக்குப் போய்விட்டான் என்றால் அஸூயைப்படக் கூடாது. 'பூர்வ ஜன்மாவில் நம்மைவிடப் புண்ணியம் பண்ணியிருப்பான். ஏதோ அதிருஷ்டம் என்று அவனைக் கருதவேண்டும். பகவான் அருள் அவனுக்கு இருக்கிறதோ என்னவோ' என்று மனஸைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும்.

(4) சௌசம் என்பது 'சுசி' என்பதை வைத்து வைத்து ஏற்பட்டது. 'சுசி' என்றால் சுத்தம். ஸ்நானம், மடி வஸ்திரம், ஆஹார நிர்ணயம் முதலான ஆசாரங்கள்

எல்லாம் 'சௌசம்' என்பதில் வரும்' (ரயிலில் கழிவிடத்திற்கு "ஸௌசாலயா" என்று டாய்லட்டுக்கு இந்தியில் பேர் போடுவதை பார்த்திருப்பீர்களே. சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டிய இடம் -- ஆனால் நாம் அவ்வாறு செய்வதில்லையே). 'சுத்தம் சுகம் தரும். சுத்தம் சோறு போடும்' என்று நிறைய படிக்கிறோம்,சொல்கிறோம், எழுதுகிறோம் அதோடு சரி. வெளியிலே நன்றாக சுத்தமாக இருக்கிறவனைப் பார்த்தாலே நம் மனஸுக்கும் சுத்தமாயிருக்கும். அவனிடம் ஒரு அன்பு, மரியாதை மதிப்பு எல்லாம் ஏற்படுமே.

ஐந்து தர்மங்களை மநு சொல்கிறபோதும முதலில் அஹிம்ஸை, அப்புறம் ஸத்யம், அப்புறம் பிறர் பொருளில் ஆசையின்மை (அஸ்தேயம் - திருடாமலிருப்பது என்பது நேர் அர்த்தம்) என்ற மூன்றைச் சொல்லி, நாலாவதாக இந்த 'சௌசம்', கடைசியாக இந்திரிய நிக்ரஹம் (புலனடக்கம்) என்கிறார்.

(5) 'அநாயாஸம்' என்பது ஆத்ம குணங்களில் அடுத்தது. ஆயாஸத்துக்கு எதிர்ப்பதம் அநாயாஸம். 'லைட்'டாக எடுத்துக்கொள்வது. "இந்த டெண்டுல்கர் எப்படி அனாயாசமாக நூறு அடிச்சான்யா"

ஆயாஸம் இல்லாமல், அதாவது எதையுமே ஒரு சுமையாக எடுத்துக் கொண்டு கஷ்டப்படாமல், லைட்டாக லேசாக அதை அணுகுவது அநாயாஸம். எப்போதும் 'உர்'ரென்று இருந்து கொண்டு, வாழ்க்கையில் எல்லாமே கஷ்டம் என்று புலம்பி, நொந்து கொள்ளாமல், கடுமையாக தீவிரத்தோடு செய்யாமல், நிம்மதியோடு லேசாகச் செய்வது. இப்படிச் செய்வதாலேயே ஆயாஸப் பட்டுக்கொண்டு செய்வதைவிடப் பலமடங்கு சுலபமாகவே (டென்ஷன் இல்லாமலே) வேலைசெய்து விடலாம். பதட்டமில்லாமல் பண்ணுவது அநாயாஸம். "பட பட" என்று செய்தால் நம்மையும் கசக்கிக் கொண்டு மற்றவர்களையும் நசுக்கிக் கொள்வது தான் மிஞ்சும். காரியம் நகராது.

அநாயாஸம் சாதாரண விஷயமல்ல. அது ஒரு ரொம்ப மகத்தானது. (குணசீலம்). அலட்டிக் கொள்ளாமல் இருக்கிற குணம் அநாயாஸம். தானும் சிரமப்படாமல், மற்றவர்களையும் சிரமப்படுத்திக் கொண்டிராமல் இருப்பது அநாயாஸம். நாம் இது மாதிரி இருக்கும் ஒன்றிரண்டு பேரை லட்சியம் செய்வதில்லையே.

அநேக கர்மாநுஷ்டானங்கள் உடம்பால் சிரமப்பட்டு செய்யவேண்டியிருக்கிறது. சிராத்தம் என்றால் மத்யான்னம் இரண்டு மணி, மூன்று மணி வரை பட்டினி கிடக்க வேண்டும். ஒரு யாகம் என்றால் அதில் நிறைய சரீர சிரமம் இருக்கிறது. அப்படியும் நிறைய பேர் சந்தோஷத்தோடு அதில் ஈடுபடுவது மதிக்கப்பட வேண்டிய விஷயம். சிரமம் என்றால் உடம்பினால் மட்டும் அல்ல. மனஸினால்

சிரமப்படாமலிருப்பதைத்தான் முக்கியமாக குறிப்பிடுகிறேன். எந்தக் காரியமானாலும் விக்கினங்கள், தடைகள், ஏதாவது வரத்தான் வரும். அதற்காக மனஸை கலங்க விடாமல் திட சித்தத்தோடு ஈடு பட வேண்டும். எல்லாம் பகவான் செயல் என்று, மனஸிலே பாரமில்லாமல் இருக்கவேண்டும்.

ஸங்கீத வித்வான் அநாயஸாமாக உச்ச்சஸ்தாயிலே ஆலாபனை பண்ணினார் என்றால் என்ன அர்த்தம்? கஷ்டத்தையே அமுக்கி தனக்கு சாதகமாக்கி, ஸுலபமாக்கிக் கொண்டு விட்டார் என்றுதானே அர்த்தம்? சிரமமான வாழ்க்கையை அப்படிப் பண்ணிக்கொள்வதுதான் 'அநாயாஸம்'.

**(6)** 'மங்களம்' என்றால் திருப்தி, சுகம். ஆனந்தமாக - அதிலேயே ஒரு கம்பீரத்தோடு தூய்மையோடு ஆனந்தமாக இருந்து கொண்டிருப்பதுதான் மங்களம். எதற்கெடுத்தாலும் சள்ளென்று எரிந்து விழாமல் 'ஆஹா' என்று எப்போதும் ஸந்தோஷமாக இருக்கவேண்டும்.

இதுதான் இந்த உலகிற்கே நாம் செய்கிற பெரிய ஒத்தாசை, பெரிய தொண்டு.

பணத்தை வாரிக் கொடுப்பதை விட, வேறு ஸர்வீஸ்கள் பண்ணுவதை விட, நாம் போகிற இடமெல்லாம் நம் மங்களத்தாலேயே ஆனந்தத்தை உண்டாக்கிக் கொண்டிருப்பதுதான் மற்ற ஜீவர்களுக்குப் பெரிய தொண்டு.

'லைட்'டாக, லேசாக எதையும் ஸாதிப்பது அநாயாஸம். போகிற இடமெல்லாம் நாமே ஒரு 'லைட்' (தீபம்) மாதிரி ஒளியை, ஆனந்தத்தைக் கொடுப்பது 'மங்களம்'. நாம் ஒரு இடத்துக்குப் போனால் மற்றவர் அறியும்படியாக தான் மட்டுமே ரொம்ப யோக்கியம் மாதிரி, எல்லாம் தெரிந்தவன் மாதிரி மற்றவர்களை 'குற்றம் கண்டு பிடிக்க வந்துவிட்டான்' என்று பேர் எடுக்காமல். ''அவனா, ஆசாமி அருமையான ஆளு, எப்பவும் எல்லோரோடும் ஜாலியா, சிரிச்சுண்டே ,சந்தோஷமா இருக்கிறவனாச்சே. அவன் இருக்கான் என்றாலே ஆசாமி, வந்தாலே களை கட்டுகிறது. என்று சொல்லும்படியாக நடப்பது.

எங்கும் நாம் சந்தோஷத்தை விருத்தி பண்ண வேண்டும். நாமும் மங்களமாக இருந்து கொண்டு, பொங்கும் மங்களம் எங்கும் தங்குமாறும் செய்ய வேண்டும்.

**(7)** 'அகார்ப்பண்யம்' - லோபித்தனம், கருமித்தனம் இல்லாமல் தான தர்ம சிந்தையோடு இருப்பது அகார்ப்பண்யம். மனஸார வாரிக் கொடுக்கிற குணம் வேண்டும்.

அர்ஜுனன் ரொம்பவும் மனசொடிஞ்சு தளர்ந்து போய் தேர்த்தட்டிலே உட்கார்ந்து, 'யுத்தம் பண்ண மாட்டேன்' ஆளை விடு'' என்று அழுதபோது அவனுக்கு

'கார்ப்பண்ய தோஷம்' ஏற்பட்டதாக கீதையில் வருமே. அந்த இடத்தில் 'தன்னையே ரொம்பவும் தாழ்த்திக் கொண்டு தீனமாகப் போய்விட்டவன்' என்று அர்த்தம். தன் விஷயத்திலேயே தான் லோபியாகி விட்டான் என்று அர்த்தம்.

"அகார்ப்பண்யம்" என்றால் இப்படி தீனனாக, நோஞ்சானாக, கையாலாகாதவனாக இல்லாமல் தீரனாக, நல்ல உத்ஸாஹ புருஷனாக, மனஸ்வியாக இருப்பது என்றாகும்.

*(8)* 'அஸ்ப்ருஹா' -- அஷ்டகுணத்தில் கடைசி. 'ஸ்ப்ருஹா' என்றால் பற்றின்மை, ''ஆசையின்மை''. அத்தனை கெட்டதுக்கும் ஆணி வேராக இருப்பது ஆசைதான். ஆனால் அதை அடியோடு வெட்டுவதுதான் முடியவில்லை. ஸம்ஸ்காரங்களைப் பண்ணி பண்ணி, அவற்றோடு அஷ்ட குணங்களையும் சேர்த்துச் சேர்த்து அப்பியாஸம் பண்ணிக் கொண்டு போகும்போது கடைசியில் இந்த ஆசையின்மை, பற்றின்மை, 'அஸ்ப்ருஹா'என்பது பூர்த்தியாக அநுபவத்தில் வருகிறது.

"பற்றுக இப்பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்

பற்றுக பற்று விடற்கு" - என்று வள்ளுவர் சொன்னார்.

'இப்படி ஈச்வரன் என்ற பற்றற்றானைப் பற்றிக் கொண்டு மற்றப் பற்றுகளை விட்டுவிட்டால் மட்டும் போதாது. அப்புறம் அந்த ஈச்வரனுடனும் பற்றைக் கத்தரித்து விடவேண்டும்' என்று இன்னும் ஒருபடி மேலே போய்விட்டார் திருமூலர்:

"ஆசை அறுமின்கள், ஆசை அறுமின்கள்

ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்"

ஆசையைத்தான் தாகம் (வேட்கை) என்று புத்தர் சொன்னார். "ஜலம் வேணும் வேணும்" என்று தாகத்தில் பறக்கிற மாதிரி ஆசை வயப்பட்டுப் பறப்பதை 'திருஷ்ணா' என்பார்கள். பிராகிருதத்தில் இதையே 'தன்ஹா'என்று புத்தர் சொன்னார். ஆசையைப் போக்கடித்துக் கொள்வதுதான் புத்தருடைய முக்கியமான உபதேசம். இது அஷ்ட குணங்களில் கடைசி. முதலில் சொன்ன தயை (Love) தான் கிறிஸ்து மதத்துக்கு ஜீவநாடி.

இப்படி ஒவ்வொன்றை ஒவ்வொரு மதத்தில் ரொம்பவும் அழுத்தம் கொடுத்துச் சொன்னாலும் இந்த அஷ்ட குணங்களையுமேதான் கிறிஸ்து, புத்தர், நபி , நானக், ஜொராஸ்த்ரர், கன்ஃபூஷியஸ், இன்னும் என்னென்ன மதங்கள் இருக்குமோ அவை எல்லாவற்றின் ஸ்தாபகர்களும் சொல்லியிருக்கறார்கள். நேராக அவர்கள் இந்த எட்டைச் சொல்லாமலிருந்தாலுங்கூட மநுஷ்யனானவன் இந்த குணங்கள் இல்லாமலிருப்பதை எந்த மதஸ்தாபகரும் ஆதரித்திருக்க மாட்டார் என்பது நிச்சயம்.



# 67. சமய சஞ்சீவி

மகா பெரியவா பக்தர்களே, இந்தக் கட்டுரைத் தொகுப்புடன் இந்த புத்தகம் நிறைவு பெறுகிறது.

மஹாபெரியவாளின் கருணை மழையில் நனைந்து ஆத்ம த்ருப்தி அடைந்தோர் எண்ணிலடங்காதோர். அவருடைய நூறு ஆண்டு அவதார காலத்தில் அத்தகைய நிகழ்ச்சிகளும் எண்ணிலடங்காதவை. அவற்றில் இரண்டு நிகழ்ச்சிகளை இதில் பார்ப்போம், ரா.கணபதி அண்ணாவின் எழுத்துக்களில்.

முடிவில்லாத அவர் பெருமைகளுக்கு முடிமணியாக உள்ள 'பரம கருணையிலே அனுக்ரஹத்துக்கு' வருவோம். த்ரௌபதியை. அயனான அந்தத் தருணத்தில் ஐயன் ரக்ஷித்ததையும், குசேலருக்குப் பொருட்குவை ஈந்ததையும் அவர் எடுத்துக் காட்டாகக் கூறினார். அதே சாயலில் ஒவ்வொன்றும் பார்ப்போம்.

இரண்டாவதில் முதலாவதின் தருணமறிந்த காப்பும் கெட்டி முலாம் பூசக் காண்போம்.

உரிய காலம் வந்தபோதிலும் ஸ்ரீசரணர் அன்று ஸ்நானம்---பூஜைகளுக்குச் செல்லாமல் சிந்தனை வசப்பட்டிருக்கிறார். சிந்தனை கலைந்ததும் ஸ்ரீமடத்து மானேஜரை அழைத்து எங்கோ ஆயிரம் மைல் கடந்து உள்ள ஒரு சாமானிய பக்தருடைய முகவரியைத் தேடிப்பிடித்து எடுத்து வரச் செய்கிறார். ஒரு குறிப்பிட்ட தொகை சொல்லி அதை உடனே அந்த பக்தருக்குத் தந்தி மணி ஆர்டர் செய்யச்சொல்கிறார். அதற்கதிகமாக எந்த விவரமும் தரவில்லை.

ஒன்றும் புரியாமலே அவரது உத்திரவை மடத்து மேலாளர் நிறைவேற்றுகிறார்.

நாலைந்து நாட்களுக்குப்பின் அந்த பக்தரிடமிருந்து நன்றிக் கண்ணீராலேயே எழுதிய மடல் வருகிறது.

அன்று அவர் தமது தந்தையின் சடலத்தைப் போட்டுக்கொண்டு உத்தரகிரியைக்குப் பொருள் இல்லாமல் தவித்து உட்கார்ந்திருந்தாராம்.

ஸ்ரீசரணரின் சந்திரமௌளீஸ்வர பூஜைக்கு நீண்ட காலம் நிதமும் குடலை குடலையாக வில்வம் கொண்டு வந்து கொடுத்து, 'பில்வம் வைத்தா' என்றே அவரால் அன்புடன் அழைக்கப்பட்டவர் அந்தத் தந்தை. அப்பாவிடம் அன்பு சொரிந்த அப்பெரியவாளே கதி என்று த்ரௌபதி த்வாரகாவாஸனிடம் சரணாகதி செய்தது போல் அன்று அவரது புத்திரர் செய்தாராம்! நம்பவொண்ணாத அனுக்ரஹமாகத் தந்தி மணியார்டரும் வந்து குதித்ததாம், இவர் தந்தியில்லா மனக்கம்பி மூலம் விடுத்த வேண்டுகோளுக்கு விடையாக!

இவர்களாவது முன்னறிமுகம், நெடுநாள் பழக்கமே, பெற்றிருந்தவர்கள். 'புது' பக்தர் ஒருவருக்குக் கண்ணன் குசேலருக்குச் செய்ததை ஸ்ரீசரணர் அயனான தருணத்தில் செய்த நிகழ்ச்சியைக் காணலாம்.

ஒரு நாள் பம்பாயிலிருந்து செல்வச்செழிப்புள்ள ஓர் அம்மாள் ஸ்ரீசரணரின் தரிசனத்திற்கு வந்தாள். தன் குடும்பத்தினர் செய்யும் பிஸினஸில் லாபத்தில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் ஸ்ரீசரணருக்கென்று எடுத்து வைத்து, உடன் கொண்டு வந்திருப்பதாகவும் அதை ஸமர்ப்பிக்க விரும்புவதாகவும் விக்ஞாபனம் செய்து கொண்டாள்.

பெரிய தொகை!

அதிசய மடாதிபதியாகத் திரவிய காணிக்கைகளை அவசியத்திற்குக் கட்டுப்படுத்தியே ஏற்கவும், மறுக்கவும் செய்தவர் ஸ்ரீசரணர்! இப்போதோ அவர் மடத்தை விட்டுத் தனியாகச் சில பணிவிடையாளருடன் இருக்கிறார். அவ்வளவு பெருந்தொகை ஏற்பாரா?

அதில் சிறிதளவே ஏற்றுக்கொண்டார். அதுவும் ரொக்கமாக ஏற்காமல், அந்த மாதரசியையே வருகிற அடியார்களுக்குச் சமைத்துப்போடச் சாமான்களாக வாங்கிப் போட்டுவிட்டுப் போகுமாறு சொன்னார். முழுவதையும் அவர் ஏற்காததில் அம்மையாருக்கு மிகுந்த ஏமாற்றம்.

"கவலைப்படாதே! பாக்கிப் பணமும் ஏதாவது நல்ல கார்யத்துக்கு ப்ரயோஜனமாகும். சித்த ( சிறிது) நாழி இங்கேயே இருந்து விச்ராந்தி பண்ணிண்டு போகலாம்" என்றார் ஸ்ரீசரணர். அம்மாள் அவ்வாறே தங்கினார்.

சிறிது நேரத்தில் ஒரு புது பக்தர் வந்தார். தம்மை முதலியார் வகுப்பைச் சேர்ந்தவர்களாக அறிமுகம் செய்து கொண்டார். அவருடைய தோற்றத்திலேயே துக்கத்தின் அழுத்தமும் அதை விஞ்சும் பயப்பிராந்தியும் பிரதிபலித்தன. ஸ்ரீசரணர் சந்தனத்தின் தண்மையுடன் அந்த வெந்த நெஞ்சினரை அருகழைத்து அமர்த்திக்கொண்டார்.

"ஒனக்கு என்னப்பா வேணும்?" என்று பன்னீராகச் சீதம் சொரிந்து வினவினார்.

"சின்னக் கம்பெனி ஒண்ணுலே உபாயமா ( சிறியதான) ஒரு வேலையிலே இருக்கேனுங்க. சம்பளம் பத்தறதே இல்லீங்க. கடனா, வாங்கிக்கிட்டே போயி, வட்டி கூடக் கட்டமுடியல்லேங்க." என்று மேலே பேசவொண்ணாது வந்தவர் குழறினார்.

"கடன்காரன் பிடுங்கல் தாங்கமுடியாம வந்திருக்கியாக்கும்!" என்று நெஞ்சார்ந்த பரிவுடன் பரமர் கேட்டார்.

"இப்ப இந்த க்ஷணத்துல என்ன நெலவரம்? தயங்காம பயப்படாம சொல்லு'" என்று அபயப் பிரதானம் செய்து ஊக்கினார்.

அழுகை ஊளை வெடிக்கும் குரலில் வந்தவர் " ஈட்டிக்காரன் தொரத்திக்கிட்டே வந்திருக்காங்க! இங்கேயேதான் வாசல்ல நிக்கறானுங்க!" என்றார்.

கடன் தொகை எவ்வளவு என்று அவரைக் கேட்டு ஸ்ரீசரணர் தெரிந்து கொண்டார். அம்மாள் கொண்டு வந்தது அதற்கு மிக அதிகமாயிருந்தது. ஸ்ரீசரணர் தம்மைச் சேர்ந்தோரின் பொருட்டாக அனுமதித்த பொருட்களை வாங்கத் தேவைப்படுவதைக் கூட்டினாலும் மிகுதி நின்றது.

அப்புறம் என்ன? பம்பாய் தனிகையின் திரவியம் முதலியார் கைக்கு---அவர் கையிலிருந்து பட்டாணியன் கைக்குப் போவதற்காக---சேர்ந்தது

ஸ்ரீசரணர் அம்மாளை நோக்கி இன்னருளுடன் " நான் கேட்ட ஸாமான்-----சப்பட்டை வாங்கினாவிட்டும் மீதி நிக்கக் கூடியதையும் இவர் கையிலேயே போடு. கடன் அடைஞ்சா போதுமா? மாஸம் முடியக் குடும்பம் சாப்பிட்டாகணுமே? எல்லாம் ஒன் உபாயமாகவே இருக்கட்டும்!" என்றார். எத்தனை கரிசனம், அங்கலாய்ப்பு!

அம்மாளும் அவ்விதமே செய்தாள்.அவளது மனம் நிரம்பியிருந்தது பார்த்தாலே தெரிந்தது. நிறைவை மேலும் நிறைவித்த நிறையறிவாளர், நிறையருளாளர்,

"ஸமய ஸஞ்சீவியா வந்தே! ஆபத்துக் காலத்திலே வந்து இவரை விடுவிச்சே! ரொம்பப் புண்ணியம், நன்னா இருப்பே!' என்று ஆசிமொழிந்தார், பொழிந்தார்.

நிறை நன்றியில் கண் நிறைந்து விம்மிக்கொண்டிருந்த முதலியாரிடம்,

"இதோ பார், ஸ்வாமி ஒனக்காகவே எங்கேயிருந்தோ இந்தப் புண்ணீயவதியைக் கொண்டு வந்து சேத்து ரக்ஷிச்சிருக்கார். அவரை ஒரு போதும் மறக்காம கஷ்டமோ, நஷ்டமோ, அவர் தாங்கிக்கிறார்ங்கற நம்பிக்கையோட, முடிஞ்ச மட்டும் சிக்கனமா வருமானத்துக்குள்ளயே செலவைக் கட்டுப்படுத்திண்டு கடன் கஷ்டத்திலே மாட்டிக்காம இருக்கப் பாருப்பா!" என்று ஹிதோபதேசம் செய்தார். எத்தனை ஹிதமாக!

கடன் பட்டவர், பாரத்தின் அழுத்தம் நீங்க நிம்மதியாக விடைபெற்றார். அவர் சென்றபின் பெரியவாள் "அப்பாடா!" என்று சொன்னதுண்டே! முன்னறிமுகமில்லாத ஒருவருக்கு ஸமய ஸஞ்சீவியாக உதவியது மாத்திரமின்றி அவரது பாரத்தையும் ஸ்ரீசரணரே எவ்வளவுக்குப் பகிர்ந்து கொண்டு இப்பொது சுமை நீக்கத்தில் நிம்மதி காண்கிறார் என்பதைத் தெரிவிப்பதாக இருந்தது அந்த ஆசுவாச அப்பாடா! ஸகல ஜீவர்களுடனும் அப்படி ஒன்றிக் கலந்த அன்பு மூர்த்தி அவர்!



# 68. இந்த சால்வையை போர்த்து!

"என்ன சார் கர்ம ஸ்ரத்தையாக ஏதோ ஒரு புத்தக பக்கத்தை வெட்டி ஒரு நோட்டில் ஒட்டிக்கொண்டிருக்கிறீர்கள்?"

நிமிர்ந்து எதிரே நின்ற பிரஹலாத நாயுடுவை பார்த்த தாத்தா சிரித்துக்கொண்டே "மகா பெரியவா பத்தி ஒரு ஸ்ரீமடம் தொண்டரின் அனுபவம் என்று ஒரு கட்டுரை கிடைத்தது. இப்போது தான் கொள்ளை கொள்ளையாக மகா பெரியவா தரிசன அனுபவங்கள் பத்தி நிறைய வருதே, கிடைத்தது எடுத்து வைத்தால் பின்னாலோ, அப்பப்பவோ படிக்கலாமே."

ஓஹோ. அது என்ன சொல்லுங்களேன். நானும் கேட்கிறேன். எனக்கு தான் தமிழ் படிக்க தெரியாதே தாத்தா சார், என்றார் நாயுடு.

சரி வழக்கம்போல் எனக்கு தெரிந்த வழியில் சுருக்கமாக சொல்லட்டுமா? என்று ஒரு மடக்கு வெந்நீரை பிளாஸ்கிலிருந்து குடித்து விட்டு தொடர்ந்தார் தாத்தா.

ஒரு ஏழை எளிய வைதிக பிராமணன் 'போது'மென்ற மனம் கொண்டு வாழ்க்கை.

கோயில் திருப்பணிகளில் மிகவும் ஆர்வம். தன் கிராமத்திலுள்ள பிள்ளையார் கோவில், சிவன் கோவில், மாரியம்மன் கோவில் எல்லாவற்றுக்கும் அரும்பாடு பட்டுத் திருப்பணிகள் செய்தார். பெரிய தொகை நன்கொடை கொடுப்பவர்கள் கூட, அவரிடமிருந்து ரசீது எதிர்பார்க்க மட்டார்கள். அவ்வளவு சுத்தம். அவருடைய சேவையை அண்டை கிராமத்தார்களும் பயன்படுத்திக் கொண்டார்கள்.

ஒரு வயற்காட்டில் ஒரு பெரிய சிவலிங்கம் தன்னந்தனியாக வெயிலில் காய்ந்து, குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தார். இந்த வைதிகர் முயற்சியால் இப்போது அவர் மழை-காற்றுக்கு அஞ்சாமல், கருவறையில் கோயில் கொண்டுள்ளார்.

இப்படி எத்தனையோ கோயில்கள்.

ஆனால், வைதிகர் எந்தக் கும்பாபிஷேகத்திலும் தன்னை முன்னைலைப்படுத்திக் கொண்டதில்லை. கூட்டத்தில் ஒரு மூலையில் ஒண்டிக் கொண்டு நிற்பார்! தம்பட்டமே இல்லாத இவரைப் பற்றிப் பெரியவாளுக்குத் தெரிந்திருந்தது.

'எப்படி?'. அது சிவரகசியம்!

அந்த வைதிகர் அடிக்கடி ஸ்ரீமடத்துக்கு வருபவர் அல்லர். அவருக்கு தான் ஓய்வே கிடையாதே.

அவர் வழி அப்பர் (Appar) வழி! உழவாரப் பணி. கோபுரங்களில் வேலை, நாலைந்து பையன்களை உடன் வைத்துக்கொண்டு சந்தடி இல்லாமல் சிவத்தொண்டு செய்வார்.



ஒருதடவை பெரியவாள் தரிசனத்துக்கு வந்தார். பெரியவாளை வந்த செய்துவிட்டு ஓரமாக நின்றார். வழக்கமான ஊர்பேர் விசாரணைகூட செய்யவில் பெரியவாள்.

அந்தச் சமயத்தில் பரம பக்தர்களான பணக்காரத் தம்பதிகள் யாரோ வ வந்தனம் செய்துவிட்டு எழுந்தார்கள். பெரியவாள் தொண்டருக்கு என்ன குறி கொடுத்தாரோ, தெரியாது. விலையுயர்ந்த ஒரு சால்வையைக் கொண்டுவந்து தட் வைத்தார் ஓர் அணுக்கத் தொண்டர். பெரியவாள், அந்தப் பணக்கார பக்த அழைத்து,

"இந்த சால்வையை அதோ நிக்கறாரே அவரை கூப்பிட்டு நீயே போடு" வைதிக பக்தருக்கு மரியாதை!

எல்லோருக்குமே வியப்பாக இருந்தது. யார் இந்த அப்பாவி ஏழை பிராமணன். அப்படி என்ன அவருக்கு சிறப்பு மரியாதை? அவ்வளவு பெரிய பண்டிதரா? யாகம் செய்தவரா? இந்த எண்ணம் எல்லார் மனத்திலும் ஓடியது அந்த தெய்வத்துக்கு தெரியாதா?

பணக்காரரர் மெஷின் மாதிரி அந்த பிராமணருக்கு சால்வை போர்த்திவிட்டு பேசாமல் நின்றார்.

"நீ இவரைப் பார்த்திருக்கிறாயோ?"

"இல்லை பெரியவா"

"இவர் அட்ரஸ் தெரியுமோ?"

தயக்கத்தோடு அந்த பணக்காரரர், இல்லை தெரியாது பெரியவா.

"எனக்குத் தெரியும்! சொல்லட்டுமா?" (என்ன குறும்பு!)

"சாஸ்திரிகள் கேர் ஆஃப் சிவன் கோயில்! இவர் பெரிய Builder. என்ன? பல சிவன்களுக்கு வீடு கட்டிக் கொடுத்திருக்கிறார்..!"

பக்தர்கள் கூட்டம் நெகிழ்ந்து உருகியது. என்ன இந்த பைத்தியகார பிராமணன் கட்டிடம் கட்டுபவரா. நிறைய பில்டிங் கட்டினவாரா? பார்த்த தெரியலியே. ஒரு பத்திரிகையில் கூட இவர் புகைப்படத்தைப் பார்த்ததில்லையே.

"இவர் சிவப்பழம் பிரசாதத்தோட நெறய பழங்கள் கொடு."

அறிமுகமே இல்லாத அந்த பிராமணர், ஒரு தூய சிவப்பணியாளர் என்பது, பெரியவாளுக்கு எப்படித் தெரிந்தது?

அது எந்தவகை ஸித்தி என்றா கேட்கிறீர்கள்?

ஆயிரம் கன்றுக்குட்டிகள் நடுவில் ஒரு தாய்ப்பசு தன் கன்று குட்டியை அடையாளம் கண்டுகொள்ளாதா என்ன?

சிவோஹம் சிவோஹம் ஆஹா பரமாச்சாரியா பாதார விந்தங்களுக்கு சரணம் சரணம் என்று தலைமேலே கை கூப்பினார் நாய்டு.

நாம் மட்டுமென்ன அப்படி செய்ய வில்லையா, நாமும் பெரியவா பக்த நாய்டு இல்லையா?





## நூலாசிரியரைப் பற்றி

காலத்திற்கேற்றவாறு, சுருக்கமாக, எளிய தெளிவான நடையில், ஆன்மீக விஷயங்களை எழுதுவது சுலபமல்ல. கருத்துக்களை சிறியோர் முதல் பெரியோர் வரை அனைவருமே ஏற்கும்படி எழுதுவதும் ஒரு கைவந்த கலை. இத்தகைய ஆற்றல் பெற்றவர்கள் வெகு சிலரே தான். அதுவும் தகவல் நுட்பத்தை செவ்வனே பயன்படுத்தி தமிழ் மொழியில் பண்டைய பெரும் புகழ் வாய்ந்த எல்லோரும் அறிந்த விஷயத்தை ஆர்வம் குன்றாமல் அடுத்து என்ன என்று ஆவலோடு எதிர்பார்க்க வைக்கும் விறுவிறுப்புடன் எழுதுவது அளிக்கின்ற பாங்கு அதிலும் சிலருக்கே உரித்தானது.

ஆன்மீக விஷயங்களை பின்னே தள்ளும் அளவுக்கு பலதரப்பட்ட விஷயங்கள் மக்கள் மத்தியிலே எங்கும் மலிந்து கிடக்கும் இந்த நேரத்தில் ஆன்மீகக் கதைகளை மின்னஞ்சல் மூலம் அன்றாடம் பல நாடுகளிலும் உள்ள ஆயிரக் கணக்கான தமிழர்களும் விரும்பி எதிர்பார்த்து படிக்கும் அளவுக்கு அவற்றை பரிமளிக்கச் செய்து எங்கும் பரப்பிவரும் ஒருவர் தான் இந்த நூலாசிரியர் திரு ஜே.கே. சிவன். பாரம்பரிய இறைபக்தியைத் தூண்டி ஆயிரக்கணக்கானோர் இதயத்தில் பக்தியை கதை ரூபத்தில் புகுத்துவதில் முதல் வரிசையில் வைக்கத்தகுந்த சமர்த்தர் இவர்.

வாழ்க்கையில் ஸ்ரீ கிருஷ்ணன் அருள் ஒன்றினாலேயே தனது முயற்சிகளில் வெற்றி கண்டு வெளி நாடுகளில் கப்பல் துறையில் சிறந்த பெயர் பெற்று, உயர் பதவிகளை வகித்து, தற்போதும் ஆலோசகராக பல கப்பல் துறை நிறுவனங்களுக்குப்பணி புரிந்து வரும் 77 வயது இளைஞர் திரு சிவன். இசையில், கலையில், எழுதுவதில், பேசுவதி ல், படிப்பதில் எல்லாம் தனக்கென்று ஒரு தனி இடம் கொண்ட வல்லவர். திரு சிவன். ஆன்மீகப்பணியிலும், முதியோர் நல சங்க காரியதரிசி பதவியிலும், நலிந்த, கவனிப்பாரற்று வழிபாடின்றி காணப்படும் ஆலயங்களுக்கு மாதம் ஒருமுறை நிறைய அன்பர்களோடு சேர்ந்து சென்று அங்கு வழிபாடு தொடர்ந்து நடக்க ஆவன செய்ய என்றே திருக்கோயில் வழிப்பாட்டுக் குழு என்ற அமைப்பு சார்பில் அந்தந்த ஊரில் இருக்கும் குடிமக்களுக்கு ஆலய வழிபாட்டு மேம்பாட்டை அறிவித்து அவர்களை ஊக்கமுறச் செய்யும் பணியிலும், நண்பர்களோடு சேர்ந்து ஆயிரக்கணக்கான ஆலயங்களுக்கெல்லாம் சென்று சிவன் ஆலய தரிசனக் குழு என்ற ஒன்றின் மூலம் முதியோர்க்கெல்லாம் ஆலய தரிசனம் செய்விக்கும் பணியிலும் இன்றும் ஈடுபட்டு வருகிறார். இதுவரை ஏறக்குறைய 5000 ஆலயங்களுக்கு இவ்வாறு சென்றுள்ளார்.

தான் வாழும் நங்கநல்லூர் பகுதியில் சமூக நலப்பணி யிலும் ஈடுபட்டு சுறுசுறுப்பாக செயலாற்றி வருகிறார். ஸ்ரீ மகா பெரியவாளின் புகழ், பெருமை ஒவ்வொரு இல்லத்திலும் பேசப்பட்டு அவர் பேரருளில் திளைத்து நிற்கும் இந்த கால கட்டத்தில், பெரியவா பற்றி அநேக செய்திகள், படங்கள், பேச்சுகள், ஏராளமாக உலவி வரும் வேளையில், ஒரு சில ருசிகர தகவல்களை, பல பக்தர்களின் அனுபவ பூர்வ விஷயங்களை படித்து, கேள்விப்பட்டு, அவற்றை சுவை குன்றாமல் தனது பாணியில் அளிக்கும் முயற்சியில் இந்த "பேசும் தெய்வம்" புத்தகம் இலவச அன்பளிப்பாக குழந்தைகளைச்சேர வந்திருக்கிறது.

ஸ்ரீ ஜே.கே. சிவனுடைய எழுத்து வன்மையை வளமையை, உத்தியை எல்லாம் எண்ணற்ற முகநூல், மின்னஞ்சல் அன்பர்கள் ரசித்து அனுபவித்து அவர்களில் சிலர் இந்த புத்தகத்தையும் வழக்கம் போல இலவச வெளியீடாக உதவி இருப்பது பெரியவாளின் பெருங் கருணை எனலாம். "பேசும் தெய்வம்" ஸ்ரீ சிவனின் 17வது படைப்பு. ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் சேவா சொசைட்டி நிறுவனத்தின் 18வது இலவச புத்தகம்.

**ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் சேவா சொசைட்டியின் பிற நூல்கள்:** விஸ்வரூபனின் வாமன கதைகள், (100 கிருஷ்ணன் கதைகள்), பாவையும் பரமனும் (30 திருப்பாவைக் கதைகள்) தெவிட்டாத விட்டலா (100 பாண்டுரங்கன் கதைகள்) காலடியில் கிடைத்த கைவிளக்கு (ஆதி சங்கரரின் க்ருஷ்ணாஷ்டகம், 'ப்ரஸ்னோத்திர ரத்னா மாலிகா' கேள்வி பதில்கள், பரமேஸ்வரன் பாடும் பரமாத்மன் (ஆதி சங்கரரின் பஜ கோவிந்தம், யக்ஷ ப்ரஸ்னம், முகுந்தனில் மூவர் (ராதா, கோதை, மீரா கதைகள்),ரமே ராமே மனோரமே, (அத்யாத்ம ராமாயண) கதைகள், ரமாபதியும் உமாபதியும் (ஆதிசங்கரரின் கோவிந்தாஷ்டகம், கால பைரவாஷ்டகம், லிங்காஷ்டகம், தாயிடம் பக்தி கொள்ள மாத்ரு பஞ்சகம், தவிர்த்து நடராஜ பத்து, எதிலும் எவரிலும் வாழ்க்கையின் பாடம் கற்றுக்கொள்ளமுடியும் என்பதை தத்தாத்ரேயர் குருக்கள், என்ற கட்டுரை சம்பாஷணை) பாரதியின் கண்ணன் பாட்டுகள் கொண்ட எந்தையே நந்தலாலா, பாஞ்சாலி சபதத்தின் பின்னணியில் காத்திட வா கேசவா, மற்றும் You, I and Krishna, (Krishna stories 100 in English), Vitoba the Nectar (100 Vittal stories in English), Govinda's Garlands (both coauthored by Uma Gururajan, Singapore) and Hare Krishna (by Gayathri Jambunathan).

ஆசிரியரை தொடர்பு கொள்ள: email: sreekrishnarpanamsevasociety@gmail.com, jksivan@gmail.com,
www.youiandkrishna.org, www.youiandkrishna.org Mobile: 98402 79080

Designed by G Publishing Service